# அமெரிக்க ஐக்கிய நாட்டுப் பொருளாதார வளர்ச்சி

(ECONOMIC DEVELOPMENT OF U. S. A.)

**எம். ஏ. அபூர்வசாமி**

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

த. பா. நி. (க. வெ) வரிசை எண் — 607

# அமெரிக்க ஐக்கிய நாட்டுப் பொருளாதார வளர்ச்சி

(பட்டப் படிப்பிற்குரியது)

ஆசிரியர்
எம். ஏ. அபூர்வசாமி, எம்.ஏ.,
பொருளாதாரப் பேராசிரியர்,
அரசினர் ஆடவர் கல்லூரி,
குடந்தை

தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition • February, 1976

T.N.T.B.S. (C. P.) No. 607



# ECONOMIC DEVELOPMENT OF U. S. A.

*M. A. ABURVASAMY*

**Price Rs. 7-40**

Published by the Tamilnadu Textbook Society under the Centrally Sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.

Printed by:
M/s RAVIKANNAN ACHAGAM,
MADRAS - 600029.

# அணிந்துரை

## திரு. இரா. நெடுஞ்செழியன்
(தமிழகக் கல்வி அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பதினைந் தாண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்றுவந்தனர். 1968ஆம் ஆண்டின் தொடக்கத்தில் புகுமுக வகுப்பிலும் (P.U.C.) 1969ஆம் ஆண்டிலிருந்து பட்டப் படிப்பு வகுப்பு களிலும் அறிவியல் பாடங்களையும் தமிழிலேயே கற்பிக்க ஏற்பாடு செய்துள்ளோம். தமிழிலேயே கற்பிப்போம் என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம் பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத்துறைகளில் நூல்கள் எழுதித்தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத் திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்றுவருகிறது. இவ்வகையில், கல்லூரிப் பேராசிரியர்கள் கலை, அறிவியல் பாடங்களை மாண வர்க்குத் தமிழிலேயே பயிற்றுவிப்பதற்குத் தேவையான பயிற்சி யைப் பெறுவதற்கு மதுரைப் பல்கலைக்கழகம் ஆண்டுதோறும் எடுத்துவரும் பெருமுயற்சியைக் குறிப்பிட்டுச் சொல்லவேண்டும்.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய எல்லாத் துறைகளிலும் தனி நூல்கள் மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ் நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டுவருகிறது.

இவற்றுள் ஒன்றான 'அமெரிக்க ஐக்கிய நாட்டுப் பொருளாதார வளர்ச்சி' என்ற இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் 607ஆவது வெளியீடாகும். கல்லூரித் தமிழ்க் குழுவின் சார்பில் வெளியான 35 நூல்களையும் சேர்த்து இதுவரை 642 நூல்கள் வெளிவந்துள்ளன. இந்நூல மைய அரசு கல்வி சமூக நல அமைச் சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை. ஆதலின் உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக்கழகங் களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

இரா. நெடுஞ்செழியன்

# பொருளடக்கம்

# I. இயற்கைச் சாதனங்களும் மக்கள் தொகையும்

## (Natural Resources and Population)

இயற்கையன்னை அமெரிக்க நாட்டின்மீது கருணை மழை பொழிந்திருக்கிறாள். அதனால் அதனிடம் இயற்கைச் சாதனங்கள் எல்லையற்றஅளவில் குவிந்துகிடக்கின்றன. அந்நாட்டு மக்கள் தொகையைக் கணக்கிற்கு எடுத்துக்கொண்டு பார்த்தால், உலகின் வேறு எந்த நாட்டிற்கும் இத்தகைய அளவில் இயற்கைச் சாதனங்கள் மண்டிக் கிடக்கின்றனவா என்பது சந்தேகமே. அந்நாட்டுத் தட்ப வெப்பநிலை பிராந்தியத்துக்குப் பிராந்தியம் மாறுபடுகிறது. ஆனால், பெரும்பாலான பகுதிகளில் உள்ள தட்ப வெப்பநிலை வாழ்க்கையை ஊக்குவிப்பதாக, பொருளாதார நடவடிக்கையை உற்சாகப்படுத்துவதாக இருக்கிறது. கடுங்குளிர் சில நேரங்களில் தோன்றி கவலை விளைவிப்பது உண்மையே. ஆனால், அது பூச்சிகளைக் கொல்கிறது; பூமியைப் பதப்படுத்துகிறது. இவை நாட்டிற்கு நல்லவைதானே! சில நேரங்களில், சில பகுதிகளில் வெப்பம் எல்லை மீறிப்போய் மனித உழைப்பு சிரமப்படுகிறது என்றாலும், அந்த வெப்பம் தானிய விளைச்சல்களைப் பாதிப்பதில்லை. தவறான காலங்களில்—உதாரணமாக கதிர் முற்றிவரும் பருவங்களில்—மழை பெய்வதுண்டு. ஆனால் இது அறுவடைகளுக்கு இடையூறு விளைவிக்கும் வகையில் இருப்பதில்லை. 'மொத்தத்தில் நமது தட்ப வெப்பநிலை நன்றாயிருக்கிறது, சிறந்ததாயிருக்கிறது என்றும் கூற முடியாது; சிரமம் தருவதாயிருக்கிறது என்றும் கூற முடியாது' என்கிறார் லவல் ஹாரிஸ் (Lowell Harriss).

பல்வேறு வகை நிலப்பகுதிகளை அமெரிக்கக் கண்டத்தில் காண்கிறோம். செல்வம் கொழிக்கும் பண்ணை நிலங்கள்; மென்மையான தானியங்களுக்கு மட்டுமே பொருத்தமாயிருக்கும் நில விரிப்புகள்;

வறண்ட பாலை; மலட்டுப் பாறைப்பகுதிகள்; மலைப்பிரதேசங்கள். மொத்த நிலப்பரப்பில் ஆறில் ஒரு பங்குக்குமேற்பட்ட பரப்பு உற்பத்திக்குச் சிறந்ததாயிருக்கிறது. வேளாண்மை பல பகுதிகளில் வெற்றிகரமான தொழிலாகத் திகழ்கிறது. அறிவியல் முன்னேற்றம் வழியே மலர்ந்த புதிய தானிய வகைகள் ஆங்காங்கே சுடர்முகம் காட்டி நிற்கின்றன. ஃப்ளோரிடாவில் பல ஆண்டுகளாகப் பயன்படுத்தப் பெறுமல் இருந்துவந்த நிலப் பகுதிகள் கால்நடை வளர்ப்புக்குப் பயன்பட்டு, கணிசமான வருமானங்களை ஈந்தன. புதுவகைக் கால் நடைகள், புற்கள் அங்கே பொலிவுடன் காட்சியளிக்கின்றன. நிலத்தின் மேல்தளத்தில் இருக்கும் உச்சமண் (Topsoil) தான் பயிர், செடி, கொடி, தானியம் ஆகியவற்றிற்கு உயிர்நாடி. வெள்ளத்தாலும், கவனமின்மையாலும் உச்சமண்ணின் ஆக்க சக்தியும், தாதுப்பொருட்களும் அழிந்துபோகலாம். முந்திய காலங்களில் உச்சமண்ணைப் பாதுகாத்து வளர்க்கும் முறைகள் புழக்கத்தில் இல்லை. மக்களுக்கும் அவைகளைப்பற்றி எதுவும் தெரியாது. விளைவு? மிசிசிப்பிக்குக் கிழக்கே வானளாவ உயர்ந்துகிடந்த காடுகள் அழிக்கப்பட்டன. அதைத் தொடர்ந்து நில அரிப்பு (Erosion) ஏற்பட்டது; உச்சமண்ணும் பல பகுதிகளில் தாதுப்பொருட்களை இழந்தது. மேலும் புழுதிப்புயலும், வெள்ளமும் பல நேரங்களில் நாட்டைச் சாடி, மண்வளத்தைப் பாழாக்கி, உச்சமண் உயர்வைப்பற்றித் தெரியாத மக்களைப் பழிவாங்கின. பிறகுதான், இரசாயன உரங்களை உபயோகிப்பதன்மூலமும், பொருத்தமான தானியங்களைச் சாகுபடி செய்வதன்மூலமும் மண் வளத்தைப் பாதுகாக்கும் முயற்சியை மக்கள் மேற்கொண்டனர்.

### நீர்வளம்

அமெரிக்காவில் நீர்வளத்திற்குப் பஞ்சமில்லை. நீண்டு பரந்த ஏரிகள், நெளிந்தோடும் நதிகள், அகன்ற நற்கால்வாய்கள், ஆழ்ந்த பெருங்கடல்கள்—இவை அனைத்தும் அங்கே உண்டு. ஏரிகளும் சமுத்திரங்களும் போக்குவரத்து வசதிகளைப் பெருக்கியிருக்கின்றன. நீர்வழிப் போக்குவரத்து நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்குப் பேருதவி புரிந்திருக்கிறது என்பதை யாரும் மறுக்கமுடியாது. நீர்வழிப் போக்குவரத்து சிக்கனமானது என்பதால் அதற்கு மக்களின் ஆதரவுமிருந்தது. நாட்டின் நீண்ட கடற்கரை மேலே ஒப்புயர்வற்ற துறைமுகங்கள் பல இருக்கின்றன. ஹட்சன், செயின்ட் லாரன்ஸ் என்பன போன்ற பெரிய நதிகளும், ஏனைய சிறிய நதிகளும் நேரே பாய்ந்தோடி அட்லான்டிக் சமுத்திரத்தில் சங்கமமாகின்றன; மிசிசிப்பி—ஒஹியோ (Ohio)—மிசௌரி (Missowri) இணைப்பைத் துணையாகக்கொண்டே அமெரிக்கப் பொருளாதாரமும்

அட்லான்டிக் சமுதாயமும் உறவாடிக் கலக்கின்றன. இரும்பு, நிலக்கரி, தானியம் போன்ற பளுவான பொருட்களைக் கடத்திச் செல்வதற்கு கிரேட் லேக்ஸ் (Great Lakes) தான் பிரதானமாயிருக்கிறது. சரக்குகளைக் கொண்டு செல்வதற்கு சால்ட் செயின்ட் மேரி கால்வாய் (Sault Sainte Marie Canal) ஆனது சூயஸ் கால்வாய் போன்று பணி புரிகிறது. போக்குவரத்தில் முக்கியமாயிருக்கின்ற மற்றொரு நீர்வழி செயின்ட் லாரன்ஸ் நீர்வழி (St. Lawrence Waterway) ஆகும். நீர் வளத்தைப் பயன்படுத்தி மின்சாரமும் தயாரிக்கப்படுகிறது. 1959 - ல் தயாரிக்கப்பெற்ற நீர் மின்சாரம், 1940 - ல் தயாரிக்கப்பெற்ற நீர் மின்சாரத்தைவிட $2\frac{1}{2}$ மடங்கு கூடுதல் ஆகும். கனெக்டிகட், மெரிமாக், வட அட்லான்டிக், நியாகரா, வட பசிபிக் முதலிய பகுதி களில் நீர் மின்சாரம் தயாராகிறது.

### கனிவளங்கள்

கனிவளத்தைப் பொறுத்தவரையில் அமெரிக்கா முன்னணியில் நிற்கிறது. நிலக்கரியும் இரும்பும் நாட்டின் பல இடங்களில் கிடைக் கின்றன. அமெரிக்க நிலக்கரிச் சுரங்கங்கள் அபரிமிதமாக நிலக்கரி யைப் பெற்றிருப்பதனால், அவை பல நூற்றாண்டுகளுக்கு நிலக்கரி வழங்கிவர முடியும். உயர்ந்த ரக இரும்புத் தாது குறைவாயிருக் கிறது என்றாலும், மிதமான தரமுடைய இரும்புத்தாது ஏராளமாகக் கிடைக்கிறது. பொறிவழிப் பண்ட உற்பத்தித் தொழில் முன்னேற் றத்திற்கு இது போதுமானதாயிருக்கிறது. அலபாமா, பென்சில் வேனியா, மிசிசிப்பி ஆகிய பகுதிகளில் நிலக்கரியும், மின்னசோட்டா, மிச்சிகன், விஸ்கான்சின், யுட்டா ஆகிய பகுதிகளில் இரும்பும் கிடைக் கின்றன.

தொழில் நாகரிகத்தின் தூண்கள் எனக் கருதப்பட்டு வரும் எண்ணெயும், இயற்கை வாயுவும் தாராளமாகக் கிடைக்கின்றன. நடைமுறையில் நிலக்கரியைவிட இவை சிறந்தவை. நிலத்திலிருந்து இவற்றை எளிதாக எடுக்கமுடியும். கடத்திச் செல்வதும் சுலபம். அதற்காகும் செலவும் குறைவு. வாகனங்களை இயக்குவதற்கு இவை மிகவும் பொருத்தமானவை. ஆனால் பெட்ரோலியத்தின் அளிப்பு அமெரிக்காவில் வெகு நாட்களுக்கு இருக்கவேண்டும் என்றால், அதனை உபயோகப்படுத்துவதில் சிக்கனம் தேவை. மேற்கு மிசௌரி, கான் சாஸ், கலிஃபோர்னியா, டேக்சாஸ், லூசியானா முதலிய இடங்களில் எண்ணெய் கிடைக்கிறது.

மின் யுகத்திற்குத் தேவையான செம்பும், அலுமினிய உற்பத் திக்கு அத்தியாவசியமான பாக்சைட் (Bauxite)டும், தொழிற் சமூகத் தின் தேவதை என வருணிக்கப்படும் கந்தகமும் ஏராளமான இடங்

களில் செறிந்து கிடக்கின்றன. துத்தநாகம், ஈயம், யுரேனியம், வெள்ளி, தங்கம் ஆகியவையும் நாட்டின் பல பாகங்களில் போதிய அளவில் கிடைக்கின்றன. இவை தவிர, வெள்ளீயம், குரோமியம், நிக்கல், பாதரசம், மாங்கனீஸ், கோபால்ட், மைக்கா, அஸ்பெஸ் டாஸ் (Asbestos) முதலியவையும் ஓரளவிற்குக் கிடைக்கின்றன. 1860இல் சுரங்கங்களிலிருந்து எடுக்கப்பட்ட பொருட்களின் மதிப்பு சுமார் 90 மில்லியன் டாலர்கள் ஆகும். 1956-ல் எடுக்கப்பட்ட பொருட்களின் மதிப்பு 17,346 மில்லியன் டாலர்கள் ஆகும்.

முந்திய காலங்களில் இரும்புக்குமுன்னர் செம்பையே அமெரிக்கர்கள் உபயோகித்து வந்தனர். செம்பைக் கம்பியாக இழுத்து எளிதில் பயன்படுத்த முடியுமாதலால் பழங்காலந் தொட்டே பல்வேறு நிலையில் செம்பை உபயோகப்படுத்தினர். தந்தியும் தொலைபேசியும் நடைமுறைக்கு வந்து, மின்சக்தி ஆட்சி மக்களிடையே பிரபலமானதற்குப்பிறகு, செம்பு மின் ஊடு கடத்தியாக(Conductor)ப் பயன்பட்டு, புதிய முக்கியத்துவத்தை யடைந்தது. செம்பு உற்பத்தி ஆண்டொன்றிற்கு 9,000 டன்களாக 1801-ல் இருந்தது. பிறகு, இது 1957-ல் 38,70,000 டன்களுக்கு உயர்ந்தது. அரிசோனா, யுட்டா, மன்டானா (Montana), மிச்சிகன், நிவேதா முதலிய பகுதிகளில் செம்பு கிடைக்கிறது.

1873ஆம் ஆண்டுதான் துத்தநாகம் முதன்முதலாக அமெரிக்காவில் உற்பத்திசெய்யப்பட்டது. துத்தநாகத்தைப் பொறுத்தவரையில் உலக நாடுகளில் அமெரிக்காவும் ஜெர்மனியுமே முன்னணியில் நிற்கின்றன. இடாஹோ, கொலராடோ, மன்டானா, நியூயார்க், டெனசி, யுட்டா ஆகிய இடங்களில் துத்தநாகம் கலந்த உலோகக் கனிகள் வெட்டி எடுக்கப்படுகின்றன. செம்பு, வெள்ளீயம் முதலியவற்றில் உலோகக் கலவையாகப் பயன்பட்டுவரும் துத்தநாகம், வர்ணங்களைத் தயாரிப்பதற்கும், இரும்பு மற்றும் எஃகு பொருட்களைத் துருப்பிடிக்காமலிருக்கச் செய்வதற்கும் ஆளப்பட்டு வருகிறது.

அலுமினியம், பாக்சைட்டிலிருந்து பிரித்தெடுக்கப்படுகிறது. ஜியார்ஜியா, அலபாமா, டெனசி, அர்கன்சாஸ் முதலிய இடங்களில் காணும் சுரங்கங்களிலிருந்து பாக்சைட் தோண்டி எடுக்கப்படுகிறது. அலுமினியத்திடம் உறுதியும் வலிவும் உண்டு. இதனால், விமானங்களைத் தயாரிப்பதற்கும், வீட்டுக்குத் தேவையான பாத்திரங்களைச் செய்வதற்கும் இது பயன்படுத்தப்பட்டு வருகிறது.

ஈய உற்பத்தி, நாடு முழுவதும் பரந்து கிடக்கிறது எனலாம். ஏனென்றால், அது 22 மாநிலங்களில் உற்பத்தி செய்யப்பட்டு வரு

கிறது. ஈய வார்ப்பு உற்பத்தியில் நான்கில் மூன்று பங்கு மிசௌரி, இடாஹோ, யுட்டா, கொலராடோ பிரதேசங்களிலிருந்து கிடைக்கிறது. 1860 - ல் 15,600 டன் ஈயம் உற்பத்தி செய்யப்பெற்றது; 1957 - ல் 533,500 டன்களாக உயர்ந்தது.

அரிசோனு, அலாஸ்கா, யுட்டா, தென் டகோட்டா, கலிஃபோர்னியா—இவை பொன்விளையும் பூமிகள். 1957 - ல் பொன் உற்பத்தி 1,800,000 தூய அவுன்சுகள் (Fine Ounces). வெள்ளி உற்பத்தியில் அமெரிக்கா உலக நாடுகளில் இரண்டாவது இடத்தை வகிக்கிறது. அமெரிக்க மக்களின் பொருளாதார, மற்றும் சமூக வாழ்க்கையின் முன்னேற்றத்திற்கு இவ்விரு விலையுயர்ந்த உலோகங்கள் ஓரளவிற்கு உதவியுள்ளன.

### விவசாயப் பண்டங்கள்

நாட்டின் மிக முக்கியத் தொழில்கள் விவசாயப் பண்டங்களைச் சார்ந்திருக்கின்றன. அமெரிக்கத் தொழிலாளரில் எட்டில் ஒரு பகுதியினர் விவசாயத்தில் ஈடுபட்டுள்ளனர். மக்காச்சோளம், கோதுமை, பருத்தி, புகையிலை, ஓட்ஸ், சோயாபீன்ஸ், உருளைக்கிழங்கு, நெல், சர்க்கரை ஆகியவை நிறைய உற்பத்தியாகின்றன. கோதுமைப் பயிர் 41 மாநிலங்களில் விளைகிறது. கான்சாஸ், வட்டகோட்டோ கோதுமை உற்பத்தியில் தலைசிறந்து நிற்கின்றன. என்றாலும், வாஷிங்டன்தான் கோதுமை உற்பத்தித்திறனை உயர்மட்டத்தில் வைத்துக்கொண்டிருக்கிறது. அமெரிக்காவின் மக்காச்சோள உற்பத்தி உலகின் மொத்த உற்பத்தியில் சுமார் 50 சதவீதம் ஆகும். கூலவகைத் (Cereals) தானியங்கள் இல்லினாய், அயோவா, ஓஹியோ, இண்டியானு, மிசௌரி பகுதிகளில் செழித்து வளர்கின்றன. ஓட்ஸ், பார்லி, ரை முதலியவை மத்திய மாநிலங்களில் உற்பத்தியாகின்றன. ஓட்ஸ் உற்பத்தி ஆண்டொன்றிற்கு 1000 மில்லியன் புஷல்கள். டேக்சாஸ், கலிஃபோர்னியா, லூசியானு, அர்க்கன்சாஸ், ஜியார்ஜியா ஆகியவை நெல் உற்பத்தி மையங்களாக இருக்கின்றன. லூசியானுவில் கரும்பு விளைகிறது. வெள்ளை உருளைக் கிழங்கு அமெரிக்காவின் பெரும்பாலான மாநிலங்களில் பயிராகிறது. ஆனால், வடக்கு மற்றும் வடகிழக்கு மாநிலங்களே உருளைக்கிழங்குப் பயிர்களுக்குரிய இயற்கைச் சூழலைப் பெற்றிருக்கின்றன. இனிப்பு உருளைக்கிழங்குகள் பெரும்பாலும் தென் மாநிலங்களில் பயிராகின்றன.

கிழக்குக் கடற்கரைச் சமவெளி, அப்பளாச்சியன் (Appalachian) பிராந்தியம், மிசிசிப்பி பள்ளத்தாக்குப் பகுதி—இவை புகையிலை பயிராகும் இடங்கள். 1832 - 40 காலப்பகுதியில் புகையிலை ஏற்றுமதி உச்ச கட்டங்களுக்குத் தாவியது. பத்தொன்பதாம் நூற்றாண்டின்

பிற்பாதியில் புகையிலை உற்பத்தி கணிசமாகப் பெருகியது. இதன் விளைவாக விலைகள்கூடத் தாழ்ந்தன. உதாரணமாக, உள்நாட்டுப் போர் தொடக்கத்தில் ஒரு பவுண்டு தேயிலையின் விலை 7·8 செண்ட்டு களாக இருந்தது. ஆனால் போருக்கு முன்னர் 1816 - ல் ஒரு பவுண்டு தேயிலை 14·5 செண்ட்டுகளுக்கு விற்கப்பட்டது. தேயிலை உற்பத்தியில் வர்ஜீனியா முதலிடம் வகித்தது. தேயிலை உற்பத்தியாகும் மற்ற மையங்கள்: டெனசி, மேரிலாண்டு, வட கரோலினா, ஓஹியோ, மிசௌரி முதலியன. புகையிலை உற்பத்தியில் தலையாய நாடு என்ற புகழ் அமெரிக்காவிற்கு அப்போதே இருந்தது.

அமெரிக்கப் பயிர் வகைகளில் பருத்திக்கு ஒரு முக்கியமான இடம் உண்டு. ஏற்றுமதிப் பண்டங்களில் பருத்தியே முன் நிற்கிறது. உலகப் பருத்தி உற்பத்தியில் ஐந்தில் இருபங்கு அமெரிக்காவில்தான் தயாராகிறது. வட கரோலினாவிலிருந்து டேக்சாஸ், கலிஃபோர் னியா வரையிலுள்ள தென் மாநிலங்கள் அனைத்திலும் பருத்தி பயிராகிறது.

மற்றொரு குறிப்பிடத் தகுந்த பயிர் சணல். கெண்டக்கி பகுதியில் முதலில் தொடங்கப்பெற்ற இதன் சாகுபடி பிறகு மற்றப் பிரதேசங் களுக்கும் பரவியது. சுங்கம் மற்றும் உயர் விலைகளைத் துணையாகக் கொண்டு சணல் உற்பத்தி 19 ஆம் நூற்றாண்டின் முதற் பாதிப் பகுதியில் செழித்து வளர்ந்தது. கெண்டக்கி பகுதியே அல்லாது டெனசி, மிசௌரி பகுதிகளிலும் சணல் தற்போது உற்பத்தியாகிறது. சணலானது பலவித உபயோகங்களுக்கு ஆளப்பட்டு வருகிறது.

1940 ஆம் ஆண்டிற்குப் பிறகு அமெரிக்கப் பொருளாதாரத்தில் ஒரு மாறுதல் நிகழ்ந்தது. கச்சாப் பொருட்களை மிகுதியான அளவில் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்துவந்த அமெரிக்கா, அவ்வாண்டிற் குப் பிறகு கச்சாப் பொருட்களை இறக்குமதி செய்யத் தொடங்கியது. நாட்டில் கிடைக்கும் அளவைவிட, கூடுதலான அளவில் அமெரிக்கர் களுக்குக் கச்சாப் பொருள் தேவைப்படுகிறது; கச்சாப்பொருள் நுகர்ச்சி பன்மடங்கு அதிகரித்திருப்பதே இதற்குக் காரணம். கச்சாப் பொருள் பற்றாக்குறை அண்மைக் காலங்களில் மேலும் வளர்ந் திருக்கிறது. 1950—1975 காலப்பகுதியில் கோபால்ட், பாக்சைட், இயற்கைவாயு, பெட்ரோலியம், குரோமியம், நிலக்கரி, இரும்பு, செம்பு ஆகியவற்றிற்கான தேவை முறையே 344 சதவிகிதம், 291 சதவிகிதம், 142 சதவிகிதம், 109 சதவிகிதம், 100 சத விகிதம், 54 சதவிகிதம், 54 சதவிகிதம், 43 சதவிகிதம் அதிகரிக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது. அவ்வாறே கச்சாப் பொருட்கள், தட்டுமான பொருட்கள், உணவுப் பண்டங்கள் முதலியவற்றிற்கான

தேவை, முறையே 55 சதவிகிதம், 35 சத விகிதம், 42 சத விகிதம் அதிகரிக்கும் என எதிர்பார்க்கப்படுகிறது.

தற்போது நாட்டின் குடிமக்கள் ஆண்டு ஒன்றிற்குத் தலா 18 டன் கச்சாப் பொருட்களைப் பயன்படுத்தி வருகின்றனர். மற்ற நாடுகளை விட, சுமார் இரண்டு மடங்குகள் கூடுதலாக அமெரிக்கர்கள் எண்ணெயை ஆண்டு வருகின்றனர். உலகச் செம்பு உற்பத்தியில் மூன்றில் ஒரு பங்கை அமெரிக்கா 1938-ல் உற்பத்தி செய்தது; அதில் 50 சத விகிதத்தை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்தது. அதே அமெரிக்கா, தற்போது மற்ற நாடுகளிடமிருந்து செம்பை இறக்குமதி செய்து வருகிறது. கச்சாப் பொருட்களையும் கனி வளங்களையும் மிகுதியாகப் பயன்படுத்தப் பயன்படுத்த பற்றுக்குறை விரிவடைந்து இறக்குமதிகளின் அளவு பெருகிக்கொண்டே போகிறது. இந்நிலைமை நீடித்துக்கொண்டே போனால் எதிர்காலத்தில் அமெரிக்கப் பொருளாதாரத்தில் சில முக்கியமான பிரச்னைகள் தோன்றக்கூடும்.

## முதற் கருவிப் பொருட்கள்

பணத்தைச் சேமித்துப் பதுக்குவதில் பயனில்லை. சேமிப்புகள் முதலீடு செய்யப்பெற்று முதற் கருவிப் பொருட்கள் (Capital goods) உருவாகின்றபோதுதான் நாடும் மக்களும் நலம் பெறுகின்றனர். முதற் கருவிப் பொருட்கள் மனிதனின் ஆக்கத்திறனைப் பன்மடங்கு பெருக்குகின்றன. அறிவு வளர்ச்சியையும் தொழில்நுட்ப முன்னேற்றத்தையும் துணையாகக்கொண்டு அமெரிக்க நாடு பல்வேறு முதற் கருவிப் பொருட்களைப் படைத்திருக்கிறது. அதனிடம் 1·6 ட்ரிலியன் (Trillion) டாலர்கள் பெறுமானமுள்ள செல்வம் இருக்கின்றது என்று மதிப்பிடப் படுகிறது. நாட்டில் உள்ள வீடுகள், தொழிற்சாலைகள் மற்றுமுள்ள கட்டடங்கள் ஆகியவற்றின் மதிப்பு 750 பில்லியன் டாலர்கள் என அறியப்படுகிறது. எந்திரங்கள், கருவிகள், ரயில் பாதைகள் ஆகியவை போன்ற உற்பத்தியாளர் பண்டங்களின் மதிப்பு 200 பில்லியன் டாலர்கள் ஆகும். மற்றவற்றின் மதிப்பு வருமாறு: நுகர்வோர் பண்டங்களின் (மோட்டார் கார்கள், மனைத்துணைப் பொருட்கள் முதலியவை) மதிப்பு 190 பில்லியன் டாலர்கள்; இருப்புகள் (Inventories) — அதாவது தயாராகிக்கொண்டிருக்கும் அல்லது விற்பனையை எதிர் நோக்கியிருக்கும் பொருட்கள்—மதிப்பு 110 டாலர்கள்; இராணுவம் மற்றும் கப்பற் படைக்கான அளிப்புகளின் மதிப்பு 90 மில்லியன் டாலர்கள்; பண்ணை நில மதிப்பு 80 மில்லியன் டாலர்கள்; பண்ணை அல்லாத மற்ற நிலங்களின் மதிப்பு 130 மில்லியன் டாலர்கள்; பொன் மற்றும் வெள்ளி மதிப்பு 30 மில்லியன் டாலர்கள்; வெளி நாட்டில் செய்யப்

பட்டிருக்கும் முதலீடு 40 மில்லியன் டாலர்கள் எனக் கணக்கிட்டறியப்படுகிறது.

1959 ஆம் ஆண்டின் கணக்குப்படி நாட்டில் 58 மில்லியன் குடியிருப்பு வீடுகள், 7000 மருத்துவ மனைகள், அவற்றில் 1·6 மில்லியன் படுக்கை வசதிகள், 260,000 மைல் நீளமுள்ள முக்கிய ரயில் பாதைகள், 1·7 மில்லியன் சரக்கு ஊர்திகள், 4·6 மில்லியன் பண்ணை டிராக்டர்கள், 500,000 மைல்கள் நீண்டு கிடக்கும் வாயு மற்றும் எண்ணெய்க் குழாய்கள், 300,000 தொழிற்சாலைகள், 1·9 மில்லியன் மைல் நீளமுள்ள நன் நெடுஞ்சாலைகள் ஆகியவை இருக்கின்றன என்றறிகிறோம். ஆண்டுதோறும் 65 பில்லியன் டாலர்கள் மதிப்புள்ள முதற் கருவிப் பொருட்கள் தயாராகின்றன. உணவுப் பண்டங்களைத் தயாரிப்பதற்கு 43,000 தொழிற்சாலைகளும், மரப் பொருட்களைத் தயாரிப்பதற்கு 42,000 தொழிற்சாலைகளும் நாட்டில் இருக்கின்றன. அச்சுத் தொழிலில் 33,000 நிறுவனங்கள் உள்ளன. பொறிவழித் தொழில்கள் மூலம் ஆண்டொன்றிற்குக் கிடைக்கும் வருமானம் 150 பில்லியன் டாலர்கள்; போக்குவரத்துத் தளவாடத் தயாரிப்பு மூலம் பெறப்படும் வருமானம் 20 பில்லியன் டாலர்கள். ஆண்டுதோறும் உற்பத்தியாகும் மோட்டார்கார்கள், மோட்டார்கள் இயந்திரங்கள் மதிப்பு 9 பில்லியன் டாலர்கள். விமானம், விமான மாற்றுறுப்புகள் மதிப்பு 8 பில்லியன் டாலர்கள்.

### மக்கள் தொகை

மக்கள் தொகைக்கும் பொருளாதாரக் கட்டமைப்புக்கும் நெருங்கிய உறவுண்டு. முதலாவதாக, பண்டங்களைத் துய்ப்பது மக்களே. மக்களுக்குத் தேவையான பொருளாதாரப் பண்டங்களை அளிப்பதே பொருளாதார நடவடிக்கையின் தலையாய நோக்கம். இரண்டாவதாக, பொருளாதாரப் பண்டங்களைத் தயாரிக்கவும் மனித சக்திகள் பயன்படுகின்றன. ஆக, துய்ப்போர், உழைப்போர் என்ற வகையில் மக்கள் தொகைக்கும் ஒரு நாட்டின் பொருளாதாரக் கட்டமைப்புக்குமிடையில் நெருங்கிய தொடர்பு இருக்கவே செய்கிறது. எனவே, நாட்டின் பொருளாதார முன்னேற்றத்தில் மக்கள் தொகை யளவிற்கும், மக்கள் தொகைக் கலவைக்கும் (Composition of Population) இவையிரண்டில் ஏற்படும் மாறுதல்களுக்கும் முக்கியப் பங்கிருக்கிறது.

### மக்கள் தொகை வளர்ச்சி

அமெரிக்க நாட்டுச் சரித்திரத்தின் தொடக்க காலங்களில் மக்கள் தொகை விரைவாகப் பெருகியது; மேற்குத் திசையில் மக்கள் மிகுதியாகக் குடியேறினார்கள்; நகரங்களில் மேலும் மேலும் கூடுதலாக

வாழத் தொடங்கினர். 1750 ஆம் ஆண்டில் அமெரிக்காவில் பயணம் செய்த பீட்டர் காம் (Peter Kalm) என்ற ஸ்வீடிஷ் பயணி பின்வருமாறு குறிப்பிட்டார்: 'ஐரோப்பாவைவிட இங்கு மக்கள் தொகை விரைவாகப் பெருகுவதற்கான காரணங்களைக் கண்டறிவது சிரமமன்று. இங்கேயுள்ள மாநிலங்களில் ஆடவர்கள் வறுமையைப்பற்றிக் கவலைப்படாது மணம் புரிந்துகொள்ளலாம். சாகுபடிக்கேற்ற நிலங்கள் ஏராளமாயிருப்பதனால், புது மணமகன் தமது மனைவி, மக்களைப் பராமரித்து வருவதற்குப் போதுமான நிலத்தைப் பெற்றுக் கொள்ள முடியும். வரிகளும் குறைவாயிருக்கின்றன; எனவே அவைகளைப்பற்றியும் அவன் கவலைப்படத் தேவையில்லை. காலனி காலத்தின் பிற்பகுதியில்கூடப் பெரிய குடும்பங்கள் இருப்பதற்குச் சாதகமான நிலவரங்கள் நிலவின.'

1820 முதல் 1860 வரையில் மிகுதியான மக்கள் அமெரிக்காவில் புதிதாகக் குடியேறினர். அக்காலப் பகுதியில் இறப்பு விகிதமும் பிறப்பு விகிதத்தைவிடக் குறைவாயிருந்தது. மேலும் தொழிற்புரட்சி ஏற்பட்டு, தொழில்வளம் பெருகி வர்த்தகம் வளர்ந்து, வேலை வாய்ப்புகள் பெருகின. இவற்றின் காரணமாக மக்கள் தொகை மேலும் வளர்ந்தது. 1860 - ல் அமெரிக்க நாட்டு மக்கள் தொகை 31,443,321 ஆகும். 19 ஆம் நூற்றாண்டின் முதற் பாதியில் அமெரிக்க மக்கள் தொகையின் ஒரு முக்கிய அம்சம் ஆண்டுதோறும் 34 சதவிகிதம் அதிகரித்து, இருபதாண்டுகளுக்கொரு முறை தன்னைத்தானே இரட்டிப்பு செய்துகொண்டமை!

1790 - ல் இருந்த மக்களில் 94 சதவிகிதத்தினர் பழைய பதின்மூன்று காலனிகளின் அட்லாண்டிக் சரிவிலும், கால் மில்லியனுக்கும் குறைவான மக்கள் அலகனிஸ் (Alleghenies) பகுதிக்கே மேற்கிலும் வசித்து வந்தனர். ஆனால், 1820 - ல், 73 சதவிகித மக்கள் அட்லான்டிக் சரிவிலும், 27 சதவிகிதத்தினர் அலகனிஸ் மலைத்தொடருக்கு மேற்கேயும் இருந்தனர். அலகனிஸ் மலைப்பகுதிக்கு மேற்கே மக்கள் தொகை மென்மேலும் கூடியது; 1850 - ல் அங்கே யிருந்த மக்கள் தொகை அளவு, மொத்த மக்கள் தொகையில் சுமார் 50 சதவிகிதமாகும். காலப்போக்கில், அப்பலாச்சியன் பகுதிகளிலும், கரையோர மாநிலங்களிலும் மக்கள் தொகை பெருகலாயிற்று. கிழக்குப் பகுதிகளிலிருந்த மக்கள் நாட்டின் மேற்குப் பகுதிகளுக்குச் சென்று குடியேறுவதில் அக்கறை காட்டினர். தென்னாட்டு மக்களும் மேற்குப் பிரதேசங்களில் மிகுதியாகக் குடியேறினர்; இவர்களில் பெரும்பாலோர் தென் கரோலினா, வர்ஜீனியா, வடகரோலினா, ஜியார்ஜியா, நியூ இங்கிலாந்து ஆகிய மாநிலங்களைச் சார்ந்தவர்களாவர். இதனால், பருத்தி உற்பத்தி அங்கே சுணங்கி, மேற்குப் பகுதிக்குப் பரவியது.

19ஆம் நூற்றுண்டிற்குமுன்பு நகரங்களின் வளர்ச்சி குறைவே. அவற்றில் வாழ்ந்த மக்களின் எண்ணிக்கையும் குறைவே. உதாரணமாக, 1780 - ல் 8,000 மக்களுக்கு மேற்பட்ட மக்கள் தொகையை உடைய நகரங்கள் ஐந்தே இருந்தன. அவை : நியூயார்க், போஸ்டன், ஃபிலடெல்ஃபியா, சார்லஸ்டன், பால்டிமோர் என்பன. இவ்வைந்து நகரங்களிலிருந்த மக்கள் அளவு மொத்த மக்கள் தொகையில் 2·7 சதவிகிதமேயாகும். ஆனுல், போகப்போக நகரங்களின் எண்ணிக்கையும், நகரங்களின் மக்கள் தொகையும் கூடுதலாயின. 8000 பேர்களுக்கதிகமான மக்கள் தொகையை உடைய நகரங்கள் 1860 - ல் 141 இருந்தன ; இவற்றில் வாழ்ந்த மக்களின் அளவு மொத்த மக்கள் தொகையில் 16·1 சதவிகிதம் எனலாம். நகரங்களுக்குச் சென்று மக்கள் மிகுதியாகக் குடியேறியமைக்குக் காரணங்கள் தொழிற்சாலையமைப்பு வளர்ச்சி, போக்குவரத்து முன்னேற்றம் முதலியவை. பெருவாரியான மக்கள் மேற்குநோக்கிச் சென்றமையாலும், நிலங்களை மறந்து நகரங்களுக்குச் சென்று தங்கியமையாலும், கிராமப்புறங்களின் மக்கள் தொகை குறைந்துபோயிற்று. புதிய நகரங்கள் தோன்றிக்கொண்டிருந்த அதே நேரத்தில் பழைய நகரங்களும் விரிவடைந்து வந்தன. அளவுக்குமீறி விரிந்த நகரங்களில் குடியிருப்புப் பிரச்சினைகள் தோன்றின ; சேரிகள் உருவாயின ; ஆரோக்கியமற்ற சூழல்கள் ஆரம்பமாயின.

### குடியிறக்கம்

அமெரிக்காவில் மக்கள் தொகை பெருகியமைக்குக் குடியிறக்கத்திற்கும் (Immigration) ஒரு பங்குண்டு. 1825ஆம் ஆண்டு வரையில் குடியிறக்கக்காரர்களின் எண்ணிக்கை ஆண்டு ஒன்றுக்கு 10,000-க்கும் குறைவாகவே இருந்தது. ஆனுல், அவ்வாண்டிற்குப் பிறகு குடியிறக்கம் மும்முரமடைந்தது என்றறிகிறோம். உதாரணமாக, 1832 முதற்கொண்டு ஆண்டுதோறும் சுமார் 60,000 வெளிநாட்டவர் அமெரிக்காவிற்கு வந்து குடிபுகுந்தனர். 1845—1850 காலப் பகுதியில் குடியிறக்கம் மேலும் அதிகரித்தது. இதற்கு முக்கியக் காரணங்கள் : 1845, 1846ஆம் ஆண்டுகளில் ஐரோப்பாவில் கடுமழை பெய்து விவசாயம் பாதிக்கப்பட்டமை ; புரட்சிகள் ஏற்பட்டு சொத்துச் சுகங்களுக்குப் பாதுகாப்பு அரிதாகிப் போனமை; அயர்லாந்தில் உருளைக்கிழங்கு பஞ்சம் உண்டாகியமை. 'அமெரிக்காவில் குடியிறக்கம் பெருகியதற்குக் காரணம் அங்கே வளமும் செழிப்பும் வற்றுதிருந்தமையும், ஐரோப்பாவில் அரசியல் கொந்தளிப்புகள் தோன்றியமையுமே' என்கிறுர் ஃபால்க்னர் (Faulkner).

1860ஆம் ஆண்டிற்கு முன்னர் குடியேறியவர்களில் பாதிப் பேருக்குமேல் இங்கிலாந்தைச் சேர்ந்தவர்களாவர். குறிப்பாக

அயர்லாந்தைச் சார்ந்தவர்களாவர். மூன்றில் ஒரு பகுதியினர் ஜெர்மனியைச் சேர்ந்தவர்களாவர். இங்கிலாந்தைச் சேர்ந்தவர்கள் நாட்டின் வடகிழக்குப் பகுதியில் தங்கினர்; அயர்லாந்தைச் சேர்ந்தவர்கள் பெரும்பாலும் நகரங்களில் குடியேறினர். ஜெர்மனி நாட்டவரில் 50 சதவிகிதத்தினர் அப்பலாச்சியன் மலைத்தொடருக்கு மேற்கே விவசாயத்தில் ஈடுபட்டனர்; மீதிப் பேர் எல்லைப்புறங்களில் விவசாயத்தை மேற்கொண்டனர்.

1890ஆம் ஆண்டிற்குப் பிறகு அமெரிக்காவில் குடிபுகுந்தோர் பெரும்பாலும் தெற்கு ஐரோப்பாவிலிருந்து வந்தோராவர்; அரை மில்லியன் மக்கள் இத்தாலியிலிருந்தும், 4 மில்லியன் மக்கள் ஆஸ்திரியா மற்றும் ஹங்கேரியிலிருந்தும், 4 மில்லியன் மக்கள் போலந்து மற்றும் ரஷ்யாவிலிருந்தும் வந்திருந்தனர். தெற்கு ஐரோப்பாவில் ஏற்கெனவே மக்கள் தொகை அதிகமாயிருந்தது. அந்நிலையில் செக் நாட்டவர், போலந்துக்காரர்கள், யூதர்கள் ஆகியோரை எதிர்த்து ஆர்ப்பாட்டங்களும் கலகங்களும் ஏற்பட்டன. மேலும், சில பகுதிகளில் இராணுவப் பணியும் கடுமை மிகுந்ததாயிருந்தது. எனவே, தெற்கு ஐரோப்பிய மக்கள் அமெரிக்காவிற்கு ஓடிவந்து குடியேறியதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. மக்கள் இவ்வாறு தாமாகவே நாட்டில் வந்து குடியேறிக்கொண்டிருந்த தருணத்தில் அமெரிக்கத் தொழிற்சாலைகளில் வேலை செய்வதற்கு ஏராளமான பேர் தேவைப்பட்டனர். எனவே குடியிறக்கக்காரர்கள் தடையின்றி நாட்டிற்கு வந்துகொண்டிருந்தனர். அவர்கள் செல்ல விரும்பும் இடங்களுக்குத் தாம் குறைந்த கட்டணங்களில் ஏற்றிச் செல்லத் தயாராயிருப்பதாக அமெரிக்க ரயில்வேயும் கப்பல் கம்பெனிகளும் விளம்பரங்கள்கூட செய்தன.

1900ஆம் ஆண்டிற்குப் பிறகு கனடா, மெக்சிகோ ஆகிய நாடுகளிலிருந்தும் பலர் அமெரிக்காவிற்கு வரத் தொடங்கினர். மெக்சிகோவைச் சேர்ந்தவர்கள் டேக்சாஸ், அரிசோனா, நியூ மெக்சிகோ, கலிஃபோர்னியா முதலிய பகுதிகளில் இருந்த பருத்தி மற்றும் எண்ணெய்த் தொழிற்சாலைகளில் வேலைக்குச் சேர்ந்தனர்; 1930-ல் இப்பகுதிகளிலிருந்த மெக்சிகோக்காரர்களின் எண்ணிக்கை முக்கால் மில்லியன் ஆகும். கனடியர்களில் பெரும்பாலோர் மரத் தொழிற்சாலைகளிலும், நெசவுத் தொழிற்சாலைகளிலும் வேலைக்கமர்ந்தனர்.

### அண்மைக் காலங்களில் மக்கள் தொகை வளர்ச்சி

உள்நாட்டுப் போரின் விளைவாக அமெரிக்க மக்கள் தொகை வளர்ச்சி வீதம் பாதிக்கப்பட்டது. போரில் உயிரிழந்தோரின் எண்ணிக்கை 1 மில்லியனுக்கும் மிகுதியாக இருக்கும் என மதிப்பிடப்

பட்டது. உள்நாட்டுப் போருக்குப் பிறகு பிறப்பு விகிதமும் குறையலாயிற்று. போருக்கு முந்திய காலங்களில் இருந்துவந்த பிறப்பு விகிதம் 3.5% ஆகும். ஆனால் போருக்குப் பிறகு இது 2% ஆகக் குறைந்தது. 1900ஆம் ஆண்டில் இதே நிலை தென்பட்டது. வாழ்க்கைத்தரம் உயர்ந்தமை காரணமாகப் பிறப்பு விகிதம் குறையலாயிற்று என்று பொருளாதார இயலார் சுட்டிக் காட்டுகின்றனர். குடும்பத்தை அளவோடு வைத்துக்கொண்டால் வளமோடு வாழலாம் என்ற கொள்கை, மகளிரிடையே பொருளாதாரச் சுதந்திர உணர்வு வளர்ந்தமை, வாழ்க்கைச் செலவுகள் கூடியமை—இவை காரணமாக இருபதாம் நூற்றாண்டிற்கு முன்னால் பிறப்பு விகிதம் மிதமாயிருந்தது. ஆனால், பிறப்பு விகிதம்தான் குறைந்ததே தவிர குடியிறக்கம் குறையவில்லை. எனவே, மொத்த மக்கள் தொகை வளர்ந்து கொண்டேதான் வந்தது. 1900-க்கும் 1950-க்கு மிடையில் அமெரிக்க மக்கள் தொகை இருமடங்காகப் பெருகியது. பிறப்பு விகிதம் குறைந்தமையை அடிப்படையாகக் கொண்டு, 1930ஆம் ஆண்டிற்குப் பிறகு அமெரிக்க மக்கள் தொகை மேலும் வளராமலும் மாறுமலுமிருக்கும் எனப் பல பொருளாதார அறிஞர்கள் கருதினர். அவர்களது கருத்தைப் பொய்யாக்கும் முறையில் இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு பிறப்பு விகிதம் உயர்ந்து மக்கள் தொகை விரைவாகப் பெருகிற்று. 1959-ல் அமெரிக்க மக்கள் தொகை 177 மில்லியன் ஆகும். 1975ஆம் ஆண்டில் அமெரிக்க மக்கள் தொகை 220 மில்லியனுக்கும் கூடுதலாயிருக்கும் என எதிர்பார்க்கப் படுகிறது.

19ஆம் நூற்றாண்டிற்கு முன்னர் மக்கள் நெருக்கமிகுந்த பிரதேசங்கள் நாட்டின் மேற்குப் பகுதி மாநிலங்களாகும். 1900ஆம் ஆண்டிற்குப் பிறகு தெற்குப் பகுதி மாநிலங்களிலும், பிறகு இல்லினய்க்கு வடக்கு மற்றும் வடமேற்குத் திசையில் உள்ள பகுதிகளிலும் மக்கள் தொகையின் கணிசமான பகுதி காணப்பட்டது. இருபதாம் நூற்றாண்டின் பிற்பாதித் தொடக்கத்தில் ஜன நெருக்கம் மிகுதியாயிருந்தவை கிழக்குக் கடற்கரை மற்றும் மத்திய மேற்கு மாநிலங்கள் ஆகும். 1958-ல் மத்திய அட்லான்டிக் பிரதேசத்தில் 33 மில்லியன் மக்களும், கிழக்கு வடக்கு—மத்தியப் பிரதேசத்தில் 36 மில்லியன் மக்களும் இருந்தனர்; இது நாட்டின் மொத்த மக்கள் தொகையில் 40 சதவிகிதமாகும். அதே நேரத்தில், பசிபிக் பகுதியில் 19 மில்லியன் மக்களும், எட்டு மலைப்பிரதேச மாநிலங்களில் 6 மில்லியன் மக்களும் இருந்தனர். 1950ஆம் ஆண்டில் நியூ இங்கிலாந்து, மத்திய அட்லான்டிக் மாநிலங்கள் போன்ற வடகிழக்குப் பகுதிகளில் சதுர மைலுக்கு 241.2 பேர் என்ற நிலையும், மலைப் பிரதேச மாநிலங்கள் பசிபிக் மாநிலங்கள் ஆகியவை உட்பட்ட

மேற்குப் பகுதியில் சதுர மைலுக்கு 16.6 பேர் என்ற நிலையும் காணப் பட்டது. நாட்டின் மற்றப் பகுதிகளில் மக்கள் சதுர மைலுக்கு 50 அல்லது 60 பேர் என்ற அளவில் இருந்து வந்தனர்.

1900 - ல் மொத்த மக்கள் தொகையில் 60 சதவிகிதத்தினர் கிராமப் புறங்களில் வசித்தனர். ஆனால், 1950ஆம் ஆண்டிலோ 36 சதவிகிதத்தினர் கிராமப் புறங்களிலும், 64 சதவிகிதத்தினர் நகரங்களிலும் வசித்து வந்தனர்; அவ்வாண்டில் 4,741 நகரங்கள் அமெரிக்காவிலிருந்தன; இவற்றில் 3,500க்கு மேற்பட்ட நகரங்கள் ஒவ்வொன்றிலும் வாழ்ந்த மக்கள் தொகை 10,000-க்கும் கூடுத லாகும்.

1900ஆம் வருடத்தில் அமெரிக்காவிலிருந்த குடும்பங்களின் எண்ணிக்கை 16 மில்லியன் ஆகும். இது 1950 - ல் 44 மில்லியனுக்கும், 1958 - ல் 50 மில்லியனுக்கும் உயர்ந்தது. இரண்டு அல்லது இரண் டுக்கு அதிகமான நபர்களை உடைய குடும்பங்களின் எண்ணிக்கை 1950-க்குப் பிறகு 11·4 சதவிகிதம் அதிகரித்துள்ளது. குடும்பங்களின் எண்ணிக்கை மிகுதியாகின்றபோது, பல்வேறு பண்டங்களுக்கான தேவையும் மிகுதியாவது இயற்கையே. எனவே, குடும்பங்களின் எண்ணிக்கை அண்மைக் காலங்களில் துரிதமாக வளர்ந்தமை காரண மாக வீடுகள், வீட்டுச் சாமான்கள், மின்சாரம், வாயு, தொலைபேசி, டெலிவிஷன் ஆகியவற்றிற்கான தேவை பெருமளவில் அதிகரித் துள்ளது. வீடுகளுக்கான தேவை மிகவும் விரிவடைந்திருப்பதன் காரணமாக, வீடுகட்டுந் தொழில் நிகழ் காலங்களில் மும்முரமடைந் துள்ளது. ‘இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு பொருளாதார நடவடிக்கை உயர் மட்டத்திற்குச் செல்லக் காரணமாயிருந்தவற்றில் புதிய குடியிருப்புக் கட்டடத் தொழில் வளர்ச்சி ஒன்றாகும்’ என் கிறார் பி. ஜி. ஃபிஷ்மேன் (B. G. Fishman).

மக்கள் தொகை வளர்ந்தமையோடு தொழிலாளர் தொகையும் வளர்ந்துள்ளது. 1947 - ல் 62 மில்லியனாக இருந்த அமெரிக்கத் தொழி லாளர் தொகை 1959 - ல் 72 மில்லியனாயிற்று. சிவிலியன் தொழி லாளர் அணி (civilian labour force யில் 69 மில்லியன் பேர் இருந் தனர். இவர்களில் 5·5 சதவிகிதத்தினர் வேலை வாய்ப்பின்றியிருந்து வந்தனர். வேலையிலிருந்த 65·5 மில்லியன் பேர்களில் 9 சதவிகிதத் தினர் விவசாயத் தொழிலிலும், 91 சதவிகிதத்தினர்—அதாவது 59·7 மில்லியன் நபர்கள்—விவசாயமல்லாத வேறு துறைகளிலும் வேலைக் கமர்ந்திருந்தனர். விவசாயத்தில் வேலையிலிருந்தோரின் தொகை 1950 முதல் 1959 வரை, ஆண்டுதோறும் குறைந்துகொண்டே வந்தது என்பது இங்கே குறிப்பிடத் தகுந்தது. ஆனால், விவசாயமல்லாத

வேறு தொழில்களில் உள்ள தொழிலாளரின் தொகை பெருகிக் கொண்டே யிருந்தது.

அண்மைக் காலங்களில் உழைப்போர் அணி பெருகியமைக்கு இரு காரணங்கள் இருக்கின்றன. முதலாவதாக, உழைப்பிலிருந்து ஓய்வு பெறும் வயோதிகர் தொகையைவிட, படிப்பை முடித்துக்கொண்டு உழைப்பை நாடிவரும் இளையோர் தொகை கூடுதலாக இருத்தல்; இரண்டாவதாக, உழைப்பதற்கு மகளிர் மென்மேலும் கூடுதலான அளவில் வந்துகொண்டிருத்தல். எதிர்காலத்தில் இவ்விரு வகைப் போக்கும் வலிவடையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. எனவே, உழைப்போர் அணி மேலும் பெருகும் என்பதில் ஐயமில்லை. 1970 - ல் நாட்டில் இருந்த தொழிலாளர் தொகை 87 மில்லியன் ஆகும். இதில் 30 மில்லியன் மகளிர் இருந்தனர்.

# 2. அமெரிக்கப் புரட்சி
## (The American Revolution)

பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்த்து அமெரிக்க மக்கள் தொடுத்த விடுதலைப் போர் அமெரிக்கப் புரட்சியாகும். அரசியல், பொருளாதார, சமூக சக்திகள் ஒருங்கே இணைந்தமையால் எழுந்ததே இச் சுதந்திரப் போராட்டம். இரு வேறு பிரிவினரின் பொருளாதார நலன்களுக்கிடையே ஏற்பட்ட மோதல் அமெரிக்கப் புரட்சி. இங்கிலாந்திற்கும் அதன் காலனிகளுக்கும் இடையில் தோன்றிய பொருளாதாரப் போட்டி ஒன்றுதான் அமெரிக்கப் புரட்சி வெடித்திடுவதற்குக் காரணம் என்று கருதிவிடக்கூடாது. புரட்சி உருவாகியதற்குப் பல காரணங்கள் இருந்தன. தமது சூழ்நிலைக்குப் புறம்பாயிருந்த சமூக அரசியல் அமைப்பை எதிர்த்து அமெரிக்க நாடு செய்த கிளர்ச்சியைத் தான் உலக சரித்திரம் அமெரிக்கப் புரட்சி என்று பெயரிட்டழைத்தது. பிரிட்டிஷ் அரசாங்கத்தின் கொடுங்கோன்மை நிறைந்த வழிமுறைகளுக்குக் கண்டனம் தெரிவிக்கும் வகையில் புரட்சி கிளம்பிற்று. அது தோன்றியதற்குக் காரணங்களாக அமைந்தவற்றில் இடம் பெற்றவை பலப்பல.

### புரட்சிக்கான பொருளாதாரக் காரணங்கள்

**மெர்க்கண்டலிசக் கொள்கை:** பதினாறு, பதினேழு, பதினெட்டாம் நூற்றுண்டுகளில் செல்வாக்கு மிக்கதாயிருந்து வந்த மெர்க்கண்டலிசக் (Mercantilism) கொள்கையே இங்கிலாந்திற்கும் அமெரிக்காவிற்கும் இடையில் பொருளாதாரப் போட்டி ஏற்படக் காரணமாய் அமைந்திருந்தது. காலனி வல்லரசுகள் எல்லாம் அக்காலத்தில் மெர்க்கண்டலிசக் கொள்கையையே பின்பற்றி வந்தன. சாதக வாணிபச் செலுத்து நிலையை (Favourable balance of payments)யும் பொருளாதாரச் சுதந்திரத்தையும் வளர்த்து, பலமும் செல்வமும் உடைய சுதந்திர

தேசீயப் பேரரசுகளை நிறுவுவதே மெர்க்கண்டலிசத்தின் நோக்கம். மெர்க்கண்டலிசக் கொள்கையின் ஆதரவாளர்கள், சொந்த நாட்டுக் கப்பல் தொழிலை வளர்க்கவேண்டும், தொழில் துறையில் தன்னிறைவு ஏற்படத் தாய்நாட்டுத் தொழில்களுக்குப் பாதுகாப்பு வழங்க வேண்டும், பொறிசெய் தொழிலுக்குத் தேவையான கச்சாப் பொருட்களை யளிக்கும் வேளாண்மைத் தொழிலைப் பலப்படுத்த வேண்டும், சாதக வாணிப இருப்பு நிலையை உருவாக்கிப் பண்டங் களுக்கு மாற்ருகப் பிற நாடுகளிடமிருந்து விலையுயர்ந்த பொன்னையும் வெள்ளியையும் பெற்று நாட்டை விலைமிக்க உலோகங்களால் நிரப்பிடவேண்டும் என்பனவற்றில் குறியாயிருந்தனர். மெர்க்கண்ட லிசத் திட்டம் தாயகத்தின் நலனையே முக்கியமாகக் கருத்தில் கொண் டிருந்தது. தாயகத்தின் பொருளாதார வாழ்க்கையை மேம்படுத்து வதே காலனிகளின் கடமை என வலியுறுத்தப்பெற்றது. தாயகத்தில் கிடைக்காத கச்சாப் பொருட்களைத் தயாரித்தளித்து, தாயகத்திட மிருந்து பொறிசெய் பொருட்களை வாங்கிப் பயன்படுத்துவதே காலனிகளின் பொறுப்பு எனக் கூறப்பட்டது. சுருங்கக்கூறின், தாயகத்தின் நலத்திற்கெனத் தமது நலத்தைத் தியாகம் செய்ய காலனிகள் முன்வரவேண்டும்; இவ்வாறு செயல்படும்போது காலனி களின் நலமும் பாதுகாக்கப்பெற்ருல் மிகவும் நல்லது. மாருக, பாதிக்கப்பெற்ருல் தாயகத்தின் நலனையே பெரிதெனக் கொள்ள வேண்டும்.

மெர்க்கண்டலிசக் கொள்கை பதினரும் நூற்ருண்டிலேயே இங்கி லாந்தில் அடிஎடுத்து வைத்தது. என்ருலும் கிராம்வெல் காலத்திற்குப் பிறகுதான் இக் கோட்பாட்டை ஆதரித்துச் சட்டங்கள் இயற்றப் பட்டன. 1651-ல் இயற்றப்பட்ட முக்கிய கடற் கடவுச் சட்டங்களின் (Navigation Acts) அம்சங்கள் வருமாறு: (a) ஆசிய, ஆப்பிரிக்க, அமெரிக்க நாடுகள் தமது பண்டங்களை இங்கிலாந்து அல்லது அதன் குடியேற்ற உரிமை நாடுகளுக்கு (Dominions) அனுப்பும்போது ஆங்கி லேயக் கப்பல்களைத்தான் பயன்படுத்த வேண்டும். (b) ஐரோப்பிய நாடுகளிலிருந்து இங்கிலாந்து அல்லது அதன் குடியேற்ற உரிமை நாடுகளுக்கு இறக்குமதியாகும் பொருட்கள் ஆங்கிலேயக் கப்பல்கள் அல்லது பண்டங்களை அனுப்பி வைக்கும் நாடுகளின் கப்பல்களில் தான் கொண்டு வரப்படவேண்டும். (c) வெளி நாடுகளிடமிருந்து வரும் பண்டங்கள் இங்கிலாந்துக்கே நேரடியாக எடுத்துவரப் பெற வேண்டும். இச்சட்டத்தின் உட்கருத்து இங்கிலாந்துக்கு அல்லது காலனி கப்பற்காரர்களுக்குப் பண்டங்களை ஏற்றிச் செல்லும் முழு உரிமையை—சர்வாதீனத்தை—வழங்குதல். இச்சட்டத்தை 1660 - ல் இயற்றப்பட்ட மற்ருெரு சட்டம் வலிவுபடுத்தியது. 1660ஆம் ஆண்டின் சட்டம், ஆங்கிலேயக் கப்பல் தொழிலை வளர்க்க முயன்

றதோடன்றி காலனிகளின் வர்த்தகத்தையும் கட்டுப்படுத்தி அவற்றின் அங்காடிகளை பிரிட்டிஷ் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவர முற்பட்டது. ஆசிய, ஆப்பிரிக்க, அமெரிக்க நாடுகளின் ஆங்கிலேயத் தோட்டங்களில் விளையும் சர்க்கரை, புகையிலை, பருத்தி, கம்பளி, இஞ்சி ஆகியவை இங்கிலாந்திற்கே அனுப்பப்படவேண்டும் என்று இச்சட்டம் கூறியது. இப்பட்டியலில் தார், சணல், டர்பண்டைன் முதலியவை 1706-ல் இடம் பெற்றன. பிறகு இப் பட்டியலில் அரிசி சேர்த்துக்கொள்ளப்பட்டது. 1721-ல் செம்பு, தோல் வகைகள் இடம் பெற்றன. 1733-ல் வெல்லப்பாகும், 1764-ல் இரும்பு, பட்டு முதலியனவும் இடம் பெற்றன. வட ஐரோப்பாவில் இங்கிலாந்தைத் தவிர வேறு எந்த நாட்டுடனும் ஏற்றுமதி வியாபாரம் செய்ய முடியாத நிலை காலனிகளுக்கு ஏற்பட்டது. காலனிகளின் வர்த்தகச் சுதந்திரம் இதனால் பெரிதும் பாதிக்கப்பட்டது. காலனிகளின் ஏற்றுமதிகளைக் கட்டுப்படுத்தியதோடு பிரிட்டன் அமைதி கொள்ள வில்லை; இறக்குமதிகளைக் கட்டுப்படுத்தும் நடவடிக்கைகளையும் மேற் கொண்டது. 1663ஆம் வருடம் இயற்றப்பட்ட ஒரு சட்டத்தின்படி, ஐரோப்பாவிலிருந்து வரும் பொருட்கள் காலனிகளுக்கு இங்கிலாந்து வழியேதான் செல்லவேண்டும்; அதோடு இங்கிலாந்திலோ அல்லது காலனிகளிலோ கட்டப்பெற்ற கப்பல்களில்தான் செல்லவேண்டும். இறக்குமதிகளையும், ஏற்றுமதிகளையும் கட்டுப்படுத்தியதோடு திருப்தி யடையாது, காலனிகளின் பொறிவழித் தொழில்களையும் கட்டுப் படுத்தும் முயற்சியில் பிரிட்டன் இறங்கியபோதுதான் காலனிகள் மனம் வெதும்பின. 'போஸ்டன் அரசிதழ்' (Boston Gazette) என்ற போஸ்டன் தினத்தாள் ஒன்று 1765ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 29ஆம் நாள் 'ஒரு காலனிஸ்டுக்கு பித்தானையோ, செருப்பையோ அல்லது செருப்பாணியையோ செய்கின்ற உரிமை கிடையாது'—என்று குறிப்பிட்டது.

இங்கிலாந்துக்கும் அதன் காலனிகளுக்குமிடையில் ஏற்பட்ட பொருளாதார மோதல்களில் செலாவணிக் கொள்கை பற்றியதும் ஒன்றாகும். காலனிகளில் அவ்வப்போது புழங்கிய ஆங்கிலேய, போர்த்துகீசிய அல்லது ஸ்பானிஷ் நாணயங்கள் உடனுக்குடன் மறைந்து இங்கிலாந்துக்குச் சென்றுவிடும். இதற்குக் காரணம், வாணிபக் கொடுக்கல் நிலை காலனிகளுக்குப் பாதகமாகவும் இங்கி லாந்துக்குச் சாதகமாகவும் இருந்தமைதான். உலோக நாணயங்கள் இப்படி உடனுக்குடன் மறைந்துகொண்டேயிருந்தால் வர்த்தகம் நடைபெறுவது எப்படி? எனவே வர்த்தகத் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காக காலனிஸ்டுகள் சிப்பிமணிகளையும், கிடங்கு ரசீதுகளை யும் பணமாகப் பயன்படுத்தினர். இறுதியில் காகிதப் பணங்களைப் புழக்கத்திற்குக் கொண்டுவருவது தவிர்க்க முடியாததாயிற்று. முதன்

முதலில் மாசசூசெட்ஸ் (Massachusetts) 1690-ல் காகிதப் பண முறையைத் துவக்கி வைத்தது. நியூயார்க், ரோட்ஜலந்து, நியூஜெர்சி, நியூஹாம்ஷைர், கனெக்டிகட் ஆகியவை அடுத்து காகிதப் பணத்தை வெளியிட்டன; மற்றக் காலனிகள் அவற்றைப் பின்தொடர்ந்தன. உள்நாட்டுப் பணத் தேவைக்கு அதிகமான அளவில் காகிதப் பணம் வெளி வந்தமையால் அதன் மதிப்பில் இறக்கம் காணப்படலாயிற்று. இதற்கிடையில் அடமானங்கள் மற்றும் எஸ்டேட்டுகள்மீது காகிதப் பணத்தைக் கொடுக்கும் கடன் பாங்குகள் (loan Banks) மாசசூசெட்ஸில் தோன்றின. ஆனால் இவை வெற்றிகரமாகச் செயல்படுவதற்கு முன்னரே, 1741-ல் பாராளுமன்றம் குறுக்கிட்டு, 1720ஆம் வருடத்திய பபிள் சட்டத்தைப் (Bubble Act) பயன்படுத்தி இந்தக் கடன் பாங்குகளை ஒழித்துக் கட்டியது. ஆங்கிலேயக் கடன் ஈவோர்களின் நலன்களைப் பாதுகாக்கும் எண்ணத்தில் பிரிட்டிஷ் பாராளுமன்றம், காகிதப் பணம் வெளியிடும் உரிமையைக் காலனிகளிடமிருந்து பறிக்கும் சட்டங்களை இயற்றியது. இங்கிலாந்தின் இந்தப் போக்கின் காரணமாக அதிருப்தி விதைகள் அமெரிக்காவில் ஊன்றப்பட்டன.

இவ்வாறாக, பிரிட்டிஷ் அரசால் பின்பற்றப்பட்டுவந்த மெர்க்கண்டலிசக் கொள்கையின் திட்டங்களும் அம்சங்களும் அமெரிக்கப் பொருளாதாரத்தைச் சீர்குலையச் செய்வனவாய் அமைந்திருந்தன. குறிப்பாக, 1763ஆம் ஆண்டிற்குப் பிறகு குறைபாடுகள் வளர்ந்தன. இங்கிலாந்துக்கும் அமெரிக்காவுக்குமிடையில் சச்சரவுகள் அதிகரித்தன. புரட்சி உண்டாவதற்கான சூழ்நிலைகள் தோன்றின. 'மெர்க்கண்டலிசம் ஒரு தவறான கோட்பாடு......அமெரிக்காவிலிருந்த ஆங்கிலேயக் காலனிகள் இதற்கு முதலடி கொடுத்தன' என்று ஃபால்க்னர் கூறியுள்ளார்.

### தீவிரம் நிறைந்த கொள்கையும் சட்டங்களும்

பிரிட்டிஷ் நலன்களை நன்கு பாதுகாத்து, காலனிகளின் பொருளாதார வாழ்வைப் பிரிட்டனுக்கு அடிமைப்படுத்த வேண்டும் என்ற ஆங்கிலேயரின் கொள்கை 1763ஆம் ஆண்டிற்குப் பிறகு தீவிரம் அடைந்தது. இங்கிலாந்தின் தலைசிறந்த இராஜ தந்திரியான வில்லியம் பிட் பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் பலத்தைப் பெருக்குவதில் கண்ணும் கருத்துமாயிருந்தார். பிரிட்டனின் சர்க்கரைத் தொழிலைப் பாதுகாப்பதில் பெரும் அக்கரை காட்டினார். இவ்வக்கரை விளைவாக மேற்கொள்ளப்பட்ட பல நடவடிக்கைகள் காலனிகளுக்குப் பாதகமாக அமைந்ததால் காலனிகளிடத்தில் வெறுப்புணர்ச்சிகள் உண்டாயின. இதற்கிடையில் அமெரிக்கக் காலனிகளைப் பிரிட்டிஷ் அரசின் நேரடிக்

கண்காணிப்பின்கீழ்க் கொண்டுவர வேண்டும் என்றும், காலனிஸ்டுகள் அவர்களது பாதுகாப்பிற்காகும் யுத்தக் கடன்களை அடைக்கப் பணம் தரவேண்டும் என்றும் பிரதம மந்திரி கிரென்வில் (Grenville) விழைந்தார். இந்த விழைவு காரணமாக வாணிபச் சட்டங்களை இன்னும் சற்றுத் தீவிரமாக அமல் செய்தனர். வெல்லப் பாகு சட்டத்தின்மூலம் காலனிகளிடமிருந்து கிடைக்கும் வருமானத்தைப் பெருக்கினர். 'புதிய ஏகாதிபத்தியத்தோடு பழைய வர்த்தகக் கொள்கையைச் செயற்படுத்த முயன்ற முயற்சியே புரட்சி தோன்றுவதற்கான காரணங்களில் தலையானது' என்று ஃபால்க்னர் கூறியுள்ளார். இங்கிலாந்தின் கொள்கை காலனிகளுக்கு உண்மையிலேயே ஊறுவிளைவிப்பதாயிருந்தது. எனவே எதிர்ப்பு உடனே கிளம்பிற்று.

1764-ல் இயற்றப்பட்ட சர்க்கரைச் சட்டப்படி (Sugar Act), 1733-ல் இயற்றப்பட்ட மொலாசஸ் சட்டத்தின்கீழ் விதிக்கப்பட்ட வரிகள் பாதியாகக் குறைக்கப்பட்டன, ஆனால் சர்க்கரை, இண்டிகோ, காபி, பட்டு வகைகள், திராட்சை ரசம் ஆகியவைமீது வரிகள் விதிக்கப்பெற்றன. உடனே நியூ இங்கிலாந்திலும் மத்திய காலனிகளிலும் பொருளாதார மந்தம் தலைகாட்டியது; தெற்கில் இதன் பலா பலன்கள் தோன்றலாயின. சர்க்கரைச் சட்டத்தைத் தொடர்ந்து, முத்திரைச் சட்டம் (Stamp Act) என்ற ஒரு சட்டம் 1765-ல் இயற்றப்பட்டது. இச்சட்டத்தின்படி லைசென்சுகள், ஒப்பந்தங்கள், உயில்கள், செய்தித் தாள்கள், துண்டுப் பிரசுரங்கள் முதலியவற்றிற்கு ½ பென்னியிலிருந்து 10 பவுன் வரையில் மதிப்புள்ள முத்திரைத் தலைகளை வாங்கி ஒட்டவேண்டும். சர்க்கரைச் சட்டத்தைத் தொடர்ந்து நடைமுறைக்கு வந்த முத்திரைச் சட்டம் காலனிகளில் பலத்த அதிருப்தியை ஏற்படுத்தியது. இச் சட்டத்தை எதிர்த்துத் தரப்பட்ட மனுக்களும், நடைபெற்ற கிளர்ச்சிகளும் தோல்வியுறவே இச்சட்டம் திரும்பப் பெறும் வரையில் ஆங்கிலப் பொருட்களைப் பகிஷ்கரிப்பது என வர்த்தகர்கள் முடிவெடுத்தனர். இதனால் ஆங்கிலேய வர்த்தகர்களும், பொறிவழித் தொழிலதிபர்களும் பெரிதும் பாதிக்கப்பட்டனர். அதனால், பிரிட்டிஷ் அரசு 1766ஆம் ஆண்டு முத்திரைச் சட்டத்தை நீக்கியது. மக்கள் மகிழ்ந்தனர்.

அமைதி நிலவிடும் சூழ்நிலை தோன்றிக்கொண்டிருந்த இந்தத் தருணத்தில், குறிப்பிட்ட சில மாவட்டங்களில் நிறுத்தப்படும் கோட்டைப் பாதுகாப்புப் படைக்குத் தேவையான விளக்கு, இருப்பிடம், விறகு ஆகியவற்றை வாங்கும் பொறுப்பினை காலனிஸ்டுகளே ஏற்றுக் கொள்ள வேண்டும் என்ற குவார்ட்டரிங் சட்டத்தை (Quartering Act) 1765-ல் பிரிட்டிஷ் அரசு இயற்றியது. இச்சட்டத்திற்கு உடனே

கண்டனங்கள் தெரிவிக்கப்பட்டன. இங்கிலாந்துமீது வெறுப்புணர்ச்சியைக் காட்டுமாறு அமெரிக்கர்களைத் தூண்டிய சட்டங்களில் முக்கியமானவை டவுன்ஷெண்டு சட்டங்கள் (Townshend Acts) ஆகும். அமைச்சரவையில் முக்கிய இடம் வகித்த டவுன்ஷெண்டு பிரபு 1767-ல் பல சட்டங்களை அமல் செய்தார். அவற்றில் ஒரு சட்டம் கண்ணாடி, வெள்ளீயம், சிவப்பீயம், தாள், தேயிலை ஆகியவற்றின்மீது வரிகளை விதித்தது. மக்களின் நுகர்ச்சிக்குரிய பொருட்களின்மீது இவ் வரிகள் விழுந்ததால், வாழ்க்கைச் செலவு உயர்ந்தது. மேலும், வரிப் பணத்தைக்கொண்டுதான் காலனிகளின் சிவில் அரசாங்கச் செலவுகள் செய்யப் பெறவேண்டும் என்ற டவுன்ஷெண்டு சட்டங்களின் கொள்கையைக் காலனிஸ்டுகள் கடுமையாக வெறுத்தனர். ஆகையால், டவுன்ஷெண்டு சட்டங்கள் நிறைவேறியவுடனேயே காலனிஸ்டுகள் வாணிபத் தொடர்பின்மைக் கொள்கையை (Policy of nonintercourse) மீண்டும் பின்பற்றினர். பிரிட்டிஷ் பண்டங்கள் எல்லாவற்றையும் பகிஷ்கரிப்பதாக அறிவித்தனர். இந்தப் பகிஷ்கரிப்பு மிகவும் வெற்றிகரமாக அமைந்தமையால் பிரிட்டிஷ் வர்த்தகம் கடுமையாகப் பாதிக்கப்பட்டது. எனவே 1770-ல் டவுன்ஷெண்டு சட்டங்களை ஆங்கில அரசு ஓரளவிற்கு நீக்கியது,

இத்துடன் நிலைமை சீர்பட்டுவிடவில்லை. கனடாவின் நிர்வாகப் பிரச்னையைப்பற்றி அநேக நாட்கள் ஆராய்ந்து பார்த்தபின் பிரிட்டிஷ் அரசு ஒரு சட்டத்தை இயற்றியது. அச் சட்டத்தின்படி ஒகியோ (Ohio) விற்கும் கிரேட் லேக்சுக்கும், (Great Lakes) இடையில் உள்ள நிலப்பகுதி கியூபெக் மாநிலத்துடன் இணைக்கப்பட்டது. இந் நிலப்பகுதி மீது வர்ஜீனியா, நியூயார்க், கனெக்டிகட், மாசசூசெட்ஸ் ஆகிய மாநிலங்களுக்கு உரிமை உண்டென்றும், அந்த உரிமையைப் பறிக்கும் கருத்தில்தான் அச் சட்டம் இயற்றப்பட்டது என்றும் காலனிஸ்டுகள் கருதினர். இதனைப்போன்ற சட்டங்களை எதிர்த்து மக்கள் குரல் கொடுத்தனர். 1774 ஆம் வருடம் டிசம்பர் முதல் தேதி காலனி சட்ட மன்றங்களும், அமெரிக்கக் கண்டத்து காங்கிரசும் மூன்றுவது பகிஷ்காரத்தை ஆரம்பித்தன. மக்களின் ஏகோபித்த ஆதரவு இதற்குக் கிட்டியது. காலனிகளுக்கு வந்த பிரிட்டிஷ் இறக்குமதிகளின் மதிப்பு 1774-ல் 25,90,000 பவுன்; இது 1775-ல் 201,000 பவுனுக்குச் சுருங்கியது. தொழிற் புரட்சிக்கு இங்கிலாந்தில் மேடை தயாராகிக்கொண்டிருந்த தருணத்தில் பிரிட்டனின் ஏற்றுமதிகளில் தோன்றிய சரிவு பிரிட்டிஷ் ஆலை நகரங்களையும், துறைமுகங்களையும் வெகுவாகப் பாதித்தது. பிரிட்டிஷ் போக்கில் மாற்றம் வேண்டி ஆயிரக்கணக்கான மனுக்கள் பாராளுமன்றத்திற்கு வந்து குவிந்தன. ஆனால் அரசரும் அமைச்சர் குழுவும் விட்டுக்கொடுப்பதாயில்லை. 1775 ஆம் வருடம் மார்ச்சு மாதத்தில் மாசசூசெட்சில்

பதட்டநிலை தோன்றியது. பிரிட்டிஷ் போக்கில் கடுமையின் சதவிகிதம் அதிகரித்தது. நியூ இங்கிலாந்து காலனிகளுக்கும் மற்ற நாடுகளுக்கும் இடையிலான வர்த்தகத்தை இங்கிலாந்து தடை செய்தது. காலனிஸ்டுகள் மனம் குமுறினர். தங்களை அலைக்கழித்து வரும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்துப் படைக் கருவிகளை ஏந்தும் நிலைக்குத் தம்மைத் தயார்ப்படுத்திக்கொண்டனர்.

### மேற்கத்திய நிலப்பிரச்சினை

இங்கிலாந்துக்கும் அமெரிக்காவுக்கும் இடையில் கசப்புணர்ச்சி தோன்றக் காரணமாக அமைந்தவற்றுள் மேற்குத்திசை நிலத்தைப் (Western land) பொறுத்தவரையில் 1763 ஆம் ஆண்டிற்குப் பிறகு பிரிட்டன் தமது கொள்கையை அடிக்கடி மாற்றிக்கொண்டு வந்தது ஆகும். மேற்குத்திசை குடியேற்றத்தைப் பொறுத்தவரையில் அதன் குறிக்கோள் நிலத்தை விற்பது மூலமாகவோ அல்லது மனைவரி மூலமாகவோ அரசுக்கு வருமானம் தேடித் தருவதன்று; மாறாக ஆங்கிலேயப் பொருட்களுக்கு அங்காடிகளையும் ஆங்கிலேய வர்த்தகர்களுக்கு இலாபத்தையும் பெற்றுத்தரும் வகையில் மேற்குத் திசைக் குடியேற்றத்தை அமைப்பதே அதன் குறிக்கோள். இக் குறிக்கோளைக் கருத்தில் கொண்டு பிரிட்டிஷ் அரசு உண்மையான குடியேற்றக்காரர்களுக்கு சிறு நிலப்பகுதிகளையும், நிலயூக வாணிபர்களுக்குப் பெரிய நிலப்பகுதிகளையும் வழங்கியது. மேலும் ஃபிரஞ்சு மற்றும் ஸ்பானிஷ் தொல்லையிலிருந்து பாதுகாப்பு பெறவேண்டும், தோல் வியாபாரத்தைப் பெருக்கவேண்டும் என்ற கருத்திலும் பிரிட்டிஷ் அரசு எல்லைப்புறக் குடியேற்றத்தைத் துரிதப் படுத்தியது. ஆனால் 1763-ல் ஃபிரஞ்சுத் தொல்லை அகன்றவுடன் எல்லைப்புறக் குடியேற்றத்தை ஆதரிப்பதில் இங்கிலாந்து அரசு ஆர்வம் இழந்தது. எல்லையை மேற்கே நகர்த்திக்கொண்டேயிருந்தால் தொலைவு மிகுந்து எல்லைமீது பிடிப்புத் தளர்ந்துவிடும், தோல் வியாபாரமும் அழிந்துவிடும் என்று அஞ்சியது. இந் நிலையில், மேற்கிலிருந்தும் வடமேற்கிலிருந்தும் அட்லாண்டிக் சமுத்திரத்தை நோக்கி ஓடிவரும் நதிகளின் பிறப்பிடங்களுக்கப்பால் உள்ள நிலங்களை யாருக்கும் வழங்கக்கூடாதென காலனி கவர்னர்களுக்கு பிரிட்டிஷ் அரசு 1763-ல் ஆணையிட்டது. இப் பிரகடனம் காலனிஸ்டுகளுக்குப் பெரும் அதிர்ச்சியினை விளைவித்தது. அமெரிக்க நலன்களை பிரிட்டிஷ் வர்த்தக முதலாளித்துவத்திற்கு அடிமைப்படுத்தும் பெரு முயற்சி இது என அமெரிக்கர்கள் நம்பினர்.

அடுத்து 1774-ல் பிரிட்டிஷ் அரசு விதித்த புதுக் கட்டுப்பாடுகளையும் அவர்கள் வெறுத்தனர். புதிய கட்டுப்பாடுகளில் குறிப்பிடத்தக்கவை: புதிய நில வழங்கீடு மீது விதிக்கப்படும் மனைவரி

இரட்டிப்பாயிற்று; கவர்னர்கள் இனி நிலங்களை இனமாக வழங்க முடியாது; ஏக்கர் ஒன்றிற்கு ஆறு பென்சுக்குக் குறையாமல் எல்லா நிலங்களும் மேற்குப் பிரதேசத்தில் ஏலத்திற்கு விடப்படவேண்டும்.

இப் புதிய கட்டுப்பாடுகள் உண்மையான குடியேற்றக்காரர்களையும் நில யூக வாணிபர்களையும் மிகவும் பாதித்தன. பிரிட்டிஷ் அரசின் புதிய விதிகள் அமெரிக்கரின் நலன்களைப் பாதிக்கும் என்ற எண்ணம் மக்களிடையே புயலெனப் பரவிற்று. தெற்குப் பிரதேசத்தி லிருந்து வந்த தோட்ட முதலாளிகளிடத்தில் வெறுப்புணர்ச்சி மிகுந்தது. இவர்களில் பலர் பிரிட்டிஷ் முதலீட்டாளர்களிடத்தில் கடனாளியானவர் ஆவர்; கடன்பாட்டுச் சுமையிலிருந்து தப்புவதற்கு இருந்த ஒரே வழி மேற்குத் திசை நிலங்களில் முதலீடு செய்வதும், யூக வாணிபம் செய்வதும் ஆகும். இந்த வழியும் அடைக்கப்பட்ட போது இவர்கள் கொதித்தெழுந்தனர். தென்னகத் தோட்ட முதலாளிகள் ஏன் அமெரிக்கப் புரட்சியில் பங்கெடுத்தனர் என் பதற்கு இதுவே முக்கியக் காரணம். பொருளாதார அரங்கினில் நசுக்கப்பட்ட மக்கள் ஏமாற்றத்திற்குள்ளாகின்றபோது புரட்சி வெடித்துக் கிளம்புவது இயற்கையே. இதிலிருந்து நாம் புரிந்து கொள்வது என்னவென்றால் பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் இடையில் ஏற்பட்ட மோதலுக்கு அடிப்படையான பொருளாதாரக் காரணங்கள் வாதப் பிரதிவாதச் சூட்டில் தோன்றிய அரசியல் நிகழ்ச்சிகளால் தோன்றியவை அல்ல என்பதுதான். காலனி வர்த்தகமும், வாழ்க்கையும் தாயகத்தின் சர்வாதீனத்திற்குட் பட்டது அல்ல என்ற குரலின் வெளிப்பாடுதான் அமெரிக்கப் புரட்சி.

### மந்த நிலைமை

பதினெட்டாம் நூற்றாண்டின் பிற்பகுதியில் ஏற்பட்ட பொரு ளாதார மந்தமும் (Depression) அமெரிக்கப் புரட்சிக்கு ஒரு காரணமாக அமைந்தது எனலாம். ஃபிரஞ்சுப் போரினாலும், இந்தியப் போரினாலும் செயற்கையாக ஏற்பட்ட வாணிபச் செழிப்பு நிலையும், 1763 முதல் 1965 வரையில் இயற்றப்பட்ட வர்த்தகம் மற்றும் நிதிபற்றிய சட்டங்களும், இவற்றை யடுத்துத் தோன்றிய பொருளா தாரச் சிக்கல்களும் இம்மந்தம் ஏற்பட ஓரளவுக்குக் காரணமாயின. வேறு காரணங்களும் இருந்தன. இங்கிலாந்தில் தொழிற்புரட்சியும் விவசாயப் புரட்சியும் ஏற்பட்டு, அவற்றைத் தொடர்ந்து அமைதி யின்மையும், நிலைப்பாடின்மையும் (Instability) உருவான காலமது. தொழிற்சாலை முறையும் தொழிற்றுறை முதலாளித்துவமும் மாபெருமளவில் உண்டாகியவுடன் மிகப்பெரும் வாணிபச்சுழல் ஏற்ற இறக்கங்கள் (Cyclical fluctiatuons) தோன்றின. சுழலின் மந்த கட்டம், 1766 முதல் 1774 வரையிலான ஆண்டுகளின்போது

இங்கிலாந்தில் தானிய உற்பத்தி மிகவும் குறைவாயிருந்தமையால் தீவிரமடைந்தது. இங்கிலாந்து அனுபவித்த சிரமங்களை அமெரிக்காவும் அனுபவிக்க வேண்டியதாயிற்று. நியூ இங்கிலாந்திலும் மத்திய காலனிகளிலும் இலாபம் தரும்வகையில் வர்த்தகம் இருந்துவந்தது. எனவே இங்கிலாந்து மக்களின் வாங்குந்திறன் குறைந்தமை, இக் காலனிகளின் வணிகர்கள் செய்துவந்த வர்த்தகத்திற்கு ஆபத்து விளைவித்தது; மேலும் மொலாசஸ் சட்டத்தைத் திருத்தி அமலுக்குக்கொண்டு வந்ததால் வர்த்தகர்களுக்கும் கப்பல்காரர்களுக்கும் தொல்லைகள் மிகுந்தன. இவர்களுக்கு ஏற்பட்ட சோதனைகள் தெற்குப்புறக் காலனிகளுக்கும் பரவின. வர்ஜீனியா, நியூ இங்கிலாந்து, மேரிலாண்டு முதலியவற்றின் ஏற்றுமதிகள், இறக்குமதிகள், பெருமளவில் குறைந்தன. காலனிகளின் வாணிபத்தில் மந்த நிலைமை ஆழமாக ஊன்றியது. ஆனால் வடபகுதியில் இருந்த கடுமை தென்பகுதியில் இல்லை. பொருளாதார மந்தம் வணிகர்களை மட்டுமன்றி விவசாயிகளையும் பாதித்தது. நிலங்களின் வளங்குன்றியமையாலும், வேறு சில காரணங்களாலும் புகையிலை உற்பத்தி மிகவும் குறைந்தது; ஏற்றுமதியும் சரிந்தது. 1772 ஆம் ஆண்டிற்குப் பின்னர் வார்ப்பு இரும்பு, இரும்புக் கம்பிகள் முதலியவற்றின் ஏற்றுமதிகள் கணிசமாகக் குறைந்தன. காலனிகளின் வர்த்தகம் இவ்வாறு தடுமாற்றமடைந்தபோது இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் வர்த்தகத்துறையில் அமைதியின்மையும் மந்தமும் ஏற்பட்டுப் பொருளாதார வாழ்க்கை பாதிக்கப்பட்டு வெறுப்புணர்ச்சிகள் வேரூன்றின. கொடுமையான காலங்களில் அரசியல் அமைதியின்மை ஏற்படுவது இயற்கை.

3,000 மைல்களுப்பால் இருந்த அமெரிக்கக் கண்டத்தில், முதல் ஆங்கிலேயன் குடியேறிய பின்னர், சுமார் 150 ஆண்டுகள் கழிந்து விட்ட சூழ்நிலையில் தொல்லைகள் அதிகரித்தால் ஒரு தலைமுறைக்குப் பின் தாயகத்தின் மீதுள்ள பற்று குறையாமலிருக்கும் என நம்ப முடியாது. மக்கள் எண்ணிக்கையில் நான்கில் ஒரு பங்கினர் ஹாலந்து, ஜெர்மனி, ஸ்வீடன், தென் அயர்லாந்து ஆகிய நாடுகளிலிருந்து வந்து குடியேறியோர் ஆவர். இவர்களில் பெரும்பாலானோர் இங்கிலாந்தை வெறுத்தனர். நியூ இங்கிலாந்து மக்களில் பெரும் பகுதியினர் ஆங்கிலேயரின் வழிவந்தோர்; என்றாலும் இவர்களுக்குத் தாயகத்தைப்பற்றி எதுவும் தெரியாது. 'தாயகம் தொலைவில் உள்ள ஓர் அரசு என்றும், கடந்த நூற்றாண்டில் தாயக ஆட்சியாளர் தமது முன்னோர்களை இன்னற்படுத்தி நாடு கடத்திவிட்டனர் என்றும், அவ்வாறு வெளியேறியவர்கள் அமெரிக்கக் காடுகளில் தஞ்சம் புகுந்தனர் என்றும் இவர்கள் நம்பினர்' (டேவிட் ராம்சே). புதிய தலைமுறையினரிடம் போர்க்குணமும் சுதந்திரமாக வாழவேண்டும்

என்ற வேட்கையும் நிறைந்து கிடந்தன, இவற்றுடன் மேலே விவரிக்கப்பட்ட காரணங்களும் இணையவே, ஆங்கிலேயருடைய ஆதரவும் பரிவும் தமக்குத் தேவையில்லை என்று கருதினர். இங்கிலாந்துக்கும் அமெரிக்காவுக்கும் இடையிலான தொடர்பு பலவீனமடைந்தது. காலனி அரசுகளின் உரிமைகளையும் அதிகாரங்களையும் பிரிட்டிஷ் அரசு வரையறுக்க முயலுவது, காலனி மக்களது உரிமைகளையும் சுதந்திரத்தையும் பறிக்க இங்கிலாந்தின் அதிகார வர்க்கம் செய்கின்ற சூழ்ச்சி என்று அமெரிக்கர்கள் கண்டனம் தெரிவித்தனர்.

அமெரிக்கப் புரட்சிக்கு வரிப் பிரச்சினையும் ஒரு காரணம் ஆகும். ஆனால் வரி எதிர்ப்பையும் 'பிரதிநிதித்வம் இல்லையெனில் வரிகொடுக்க மாட்டோம்' என்ற அமெரிக்கரின் குரலையும் பல வரலாற்றாசிரியர்கள் மிகைப்படுத்தியிருக்கின்றனர் என்று பேராசிரியர் ஃபால்க்னர் கருதுகிறார். அரசியல் முறைப்படி நோக்கின், குடியேற்றக் காலத்திலிருந்தே காலனிகள் வரிசெலுத்தி வந்தபோதிலும், பாராளுமன்றத்தில் அவைகளுக்குப் பிரதிநிதித்துவம் இருக்கவில்லை என்பதை நாம் நினைவுகூர்தல் வேண்டும். மேலும், 1763ஆம் ஆண்டிற்குப் பின்னர் விதிக்கப்பெற்ற வரிகளெல்லாம் உடனுக்குடன் நீக்கப்பட்டு விட்டன என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது. எனவே, ஆங்கில நாட்டுக் கொடுங்கோல் அரசன், தான் இழந்த அதிகாரத்தை மீண்டுமடைய எத்தனித்த காரணத்தால்தான் புரட்சி ஏற்பட்டது என்ற பழைய கோட்பாடும், பிரதிநிதித்துவம் இல்லையேல் வரி செலுத்த முடியாது என்று மக்கள் கிளர்ச்சி செய்ததால்தான் புரட்சி ஏற்பட்டது என்ற மற்றொரு விளக்கமும் ஏற்றுக்கொள்ளப்படக்கூடியவை அல்ல என்று ஃபால்க்னர் கூறுகிறார். புரட்சி ஏற்படுவதற்கு, அடிப்படைப் பொருளாதாரக் காரணங்கள் பல இருந்தன என்பது இவர் கருத்து.

### புரட்சி மூள்வதற்கு உடனடிக் காரணம்

திவாலாகவிருந்த கிழக்கிந்தியக் கம்பெனியைக் (East India Company) காப்பாற்ற பிரிட்டிஷ் அரசு மேற்கொண்ட நடவடிக்கைதான் பிரிட்டனிடமிருந்து அமெரிக்கா தமது உறவினைத் துண்டித்துக் கொள்வதற்கான உடனடிக் காரணமாக அமைந்தது எனலாம். இந்திய உபகண்டத்தைச் சுரண்டி வாழ்ந்துகொண்டிருந்த கிழக்கிந்தியக் கம்பெனி, தவறான நிர்வாகத்தினாலும், ஊதாரித்தனத்தினாலும் திவாலாகும் நிலைக்கு வந்துவிட்டது. இது ஆங்கிலேய அரசியல் வாதிகளுக்கும், முதலாளிகளுக்கும் பெரும் இழப்பாகுமாதலால் கிழக்கிந்தியக் கம்பெனியைக் காப்பாற்றவேண்டியது அவசியமாயிற்று.

கம்பெனியின் கிடங்குகளில் 170,00,000 பவுண்டு தேயிலை கேட்பா ரற்றுக் கிடந்து வந்தது. இதனை விற்பதற்கு உதவும் முறையில் அமெரிக்காவில் நேரடியாகவே (இங்கிலாந்துக்கு வந்த பிறகு அமெரிக்காவுக்குப் போகாமல்) தேயிலையை விற்கும் உரிமையைக் கிழக்கிந்தியக் கம்பெனிக்கு பிரிட்டிஷ் அரசு அளித்தது. இவ்வேற்பாடு கம்பெனிக்குத் தேவையான அங்காடியைக் கொடுத்தது. ஆனால் அமெரிக்கரின் உள்ளங்களிலோ அமைதியின்மையை உருவாக்கியது; அவரிடையே பலத்த சந்தேகங்கள் முளைத்தன. கிழக்கிந்தியக் கம்பெனிக்குத் தேயிலை விற்பனையில் சர்வாதீனம் (Monopoly) தரப் பட்டால், இந்தியாவிலிருந்து அது அள்ளி வரக்கூடிய மற்றப் பொருட்களது விற்பனையிலும் சர்வாதீனம் வழங்கப்படலாம். அத்துடன் இந்தக் கம்பெனிக்குத் தேயிலை விற்பனையில் சர்வாதீனம் தரப்பட்டதுபோலவே மற்றக் கம்பெனிகளுக்கும் மற்ற மற்றப் பொருட்களில் சர்வாதீனம் தரப்படலாமே. மேலும் கூடுதலான அளவில் தேயிலையை விற்க முயல்வதோடு, அதிகமான வரிகளையும் அமெரிக்கரிடமிருந்து வசூலிக்க, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் தீட்டிய இத்திட்டத்திற்கு ஆதரவு வழங்குவது என்பது அமெரிக்கப் பொருளா தாரத்திற்கு அமெரிக்கரே ஊறுவிளைவிக்கும் செயல் அல்லவா? காலனிஸ்டுகளின் எண்ணங்கள் இவை. ஹான்காக் (Hancock) போன்ற வர்த்தகர்கள் கடுமையான எதிர்ப்புக்களைத் தெரிவித்தனர். மக்களனைவரும் கொதித்தெழுந்தனர்.

ஆவேச வெள்ளம் அணை உடைத்துக் கிளம்பிக்கொண்டிருந்த நிலையில், அமெரிக்கத் துறைமுகங்களுக்கு வந்த கிழக்கிந்தியக் கம்பெனி தேயிலையைக் காலனி உஷார் கமிட்டிகள் (Vigilance Committees) இறக்கவிடாமல் தடுத்தன. போஸ்டனில் இந்தியர் களைப்போல் வேடமிட்டுப் பலர் கம்பெனிக் கப்பல்களில் நுழைந்து 342 பெட்டிகளில் அடைக்கப்பட்டிருந்த தேயிலையைக் கடலில் கொட்டினர். இந்த 'போஸ்டன் தேயிலை விருந்து' (Boston Tea Party) பிரிட்டிஷ் சாம்ராஜிய அரசுக்கு விடுக்கப்பட்ட சவாலாயிற்று. பாராளுமன்றம் கடுமையாகச் செயல்படத் துவங்கியது; அது போஸ் டனுக்கு எதிரான பல கொடிய சட்டங்களையும் நடவடிக்கைகளையும் மேற்கொண்டது. கடலில் எறியப்பட்ட தேயிலைக்குரிய பணத்தை மக்கள் தருகின்றவரையில் போஸ்டன் துறைமுகம் மூடப்பட்டிருக் கும் என அறிவிக்கப்பட்டது. மூடப்பட்ட அந்தத் துறைமுகத்தை பிரிட்டிஷ் ராணுவம் காவல் புரிந்து வந்தது. அமெரிக்கர்கள் பொறுமை இழந்தனர். 13 காலனிகளில் ஜியார்ஜியாவைத் தவிர மற்ற காலனிகளின் பிரதிநிதிகள் அனைவரும் பிலடெல்ஃபியாவில் கூடி, ஆங்கிலேயக் கொடுங்கோலுக்கெதிராகச் செய்யப்பட வேண் டிய நடவடிக்கைகளைப்பற்றி ஆலோசித்தனர். நிலைமை கட்டு மீறுவு

தைக் கண்ட பிரிட்டிஷ் அரசு சமாதானத்திற்கு முயன்றது. ஆனால் அதற்கிடையில் இருதரப்புப் படைகளும் மோதிக்கொண்டு விட்டன; தாக்குதல்கள் பரிமாறிக்கொள்ளப்பட்டு விட்டன: துப்பாக்கி முழக்கங்கள் கேட்கப்பட்டுவிட்டன. சுதந்தரப் புரட்சி வெடித்துக் கிளம்பிவிட்டது,

### புரட்சியின் விளைவுகள்

பிரிட்டிஷ் பேரரசின் கொடுமை மிகுந்த போக்குகளுக்கும், சட்ட திட்டங்களுக்கும் எதிர்ப்புத் தெரிவிக்கும் முறையில்தான் அமெரிக்கச் சுதந்திரப் புரட்சி கிளம்பிற்று. எனவே, புரட்சிக்குப் பிறகு உருவான அரசியல் சட்டங்களிலெல்லாம் மக்களின் அடிப்படை உரிமைகளைப் பாதுகாக்கும் கொள்கைகள் காணப்பட்டன. நல்வாழ்வு, சுதந்தரம், பேச்சுரிமை, எழுத்துரிமை, மதஉரிமை, மக்களின் இசைவுபெற்ற வரி விதிப்புத் திட்டம், ஜூரி வழக்கு விசாரணை முறை முதலியவற்றை அரசியல் சட்டங்கள் ஏற்றுக்கொண்டன. புரட்சிக்குப் பின்னர் பழைமையாளர்களின் வலிமை குறைந்து, ஜெஃபர்சன் போன்ற புரட்சியாளர்களின் குரல் ஓங்கிற்று. அடிமை முறைக்குப் பலத்த அடிகிடைத்தது. பதினெட்டாம் நூற்றாண்டு முடியு முன்னர் பெரும்பாலான மாநிலங்கள் அடிமை முறையைத் தடைசெய்து விட்டன. புரட்சியின் காரணமாக விவசாயம், தொழில், நிதி ஆகிய துறைகளில் ஏற்பட்ட விளைவுகள் யாவை என்பது கீழே விவரிக்கப் படுகிறது.

### விவசாயம்

சுதந்தரப் புரட்சியினால் விவசாயம் அவ்வளவாகப் பாதிக்கப்பட வில்லை. நியூயார்க், பென்சில்வேனியா, நியூஜெர்சி ஆகியவை ஆங்கி லேயப் படையினராலும், ஃபிரஞ்சுப் படையினராலும் கொள்ளை யடிக்கப்பட்டன என்றாலும், இவர்கள் விவசாயிகளிடமிருந்து பெற்ற பண்டங்களுக்கு மிகுதியான விலைகளைக் கொடுத்தனர். எனவே பண்டங்களை அதிகமான விலையில் விற்பதில் விவசாயிகள் பெரிதும் மகிழ்ந்தனர். 'இவ்வளவு கேவலமான பணத்தாசை எல்லோ ரையும் பிடித்தாட்டுவதால் எந்தவிதப் பேரிடர் ஏற்பட்டாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை' என்று ஜார்ஜ் வாஷிங்டன்கூட வருத்தப் பட்டார். வாணிபத் தடையைத் துச்சமென நினைத்து ஐரோப்பியச் சந்தைகளுக்குப் பலர் வர்ஜீனியத் தோட்டங்களிலிருந்து புகை யிலையை எடுத்துச் செல்வதில் இலாபம் கண்டனர். பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதி புகையிலையின் பொற்காலம் ஆகும், 1774-ல் தென்னாட்டின் புகையிலை உற்பத்தி 101,800,000 பவுண்டுகள். 1790-ல் இது 130000000 பவுண்டாக உயர்ந்தது. கரோலினா பிராந்தி

யத்தில் நெல் உற்பத்தியும் ஏற்றுமதியும் வழக்கம்போல் எந்தவித இடையூறும் இன்றி நடந்து வந்தன. அரிசியைச் சுத்தப்படுத்தி அங்காடிக்குத் தயார்ப்படுத்தும் நீர்ஆலை (Watermill) ஒன்று முதன் முதலாக சன்டீ (Santee) நதி ஓரத்தில் 1778-ல் நிறுவப்பட்டது. இவ்வாறாக, தென்னாட்டு வேளாண்மைத் தொழில் புரட்சியினால் அடிப்படையில் பாதிக்கப்படவில்லையென்றாலும், பிரிட்டிஷ் படைத் தாக்குதல்களினால் நாட்டுப்பற்று மிகுந்த பல தோட்ட முதலாளிகள் பாதிக்கப்பட்டனர் என்பதையும், அவர்களது அடிமைகள் கைப் பற்றப்பட்டனர் என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது. அதைப் போலவே, ஆங்கிலேய அரசுக் கொடைகள் (Bounties) நிறுத்தப் பட்டதால் இண்டிகோ (Indigo) தொழில் நசிவுறத் தொடங்கியது.

ஆனால் கம்பளி மற்றும் பருத்தி உற்பத்தி கணிசமாகப் பெருகின எனலாம். இறக்குமதித் தடுப்பு ஒப்பந்தங்கள் வணிகத்தில் குறுக் கிட்டமையாலும், போர் நடந்தமையாலும் காலனிகளின் கம்பளி உற்பத்தியும், பருத்தி உற்பத்தியும் பெருகியது. விவசாயிகள் பருத்தி உற்பத்தியைப் பெருக்கிடவேண்டும் என்று மேரிலாந்து, தென் கரோலினா, வர்ஜீனியா ஆகிய மாநிலங்கள் சட்டமியற்றின. போரால் பாதிக்கப்படுவதற்கு மாறாக அமெரிக்க விவசாயம் நன்கு வளரத் தொடங்கியது. நிலத்தின் வளத்தைப் பாழாக்கிவந்த பழைய சாகுபடி முறைகள் அறவே மறைந்து, புதிய ஆக்க முறைகள் மலர்ந் தன. ஐரோப்பிய வேளாண்மை வளர்ச்சிகளை, போரின் காரணமாக அமெரிக்காவிற்கு வந்த வெளி நாட்டவர் அமெரிக்க வேளாண்மைத் தொழிலில் புகுத்தியதின் காரணமாகவே காலனிகளின் விவசாய உற்பத்தி பெருகிற்று.

### தொழில்

புரட்சியினால் அமெரிக்கத் தொழில் துறையில் அனேக விளைவுகள் ஏற்பட்டன. அமெரிக்கத் தொழில்மீது விதிக்கப்பட்டிருந்த கட்டுப் பாடுகள் நீங்கின. காலனிஸ்டுகள் ஆங்கிலப் பொருட்களை வாங்க மறுத்தனர். இங்கிலாந்திலிருந்து இறக்குமதி செய்யப்பட்டு வந்த கம்பளியும் லினனும் நிறுத்தப்பட்டன; அவற்றைக் காலனிகளில் தயாரிக்கும் முயற்சியில் மக்கள் ஈடுபட்டனர். ஆடைக்குத் தேவை யான கம்பளியை நிறைய உற்பத்திசெய்ய வேண்டும் என்ற கருத்தில் மக்களில் பெரும்பாலோர் ஆட்டிறைச்சியை உண்ண மறுத்தனர். எல்லா வகுப்புகளையும் சேர்ந்த பெண்டிர் துணி நெய்வதை ஒரு குடிசைத் தொழிலாக வளர்க்கத் தொடங்கினர். நெசவுத் தொழில் முன்னேற்றத்தில் தென்னாட்டுத் தோட்டத் தொழிலதிபர்கள் நல்ல அக்கறை காட்டினர்; தனி இல்லங்களை ஆங்காங்கே நிறுவி அடிமை

களுக்கு இத்துறையில் பயிற்சி கொடுத்தனர். பெருஞ் செல்வந்தர்கள் கூட வீட்டில் நெய்த ஆடையை உடுத்துவதில் மகிழ்ச்சிகொண்டனர். ஆனால் போரின் பிந்திய கட்டங்களில் இறக்குமதிகள் மீண்டும் ஆரம்பிக்கப்பட்டபோது நூல் நூற்பும், துணி நெசவும் பெரிதும் பாதிக்கப்பட்டன.

யுத்தத்திற்கு வேண்டிய வெடி மருந்துகளும், மற்றப்பொருட்களும் காலனிகளிலேயே தயாராயின. பெரும்பாலான காலனிஸ்டுகள் வேட்டைக்காரர்களாக இருந்தமையால் துப்பாக்கியைத் தயாரிப்பதில் அவர்களில் பலர் நல்ல தேர்ச்சிபெற்றிருந்தனர், ரோடுஐலந்து, கனெக்டிகட், மாசசூசெட்ஸ் ஆகிய பகுதிகளில் துப்பாக்கித் தொழிற்சாலைகள் ஏற்பட்டன. ஸ்பிரிங்ஃபீல்டில் (Spring field) ஒரு பீரங்கி வார்ப்புத் தொழிற்சாலையை 1778-ல் காங்கிரஸ் நிறுவியது; அங்கே தான் நாட்டுப் போர்க்கருவிகள் இருப்பு நிலையம் 1794-ல் நிறுவப்பட்டது. பென்சில்வேனியாவிலும், ஹட்சன் அருகிலும் துப்பாக்கி வார்ப்புத் தொழிலும், கூடாரக்கெட்டில் தயாரிப்புத்தொழிலும் வளர்ச்சி யடைந்தன. நியூ இங்கிலாந்திலும் மத்திய காலனிகளிலும் பல புதிய உலைக்கூடங்கள் தயாராயின. எஃகுத் தொழிற்சாலைகளை ஏற்படுத்துவோருக்குப் பல உதவிகளை வழங்க ரோடுஐலந்து, மெயின் (Maine) ஆகிய மாநிலங்களின் அரசுகள் முன்வந்தன. உள்நாட்டுத் தாதுக்களிலிருந்து கந்தகம் தயாரிப்போருக்கு மாசசூசெட்ஸ் உதவிகளை வாரி வழங்கிற்று. ஈயத்தைச் சுரங்கங்களிலிருந்து எடுத்துச் சுத்தப்படுத்திப் பக்குவப்படுத்தும் முயற்சிகள் வர்ஜினியா, செஸ்பெல், கனெக்டிகட் ஆகிய பகுதிகளில் மேற்கொள்ளப்பட்டன. யுத்த காலத்தில் செய்தித் தாள்களின் எண்ணிக்கை முப்பத்தி ஏழிலிருந்து நூறுக்கு உயர்ந்தது. இதனால் காகிதத் தயாரிப்புத் தொழிற்சாலைகள் பல இடங்களில் தோன்றின,

1777 வரையில் பெரும்பாலான அத்தியாவசியப் பொருட்களின் அளிப்பில் பற்றாக்குறை இருந்துவந்தது. பின்னர் நிலைமை நாளடைவில் சீர்ப்பட்டது எனலாம். இறக்குமதி செய்யப்பட்டு வந்த பல பொருட்களை உள் நாட்டிலேயே தயாரிப்பதற்குச் சிறு தொழிற்சாலைகள் ஏற்பட்டன. கப்பல் கட்டும் தொழிலில் கணிசமான முன்னேற்றம் தென்பட்டது,

போர் காரணமாகத் தொழிலாளர் கிடைப்பதில் சிரமங்கள் ஏற்பட்டன. இராணுவப்படையில் அனேகர் சேர்ந்தனர்; தனியார் கப்பல் தொழிலுக்குப் பலர் சென்றனர். எனவே தொழிலாளரின் அளிப்பு குறைந்தது. தொழிலாளர் கிடைப்பருமையாலும், வாழ்க்கைச் செலவு உயர்ந்தமையாலும், பணத்தின் அளவு பெருகியமை

யாலும் 1774 ஆம் ஆண்டிலிருந்து 1784 ஆம் ஆண்டு வரையில் தொழிலாளர் கூலிகள் மிகவும் உயர்ந்து கிடந்தன.

### வர்த்தகம் மற்றும் தனியார் கப்பற்படை

போரின் விளைவாக அமெரிக்கத் துறைமுகங்கள் உலக வாணிபத்தில் முக்கியத்துவம் பெற்றன; தனியார் கப்பற்படை (Privateeing) செழித்து வளர்ந்தது. யுத்தத்திற்கு முன்னால் இருந்த இறக்குமதித் தவிர்ப்பு ஒப்பந்தங்கள் விளைவாக, அமெரிக்க அங்காடியில் ஆங்கிலேயப் பண்டங்கள் முற்றிலும் தீர்ந்துபோய்விட்டன. எனவே புதிய அங்காடிகளை எதிர்பார்த்துக்கிடந்த ஸ்பெயின், ஃபிரான்சு, ஹாலந்து ஆகிய நாடுகள் தமது பண்டங்களை அமெரிக்காவில் குவிக்கலாயின. திராட்சை ரசம், வெல்வெட்டு, லினன், காப்பி, தேயிலை, வாசனைப் பொருட்கள், பட்டு முதலிய ஆடம்பரப் பொருட்களே இறக்குமதிப் பட்டியலில் பிரதானமாக இடம் பெற்றன. அரிசி, புகையிலை, மாவு போன்ற பண்டங்கள் ஏற்றுமதிப் பட்டியலில் இருந்தன. ஏற்றுமதியாகும் பொருட்கள் பிரிட்டிஷ் கப்பற்படை, தனியார் போர்க்கப்பல்கள் ஆகியவற்றின் தாக்குதல்களைச் சமாளிக்க வேண்டும். 1776 முதல் 1779 வரை 570 கப்பல்களைப் பிடித்துவிட்டதாகப் பிரிட்டிஷ் கப்பற்படையினர் பெருமை யடித்துக்கொண்டனர். என்றாலும், இதனால் ஏற்றுமதிகள் பாதிக்கப்படவில்லை.

வர்த்தகத்தைப் போலவே தனியார் கப்பற்படையும் நன்கு வளர்ந்தது. போருக்கு முன்னால் சாதாரண மீன் பிடிப்பு நகரமாக இருந்த சேலம் (Salem) 1781-ல் 4000 பேர்களைக்கொண்ட 59 தனியார் போர்க் கப்பல்களைப் பெற்றிருந்தது; போர்க்காலத்தில் அதனிடம் 180 தனியார் போர்க் கப்பல்கள் இருந்தன. ரோடுஐலந்து, நியூபரிபோர்ட் ஆகியவற்றிடமும் நிறைய தனியார் போர்க் கப்பல்கள் இருந்தன. நியூ லண்டன், நியூ ஹேவன், ஹண்ட் ஃபோர்டு போன்ற நகரங்கள் தனியார் கப்பற்படைத் தொழிலில் மும்முரமாக ஈடுபட்டு இலாபங்களை ஈட்டி வந்தன. வழக்கமான கப்பற் பயண வசதிகள் துண்டிக்கப்பட்டமையால் தனியார் கப்பற்படை வளர்ச்சிக்கு நல்ல ஊக்கம் பிறந்தது. இலாபம் ஈட்டவேண்டும் என்ற ஆவலும், துணிவும் உள்ளோர் இத்துறையில் ஈடுபட்டனர். கிடைத்த இலாபங்களைக் கப்பற் சொந்தக்காரர்கள் கப்பலோட்டிகளோடு பகிர்ந்து கொண்டனர். தனியார் கப்பற்படைகளிலும், கடற் பயணங்களிலும் 90,000 அமெரிக்கர்கள் ஈடுபட்டிருந்தனர் என்று நம்பப் படுகிறது. தனியார் போர்க் கப்பல்கள் எதிரியைத் தாக்கி அச்சுறுத்தின; கடற்பயணத்தில் கவர்ச்சியை உண்டாக்கின; கப்பல் தொழிலுக்கு வேண்டிய மூலதனத்தை அளித்தன. காங்கிரஸ்

இரகசியக் கமிட்டியின் உறுப்பினராயிருந்த ராபர்ட் மாரிஸ் என்பாருக்கு சைலாஸ்டீன், 1777 ஆம் வருடம் ஆகஸ்டு 23 ஆம் தேதி 'தனி மனிதரின் அமெரிக்கப் போர்க் கப்பல்கள் அயர்லாந்தைச் சுற்றிலும் மிதந்து சென்று, 17 அல்லது 18 கப்பல்களைக் கைப்பற்றி அழித்து இங்கிலாந்தைத் திகிலடையச் செய்துவிட்டன; செஸ்டரில் கூட விருந்த பெருஞ் சந்தையைத் தடுத்துவிட்டன; எனவே தங்களது பண்டங்களை ஆங்கிலேயக் கப்பல்களில் அனுப்புவதற்கு ஆங்கிலேயரே பயந்தனர்; சில வாரங்களில் நாற்பது ஃபிரஞ்சுக் கப்பல்கள் வாடகைக்கு அமர்த்தப்பட்டன. தேம்ஸ் நதியில் ஃபிரஞ்சுக் கப்பல்கள் மிதந்து செல்வது இதுவரை கண்டிராத ஒரு புதிய காட்சி' என்று எழுதினர். அமெரிக்கத் தனியார் கப்பற் படையினரால் ஆங்கில வர்த்தகர்களுக்கு ஏற்பட்ட இழப்பு சுமார் 2,200,000 பவுன்கள்.

## நிதியும் நாணயமும்

போருக்கான முழுச் செலவைத் தங்கத்தில் கணக்கிட்டுப் பார்த்தால் 10,40,00,000 டாலர்கள் ஆகும். நிதியைத் திரட்டுவது சிரமமாயிருந்தது. வரி விதிப்பை எதிர்த்துவந்த காலனி மக்களிடையே வரிகளை விதிப்பதன் மூலம் நிதி சேகரிப்பது என்பது நடவாத செயல். எனவே காகிதப் பணத்தை வெளியிடுவது என்பது ஒரு தவிர்க்க முடியாச் செயலாயிற்று. 42 முறை காங்கிரஸ் காகிதப் பணத்தை அச்சிட்டு வெளியிட்டது. 1779 ஆம் ஆண்டு, நவம்பர் 29 ஆம் தேதி வரையில் வெளியிடப்பெற்ற காகிதப் பணத்தின் மதிப்பு 19,15,52,380 டாலர்கள் ஆகும். இந் நிலையில் மாநிலங்களும் காகிதப் பணத்தை வெளியிடத் தொடங்கின. 1783-ல் 24,63,66,741 டாலர் மதிப்புள்ள காகிதப்பணத்தை 11 மாநிலங்கள் வெளியிட்டன. ஒரு புதிய நாட்டுக்குத் தேவைப்படும் அளவுக்குக் கூடுதலாக காகிதப் பணம் இவ்வாறு வெளியிடப் பெற்றமையால், காகித நாணயத்தைப் பொறுத்தவரையில் மதிப்பிறக்கம் ஏற்படலாயிற்று. நாணயக் குழப்பம் தலையெடுத்தது. உடனே ஜே (Jay) போன்றவர்கள் வர்த்தகத்துறையில் காகிதப் பணத்தை ஏற்றுக்கொள்ளுமாறு நாட்டு மக்களைக் கேட்டுக்கொண்டனர். ஃபிரஞ்சு மற்றும் ஸ்பானிஷ் உதவிக் கொடைகளைப் பற்றுக்கோலாகக் கொண்டு டாலரின் மதிப்பு சிறிது காலத்திற்கு நிலைத்து நிற்க முயன்றது என்றாலும், 1777 ஆம் ஆண்டின் பிற்பகுதியில் டாலரின் மதிப்பு சரியத் தொடங்கியது. 1780 ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் டாலரின் மதிப்பு 2·45 சென்டுகளே ஆகும். 1781 ஆம் ஆண்டில் ஒரு ஜோடி ஷூக்களின் விலை 100 டாலர்கள்; ஒரு பவுண்டுத் தேயிலையின் விலை 90 டாலர்கள்; ஒரு பீப்பாய் மாவின் விலை 1575 டாலர்கள். காகிதப் பணத்தின் மதிப்பு இப்படி தாழ்ந்து கிடந்ததினால் நிலையான வருவாய் உடையவர்கள்

மிகவும் துன்பப்பட்டனர். ஆனால் கடனாளிகளுக்கும் யூக வாணிபர்களுக்கும் இது ஒரு பொற் காலமாக அமைந்தது. கடன்பத்திர வெளியீடு, குலுக்குச் சீட்டு முறைகள், வெளிநாட்டுத் தனி நபர் நன்கொடைகள், பிற நாட்டரசுக் கடன்கள் ஆகியவை மூலமும் நிதிகள் திரட்டப்பட்டன. என்றாலும் போருக்குத் தேவையான நிதியைச் சேகரிக்க காகிதப்பண வெளியீடுதான் பிரதான வழியாக இருந்தது.

போர்க் காலத்தில் காங்கிரசும், மாநிலங்களும் சுமார் 43,79,19,321 டாலர்கள் மதிப்புள்ள காகிதப் பணத்தை வெளியிட்டன. மேலும் கள்ள நோட்டு அச்சடிப்பும் மிகுதியாக இருந்தது. காகிதப் பணத்தின் மதிப்பு கணிசமாகக் குறைந்துபோயிற்று. காகிதப் பணம் மதிப்பிழந்து புழக்கத்தைவிட்டு அகன்றமையால் ஆங்கில, ஃபிரஞ்சு, ஸ்பானிஷ் மற்றும் போர்த்துகீசியக்காசுகள் புழக்கத்திற்கு வந்தன. வெளிநாட்டுக் காசுகள் கிடைத்தும் நிலைமை சீர்ப்படவில்லை. ஏனென்றால், இறக்குமதிகளை வாங்குவதற்கே அவை பயன்படுத்தப் பெற்றன. நாணயக் கிடைப்பருமையால் அவதியுற்ற மக்கள் 1785—1786-ன் வாணிப மந்தத்தின்போது காகிதப்பணம் வெளியிடப்பட வேண்டுமென கோரிக்கை விடுத்தனர். ஏழைகள், கடனாளிகள், விவசாயிகள் ஆகியோர் இக் கோரிக்கையை எழுப்பினர். ஆனால் காகிதப்பண அதிகரிப்பால் வர்த்தகம் எந்த அளவுக்குப் பாதிக்கப்படும் என்பதை உணர்ந்திருந்த வர்த்தகர்கள் காகிதப்பண வெளியீட்டை எதிர்த்தனர் மாநிலங்கள் அனைத்திலும் காகிதப்பண வெளியீடுபற்றி காரசாரமான விவாதங்கள் நடைபெற்றன. போலந்து, வர்ஜீனியா, நியூ ஹாம்ஷயர், கனெக்டிகட் ஆகிய மாநிலங்கள் கடுமையான போராட்டத்திற்குப் பின்னரே காகிதப் பணத்திலிருந்து தப்பின எனலாம். ரோடுஐலந்து (Rhode Island) நீதிமன்ற வரலாற்றின் ஒரு பரபரப்பான வழக்கு இப் பிரச்சினை குறித்து எழுந்தது. ஜான்வீடன் என்ற ஓர் இறைச்சி விற்பனையாளர் இறைச்சி விற்பனைக்கு காகிதப் பணத்தை வாங்க மறுத்தார். வழக்கு நீதிமன்றம் போயிற்று. காகிதப்பண வெளியீட்டுச் சட்டம் அரசியல் சட்டப்படி செல்லாது என்று நீதிபதிகள் தீர்ப்பளித்தனர். உடனே சட்டமன்றம் நீதிபதிகளை வரவழைத்துக் குற்றம் சாட்டியது. எனினும் நிதிபதிகளின் தீர்ப்பு நிலைத்து நின்றது. பொருளாதாரக் கண் கொண்டு நோக்கின், காகிதப்பணப் பிரச்சினை மிகவும் முக்கியமானதாகும். இப் பிரச்சினையைச் சுற்றியே சமூகத்தில் அதிருப்தி வளர்ந்து மக்களின் பல்வேறு பிரிவினரிடையே அமைதியின்மை உருவாயிற்று.

ஒரு யுத்தம் முடிவுற்ற பிறகு நாட்டில் எவை எவை நிகழுமோ அவை யனைத்தும் அமெரிக்கப் புரட்சிக்குப் பின்னர் நிகழ்ந்தன,

பொறிவழித் தொழில்கள், விவசாயம், தனியார் கப்பற்படை ஆகியவற்றிலிருந்து தொழிலாளர்கள் வெளியேறி வேறுதுறைகளில் அடைக்கலம் புகுந்தனர். முதலீடு செல்வோரும் வேறுதுறைகளை நாடிச் சென்றனர். புரட்சி முடிவுற்ற நிலையில் ஐரோப்பாவிலிருந்து பொறிசெய் பண்டங்கள் இறக்குமதி யாயின. அவற்றின் விலைகள் மலிவாயிருந்தன. போர்க்காலத் தேவையும் மறைந்துவிட்டது. எனவே விலைவாசிகள் குறைந்தன. இதனால் போர்க்காலத்தில் ஏற்பட்ட பிஞ்சுத் தொழில்கள் மிகவும் பாதிக்கப்பட்டன.

போர் முடிந்த பிறகு நாட்டைவிட்டு வெளியேறிய ஆங்கிலேயர்களும், மற்றவர்களும் தம்முடன் ஆயிரக்கணக்கான நீக்ரோக்களை அழைத்துச் சென்றுவிட்டனர்; இதன் காரணமாக தென்னகத்தில் அடிமைத் தொழிலாளர் அளிப்பு குறைந்தது; அவ்வளிப்புப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு அனேக ஆண்டுகள் தேவைப்பட்டன.

புரட்சியின் விளைவுகள் தென்கரோலினாவிலும், வர்ஜீனியாவிலும் கடுமையாக இருந்தன. நியூ இங்கிலாந்தின் மீன் பிடிப்புத் தொழிலும், மேற்கிந்திய வர்த்தகமும் படிப்படியாக மறைந்தது அந்த மாநிலத்திற்கொரு பேரிழப்பு. மற்ற சில மாநிலங்களில் வர்த்தகம் தேக்க நிலைக்குள்ளாகியது. வர்த்தக வீழ்ச்சியிலிருந்து தம்மை மீட்டுக்கொள்வதற்கு இவை பெரிதும் போராடவேண்டியிருந்தன. பிரிட்டிஷ் புதிய கடற்கடவுச் சட்டங்களால் அமெரிக்க மாநிலங்களுக்குப் பல தொல்லைகள் விளைந்தன.

இங்கிலாந்தில் பொருளாதார மந்தம் ஏற்பட்டதனால், 1783 ஆம் ஆண்டிற்குப் பிறகு காலனி பொருட்களுக்கு பிரிட்டிஷ் அங்காடிகள் கிடைப்பது அரிதாயிற்று. பரிபூரண சமத்துவ அடிப்படையில் வர்த்தக உறவுகளை அமைத்துக்கொள்ள 1778ஆம் ஆண்டின் ஃபிரஞ்சு உடன்படிக்கை உறுதியளித்தபோதிலும், இவ் வடிப்படையில் வர்த்தக உடன்படிக்கைகளைச் செய்துகொள்வது சாத்தியமில்லாது போயிற்று. தம்மோடு வர்த்தக உறவுகளை வைத்துக்கொள்ள வேண்டுமென்றால், மிசிசிப்பி நதியில் கப்பற் போக்குவரத்துரிமையை 25 ஆண்டுகளுக்கு அமெரிக்கா விட்டுக்கொடுக்க வேண்டுமென ஸ்பெயின் நிபந்தனையிட்டது. ஃபிரான்சும், ஹாலந்தும் அமெரிக்காவுடன் வர்த்தக ஒப்பந்தங்களைச் செய்துகொண்டன. என்றாலும்,இவை சமநிலையில் நின்று செய்த பேரங்களின் அடிப்படையில் அமைந்திடவில்லை. அமெரிக்க வர்த்தக உறவுகளை ஏற்றுக்கொள்ள போர்ச்சுக்கல் முன்வரவே இல்லை. பரஸ்பர வர்த்தக உரிமைகளைப் பாதுகாக்கும் ஒப்பந்தங்களை அமெரிக்காவுடன் செய்துகொள்ள ஸ்வீடனும், பிரஷ்யாவும் மட்டுமே ஒப்புக்கொண்டன. இந்நாடுகளோடு புதிய

சூழ்நிலைகளுக்கேற்ப வர்த்தகத்தைச் சீரமைத்துக்கொள்வதில் நாட்டு மக்களுக்கு அநேக சிரமங்கள் ஏற்பட்டன. மேலும் வல்லமை பொருந்திய மத்திய அரசொன்று அமையாமற் போனதால் பரஸ்பர வர்த்தக உடன்படிக்கைகளை ஏற்படுத்த ஆடம்ஸ், ஜே ஆகியோர் எடுத்துக்கொண்ட முயற்சிகள் வெற்றிபெற முடியவில்லை. எனினும், வர்த்தகம் விரைவில் மீட்சியுற்று, போருக்கு முந்திய உயர் மட்டத்தினை எட்டிப்பிடித்துவிட்டது. ஃபிரான்சு, ஹாலந்து ஆகிய நாடுகளுடன் வர்த்தகம் நன்கு பெருகிற்று. இங்கிலாந்துடன் நடைபெற்ற வர்த்தகத்தைவிட 50 சதவிகிதம் கூடுதலாகவே ஹாலந்துடன் வர்த்தகம் நடக்கத் தொடங்கியது; இதில் அமெரிக்காவுக்குச் சாதக வாணிப இருப்பல் நிலை உருவாயிற்று என்பதும் இங்கே குறிப்பிடத் தக்கது. வர்த்தகத்தில் தோன்றிய மீட்சியானது, மீன் பிடிப்புத் தொழில், மரச்சாமான் தயாரிப்புத் தொழில் ஆகியவற்றிலும் மீட்சியை ஏற்படுத்தி வைத்தது. மேலும் உணவுப் பொருட்கள், புகையிலை, மற்ற வேளாண்மைப் பண்டங்கள் ஆகியவற்றிற்கான தேவையும் பெருகிற்று.

பிரிட்டிஷ் மெர்க்கண்டலிசக் கொள்கையால் நசுக்கப்பட்டுக் கிடந்து வந்த அமெரிக்க வியாபார முதலாளிகள், போருக்குப்பின்னர் தமது மூலதனம் முழுவதையும் பயன்படுத்த முன் வந்தனர். மேற்குத்திசைப் பகுதிகளில் கிடைக்கக்கூடிய இலாபங்களைச் சேகரிக்கும் கருத்தில் பல கம்பெனிகளைத் தொடங்கினர். பொறிவழித் தொழில்களை வளர்க்கவும் ஊக்குவிக்கவும் உரிய வகையில் பாலங்களையும், உப்பங்கழிகளையும் அமைத்தனர். காலனி காலத்தில் வர்த்தகக் கம்பெனிகளுக்கு உரிமைச் சாசனங்களை வழங்குவது என்பது அரிது. ஆனால் 1781 முதல் 1785 வரையில் மாநிலச் சட்டமன்றங்கள் 11 உரிமைச் சாசனங்களையும், 1786 முதல் 1790 வரையில் 22 உரிமைச் சாசனங்களையும் வழங்கி, வர்த்தகம் மற்றும் தொழில் வளர்ச்சிக்கு வழிகோலின. 1787-ல் தான் அமெரிக்க நாட்டின் முதல் பஞ்சாலை பெவர்லியில் ஏற்படுத்தப் பெற்றது. அடுத்து ஹார்ட்ஃபோர்டில் ஒரு கம்பளி ஆலை நிறுவப்பட்டது. நியூ இங்கிலாந்தின் பல நகரங்களில் பொறிவழித் தொழில்கள் ஒன்றன்பின் ஒன்றாகத் தொடங்கப்பெற்றன. ஃபிலடெல்ஃபியாவில் ஜான்ஃபிட்ச் அவர்களும் மற்றவர்களும் இணைந்து நாளொன்றுக்கு 80 மைல் செல்லக் கூடிய நீராவிக் கப்பலைக் கண்டுபிடித்தனர். அரசியல் மாற்றங்களை ஏற்றுக்கொள்வதுடன் அமைதி யடையாது, பொருளாதார வாய்ப்புக்களனைத்தையும் பயன்படுத்தி, புதிய நாட்டைப் பொலிவுள்ளதாக உருவாக்கவேண்டும் என்பதில் மக்கள் எந்த அளவிற்கு ஆர்வமிகுந்தோராயிருந்தனர் என்பதை இவை படம்பிடித்துக் காட்டுகின்றன.

# 3. மேற்குப்புறக் குடியேற்றம்

## (The Westward Movement)

அமெரிக்க நாட்டு மேற்குப்புறக் குடியேற்றம் காலனிகள் இருந்த நாட்களிலேயே தொடங்கிவிட்டது எனலாம். முதலில் வர்த்தகர்கள் மேற்குப்புறம் நோக்கிச் சென்றனர். பின்னர் மதப் பிரச்சாரகர்கள் சென்றனர். அடுத்து, ஆட்டுமந்தைச் சொந்தக்காரர்கள், சுரங்கர்கள் (miners), விவசாயிகள் ஆகியோர் சென்றனர். இவர்களையடுத்து முதலாளிகள் சென்றனர். மேற்குப்புறக் குடியேற்றம் நாட்டுப் பொருளாதாரத்தின் முக்கியக் கூறுகளான விவசாயம், தொழில், தொழிலாளர், போக்குவரத்து ஆகிய எல்லாத் துறைகளிலும் மாறுதலை ஏற்படுத்தியது. அமெரிக்க உள்நாட்டுப் போருக்கு மேற்குப்புறக் குடியேற்றமும் ஒரு காரணமாக இருந்தது என்கிறார் பீட்டர் ஜோன்ஸ்.

அமெரிக்கா சுதந்திரம் அடைவதற்குமுன்பேயே மேற்குப்புறத்தில் குடியேறப் பலர் முயன்றனர். ஸ்பானிஷ் வர்த்தக நிலையத்தை ஏற்படுத்தும் நோக்கத்தில், 1519-ல் கோர்ட்டஸ் (Cortes) என்பார் மெக்சிகோவிலிருந்து கியூபாவிற்குச் சென்றார். 1521-ல் அவர் கியூபாவின் மன்னரானார். 18 ஆண்டுகளுக்குப் பின்னர் சில ஸ்பானியக் குழுக்கள் நியூ மெக்சிகோவிற்குப் பயணம் சென்று 1540-ல் கிராண்ட் கானியனைக் (Grand Canyon) கண்டுபிடித்தனர். இவ்வாறாக ஃபிரெஞ்சு மற்றும் பிரிட்டிஷ் காலனிஸ்டுகள் குடியேற முயன்றதற்கு ஒரு நூற்றாண்டுக்குமுன்னமேயே ஸ்பானியர்கள் மேற்குப்புறத்தில் குடியேறத் தொடங்கிவிட்டனர். 1770-ல் சான் டியகோ (San Diego), மான்டெரி (Monterey) ஆகியவற்றில் குடியேற்றங்கள் ஏற்பட்டன. 1776-ல் சான் பிரான்சிஸ்கோ உருவாகியது.

1669-க்குப் பின்னர் ஃபிரெஞ்சுக்காரர்கள் கிரேட் லேக்சுக்குத் (Great Lakes) தென்புறமும், மெக்சிகன் வளைகுடாவிற்கு வடபுறமும்

குடியேறினர். 18ஆம் நூற்றுண்டில் பிரிட்டிஷ் குடியேற்றக்காரர்கள் ஓஹியோ பள்ளத்தாக்கில் நுழைந்து டெனசி, கென்ட்டகி ஆகியவற்றில் குடியேறினர். டிரான்சில்வேனியா (Transylvania) வைப் புதிய மாநிலமாக்கும் திட்டம் 1777-ல் தோல்வியுற்றது. ஏனென்ருல், பழைய மாநிலங்கள் புதிய பிரதேசங்களைத் தம்முடன் சேர்த்துக் கொள்ள முயன்றனவே தவிர, அவற்றைப் புதிய மாநிலங்களாக உருவாக விடவில்லை.

1783-க்குப் பின்னர் மேற்குப்புறக் குடியேற்றம் மிகுதியாக வளர்ந்தது. மேற்குப்புறத்தில் புதிய நிலங்கள் ஏராளமாகக் கிடந்தன. அவற்றின் விலைகள் குறைவாயிருந்தன. எனவே பலர் மேற்கு நோக்கிச் சென்றனர். இவர்களில் பலர் விவசாயிகளாகவும், அதே நேரத்தில் யூக வாணிபர்களாகவும் (Speculators) இருந்தனர். இவர்கள் மேற்குப்பகுதிக்குச் சென்று முதலில் நிலத்தைக் குறைவான விலைகளில் வாங்குவர்; சாகுபடி செய்வர்; பின்னர் நிலங்களின் விலைகள் உயரும்போது, அவற்றை உடனே விற்றுவிடுவர். விற்றுவிட்டு மேலும் மேற்குப்புறம் செல்வர். அங்கேயும் நிலத்தை வாங்குவர்; பின்னர் விற்பர். இப்பழக்கம் பெரும்பாலான குடியேற்றக்காரர்களிடம் இருந்தது. எனவே மேற்குப்புறத்தில் குடியேற்றம் அதிகரிக்க அதிகரிக்க யூக வாணிபமும், விவசாயத் தொழிலும் துரிதமாக வளர்ந்தன. இங்கே தயாரான விவசாயப் பண்டங்கள் மற்ற இடங்களில் விளையும் விவசாயப் பண்டங்களுடன் போட்டியிட வாரம்பித்தன. இதனுல் கிழக்கத்தியப் பகுதி விவசாயிகள், குறிப்பாக நியூ இங்கிலாந்திலிருந்த விவசாயிகள், தானியச் சாகுபடியைக் கைவிட்டு, பால் பண்ணை மற்றும் பழ உற்பத்தியில் ஈடுபட வேண்டியிருந்தது.

நாட்டின் மேற்குப்புறத்தில் பரந்த நிலப்பகுதி சாகுபடிக்குத் தயாராயிருந்தமையும், அவற்றில் விரைவாக உற்பத்தி பெருகியமையும் நாட்டின் தெற்குப் பகுதிக்குக்கூட தலைவலியைக் கொடுத்தது. சாகுபடி செய்யப்படாத புதிய நிலப் பரப்புக்கள் மேற்குப்புறத்தில் கிடந்தமை அமெரிக்கப் பொருளாதாரத்தில் மூன்று நூற்றுண்டு கால நீட்சியுடைய வளர்ச்சியைத் தோற்றுவிக்க உதவிற்று என்ருல் அது மிகையாகாது. 1783-க்குப் பின்னர் ஒரு நூற்றுண்டு முழுவதும் அமெரிக்க நாட்டை நோக்கியிருந்த பிரச்சினை மிகப் பரந்த மேற்குப் பிரதேசத்தின் புத்தம் புதிய நிலங்களையும், சாதனங்களையும், கனிவளங்களையும் கையகப்படுத்திப் பயன்படுத்திக்கொள்வது எங்ஙனம் என்பதே. 'அமெரிக்க வரலாறு உண்மையில் பரந்த மேற்குப் பகுதியின் வரலாறு ஆகும். இலவசமாக நிலம் கிடைத்தமை, பின்னர் அதன் அளிப்பு படிப்படியாகக் குறைந்தமை, குடியேற்றம்

அங்கே பெருகியமை ஆகியவை அமெரிக்க நாட்டு வளர்ச்சிக்குக் காரணங்கள்' என்றார் எல்லைப்புற வரலாற்றறிஞர் எஃப். ஜே. டர்னர் (F. J. Turner).

தொடக்கத்தில் மேற்குப்புறக் குடியேற்றம் மிகவும் மெதுவாக நிகழ்ந்தது. இதற்கு மூன்று காரணங்கள் இருந்தன. முதலாவதாக, 1763ஆம் ஆண்டின் அரசுப் பிரகடனம் (Royal Proclamation of 1763) மேற்குப்புறம் மக்கள் சென்று குடியேறுவதைத் தடை செய்தது. இரண்டாவதாக, மேற்குப்புறம் செல்வதற்குப் போக்குவரத்து வசதிகள் சரியாக இல்லை. மூன்றாவதாக, மேற்குப்புறத்தில் குடியேறு பவர்களைச் சிவப்பு இந்தியர்கள் அவ்வப்போது கடுமையாக எதிர்த்து வந்தனர். நாட்டின் கிழக்குப் பகுதியிலிருந்து மக்கள் வந்து மேற் குப் பகுதியில் குடியேறுவதைச் சிவப்பு இந்தியர்கள் தீவிரமாக வெறுத்தனர்.

இத் தடைகள் மத்தியில் மேற்குப்புறக் குடியேற்றம் விரைவாக வளர்ந்தமைக்குக் காரணங்களாக அமைந்தவை வருமாறு :

18ஆம் நூற்றாண்டின் மத்தியப் பகுதிக்குப் பின்னர், நாட்டின் கிழக்குப் பிரதேசத்தில் மக்கள் தொகை மிகவும் அதிகரித்தது. 2·5 மில்லியனாக இருந்த அப் பகுதி மக்கள் தொகை, 18ஆம் நூற்றாண்டின் இறுதியின்போது சுமார் 32 மில்லியனாக உயர்ந்தது. மக்கள் தொகை மேன்மேலும் வளர்ந்து நெரிசல் மிகுந்து வருவதைக்கண்ட பலர் வேறிடங்களுக்குச் சென்று குடியேற விழைந்தனர். அவ்வாறு குடியேறுவதற்குச் சிறந்த இடமாக மேற்குப் பகுதி அவர்களுக்குப் பட்டது. அங்கே நிலங்கள் ஏராளமாகக் கிடந்தன. நிலங்களின் விலைகளும் குறைவே. கனிவளம், நிலவளம், வனவளம் ஆகியவற் றைப் பெற்றிருந்ததன் காரணமாக, மேற்குப் பகுதியில் விவசாயத் தையும் வேறு பல தொழில்களையும் ஏற்படுத்திக்கொள்வதில் எந்த விதச் சிரமமும் இருக்கவில்லை. எனவே, கிழக்குப் பகுதியிலிருந்து மக்கள் மேற்குப் பகுதிக்குச் சென்று குடியேறலாயினர். 1812-க்குப் பின்னர், கிழக்குப் பிராந்தியத்திலிருந்த பல தொழிலாளி களும் முதலாளிகளும், வர்த்தகம் மற்றும் கப்பல் கட்டும் தொழில் ஆகியவற்றை விட்டுவிட்டு மேற்குப்புறம் சென்று குடியேறினர். ஒரு பொருளாதாரப் புரட்சியின் தொடக்கமாக அது அமைந்தது.

அரசின் கொள்கையும் மேற்குப்புறக் குடியேற்றத்திற்கு ஊக்க மளித்தது. மேற்குப்புறக் குடியேற்ற வளர்ச்சிக்கு இது ஒரு முக்கிய காரணி எனலாம். மேற்குப் பிராந்தியத்தில் குடியேற்றத்தைப்

பெருக்கவும், நில விற்பனை மூலம் வருமானத்தை மிகுதியாக்கவும் அரசு விரும்பியது. கான்ஃபெடரேஷனின் விதிகளின்படி அமெரிக்கக் காங்கிரஸ் மன்றம் 1785-ல் நில அவசரச் சட்டத்தைக் (Land Ordinance) கொண்டு வந்தது. இச்சட்டத்தின்படி (1) அரசு நீண்ட சதுர நில அளவை எடுக்க வேண்டும்; (2) நிலத்தின் 36 துண்டுகளில் ஒரு துண்டினைக் கல்விக்கூடம் ஏற்படுத்துவதற்காக ஒதுக்கி வைத்துவிட வேண்டும்; (3) பொதுநிலங்களைக் குறைந்த விலையில் விற்க நில விற்பனை அலுவலகங்களை ஏற்படுத்தவேண்டும். மேற்குப்புறக் குடியேற்ற வரலாற்றில் இது ஒரு முக்கியச் சட்டமாகும்.

மேற்குப்புற நகரமைப்புக்களில் (Townships) பாதியை விற்று விடுவதற்கும், மீதிப் பாதியை 640 ஏக்கர்கள் கொண்ட பகுப்புக்களாக விற்பதற்கும் 1785-ல் காங்கிரஸ் ஒப்புக்கொண்டது. காங்கிரஸ் திட்டத்தின்படி ஏக்கர் ஒன்றுக்கு ஒரு டாலர் வீதம் நிலத்தை ஏலத்திற்கு விற்க வேண்டும். 1790ஆம் ஆண்டில் நிலத்தின் விலையை ஏக்கர் ஒன்றுக்கு இரண்டு டாலர்களாக உயர்த்தும் சட்டம் இயற்றப் பட்டது. ஆனால், வாங்கிய நிலத்திற்குச் செலுத்த வேண்டிய பணத்தை ஓர் ஆண்டிற்குள் செலுத்தினால் போதும் என்று சலுகை வழங்கப்பட்டது. என்றாலும், முதல் முயற்சியாளர்களில் ஒரு சிலரிடந்தான் 1280 டாலர்கள் இருந்ததால், நிலங்கள் அவ்வளவாக விற்பனையாகவில்லை. எனவே குடியேறுகின்றவர்களுக்கு ஆதரவாகச் சட்டத்தை மாற்றவேண்டியிருந்தது. 1800-ல் குறைந்த பட்சம் 320 ஏக்கர் நிலம்தான் வாங்கலாம். 1801-ல் அது 160 ஏக்கர்களாகக் குறைக்கப் பட்டது. 1804ஆம் ஆண்டுச் சட்டப்படி, வாங்கிய நிலத்திற்குச் செலுத்தவேண்டிய பணத்தை ஐந்து ஆண்டுகளில் செலுத்தலாம் என்ற சலுகை தரப்பட்டது. 1820-ல் இயற்றப்பட்ட புதிய சட்டம் குறைந்தபட்சம் வாங்கற்பாட்டு அளவை 80 ஏக்கர்களாகக் குறைத்து ஏக்கர் ஒன்றின் விலையையும் 1·25 டாலராகக் குறைத்தது. இதன் விளைவாக 1860-க்குள் சுமார் 180,00,000 ஏக்கர்கள் விற்பனையாயின. கடன் முறை, நில யூக வாணிபத்தை அதிகப்படுத்தி, விலைகளையும் இலாபங்களையும் குறைத்தமையால் 1819-ல் காங்கிரஸ் கடன் முறையை ஒழித்தது.

அரசு குடியேற்றக்காரர்களுக்களித்த மற்றொரு சலுகை முன் வாங்கு உரிமை (Rights of Pre-emption). பல்லாண்டுகளாகவே மேற்குப்புறக் குடியேற்றக்காரர்கள் பொது நிலங்களினுள் நுழைந்து, காடுகளை அழித்துப் பண்ணைகளை ஏற்படுத்தி வந்தனர். விலைகொடுத்து வாங்காமலேயே தம் விருப்பம்போல் நடந்து வந்தனர். இறுதியில் தான் அரசு நிலங்களில் சட்டத்திற்குப் புறம்பாகத் தாங்கள் குறுக்கிட்டிருப்பதை உணர்ந்தனர். சிலவேளைகளில், குடியேற்றக்காரர்கள்

பக்குவப்படுத்திய நிலங்கள் விற்கப்பட்டு விடுவதும் உண்டு. அல்லது ஃபெடரல் இராணுவச் சிப்பாய்கள், குடியேற்றக்காரர்களை நிலத்தை விட்டு விலக்கி வெளியேற்றுவதும் உண்டு. எனவே, அளக்கப்பட்டிருந்தாலும் சரி, அளக்கப்படாவிட்டாலும் சரி, தாங்கள் விரும்பிய நிலப் பகுதிகளை எடுத்துக்கொள்ள தங்களுக்கு உரிமை வேண்டும் என்றும், போட்டி விலையை விலக்கிக் குறைந்த பட்ச விலையில் வாங்கிக் கொள்ள உரிமை வேண்டும் என்றும் கோரினர். 1841-ல் நிறைவேறிய 'யாவருக்கும் முன்வாங்கு உரிமைச் சட்டம்' இச்சலுகைகளை குடியேற்றக்காரர்களுக்கு வழங்கியது. 'உண்மையிலேயே குடியேறிக் குடியிருந்து நிலத்தைச் சாகுபடி செய்திருந்தோர்' அனைவருக்கும் முன்வாங்கு உரிமை வழங்கப்பட்டது. அடுத்து 1854-ல் இயற்றப்பட்ட ஒரு சட்டம், பத்தாண்டுகளுக்குமேலாக விற்பனை செய்யப்படாமல் கிடந்துவந்த நிலங்களின் விலைகளைக் குறைத்தது. 1862ஆம் ஆண்டின் குடும்ப மனையகச் சட்டத்தின் (Homestead Act) படி குடியேற்றக்காரர்கள் பெயரளவிற்கு ஒரு குறிப்பிட்ட கட்டணத்தைச் செலுத்திவிட்டு 160 ஏக்கர்களை உடைமையாக்கிக்கொள்ளலாம். ஆனால், இவர்கள் அந்நிலத்தில் ஐந்து ஆண்டுக்காலம் குடியிருந்து விவசாயம் செய்திருக்கவேண்டும். இச்சட்டங்கள் மேற்குப்புறக் குடியேற்ற வளர்ச்சிக்குப் பெரிதும் உதவின.

தென்மேற்குப் பிராந்தியக் குடியேற்ற வளர்ச்சிக்கு ஒரு முக்கியக் காரணம் பருத்தித் தேவை எனலாம். தொழிற் புரட்சியும், குறிப்பாக 1793-ல் கண்டுபிடிக்கப்பட்ட பருத்தி விதையைப் பிரித்தெடுக்கும் ஜின் (Gin) என்ற கருவியும் மூலப் பொருள் நிலையிலுள்ள பருத்திக்கு நல்ல தேவையை உருவாக்கிற்று. எனவே, தென்னாடு பருத்தி உற்பத்தியில் உடனே ஆர்வம் காட்டியது. வட கரோலினா, தென் கரோலினா, வர்ஜீனியா பகுதிகளில் இருந்த கடற்கரை நிலங்கள் தரிசாகிக் கொண்டிருந்தன. இதன் காரணமாகத் தென்னாட்டுத் தோட்ட முதலாளிகள் புதிய வளமான நிலங்களைத் தேடி, தென்மேற்கு நோக்கிச் செல்லலாயினர். 'தென்மேற்குக் குடியேற்றத்தின் இரண்டாவது கட்டத்தில் பருத்தித் தேவைதான் மிக முக்கியத் தூண்டுகோல்.' (ஃபால்க்னர்).

பழைய வடமேற்கில் (Old North West) மிக விரைவாகக் குடியேற்றம் நிகழ்ந்தமைக்குப் பல காரணங்கள் இருந்தன. ஐரோப்பாவிலிருந்து வந்து அங்கே குடியேறியவர்களின் எண்ணிக்கை தொடக்கத்தில் ஆண்டொன்றிற்கு 4000 முதல் 5000 வரையாகும். ஆனால், 1812ஆம் ஆண்டுப் போருக்குப் பின்னர், 1815 முதல் 1830 வரையிலான 15 ஆண்டுகளில் ஐரோப்பாவிலிருந்து வந்து குடியேறியவர்களின் எண்ணிக்கை 5 லட்சமாகும். வாணிபக் கப்பல் தடைச்

சட்டங்களும் வாணிபத் தொடர்பின்மைச் சட்டங்களும் (Non-Inter course Acts) நிலவிய காலங்களில் வடக்கே பொருளாதார மந்தம் தோன்றியது. இதனால் அங்கே யிருந்த மக்கள் மிகவும் பாதிக்கப் பட்டனர். இப் பொருளாதார மந்தமும், 1812 ஆம் ஆண்டுப்போரும், அப்போருக்குப் பின்னர் நிலவிய சூழ்நிலையும் மக்கள் மேற்கு நோக்கிச் செல்லத் தூண்டுகோலாய் அமைந்தன. தெற்கே வர்ஜீனியா. வடகரோலினா ஆகிய இடங்களில் புகையிலை விளையும் நிலங்களின் வளங் குன்றியமையாலும் பல முதலாளிகள் அப் பகுதி விட்டு வெளியேறி வடமேற்குப் பிராந்தியங்களில் குடியேறத் தலைப்பட்டனர். தவிரவும், மேற்குப் பிராந்தியக் குடியேற்றத் திட்டத்தில் அரசு கட்டுகளைத் தளர்த்தியமையாலும், 1812 முதல் 1830 வரையில் சிவப்பு இந்தியர்களின் குறுக்கீடுகள், தொல்லைகள் அகற்றப்பட்டமையாலும் குடியேற்றங்கள் வளர்ந்தன. வட மேற்கில் டபுள்யூ. எச், ஹாரிசன் (W. H. Harrison) சிவப்பிந்தியர் களை முறியடித்தார். மேற்கில் ஜாக்சன் சிவப்பிந்தியர்களைத் தோற் கடித்தார். எனவே இப் பகுதிகளிலிருந்து சிவப்பிந்தியர்கள் வெளியேறி அகன்று போயினர். இவர்கள் மறைந்ததற்குப் பின்னர் மக்கள் அச்சமின்றிக் குடியேறலாயினர்.

இருப்புப்பாதைகள் போடப்படுவதற்கு முன்னர் பயணத்திற்கும் போக்குவரத்துக்கும் நதிகளே பயன்பட்டு வந்தன. நதிகளின் மூலம் தட்டைப் படகுகளில் பொருள்கள் எடுத்துச் செல்லப்படும். இடம் பெயர்ந்து செல்வோரும் அப் படகுகளில்தான் செல்வர். ஆனால், 1811-க்குப் பின்னர் வடமேற்குப் பகுதிகளில் நீராவிக் கப்பல் போக்குவரத்து வளரத் தொடங்கியது. இது மேற்கு நோக்கிச் செல்லும் முன்னேற்றத்தை விரைவுபடுத்தியது. மேலும், மேற்குப் பிரதேசத்தைப்பற்றி நல்ல விளம்பரம் ஏற்படும் வகையில் சில சூழ் நிலைகளும் உருவாயின. லூசியானாவை விலைகொடுத்து வாங்கிய மையும், லூயிஸ், க்ளார்க் என்போரின் முயற்சிகளும், நியூ மெக்சி கோவைப்பற்றிய பைக் (Pike) என்பாரின் நூலும், ஆரன் பர்ரின் (Aaron Burr) பயணக் குறிப்புக்களும் மேற்குப் பகுதிக்குச் சிறந்த விளம்பரங்களைத் தந்தன. எனவே, புதிதாகக் குடியேற விரும்பு வோருக்கு மேற்குப் பிராந்தியம் வளம்மிகுந்த இடமாக வாழ்க் கைக்கு வழிவகுக்கும் கேந்திரமாகக் காட்சியளித்தது. ஆகவே உற்சாகப் பெருக்குடன் பலர் அங்கே செல்லத் தொடங்கினர். 1817-ல் பயணம் செய்தபோது மாரிஸ் பர்க்பெக் (Morris Birkbeck) என்ற ஆங்கிலேய எழுத்தாளர் பின்வருமாறு குறிப்பிட்டார். 'பழைய அமெரிக்கா உடைந்து சிதறி மேற்கு நோக்கி முன்னேறிக் கொண் டிருக்கிறது.' 'பழைய வடமேற்குப் பிராந்தியத்தின் (ஒஹியோ, இந்தியானா, இல்லினாய், மிச்சிகன் மற்றும் விஸ்கான்ஸின்) மக்கள்

தொகை சில ஆயிரமாயிருந்தது. 1810-ல் இது 2,72,324 ஆக உயர்ந்து, 1860-அதன் மக்கள் தொகை 69,26,884-க்குத் தாவியது.'

### பகுதிவாரி வளர்ச்சி

தொடக்கத்திலிருந்த 13 காலனிகளும் அட்லாண்டிக் கடற்கரையில் அமைந்திருந்தன. அவற்றின் எல்லைகளை அப்பளாச்சியன்மலைக்கு (Applachian mountain) மேற்கே பரப்பக்கூடாது என 1763ஆம் ஆண்டின் அரசுப் பிரகடனம் கட்டளையிட்டது. புரட்சி முடிவடைந்த நிலையில், 1779-ல் அமெரிக்க நாட்டு எல்லைகள் ப்ளோரிடாவிற்கு வடக்கேயும், கனடாவிற்குத் தெற்கேயும், மிசிசிப்பி நதிக்குக் கிழக்கேயும் பரந்து கிடந்தன. ஜார்ஜியா, தென் கரோலினா, வர்ஜீனியா ஆகியவை தமது எல்லைகள் மிசிசிப்பிக்கு மேற்குப்புறம் வரை இருக்கின்றன என்று உரிமை கொண்டாடின. வர்ஜீனியா, கனெக்டிகட். மாசசூசெட்ஸ் (Massachusetts) ஆகியவை தமக்கு வடமேற்குப் பிராந்தியத்தில் பங்குண்டு என ஒன்றுடொன்று மோதிக்கொண்டன. பொருமையும் அச்சவுணர்வும் இம் மாநிலங்களிடையே நாளுக்குநாள் வளர்ந்து வருவதைக்கண்ட தாமஸ் ஜெஃபர்சன், இப் பூசல்களுக்கு ஒரு முடிவு காணும் நோக்கத்தில், வடமேற்குப் பிராந்தியத்தைப் பல மாநிலங்களாகப் பிரிக்கும் திட்டத்தை 1784ல் கொணர்ந்தார். இத்திட்டத்தின்படி பழைய மாநிலங்களின் குடிமக்கள் அனுபவித்த உரிமைகள் பலவற்றையும் இப் புதிய மாநிலங்களின் குடிமக்கள் அனுபவிக்கலாம். புதிய மாநிலங்களில் போதுமான அளவிற்கு மக்கள் தொகை பெருகிய பின்னர் அம் மாநிலங்களை யூனியனுடன் இணைக்கலாம்.

1787ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பெற்ற அவசரச் சட்டத்தில் இத்திட்டம் விரிவாக விளக்கப்பட்டது. இந்த அவசரச் சட்டப்படி, (1) வடமேற்குப் பிரதேசத்தில் மூன்றிற்குக் குறையாமல் ஐந்திற்கு மேற்படாமல் மாநிலங்கள் ஏற்படவேண்டும்; (2) சுதந்திர ஆண்குடிமக்கள் 5000 பேர்களாகும் வரையில், காங்கிரஸ் மன்றம் நியமிக்கும் ஒரு கவர்னரும் மூன்று நீதிபதிகளுமே அப்பிரதேசத்தை ஆள்வர். உள்நாட்டுச் சட்டங்களை இயற்றவும், அதிகாரிகளை நியமிக்கவும் கவர்னருக்கும் நீதிபதிகளுக்கும் அதிகாரமுண்டு. என்றாலும், இவ் விஷயங்களைப் பொறுத்தவரையில் காங்கிரஸ் மன்றம் மறுப்பாணையை உபயோகிக்கலாம்; (3) மக்கள் தொகை 5000-த்தை மீறினால் வடமேற்குப் பிரதேசத்தில் இரு சபைகள் கொண்ட சட்டமன்றங்களை ஏற்படுத்தலாம். கீழ் சபையை மக்கள் தேர்ந்தெடுப்பர். கீழ்சபை நியமிக்கும் பத்து உறுப்பினர்களிலிருந்து ஐவரைக் காங்கிரஸ் தேர்ந்தெடுத்து மேல் சபையை ஏற்படுத்தும். பிரதிநிதியைத் தேர்ந்தெடுக்கும் வாக்குரிமை 50 ஏக்கர்களைக் கொண்டவருக்கே உண்டு.

200 ஏக்கர்களைக் கொண்டவர்கள்தான் கீழ் சபை உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்படுவர். 500 ஏக்கர்களைக் கொண்டவர்கள்தான் மேல் சபைக்குச் செல்லும் வாய்ப்பினைப் பெறுவர். கவர்னராக நியமிக்கப்படுபவர் 1000 ஏக்கர்களைப் பெற்றிருத்தல் வேண்டும்; (4) இப் பிரதேசங்களில் ஏதேனும் ஒன்றில் 60090 குடிமக்கள் இருந்தால் அப்பிரதேசத்தில் ஒரு நிரந்தர அரசியல் சட்டத்தை வகுத்து மாநில அரசையும் அமைத்துக்கொள்ளலாம். காங்கிரசுக்குத் தன்னுடைய பிரதிநிதியை அனுப்பலாம். தாயகத்தின் உரிமைகள் காலனிகளுக்கு உண்டு என்ற உண்மையை இச்சட்டம் தெளிவுபடுத்தியது. 'அவசரச் சட்டம் அடிமை முறையை ஒழித்து, நல்வாழ்வையும், விடுதலையை யும், சொத்துரிமையையும், மத உரிமையையும் வழங்கியது. கல்வி யைப் பேணிப் பரப்பிற்று. இலட்சக்கணக்கான மக்கள் மேற்குப் புறம் நோக்கி முன்னேறக் காரணமாயிருந்தது.' (ஃபால்க்னர்.)

## பழைய தென்மேற்குப் பகுதி

பழைய தென்மேற்குப் பிராந்தியத்தைப் பொறுத்தவரையில் குடியேற்றம் புரட்சி காலப் பகுதியில் மிகவும் மெதுவாகவே நிகழ்ந் தது. 1790-ல் எடுக்கப்பெற்ற மக்கள் தொகைக் கணக்குப்படி கென் டக்கியில் 70000 பேர்களும், டென்னசியில் 35,000 பேர்களுமிருந் தனர். தென்னாட்டைச் சார்ந்த சின்னஞ்சிறு விவசாயிகள் பென்சில் வேனியாவின் பெரும் பள்ளத்தாக்கு வழியே மேற்குப்புறம் சென் றனர். இவர்களைப் பின்பற்றித் தோட்ட முதலாளிகளும் அங்கே சென்றனர். வட கரோலினா, தென் கரோலினா பகுதிகளில் இருந்த கடற்கரை நிலங்கள் தரிசாகிக்கொண்டிருந்தமையால் இத் தோட்ட முதலாளிகள் புதிய வளமான நிலப் பரப்புக்களைத் தேடி மேற்குப் பிராந்தியத்திற்குச் சென்றனர். தோட்ட முதலாளிகள் அங்கே யிருந்த சிறு விவசாயிகளின் நிலத்தை மிகுதியான விலைகொடுத்து வாங்கினர். இவ்விவசாயிகள் நிலத்தை விற்றுவிட்டு மலைப் பகுதி களுக்குச் சென்றனர். சிலர் மிசிசிப்பியைக் கடந்தோ, ஓஹியோவிற்கு வடக்கே சென்றோ புதிய மாநிலங்களை உருவாக்க முயன்றனர். இவ்வாறாக, தென்மேற்குப் பிராந்தியத்திற்குத் தோட்ட முதலாளி கள் முன்னேறிச் சென்றமையால் மிகவும் பாதிக்கப்பட்டவர்கள் சின்னஞ்சிறு விவசாயிகளேயாவர்.

சிறு விவசாயிகளின் மறைவைத் தொடர்ந்து தென்மேற்குப் பகுதியில் பருத்தி உற்பத்தியாளரின் ஆதிக்கம் தலையெடுத்தது. அங்கே பருத்தி உற்பத்தி பேரளவில் பெருகிற்று. தென் கரோலினா, ஜார்ஜியா டென்னசி, லூசியானா, மிசிசிப்பி, அலபாமா ஆகியவை அனைத்தும் பருத்தி உற்பத்தியில் சிறந்து விளங்கின. 1820-ல் தென் கரோலினாவும், ஜார்ஜியாவும் பருத்தி உற்பத்தியில் முன்னணியில்

நின்றன. 1834-ல் அலபாமாவும் மிசிசிப்பியும் முன்னணியில் நின்றன. இப்பகுதியில் பருத்தி உற்பத்தி பெருகியமை காரணமாக அமெரிக்க நாட்டின் மொத்தப் பருத்தி உற்பத்தி உயர் மட்டங்களுக்குத் தாவியது எனலாம். 1830-ல் அமெரிக்காவின் ஏற்றுமதியில் பருத்தி மிக முக்கியமான இடத்தை வகித்தது. மொத்த ஏற்றுமதி மதிப்பில் பருத்தியின் மதிப்பு 50 சத வீதமாயிருந்தது. பருத்தித் தொழிலின் முக்கியத்துவம் மூலம் அடிமை முறை சற்றேறக்குறைய ஒரு நிரந்தர அம்சமாக உருவெடுத்தது. குடியேற்றம் மேன்மேலும் பெருகவே, லூசியானு, மிசிசிப்பி, அலபாமா, மிசௌரி ஆகியவை தனி மாநிலங்களாயின.

ஜெஃபர்சன் 12 மில்லியன் டாலர்களைக் கொடுத்து பிரான்சிடமிருந்து லூசியானுவை விலைக்கு வாங்கியபோது, ஸ்பெயின் ஆட்சிக்குட்பட்ட பிரதேசம் மேற்கே மிசிசிப்பி வரையிலும், வடக்கே ஐபர்வில் பாரிஷ் வரையிலும் பரவியிருந்தது. என்றுலும், மேற்கு ஃப்ளோரிடாவை அமெரிக்காவுடன் சேர்த்துக்கொள்வதற்கு அவ்வப்போது முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. 1810-ல் குடியேற்றம் தென்மேற்கில் முன்னேறிக்கொண்டிருந்ததால், மேற்கு ஃப்ளோரிடாவை எடுத்துக்கொள்வதில் ஆர்வம் அதிகரித்தது. பியர்ல் (Pearl) வரையிலான மேற்கு ஃப்ளோரிடாவை இராணுவ நடவடிக்கைமூலம் கைப்பற்றுமாறு குடியரசுத் தலைவர் மாடிசன் ஆணையிட்டார், இப்படையெடுப்பைச் சந்திக்கும் நிலையில் இல்லாதிருந்த ஸ்பெயின் 1821-ல் கிழக்கு ஃப்ளோரிடாவை விட்டுக்கொடுக்க ஒப்புக்கொண்டது. அப்போது அமெரிக்கா டேக்சாஸ் மீதான தனது உரிமையை விட்டுக்கொடுத்தது. ஆனுல், டேக்சாஸ் 1836-ல் புரட்சிக் கோலம் பூண்டு விடுதலைபெற்றது. டேக்சாஸ்மீது இங்கிலாந்து நாடு உரிமை கொண்டாடலாம் என அஞ்சிய காங்கிரஸ், 1845-ல் டேக்சாஸை யூனியனுடன் சேர்த்துக்கொண்டது. உடனே மெக்சிகோ இதற்கு எதிர்ப்புத் தெரிவித்து அமெரிக்காவுடன் போரிட முயன்றது. இறுதியில் அமெரிக்காவே வெற்றிபெற்றது.

அரிசோனு, கொலராடோ, நியூமெக்சிகோ ஆகிய பகுதிகளும் 1845 வரை மெக்சிகோவின் அதிகாரத்தின்கீழ்தான் இருந்தன. ஆனுல், அமெரிக்கர்கள் படிப்படியாக இப்பகுதிகளுள் நுழைந்து குடியேறிக் கொண்டனர். டேக்சாஸை மெக்சிகோ இழந்தபோது இந்தப் பகுதிகளும் அமெரிக்காவுடன் இணைந்துகொண்டன. இவற்றின் பரப்பளவு சுமார் 530,000 சதுர மைல்கள்.

### பழைய வடமேற்குப் பிராந்தியம்

ஒஹியோவிற்கு வடக்கிலும் மிசிசிப்பிக்குக் கிழக்கிலும் அமைந்திருந்தது பழைய வடமேற்குப் பிராந்தியம். 1787ஆம் ஆண்டின்

அவசரச் சட்டம் வந்தவுடன் மாசசூசெட்ஸ் யூக வாணிபர்களைக் கொண்ட, ஒரு ஓஹியோ கம்பெனி, ரெவரண்டு கட்லர் என்பார் தலைமையின்கீழ் ஒஹியோவிற்கு வடக்கேயிருந்த 20,00,000 ஏக்கர் கொண்ட நிலத்தை சிப்பாய் பத்திரங்களைக் (Soldiers' certificates) கொண்டு விலைக்கு வாங்கியது. இக்கம்பெனியின் முதல் குடியேற்றக் காரர்கள் 1787-ஆம் ஆண்டின் டிசம்பர் மாதத்தில் இப்ஸ்விச், மாச சூசெட்ஸ் ஆகியவற்றிலிருந்து மஸ்கிங்கம் நதி நோக்கிச் சென்றனர். இவர்கள் 1788-ல் வசந்த பருவத்தின்போது, மஸ்கிங்கம் நதி ஒஹியோ நதியைக் கலக்குமிடத்தில் மரிட்டாவை (Marietta) உருவாக்கினர். அதே ஆண்டின் கோடைக்காலத்தில் நியூஜெர்சியி லிருந்துப் புறப்பட்ட ஒரு குழு கிரேட் மியாமிக்கும் லிட்டில் மியாமிக் கும் இடையிலுள்ள ஒரு மில்லியன் ஏக்கர் பரப்பில் ஒரு பகுதியை விலைக்கு வாங்கி கொலம்பியா, சின்சின்னட்டி ஆகியவற்றை நிர்மா ணித்துக் குடியேறினர். இந்தியானு, இல்லினய், டெட்ராயிட் ஆகிய இடங்களில் சில ஃபிரெஞ்சுக்காரர்கள் ஏற்கனவே குடியேறி யிருந் தனர். 1796-ல் கனெக்டிகட் நிலக் கம்பெனி ஒன்றின் முயற்சியால் க்லீவ்லாண்டு உருவாகியது. இதற்கிடையில் செனஸ்கோ, ஜெனிசீ, மொகாக் ஆகிய பகுதிகளில் நியூ இங்கிலாந்தைச் சார்ந்தோர் குடியேறி, சில முக்கிய நகரங்களைத் தோற்றுவித்தனர்.

1812ஆம் ஆண்டுப் போருக்குப் பின்னர் ஓஹியோ, இந்தியானு, இல்லினய், மிச்சிகன், விஸ்கான்சின் ஆகிய பகுதிகளில் குடியேற்றம் விரைவாக நிகழ்ந்தது. இவற்றின் மக்கள் தொகையும் வளர்ந்து கொண்டே போயிற்று. இந்தியானு, இல்லினய், மிச்சிகன், விஸ்கான் சின், மின்னசோட்டா ஆகியவை, முறையே 1816, 1818, 1837, 1848, 1858ஆம் ஆண்டுகளில் யூனியனில் சேர்ந்தன. மத்திய அட்லாண்டிக் மாநிலங்களிலிருந்து வந்தவர்களும், தென்னட்டுத் தோட்ட முத லாளிகளும், ஜெர்மன் குடியிறக்கக்காரர்களும் (German Immigrants) இப்பகுதிகளில் குடியேறியிருந்தனர். இவற்றில் பெரும்பாலும் விவசாயப் பண்ணைகளும், கால்நடை வளர்ப்புப் பண்ணைகளும் மிகுதி யாக ஏற்படுத்தப்பெற்றன.

1830-ல் மேற்குப் பகுதியில் உருவாகியிருந்த முக்கிய நகரங்களில் சின்சின்னட்டி, பிட்ஸ்பர்க், செயின்ட் லூயிஸ், நியூ ஆர்லியன்ஸ் ஆகியவை குறிப்பிடத்தகுந்தவை. சின்சின்னட்டி இறைச்சித் தயா ரிப்புக் கேந்திரமாயிருந்தது, மேற்கு நோக்கிச் செல்லப் பயன்பட்ட கப்பல் போக்குவரத்துப் பாதையின் முகப்பினருகே பிட்ஸ்பர்க் அமைந்திருந்தது. வடக்கிலும் மேற்கிலுமுள்ள தோல் வியாபாரி களுக்கிடையில் பரிவர்த்தனை நடைபெறும் பகுதியில் செயின்ட் லூயிஸ் அமைந்திருந்தது. உள் நாட்டுப் பொருட்களைச் சமுத்திரப்

படகுகளுக்கு மாற்றுகின்ற முகப்பில் நியூ ஆர்லியன்ஸ் உருவாகியிருந்தது.

மேற்குப் பிரதேசத்தில் மக்கள் தொகை பெருகவே, கிழக்குப் பிரதேசத்தில் மக்கள் தொகை பெருகாது தேங்கி நின்றது. உதாரணமாக, வர்ஜீனியாவிலும் மாசசூசெட்சிலும், 1820 முதல் 1830 வரையிலான காலப் பகுதியில் மக்கள் தொகை தேக்க நிலையிலிருந்தது. ஆனால், அதேபோது மேற்கு மாநிலங்களின் மக்கள் தொகை 100 முதல் 150 சதவீதம் வரை பெருகிக்கொண்டிருந்தது. உதாரணமாக, 1830ஆம் ஆண்டில் சாதாரண தோல் வியாபார நிலையமாயிருந்த சிக்காகோவில் 1860-ல் சுமார் 1 லட்சம் மக்கள் வசித்தனர்.

வடமேற்குப் பிராந்தியம் தென்னாட்டு நாகரிகத்தை அவ்வளவாக ஏற்றுக்கொள்ளவில்லை. தென்னாட்டைச் சார்ந்தவர்கள் பெரும்பாலும் ஏழையர்களாயிருந்தனர். இவர்கள் நியூ இங்கிலாந்திலிருந்தும் மத்திய மாநிலங்களிலிருந்தும் வந்திருந்த குடியேற்றக்காரர்களுடன் கலந்தனர். பெருந் தோட்டங்களை ஏற்படுத்தும் வாய்ப்பின்றி, சின்னஞ்சிறு பண்ணைகளை உருவாக்கி வாழத் தலைப்பட்டனர். சிறு பண்ணைகள் மிகுந்திருந்த இச்சமுதாயத்தில் அடிமை முறை ஏற்றுக்கொள்ளப் பெறவில்லை. ஜனநாயகக் கொள்கைகளுக்கும் அமைப்புக்கும் அங்கே சிறந்த வரவேற்பிருந்தமையே இதற்கு முக்கியக் காரணம் ஆகும்.

### தூர மேற்குப் (Far West) பிரதேசம்

மிசிசிப்பி நதிக்கு மேற்கே இருந்தது தூரமேற்குப் பிரதேசமாகும். 1800-ல் ஸ்பானிஷ்காரர்களின் நிலச் சட்டங்களாலும், வளமான தோல் வியாபாரத்தினாலும் உற்சாகமுற்ற வெள்ளைக்காரக் குடியேற்றக்காரர்கள் கிழக்குப் பகுதியிலிருந்து கிளம்பி மேற்குப் புறமாகச் சென்று மிசிசிப்பியைக் கடந்து தூரமேற்குப் பிரதேசத்தில் வாழத் தொடங்கினர். அப்போது செயின்ட் லூயி தோல் ஈயம் ஆகியவற்றிற்குச் சிறந்த அங்காடியாகத் திகழ்ந்தது. இப்பொருள்கள் மிசௌரி. மிசிசிப்பி நதிகள் மூலம் செயின்ட்லூயிக்கு வந்தன. மிசிசிப்பிக்கு மேற்கே இருந்த வளமிக்க லூசியானாவைப் பற்றி முதன் முதலில் விளக்கிச் சொன்னவர்கள் லூயிஸ், க்ளார்க் பைக்(Pike) ஆகியோராவர். இவர்களில் பைக் என்பார் மிசிசிப்பியின் மூலம் (Source) வரையில் சென்று ஆராய்ந்து பார்த்தவராவர்.

தூர மேற்குப் பிரதேசத்தின் வளங்களைப்பற்றி ஓரளவிற்குத் தெரிந்து கொண்டவுடன் பலர் மிசிசிப்பியைக் குறுக்கே கடந்து, மிசௌரி வழியே மேலே முன்னேறிச் செல்லலாயினர். பருத்தி

உற்பத்திக்காகப் புதிய நிலங்களைத் தேடிய தெற்கத்தியர்கள் மிசிசிப்பி நதியைக் கடந்து லூசியானுவை அடைந்தனர். இவர்களுக்கு முன்னரே கால் நடைப் பராமரிப்பாளர்கள் அங்குச் சென்று முதலில் ஜேம்ஸ்டவுனில் குடியேறி, பின்னர் அங்கிருந்து இன்னும் சற்று மேற்கே உள்ள பகுதிகளுக்குச் சென்று குடியேறினர். இந்த அமெரிக்கக் கால் நடைப் பராமரிப்பாளர்களுக்கும் வடபுறத்து ஸ்பானிஷ் எல்லைக் கால்நடைப் பராமரிப்பாளர்களுக்கும் இடையில் கடுமையான மோதல்கள் நிகழ்ந்தன. பின்னர், அமெரிக்க வேட்டையாளர்களும் கால்நடைப் பராமரிப்பாளர்களும் மெக்சிகன் குடியரசை எதிர்த்துக் கிளம்பி, 1836-ல் விடுதலை பெற்றனர். பின்னர் 1845-ல் அவர்களின் குடியேற்றப் பகுதி யூனியனுடன் சேர்த்துக் கொள்ளப் பெற்றது. இதைத் தொடர்ந்து நிகழ்ந்த மெக்சிகன் போர் 1846 முதல் 1848 வரை நீடித்தது. அடுத்து டேக்சாசின் விடுதலையை மெக்சிகோ அங்கீகரித்ததோடல்லாது கலிபோர்னியா, நியூ மெக்சிகோ, அரிசோனு, நிவெடா, யுட்டா முதலியனவும், கொலராடோ, வியாமிஸ் ஆகியற்றின் ஒரு சில பகுதிகளும் அடங்கிய ஒரு மாபெரும் நிலப்பரப்பை அமெரிக்காவிற்கு வழங்கியது. இதற்கு அமெரிக்கா 18 மில்லியன் டாலர்களை அளித்தது.

தூர மேற்குப் பிரதேசத்திலிருந்த ஒரிகன் (Oregon) பகுதியில் அமெரிக்கர்கள் குடியேறுவதற்குத் தூண்டுகோலாக அமைந்தவை தோல் வியாபாரத்தில் கிடைத்த இலாபமும் வளமிகுந்த நிலங்களுமேயாம். 1788-ல் காப்டன் கிரே, காப்டன் கென்ட்ரிக் ஆகியோர் வடமேற்குப் பகுதிக்குச் சென்று தோல் வியாபாரத்தைத் தொடங்கி வைத்தனர். அவர்களைத் தொடர்ந்து நியூ இங்கிலாந்து வியாபாரிகள் அவ் வியாபாரத்தில் ஈடுபட்டனர். காப்டன் கிரே 1792-ல் கொலம்பியா நதியைக் கண்டுபிடித்தார். ஒரிகன் சுமார் 25 ஆண்டு காலம் ஹட்சன் விரிகுடாக் கம்பெனி (Hudson's Bay Company) வசம் இருந்தது. ஒரிகன் குடியேற்றத்தை வளர்த்தவர்களில் மிகவும் குறிப்பிடத் தகுந்தவர் கெல்லி என்பவராவர். அப் பகுதிக்குக் குடிபெயர்ந்து செல்வதை வளர்க்கும் ஓர் அமைப்பை ஏற்படுத்தி 1830-1839 காலப் பகுதியில் அவரே அப் பகுதிக்குச் சென்றார். அப் பகுதியின் வளங்களைப்பற்றி அவ்வப்போது மத போதகர்களும் விவரித்து வந்தனர். இதன் விளைவாகவும் ஒரிகன் குடியேற்றம் வளர்ந்தது.

யுட்டா் குடியேற்றம் பெருகியமைக்கு முக்கிய காரணம் மத உணர்வே. 1830-ல் ஜோசப் ஸ்மித் என்பவரால் ஆரம்பிக்கப்பட்ட 'பிற்காலப் புனிதரின் ஏசு கிறிஸ்து திருச்சபை' (The Church of Jesus chirst of latter-day saints) என்ற அமைப்பின் உறுப்பினர்க

ளான மார்மன்கள் (Mormons) எனப் பட்டோர் ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்திற்கு அடிக்கடி விரட்டப்பட்டனர். எனவே, இம் மார்மன்கள், யங் (Young) என்பாரின் தலைமையின் கீழ், 1846-ல் இல்லினுயைவிட்டு வெளியேறி, தூரத்து மேற்குப் பிராந்தியத்தை நோக்கி முன்னேறினர். 1847 ஆம் ஆண்டில் சால்ட் லேக் பேசின் என்ற இடத்தில் குடியேற்றத்தை அமைத்துக் கொண்டனர். கிழக்கு மாநிலங்களிலிருந்து குடியேற்றக்காரர்களைத் தருவிப்பதற்குப் பாதிரிமார்கள் உதவிபுரிந்தனர். குடியேற்றக் காரர்களுக்காகும் செலவுகளை நிரந்தரக் குடியேற்ற நிதியமைப்பிலிருந்து கொடுத்து உதவினர். மார்மன்களின் முயற்சியால் பாலை நிலங்கள் கூட, பண்பட்ட நிலங்களாயின. அமெரிக்கச் சரித்திரத்தில் வெற்றிகரமான ஒரு குடியேற்றம் மார்மன் குடியேற்றம் என்ருல் அது மிகையாகாது.

அமெரிக்க நதி மீதான ஜான் சட்டர் சுற்றுப்புறப் பகுதியில் 1848-ல் தங்கச் சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இதனைத் தொடர்ந்து மேற்குக் கடற்கரைப் பிராந்தியத்தில் குடியேற்றங்கள் பெருகின. கலிஃபோர்னியாவில் ஏற்கனவே ஒரு சில அமெரிக்க விவசாயிகள் குடியேறியிருந்தனர். ஆனுல், தங்கச் சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டதற்குப் பின்னர் உலகத்தின் பல பாகங்களிலிருந்தும் புதிய பகுதிக்குப் புற்றீசலெனக் கிளம்பி வந்தனர். 1848-ல் அங்கே 6000 மக்களே இருந்தனர். 1850-ல் மக்கள் தொகை 92000 ஆக உயர்ந்தது.

1840 முதல் 1850 வரையிலான காலப் பகுதியில் டேக்சாஸ் இணைக்கப்பட்டது; அயோவா, விஸ்கான்சின், ஃப்ளோரிடா ஆகியவை மாநிலங்களாயின; மின்னசோட்டா, ஒரிகன், நியூ மெக்சிகோ ஆகிய பிரதேசங்கள் உருவாயின. 1860-ல் கலிஃபோர்னியா, ஒரிகன், மின்னசோட்டா முதலியன மாநிலங்களாயின; மிசௌரிக்கு மேற்கே கான்சாஸ், நிப்ரஸ்கா ஆகிய பிரதேசங்களில் குடியேற்றங்கள் ஏற்பட்டன.

இவ்வாருக, பற்பல புதிய பிரதேசங்கள் வளர்ச்சி யடைந்ததன் விளைவாக, 20 புதிய மாநிலங்கள் உருவாகி யூனியனில் சேர்ந்தன. மக்கள் தொகையிலும் அதிகரிப்பு உண்டாகியது. 1775-ல் 13 காலனிகளின் மொத்த மக்கள் தொகை 2·5 மில்லியன்கள். 1860-ல் இது 31·5 மில்லியன்களாக உயர்ந்தது.

**மேற்கு நோக்கிய முன்னேற்றத்திற்கு மக்கள் பயன்படுத்திய பாதைகள்**

ஃபிரஞ்சு மற்றும் இந்தியப் போர்கள் நிகழ்ந்த காலத்தில் ஃபிலடெல்ஃபியாவிலிருந்து பிட்ஸ்பர்க் வரை செல்வதற்கு லங்காஸ்டர்,

ஹாரிஸ்பர்க் வழியாக ஒரு சாலை இருந்தது. இச் சாலைதான் மேற்கு நோக்கி முன்னேறியவர்கள் பயன்படுத்திய ஒரு முக்கியச் சாலை. பிட்ஸ்பர்க்கை அடைந்தவுடன் படகில் ஏறி, ஓஹியோ நதியில் சென்று, பின்னர் அதன் கிளை நதிகளில் ஒன்றின் மூலம் குறிப்பிட்ட இடத்தை அடைவதே குடியேற்றக்காரரின் வழக்கமாக இருந்தது.

அல்பேனி (Albany) யிலிருந்து மொகாக்குச் (Mohank) சென்று, அங்கிருந்து ஜெனசீ சுங்கச் சாவடியை அடைந்து, ஈரி ஏரியையும், ஓஹியோவையும் அடைவது மற்றொரு வழி. 1825-ல் ஈரி கால்வாய் அமைப்புவேலை முடிவுற்ற பின்னர், இந்தப்பாதை மிகவும் சௌகரியமாயிருந்தது. ஓஹியோ பள்ளத்தாக்கின் குடியேற்றத்திற்கும் நியூயார்க்கின் குடியேற்றத்திற்கும் இப்பாதை பெரிதும் உதவிற்று.

மற்றொரு நியூயார்க் பாதை காட்ஸ்கில் சுங்கச்சாவடி வழியே அலெகனி (Allegheny) முகத்துவாரத்தை யடையும் பாதை. பால்டிமோரிலிருந்து சுங்கச்சாவடி வழியே கம்பர்லாந்துக்கு ஒரு பாதை செல்லும். அங்கிருந்து மலைகளின் குறுக்கே ஒரு தேசீயச்சாலை (National Road) ஓஹியோவிலுள்ள வீலிங் என்ற இடத்திற்குச் செல்லும். அதன் கிளைகள் பிட்ஸ்பர்க்குக்குச் செல்லும்.

வர்ஜீனியாவிலிருந்து மத்திய கென்டக்கி செல்லும் வண்டிப் பாதை ஒரு முக்கியமான தென்னாட்டுப் பாதையாகும். இது அலெக்சாண்ட்ரியா, ரிச்மாண்டு வழியே கென்டக்கி சென்றது.

தூர மேற்குப் பிரதேசங்களுக்குச் செல்வதற்கு உதவிய பாதைகளில் குறிப்பிடத் தகுந்தது, மிசௌரிக்கு அருகிலுள்ள செயின்ட் ஜோசப்பிலிருந்து பிளேட்நதி வழியாக ஃபோர்ட்லாரமிக்குச்சென்று, தென் கணவாய் வழியாக ஃபோர்ட் பிரிட்ஜருக்குச் சென்ற ஓரிகன் தடம் என்றழைக்கப்பட்ட வடக்குப் பாதையாகும். ஃபோர்ட் பிரிட்ஜருக்கருகில், கலிஃபோர்னியா தடத்திற்குச் செல்ல இரு பாதைகள் இருந்தன. இவற்றில் ஏதாவது ஒன்றினைப் பயணிகள் தேர்ந்தெடுத்துக் கொள்ளலாம். தூர மேற்குப் பிரதேசப் பாதைகளில் பல தொல்லைகள் இருந்தன. சிவப்பிந்தியர்களின் தாக்குதல்கள் பல நேரங்களில் பெரும் இடையூறுகளாக இருந்தன.

அமெரிக்காவில் நீர் வழிப்பாதைகள் (Waterways) மிகுதியாக இருந்தன. ஆனால், அமெரிக்க நதிகளில் பெரும்பாலானவை வடக்கிலிருந்து தெற்கு நோக்கி ஓடுவன. எனவே, கிழக்கு மாநிலங்களிலிருந்து மேற்குப்புறம் நோக்கிச்செல்ல விரும்பிய மக்களுக்கு இந் நதிகள் அதிகமாகப் பயன்பட முடியவில்லை.

மேற்குப்புறக் குடியேற்றத்திற்குக் கால்வாய் போக்குவரத்து (Canal transport) நன்கு உதவிற்று. கால்வாய் மூலம் செல்வது செலவு மிகுந்தது என்றாலும், சாலைப் போக்குவரத்தைவிட அது எளிதாயிருந்தது. சாலைப் போக்குவரத்தில் தனிமைத் துயரமும், செவ்விந்தியர் குறுக்கீடும் இருந்தன. ஆனால் கால்வாய்ப் போக்குவரத்தில் இத்தகைய இடையூறுகள் இருக்கவில்லை. அதில் இருந்த ஒரே அசௌகரியம் சில நேரங்களில் கால்வாய்களில் பனி உறைந்துவிடும்: அப்போது போக்குவரத்துத் தடைப்படும். தொடக்கத்தில் இருந்த கால்வாய்களில் முக்கியமானவை வருமாறு: ரிச்மாண்டுக்கும் வெஸ்தாமுக்கும் (Westham) இடையிலிருந்த கால்வாய், வர்ஜீனியா மற்றும் வடகரோலினாவிலிருந்த 'டிஸ்மல் ஸ்வாம்ப் கால்வாய்,' மாசசூசெட்சில் மெர்ரிமாக், சார்லஸ் நதிகளுக்கிடையிலிருந்த மிடில் செக்ஸ் கால்வாய். பின்னர் ஹட்சன் நதிக்கும் பஃபலோ (Buffalo) வுக்கும் இடையில் ஒரு கால்வாய் அமைக்கப்பெற்றது. இது ஒரு முக்கிய கால்வாய் எனலாம். இது போக்கு வரத்துச் செலவை மிகவும் குறைத்தது. நியூயார்க் மேற்குப் புறத்திலும் வடமேற்குப் பிராந்தியத்திலும் குடியேற்றங்கள் மிகுதியாக இது ஒரு காரணமாக அமைந்தது. பென்சில்வேனியா கால்வாயும் மேற்குப்புறம் நோக்கிய முன்னேற்றத்திற்கு உதவியது.

### மேற்குப்புறக் குடியேற்ற விளைவுகள்

மேற்குப்புறக் குடியேற்றங்கள் பெரும்பாலும் விவசாயத் தொழிலைப் பிரதானமாகக் கொண்டவை. எனவே, அங்கு விவசாயப் பண்டங்களின் உற்பத்தி கூடுதலாகியது. போக்குவரத்து வசதிகள் பெருகியவுடன் மேற்கத்திய வளமிக்க நிலங்களில் தயாரான பொருள்களுக்கும் கிழக்கு மாநிலங்களில் விளைந்த பொருள்களுக்குமிடையில் போட்டி உண்டாகியது. மேற்கத்திய வேளாண்மைப் பண்டங்களுக்குத் தேவையான அங்காடிகளைக் கால்வாய்களும் இருப்புப் பாதைகளும் உருவாக்கிக் கொடுத்தமையால், நியூ இங்கிலாந்து மற்றும் மத்திய மாநிலங்களில் இருந்த விவசாயிகள் தானியம், இறைச்சி ஆகிய பொருள்களின் விற்பனையில் மேற்குப்புற விவசாயிகளுடன் போட்டியிட்டு இன்னலுற்றனர். எனவே, வாணிபப் பொருள் தயாரிப்புப் பண்ணை, பழ உற்பத்தி, கால்நடை வளர்ப்புப் பண்ணை ஆகியவற்றில் அவர்கள் ஈடுபடவேண்டிய அவசியம் மேற்பட்டது. இவ்வாறு தமது பொருளாதார வாழ்வை மாற்றியமைத்துக்கொள்வதில் அவர்களுக்குப் பல சங்கடங்கள் இருந்தன. மேற்கு மாநிலங்களில் பருத்தி உற்பத்தி பெருகியமை தெற்குக் கடற்கரைப் பகுதி பருத்தி உற்பத்தியைப் பாதித்தது. நியூ இங்கிலாந்தைப் போல் புதிய துறைகளில் தம் சக்திகளைப் பயன்படுத்தக்

கடற்கரை தென் பிராந்தியத்தில் இயலவில்லை. எந்தவித முக்கியத் தொழிலும் அங்கே தோன்றவில்லை. பல்வகைத் தானிய உற்பத்தி முறைகளைப் பின்பற்றும் நிலையிலோ, விஞ்ஞான முறைகளில் நில வளத்தை மேம்படுத்தும் போக்கிலோ மக்கள் இருக்கவில்லை. 'தன்னுடைய மூலதனம் நிலத்தில் முடங்கிக் கிடந்தமையாலும், நிலம் வளம் குறைந்தமையாலும், தென்மேற்குப் பிரதேசத்தை நோக்கித் தொழிலாளர்கள் சென்று விட்டமையாலும் கீழ்த்திசைத் தோட்ட முதலாளியால் எதையும் செய்ய முடியவில்லை. இச் சூழல்தான் அதிருப்தியாக மாறி, பிரிவினைக்கு ஓரளவிற்குக் காரணமாயிற்று.'

ஒஹியோ, மிசிசிப்பி பள்ளத்தாக்குகளில் குடியேற்றங்கள் மிகுந்து, மக்கள் நிறைய வசிக்க வாரம்பித்தவுடன், கிழக்கத்தியப் பொறிவழிப் பண்ட உற்பத்தியாளர்கள் (Manufacturers) அப்பள்ளத் தாக்குகளில் தமது பண்டங்களை விற்கலாயினர். உண்மையில் அவர்களுக்கு அங்கே சிறந்த அங்காடிகள் கிடைத்தன. இதனால் இடவாரி உழைப்பின் பகுப்பு (Geographical Division of Labour) வளர்ச்சியுற்று வர்த்தகம் பெருகிற்று. காலம் செல்லச் செல்ல கிழக்குப் பிராந்தியம் பொறிவழிப் பண்டத் தொழில் பிரதேசமாகவும், மேற்குப் பிராந்தியம் உணவு தானிய விளைச்சல் பிரதேசமாகவும், தெற்குப் பிராந்தியம் பருத்தித் தயாரிப்புப் பிரதேசமாகவும் மாறின. 19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் கிழக்குப் பிராந்தியம் தமது பொறிவழிப் பண்டங்களை மேற்குப் பகுதிக்குக் கப்பலில் அனுப்பி வைத்தது; மேற்குப் பகுதி தனது பொருள்களைத் தெற்குப் பகுதிக்கு மட்டும் அனுப்பி வைத்தது; தெற்குப் பகுதி தனது பொருள்களைப் பெரும்பாலும் ஐரோப்பாவிற்கு அனுப்பியது. ஆனால் ஈரி, பென்சில்வேனியா கால்வாய்கள் போக்குவரத்துக்குப் பயன்பட வாரம்பித்த பின்னர், இரயில் பாதைகள் போடப்பட்ட பின்னர் மேற்கத்தியப் பொருள்கள் கிழக்கு மாநிலங்களுக்கும், தெற்கு மாநிலங்களுக்கும் செல்லத் தொடங்கின.

மேற்குப்புறக் குடியேற்றம் பலருக்கு மூலதன வாய்ப்புகளை வழங்கியது. அத்துடன் சாலை, நதி, கால்வாய், இரயில் ஆகியவற்றின் வளர்ச்சிக்கும் வழிகோலி, போக்குவரத்து வசதி முன்னேற்றத்தினை ஏற்படுத்திக் கொடுத்தது.

மேற்குப்புறக் குடியேற்றப் பெருக்கம் விளைவாக அமெரிக்க அரசியல் வட்டாரத்தில் பல முக்கிய மாறுதல்கள் ஏற்பட்டன. வலிவும் புரட்சியும் மிகுந்த மேற்கத்தியர்கள் அமெரிக்கக் கட்சி விவகாரங்களில் புதிய குறிக்கோள்களைப் புகுத்தினர். குடியரசு பற்றிய ஜெஃபர்சன் சித்தாந்தம், ஜாக்சன் காலத்தில் மாறுதலுக்குள்ளாகி

யது. வாக்குரிமை, மற்றும் பதவி வகித்தலுக்குச் சொத்துரிமை ஒரு தகுதியாக இருந்த நிலை மாறியது. கிழக்கத்திய மாநிலங்களின் அரசியலமைப்பைவிட மேற்கத்திய மாநிலங்களின் அரசியலமைப்பு தாராள மிகுந்ததால், மனித உரிமைகளுக்குச் சற்று மிகுதியான மதிப்பு கொடுப்பதாய் அமைந்திருந்தது. மேற்கத்தியப் பகுதி அரசியல் சட்டத் தாராளத் தன்மை பின்னர் யூனியன் அரசியலமைப்பில் சில முக்கிய மாறுதல்களைத் தோற்றுவித்தது. பீட்மாண்ட் (Piedmont) விவசாயியான ஜெஃபர்சன் குடியரசுத் தலைவரானபோது மேற்கத்திய விவசாயிகளின் அரசியல் செல்வாக்குப் பெருகியது. அடுத்து, வயதுவந்த ஆண்களுக்கு வாக்குரிமை என்ற கொள்கையடிப்படையில், புதிய மாநிலங்கள் ஒன்றன்பின் ஒன்றாகத் தமது பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்து வாஷிங்டனுக்கு அனுப்ப வாரம்பித்தபோது, மேற்கத்தியரின் செல்வாக்குப் பன்மடங்கு பெருகிற்று. தனிப்பட்டோர் உரிமைகள் பாதுகாக்கப்படவேண்டும். தனியார் தொழிற் றுணிவு வளர்க்கப்படவேண்டும் என்பனபோன்ற கொள்கைகள் அமெரிக்க ஜனநாயக அமைப்பின் முக்கிய அம்சங்களாயின. குடியரசுக் கட்சியைச் சார்ந்தவர்கள் ஆட்சியிலிருந்த காலங்களில் மேற்குப் பகுதியினரின் உணர்வுகளைப் பிரதிபலிக்கும் வலிவுமிக்க தேசீயத் திட்டங்கள் உருவாயின. மேற்கத்தியரின் முயற்சியின் பலனாகத்தான் தடையற்ற நீர்வழிப் போக்குவரத்து அமெரிக்க நாட்டில் ஏற்பட்டது.

# 4. உள் நாட்டுப் போர்
## (The Civil War)

அமெரிக்க உள் நாட்டுப் போர் அந் நாட்டு முன்னேற்ற சரித்திரத்தில் ஒரு திருப்பு மையமாக அமைந்தது. தொழில் நிதி மற்றும் வர்த்தகத் துறைகளில் இப் போரினுல் பல விளைவுகள் உண்டாயின. தொழிலாளரைப் பொறுத்தவரை உள் நாட்டுப் போர் அடிமை முறை (Slavery) யின் அழிவைக் குறித்துக் காட்டியதோடு அமையாமல், தொழிலாளர் இயக்கம் தேசீய ஒருமைப்பாடு நோக்கித் துரிதமாக முன்னேறியதையும் குறித்துக் காட்டியது. உள் நாட்டுப் போரின்போதுதான் பொருளாதார நலன்களை அடிப்படையாகக் கொண்டெழுந்த பிராந்தியப் போராட்டம் தனது உச்ச கட்டத்தை அடைந்தது. அரசியல் கண்ணேட்டத்தில் நோக்கினுல் தென்னகத்தின் விடுதலைப் போர் மத்திய அரசின் மேலாட்சியை (Supremacy) உறுதிப்படுத்தியது. அது அமெரிக்க சமூக வரலாற்றில் ஒரு திருப்பம். அமெரிக்கப் பிராந்தியங்களுக்கிடையில் பொருளாதார ரீதியில் மூண்டெழுந்த மோதலே உள் நாட்டுப் போர்: அது ஏற்பட முக்கியக் காரணங்களாக அமைந்தவைகளில் அடிமை முறையும் ஒன்று.

### பொருளாதாரக் காரணங்கள்

அமெரிக்க நாட்டின் தென் பகுதி பெரும்பாலும் விவசாய நாடாக இருந்தது. வட பகுதி தொழில்வளம் மிகுந்ததாயிருந்தது. இவ்வேற்றுமை இரு பகுதிகளுக்கிடையே மோதல் மூள்வதற்கு ஒரு முக்கியக் காரணமாய் அமைந்தது. உண்மையில், தோட்டத்தொழில் (Plantation) பொருளாதாரத்திற்கும், வளர்ந்துவரும் தொழில் முதலாளித்துவத்திற்கும் இடையில் ஏற்பட்ட சச்சரவே உள் நாட்டுப் போர். காலனி காலத்தில் தென்னுடு தோட்டத் தொழிலை வளர்த்து வேளாண்மை வாழ்க்கையை மேற்கொண்டது. பருத்தி உற்பத்தி காரணமாக வேளாண்மை வாழ்க்கை மேலும் உறுதி

யடைந்தது. அதாவது எவ்விதத் தொழில் வளமுமின்றி, வேளாண்மையை நம்பியிருக்கும் நாடாகவும், வேளாண்மைப் பண்டங்களை ஏற்றுமதி செய்யும் நாடாகவும் தென்னாடு இருந்து வந்தது. ஆனால் அதே நேரத்தில் வடநாடோ வர்த்தகம் மற்றும் பொறிசெய் தொழில்களை நன்கு வளர்த்துக்கொண்டு, தொழில் வளமிகுந்த பகுதியாக உருவெடுத்து வந்தது. இரு பிராந்தியங்களுக்கிடையில் இருந்து வந்த பொருளாதாரப் போட்டி சுங்கவரி (Tariff) வகுப்புப் பிரச்சினையில் வெளிப்படையாகத் தெரியலாயிற்று.

1812-ல் நிகழ்ந்த போரினைத் தொடர்ந்து நாட்டுணர்ச்சி நிரம்பியிருந்த நிலையில் தென்பகுதித் தலைவர்கள் வடபகுதித் தலைவர்களுடன் ஒன்றுசேர்ந்து, 1816-ல் காப்பு சுங்கவரிச் (Protective tariff) சட்டத்தை இயற்றினர். ஆனால் தென்பகுதித் தலைவர்களது போக்கு 1824-ல் மாறியது. தமது தொழில்களைப் பாதுகாப்பதற்கென வடபகுதியினர் சுங்கவரிச் சட்டங்களை நாடுகின்றனர் என்றும், அவ் வரிகளால் தம்மால் வாங்கப்படும் பண்டங்களின் விலைகள் கூடுதலாகும் என்றும் கருதிய தென் பகுதியினர் சுங்கவரி விதிப்புகளை முழுமூச்சாக எதிர்த்தனர்; பிரிந்துபோய் விடுவோம் எனக் குரலெழுப்பினர். அனைவரும் ஏற்றுக்கொள்ளும் முறையில் 1833-ல் இயற்றப்பட்ட சுங்கவரி விதிப்புச் சட்டம் தென் பகுதியினருக்கு ஒரு பெரும் வெற்றியைத் தேடிக் கொடுத்தது.

செலாவணி மற்றும் பாங்கு முறையைப் பொறுத்தவரையிலும் இரு பகுதிகளுக்கிடையில் பூசல் தோன்றியது. ரொக்க மூலதனம் ஏதுமின்றிக் கடனாளிப் பிராந்தியமாயிருந்துவந்த தென் பகுதி, குறைந்த வட்டிக்குக் கடன் அளிக்கும் பாங்குச் சட்டங்களையும் செலாவணிப் பெருக்கத்தையும் ஆதரித்தது. தொழில்களைப் பெருக்குவதில் ஆர்வம் காட்டிய வடபகுதி, பாங்குத் திட்டத்தில் கட்டுப்பாடுகளைக் கொண்டுவர விரும்பியது. பாங்குக் கடன் மற்றும் செலாவணியின் அளவு பெருகக்கூடாது என்பதில் அக்கறை காட்டியது. ஆனால் பாங்குமுறை எவ்வாறு அமையவேண்டும் என்று நிர்ணயிப்பதை, எல்லைப்புற மேற்குப் பிரதேசத்தின் துணையுடன் 1836 முதல் பிரிவினை ஏற்படும் வரையில் தமது ஆதிக்கத்தில்தான் தென்பகுதி வைத்துக்கொண்டிருந்தது.

மேற்குத்திசை நோக்கி முன்னேறுதலில்கூட, தென் பிராந்தியத்திற்கும் வட பிராந்தியத்திற்கும் இடையில் கருத்து வேற்றுமைகள் இருந்தன. ஒரே பிரதேசத்தில் நிலைத்து நிற்கக்கூடிய மக்கள் தொகையை விரும்பிய வட பிராந்தியத் தொழிலதிபர்கள் மேற்குப் பிரதேசக் குடியேற்றத்தைப் பொதுவாக விரும்பவில்லை. மேற்கத்திய

நிலங்களைப் பெரும் பெரும் துண்டுகளாக்கிக் குறைந்த விலையில் விரைந்து விற்கவேண்டும் என்ற திட்டத்தைத் தென்னாடு ஆதரித்தது. ஆனால், அந் நிலங்களைச் சிறுசிறு துண்டுகளாக்கிக் கூடுதலான விலைகளில் மிகுந்த கட்டுப்பாடுடன் படிப்படியாக விற்கவேண்டும் என வடநாடு கோரியது. வேறு பிரதேசங்களைத் தமது ஆதிக்கத்தின்கீழ் கொண்டுவருவது குறித்தும் இரு பிரதேசங்களுக்கிடையில் கருத்து வேற்றுமைகள் உண்டாயின. அடிமைகளின் உழைப்பைக்கொண்டு நடந்துவந்த தென்புலப் பருத்தி உற்பத்தித் தொழிலுக்குப் புதிய நிலங்களும் புதிய அடிமைப் பிரதேசமும் எப்போதும் தேவைப்பட்டன; மேலும் தமது பொருளாதார நலன்களைப் பாதுகாத்துக் கொள்ளப் போதுமான அளவுக்குத் தம்மிடத்தில் செனட் உறுப்பினர்களைக் கொண்டிருப்பதும் தென்னகத்திற்கு அவசியமாயிற்று. எனவே, லூயிசியானா, ஃப்ளோரிடா, டேக்சாஸ் மாநிலங்களைக் கைப்பற்றுவதையும், மெக்சிகோவிடமிருந்து நிலங்களைப் பறிமுதல் செய்வதையும் தென்பகுதி ஆதரித்தது. இதற்கு வடபகுதியிடம் இசைவு இருக்கவில்லை.

தாங்கள் வாழும் தென் பிராந்தியத்தின் பொருளாதாரச் சீர்கேடுகளுக்கு வட பிராந்தியத்தின் ஆதிக்கமே காரணம் என்றும், அரசியல் விடுதலை மூலமே தங்களுடைய பிரச்சினைகளைத் தீர்த்துக் கொள்ள இயலும் என்றும் தென்னாட்டவர் கருதினர். வட பிராந்திய முதலாளித்துவ ஆதிக்கம் அவர்களை மிகவும் அழுத்தி வைத்து ஆட்டிப் படைத்தது என்பது ஓரளவுக்கு உண்மையே. 'குருதியை உறிஞ்சும் வெளவால் இனத்தைப்போல, வடபகுதியைச் சார்ந்த நீங்கள் தென் பகுதியின் செல்வத்தைக் களவாடிச்சென்று செல்வந்தர்களாக, வலிவு மிக்கவர்களாகத் திகழ்கிறீர்கள்' என்று ஜெஃபர்சன் டேவிஸ் குறிப்பிட்டார். தென்னாடு பண விரயமும், மிகுந்த செலவும் கொண்ட முறையின்மூலம் பொறிவழிப் பண்டங்களை (Manufacturer) விலைக்கு வாங்கியது. சுங்கவரி விதிப்பைவிட இந்த வழிமுறை தென் புலத்திற்கு மிகுதியான தீங்கினை விளைவித்தது. தென்மண்டலம் வடமண்டலம் பாங்கர்களிடமிருந்து கடன் வாங்கி, அக்கடன் பணத்தைக் கொண்டு வடமண்டலம் பொறிசெய் பண்டங்களை விலைக்கு வாங்கி, வடநாட்டுக் கப்பல்களில் ஏற்றி வந்து, வடநாட்டுத் தரகர்கள்மூலம் பிரித்து விநியோகித்தது. தென்புலத்திற்கும் ஐரோப்பாவிற்கும் இடையில் நேரடியான வர்த்தகத் தொடர்பு இருக்கவில்லை. தென் பிராந்தியப் பருத்தியின் பெரும் பகுதியை நியூயார்க்கிற்குக் கொண்டுசென்று, அங்கிருந்து அதனை ஐரோப்பாவிற்கு அனுப்பி வைத்தனர். ஐரோப்பாவிலிருந்து கப்பலில் வரும் பொறிசெய் பண்டங்களை வடபுலத்துத் துறைமுகங்களில் இறக்கிப் பின்னர் தெனகம் முழுவதும் பிரித்து விநியோகிப்பர். இத்தகைய 'பருத்தி

முக்கோணத்தின் (Cotton triangle) விளைவால், போக்குவரத்துச் செலவும் தரகர் அடையும் கழிவும் அதிகரித்தன. தாம் ஏன் இத்தகைய அசௌகரியங்களுக்கும் இழப்புக்களுக்கும் உள்ளாகவேண்டும் என்ற வினா தென்னாட்டவரிடையே புயலெனச் சீறியது.

உள்நாட்டுப் போர் மூண்டதற்கு பிராந்தியங்களுக்கிடையே பொருளாதார நலன்களைப் பொறுத்துத் தோன்றிய பூசலேயன்றி, அடிமை முறையும் ஒரு முக்கியக் காரணமாகும். காலனி காலத்தில் அடிமை முறைபற்றி எந்தவித விவாதமும் இருக்கவில்லை. விடுதலைப் போருக்குப் (War of Independence) பிறகுதான் அடிமை முறை பிரச்சினைக்குரிய பொருளாக மாறியது. விடுதலைப் போரின்போது தோட்ட முதலாளிகள் பல இழப்புகளுக்கு உள்ளாயினர்; இவ் விழப்புகள் மத்தியில் அடிமைகளை விலை கொடுத்து வாங்கி அவர்களைப் பராமரித்து வருவது இலாபகரமானதாக இருக்கவில்லை. மேலும் ஐரோப்பாவிலிருந்து வந்த ஏராளமான வெள்ளைக்காரர்கள் அமெரிக்காவில் குடியேறியிருந்ததால், அவர்களை விவசாய வேலைகளுக்குப் பயன்படுத்திக்கொள்வது எளிதாயிருந்தது. நிலத்தைக் கண்டவாறெல்லாம் சாகுபடி செய்துவந்ததால் அதன் வளம் குன்றி, புகையிலை மற்றும் பருத்தி உற்பத்தியில் கிடைத்துவரும் இலாபங்கள் குறையலாயின. அடிமைகளை வைத்துச் சாகுபடி செய்வதில் இருந்துவந்த பயன்கள் இதனால் குறைந்தன. அதே நேரத்தில் மனித சமத்துவம்பற்றிய கருத்துகள் நாடெங்கனும் முளைவிட வாரம்பித்தன. பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதிக்குள் அனேகமாக எல்லா வடக்கத்திய மாநிலங்களும் அடிமை முறை ஒழிப்புச் சட்டங்களை இயற்றிவிட்டன எனலாம். அடிமை முறை பரவலாக இருந்துவந்த தென்னாட்டில்கூட பல முக்கிய மனிதர்கள் அடிமை முறைக்கு எதிர்ப்புத் தெரிவிக்கலாயினர்.

ஆனால் பருத்திக்கான தேவை பத்தொன்பதாம் நூற்றாண்டில் அதிகரித்தபோது அடிமை முறை மீண்டும் இலாபகரமானதாக மாறிற்று. தென்னாட்டில் அடிமைகள் மென்மேலும் வேலைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டனர். ஆப்பிரிக்காவிலிருந்துகூட அடிமைகள் தருவிக்கப்பட்டனர். இந்நிலையில் 1808-ல் காங்கிரஸ் இயற்றிய ஒரு சட்டம் அடிமைகளின் இறக்குமதியைத் தடை செய்தது. அடிமை முறை எதிர்ப்பு இயக்கங்கள் வடநாட்டில் தோன்றின. அடிமை முறையின் கொடுமைகளைப்பற்றி இவை ஆங்காங்கு எடுத்துரைத்தன. இது தென்னாட்டிற்கு எரிச்சலை விளைவித்தது. 1819-ல் அமெரிக்க ஐக்கிய நாட்டில் இருந்த 22 மாநிலங்களில் 11 மாநிலங்கள் அடிமை முறையினை ஒழித்திருந்தன. கூட்டரசில் புதிதாகச் சேர்க்கப்படக்கூடிய மாநிலங்களில் அடிமை முறை இருப்பதா வேண்டாமா

என்பதில் வடக்குக்கும் தெற்குக்குமிடையே கருத்து மோதல்கள் ஏற்பட்டன. இத்தகைய சூழ்நிலையில்தான் அடிமை முறையினை எதிர்த்துப் போர்க்குரல் எழுப்பிய ஆப்ரஹாம் லிங்கன் அமெரிக்கக் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். நிலைமை கட்டு மீறியது. அடிமை முறையினைச் சிக்கெனப் பிடித்துக்கொண்டிருந்த தென்னாடு கூட்டரசிலிருந்து பிரிந்து போவதாக அறிவித்தது. பிரிந்து போவதற்கு உரிமை கிடையாது என்றது வடநாடு. இரு பகுதிகளும் மூர்க்கமாக மோதிக்கொண்டன. இது உள்நாட்டுப் போரின் துவக்கம் ஆகும்.

## உள்நாட்டுப் போரின் விளைவுகள்

அமெரிக்க நாட்டு முன்னேற்றத்தில் உள்நாட்டுப் போர் ஒரு திருப்பு மையமாகும். அமெரிக்கத் தொழிலாளரின் சரித்திரத்தில் உள்நாட்டுப் போர் அடிமை முறையின் அழிவைக் குறிப்பதோடமை யாமல், தொழிலாளர் இயக்கங்களின் வளர்ச்சியையும் துரிதப் படுத்தியது. நாட்டு நிதி, தொழில் மற்றும் வர்த்தகத் துறைகளில் உள்நாட்டுப் போரின் விளைவுகள் மிகவும் ஆழமாகப் பதிந்தன. அரசியல் கண்ணோட்டத்துடன் உற்றுப் பார்த்தால் உள்நாட்டுப் போர் மத்திய ஆட்சியின் தலைமையையும் வலிமையையும் உறுதிப் படுத்தியது. உள்நாட்டுப் போரின் பொருளாதார விளைவுகள் கீழே சுருக்கித் தரப்படுகின்றன.

'போர் மூண்டவுடன் வடக்கும் தெற்கும் கடுமையான பொருளாதார பீதிக்குப் பலியானதுதான் முதல் பொருளாதார விளைவு' என்கிறார் பேராசிரியர் ஃபால்க்னர். போர் மூண்டபோது தென்னாடு வடநாட்டு வணிகர்கக்கு 30 கோடி டாலர்கள் தரவேண்டி யிருந்தது. வடநாடு இத் தொகையை இழந்தது; பொருளாதார நிலைமை தடுமாற்றமடைந்தது. இதையடுத்து வடநாட்டில் செலவுக் குறைப்பும், ஆட்குறைப்பும் சிக்கனமும் பரவலாகக் காணப்பட்டன. நெருக்கடியைச் சந்திப்பதற்குப் போதுமான ரொக்க இருப்பு பாங்கு களிடம் இருக்கவில்லை. இச் சூழ்நிலைகள் காரணமாகவே 1861-ல் மந்தம் ஏற்பட்டது. சற்றேறக்குறைய ஆறாயிரத்துக்கும் மிகுதியான வடக்கு நிறுவனங்கள் தோல்விகளைத் தழுவின. பாங்குகளுக்கும் இதே கதி ஏற்பட்டது. இல்லினாயில் 89 பாங்குகளும், விஸ்கான்சினில் 39 பாங்குகளும், இந்தியானாவில் 27 பாங்குகளும் முறிந்து போயின. வடக்கு, மேற்கு, தெற்கு பிரதேசங்கள் அனைத்திலும் பாங்குகள் பாதிக்கப்பட்டன.

### வடக்கில் விவசாய வளர்ச்சி

1861 ஆம் வருட பொருளாதார மந்த நிலைமையைத் தொடர்ந்து இளவேனில் பருவத்தில் வடக்கு மற்றும் மேற்குப் பகுதியில் வேளாண்மைத் தொழில் புத்துயிர் பெற்றுச் செழிப்பு நிலை தோன்றியது. மேற்குப் பகுதி விவசாயிகளுடன் சில தானியங்களின் உற்பத்தியில் போட்டியிட முடியாது என்பதை உணர்ந்த கிழக்குப் பகுதி விவசாயிகள் பலர் மேற்குப் பிரதேசங்களில் குடியேறி அங்குள்ள நிலங்களில் சாகுபடி செய்ய வாரம்பித்தனர். மேற்குப் பகுதிக்குச் சென்று அங்கே ஐந்தாண்டுகளுக்கு வாழ விருப்பம் தெரிவிப்பவர்களுக்கு 160 ஏக்கர் நிலம் இலவசமாக வழங்கப்படு வதற்குக் குடும்ப மனையகச் சட்டம் வழிவகுத்தது. இதனைத் தொடர்ந்து மேற்கு நோக்கிய குடிப்பெயர்ச்சி இயக்கம் தீவிரமடைந் தது. போர்க் காலத்தில் இச்சட்டத்தின் பலனை அனுபவிக்க வெளிநாடுகளிலிருந்து பலர் அமெரிக்காவுக்கு வந்து குடியேறினர். இன்னல்களுக்குள்ளான எல்லைப்புற மாநிலங்களிலிருந்தும் மக்கள் மேற்குப் பகுதிக்குச் சென்றனர். வேளாண்மைத் தொழிலில் உழைப்பைக் குறைத்து உற்பத்தியைப் பெருக்கிடும் எந்திரங்களைக் கண்டுபிடிப்பதில் மக்கள் பேரார்வம் காட்டினர். புல்லறுக்கும் கருவிகள், விதையிடும் எந்திரங்கள், கதிரடிக்கும் பொறிகள் தயாரிக்கப்பட்டன. விவசாய உற்பத்தி மிகவும் பெருகியது. கோதுமை உற்பத்தியில் கணிசமான முன்னேற்றம் காணப்பட்டது. பண்ணைகளிலிருந்த செம்மறியாடுகளின் எண்ணிக்கை இரட்டிப்பாகி யது. கம்பளி உற்பத்தி மூன்று மடங்குக்கு மேலாக உயர்ந்தது. வேளாண்மைத் தொழில் செழிப்பு நிலை எய்துவதற்கு முக்கியக் காரணங்களாக இருந்தவை: போர் முடிவுற்ற நிலையில் ஒரு மில்லியன் போர்வீரர்களுக்கு உணவும் உடையும் கொடுக்கவேண்டிய அவசியம்; நாட்டின் மக்கள் தொகைப் பெருக்கம்; காகிதப் பணப் பெருக்கத்தால் விலைவாசிகள் உயர்ந்தமை; வெளிநாடுகளில் தேவை பெருகியமை.

### தொழிற் பெருக்கம்

உள்நாட்டுப் போரினால் வடநாட்டில் பொறிசெய் தொழில்கள் (Manufacturing Industries) நன்கு செழித்து வளர்ந்தன. போர்க் காலத் தேவைகளினால் தூண்டப்பெற்ற பொறிசெய் தொழில் உற்பத்தி, போரின் இறுதிக் கட்டத்தின் மூன்றாண்டுகளில் உச்ச நிலை களுக்குத் தாவியது. போர்க் காலத்தில்தான் சிலவகைப் பொறி செய் தொழில்கள் வளர்ச்சியுற்றன; அதாவது போருக்குத் தேவை யான பொருட்கள் உற்பத்தியாயின. போரின் தேவைகள் அமெரிக்கப் பொருளாதாரத்திற்கு நல்ல ஊக்கத்தினை வழங்கின.

கம்பளி ஆடை உற்பத்திக்குப் போரினுல் கிடைத்த தூண்டுதல்போல் வேறு எந்த உற்பத்திக்கும் கிடைக்கவில்லை. படை வீரர்களுக்குக் கம்பளி ஆடைகள் நிறையத் தேவைப்பட்டன. அமைதிக் காலத்தில் 8,50,00,000 பவுண்டுகள் கொண்ட கம்பளியே ஆண்டுதோறும் நெய்யப்பட்டு வந்தது. ஆனுல் போர் மும்முரமடைந்தபோது 20,00,00,000 பவுண்டுகளுக்கும் அதிகமாகக் கம்பளி ஆண்டுதோறும் நெய்யப்பட்டது. 1841-ல் எலியஸ் ஹோவ் (Elias Howe) அவர் களது தையற் பொறிக்கு உரிமைப் பத்திரம் வழங்கப்பட்டதைத் தொடர்ந்து ஆயத்தமான (Readymade) துணி தயாரிப்புத் தொழில் துரிதமாக வளர்ந்தது. அவ்வாறே தோலைத் தைப்பதில் தையற் பொறியை ஆள்வதற்குத் திருவாளர்கள் லைமேன் ஆர். ப்ளேக் (Lyman R. Blake), கார்டன் மக்கே (Garden Mckay) ஆகியோர் பெற்ற உரிமைப் பத்திரங்கள் வழியே தோல் தொழில் செழித் தோங்க வாரம்பித்தது. போர்க் காலத்தில்தான் பிட்ஸ்பர்க் (Pittsburg) இரும்பு உற்பத்தியைக் கணிசமாகப் பெருக்கிற்று. ஃபிலடெல்பியா 1862-ல் 68 புதுத் தொழிற்சாலைகளையும், 1863-ல் 57 புதுத் தொழிற்சாலைகளையும், 1865-ல் 65 புதுத் தொழிற்சாலைகளை யும் தொடங்கி, தொழில் வட்டாரத்தில் தமக்கென ஒரு சிறப்பான இடத்தைத் தேடிக்கொண்டது. கப்பல் கட்டும் தொழிலிலும், யுத்தத் தளவாடங்கள் தரிப்புத் தொழிலிலும் அரசு ஈடுபட்டது.

### கனிப்பொருள் உற்பத்தி அதிகரிப்பு

போர்க் காலத்தில் அடிப்படைக் கனிப் பொருட்களின் உற்பத்தி பெருகிற்று. செம்பு உற்பத்தியில் மிக முக்கிய கேந்திரமாக மிச்சிகன் தலையெடுத்தது; அது ஆண்டுதோறும் 6000 டன் செம்பை உற்பத்தி செய்தது. பென்சில்வேனியாவிலும், வர்ஜீனியாவிலும், ஒஹியோவி லும் ஆயிரக்கணக்கான எண்ணெய்க் கிணறுகள் தோண்டப்பெற்றன. ஒரு பெரிய தொழிலின் துவக்கமாக இது அமைந்தது. எண்ணெய் உற்பத்தி 1862ஆம் ஆண்டு 12,80,00,000 காலன்கள். அயல்நாட்டு வாணிபத்தில் 1865-ல் எண்ணெய் மிகவும் முக்கியமான பண்ட மாயிற்று. போரின்போது தொடங்கப்பெற்ற புதுத் தொழில்களில் பெட்ரோலியமும் ஒன்று. இதுவரை அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படாதிருந்து வந்த பெட்ரோலியம் 1861 முதல் ஏற்றுமதி செய்யப்பட்டது; 1865-ல் ஏற்றுமதி செய்யப்பட்ட பெட்ரோலியத் தின் மதிப்பு 16000000 டாலர்கள்; ஏற்றுமதிகளில் பெட்ரோலியம் 6ஆம் இடத்தை வகித்தது.

போர் நிகழ்ந்த ஆண்டுகளில்தான் தங்கம் மற்றும் வெள்ளி போன்ற உலோகங்களின் உற்பத்தி அமெரிக்காவில் முன்னேறியது

எனலாம். 1859ஆம் ஆண்டு நிவேதாவில் பொன், வெள்ளிச் சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டன; கொலராடோவில் பொன் சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டன. இச்சுரங்கங்களும் மற்றச் சுரங்கங்களும் சுமார் 80,00,000 டாலர்கள் மதிப்புள்ள உலோகங்களை உற்பத்தி செய்தன. சுரங்கங்கள் கண்டுபிடிக்கப்பட்டதைத் தொடர்ந்து, மக்கள் சுரங்க நகர்களை நோக்கிப் பெயர்ந்து செல்ல வாரம்பித்தனர். 1860-ல் 30,000 ஆக இருந்த கொலராடோவின் மக்கள் தொகை, 1864-ல் 1 லட்சமாக உயர்ந்தது. 1860-ல் 7000 ஆக இருந்த நிவேதா மாநிலத்தின் மக்கள் தொகை, 1670-ல் 40000 ஆகப் பெருகியது. சுரங்க நகர்களை நோக்கிச் சென்ற மக்களின் எண்ணிக்கை ஆண்டுதோறும், ஏன், நாள்தோறும் அதிகரித்தே வந்தது. '1863-ல் கான்சாஸ் தடம் வழியே சென்ற பயணி ஒருவர் தமது 16 நாள் பயணத்தில் நாளொன்றுக்குச் சராசரி 500 வண்டிகளைக் கண்டதாகக் குறிப்பிட்டுள்ளார். 1864-ல் ஒமாகா புறவாயில் வழியே 75,000 மக்கள் பொன்னுன மேற்குநோக்கிச் சென்றனர்' என்று ஃபால்க்னர் குறிப்பிட்டுள்ளார்.

### போக்குவரத்து வசதிகள் வளர்ச்சி

போர்க்காலத்தில் தந்தி, போக்குவரத்துச் சாதனங்கள் கொண்ட பல்வேறு நிறுவனங்கள் ஒன்றுக இணைய வாரம்பித்தன. போருக்குப் பிறகும் இந்த இணைப்பு வேலை தொடர்ந்தது. மேற்குச் சங்கம் (Western Union) என்ற தந்திக் கம்பெனி 1866-ல் அமெரிக்கத் தந்திக் கம்பெனி, ஐக்கிய அமெரிக்கத் தந்திக் கம்பெனி ஆகிய இரு கம்பெனிகளைக் கைப்பற்றியது; இதனுல் 75,000 மைல் நீளமுள்ள தந்திப் போக்குவரத்து மேற்குச் சங்கத்திற்குச் சொந்தமாயிற்று. இவ்வாறே பல்வேறு பிராந்தியங்களிலிருந்துவந்த எண்ணற்ற சின்னஞ்சிறு இரயில் பாதைகள் ஒரே அமைப்பின்கீழ் கொண்டு வரப் பெற்றன. போர் நிகழ்ந்ததன் விளைவாகப் போக்குவரத்து வசதிகளின் தேவை பெருகியதாலும், உற்பத்திப் பண்டங்களைச் சேகரிக்கும் கேந்திரங்களாக இருந்த நகரங்களுக்கிடையே போட்டி ஏற்பட்டதாலும், இரயில் பாதைகள் ஒரே அமைப்பின்கீழ் செயல்பட வைக்க வேண்டியது அவசியமாயிற்று. பென்சில்வேனியா, லீஹை (Lehigh) எரீ (Erie) போன்ற முக்கிய சாலைகளின் கம்பெனிகள் போருக்கு முன்னரும், பின்னரும் சிறுசிறு கம்பெனிகளையெல்லாம் தமதுடைமையாக்கிக்கொண்டன. நவீன இருப்புப்பாதை யமைப்புக்கள் தோன்றிட இக்கம்பெனிகள் அடிக்கல் நாட்டின என்ருல் அது மிகையாகாது. இரயில் பாதைகளின் இணைப்பு உருவாகிக்கொண்டிருந்த அதே நேரத்தில் புதிய இரயில் பாதைகளும் போடப்பட்டன. போர்க் காலத்தில் போடப்பட்ட ஒரு மிக நீண்ட இரயில் பாதை அட்லான்டிக்-கிரேட்

வெஸ்டர்ன் இரயில் பாதையாகும். ஃபிலடெல்ஃபியா-எரீ இரயில் பாதை 1864-ல் திறக்கப்பட்டது. இப்பாதை புதிய எண்ணெய்க் கிணறுகளை ஃபிலடெல்ஃபியாவுடன் இணைத்தது. அமெரிக்கக் கண்டத்தின் குறுக்கே போடப்பட்ட முதல் இரயில் பாதை 1865-ல் உபயோகத்திற்கு வந்தது. இரயில் பாதைகள் போர்க்காலத்தில் மிகவும் இலாபகரமானவையாய் அமைந்திருந்தன. இலாப ஈவினை (Dividends) வழங்காதிருந்துவந்த எரி, ஹட்சன் நதி, க்ளீவ்லாந்து, பிட்ஸ்பர்க் ஆகிய இரயில் பாதைகள் போர் முடிவுற்ற நிலையில் எட்டும், எட்டுக்கு மேற்பட்ட சதவிகிதமும் கொண்ட தொகையினை இலாப ஈவுகளாக வழங்கின.

### விலைவாசிகள் உயர்வு

போரின் காரணமாக சட்டமுறைக் (legal tender) காகிதப் பணங்களும், குறுங்காலக் கருவூல நோட்டுகளும் (Treasury notes) தொடர்ந்து வெளியிடப்பட்டு வந்தமையால், நிலையற்ற மதிப்புடைய தாள் நாணயங்கள் நாட்டில் வலம் வரலாயின. அதே சமயத்தில் பண்டங்களுக்கான தேவையும் உயர்ந்ததால், விலைவாசிகள் உயர்ந்தன; மக்களின் வாழ்க்கைச் செலவும் உயர்ந்தது. போர் நிகழ்ந்த 4 ஆண்டுகளில் அத்தியாவசியப் பண்டங்களுக்காகும் செலவு 125 சதவிகிதம் உயர்ந்தது. வாழ்க்கைச் செலவு துரிதமாக உயர்ந்தமையால் தொழிலாளர்கள் வாழ்க்கை நடத்த முடியாமல் இன்னலுற்றனர். காகிதப் பணத்தால் மதிப்பு அளக்கப்பெற்ற பொருட்களின் விலைகள் இரு மடங்காக உயர்ந்தன; ஆனால் கூலிகள் அவ்வாறு உயராமல் பின்தங்கின; 1863, 1864ஆம் ஆண்டுகளில் பண்டங்களின் விலைகள் மென்மேலும் ஏறிக்கொண்டே சென்றபோது தொழிலாளர் சங்கங்கள் ஆங்காங்கே தோன்றித் தொழிலாளர் நலத்துக்காகப் போராடத் துவங்கின; எண்ணற்ற வேலை நிறுத்தங்கள் நிகழ்ந்தன. வாழ்க்கைச் செலவு உயர்ந்தமையால், தொழிலாளர்களே அல்லாது, உத்தியோகஸ்தர்கள், குருக்கள், ஆசிரியர்கள், அரசாங்க அலுவலர்கள் ஆகியோரும் பாதிக்கப்பட்டனர்.

### தென்னகத்தைச் சுற்றி இரும்பு வளையம்

உள்நாட்டுப் போரின் விளைவாக வடநாட்டில் பொருளாதார வளர்ச்சி விரைவாகக் காலூன்றியது. தென்னாட்டில் பொருளாதார வாழ்க்கை முற்றிலும் தலைகீழாக மாறியது எனலாம். தென்னாட்டின் வாழ்க்கை அயல்நாட்டு வாணிபத்தை நம்பியிருந்தது. போரின் காரணமாகத் தென்னகத்தின் அயல்நாட்டு வாணிப உறவு தடைப்பட்டது. போர் மூண்ட நாள் முதல் தென் பகுதியை ஒரு இரும்பு வளையம் சூழ்ந்துகொண்டது; அதன் வாணிபத் தொடர்புகள் இதனால்

பெரிதும் பாதிக்கப்பட்டன. மத்திய அரசின் இராணுவப் படைகள் தெற்கு மற்றும் கிழக்குத் திசைகளில் முன்னேற முன்னேற, கப்பற் படையின் வலிமை நாளுக்குநாள் வளர வளர, தென்னகத்தைச் சுற்றியிருந்த இரும்பு வளையம் தென்னாட்டு வாணிபத்தின் குரல் வளையை நெருக்கிற்று. படைகள் சூழ்ந்து நின்றமையால் பருத்தியும் புகையிலையும் தென்புலத்தை விட்டு வெளியேற முடியவில்லை; இதனால் வெளிநாட்டு அங்காடிகளைத் தென்னாடு இழந்தது; எனவே, தமக்குத் தேவையான படைக் கருவுகளைத் தென்னகத்தால் வாங்க முடியாது போயிற்று. அங்காடிகளையும் வாணிப நாணயத்தையும் இழந்தமையால் தென்புலத்தின் பொருளாதார நிலை கேடுற்றது. வாணிபத் தடை காரணமாக விவசாயத் தென்னாடு தமக்குவேண்டிய பல்வேறு பொறிசெய் தொழில் பண்டங்களை இறக்குமதி செய்து கொள்ள முடியவில்லை. மக்களின் அன்றாட வாழ்க்கை இதனால் மிகவும் பாதிக்கப்பட்டது. திக்கற்ற சூழ்நிலையில் தான் இருக்கக்கண்ட தென்னகம், தனக்குப் பழக்கமில்லாத தொழில்களில் அடிமைகளை ஈடுபடுத்திடும் அவசியத்திற்குள்ளாகியது; நிலம் மற்றும் அடிமைகளின் மதிப்பு இதனால் கணிசமாகக் குறைந்தன. என்றாலும் 'வாணிபத் தடையின் விளைவுகளைத் தென்னாடு தீரத்துடன் எதிர்த்து நின்றது.' படைக்கருவிகள், மருந்துகள் போன்ற முக்கியப் பண்டங்களைத் தென்னகம் ஐரோப்பாவிலிருந்து வரவழைத்து மேற்கிந்தியத் தீவுகள் வழியே பெற்றுக்கொண்டது. மேற்கிந்தியத் தீவுகளிலிருந்து தென்னாடு நோக்கி சரக்கேற்றி வரும் கப்பல்கள் பலமுறை சூறையாடப்பட்டன; தென்னாடு இதனால் துவண்டு விடவில்லை. வாணிபத் தடையைத் துச்சமென நினைத்து வெற்றியுடன் சரக்குகளைக் கொண்டு வரும் கப்பல் கம்பெனிகளில் மாநில அரசுகள்கூட முதலீடு செய்தன. போர்க்காலத்தில் தென்னாட்டவர் கொடுத்த தகவல்களை நோக்கின், தென்னாட்டின் வாணிபம் யுத்தத்தின் மத்தியில் உண்மையில் சிறந்து விளங்கியது என்றே தெரிகிறது. ஆனால் ஒன்று ; நாட்டுப் பற்றைவிட இறக்குமதிகளிலிருந்து கூடுதலான இலாபத்தைப் பெறலாம் என்ற பணப்பற்றே மக்களிடம் மிகுந்திருந்தது. ஆகவே கான்ஃபெடரேட் அரசு 1864-ல் ஒரு சட்டத்தை இயற்றி, திராட்சை ரச வகைகள், சாராய வகைகள், விளையாட்டுப் பண்டங்கள், கம்பளித் துணிகள் என்பனபோன்ற ஆடம்பரப் பொருட்களின் இறக்குமதிகளைத் தடை செய்தது.

வாணிபத் தடையையும் மீறி, பருத்தி வெளி நாடுகளுக்கு எடுத்துச்செல்லப்பட்டது அல்லது கடத்திச்செல்லப்பட்டது; பருத்திக்குப் பதிலாகப் பொறிசெய் தொழில் பண்டங்களையும், பொன்னையும் தென்னகம் பெற்றுக்கொண்டது. இஃது இரும்பு வளையத்தின் கோரப்பிடியைச் சற்றுத் தளர்த்தியது; பொறிஆட்சித் தொழிற்

சாலைகள் தென்னாட்டில் மிகவும் குறைவாகவே இருந்து வந்தன; இவற்றையும் மத்திய அரசின் இராணுவம் அழித்துவிட்டது. போர் முள்வதற்கு முன்னர்வரை எந்திரங்கள், பொறிகள் ஆகியவை யெல்லாம் இறக்குமதி செய்யப்பட்டு வந்தன. தென்புலத்தின் நிலக்கரி மற்றும் இரும்புச் சுரங்கங்கள் தீண்டப்பெறுமல் இருந்து வந்தன. போர்க்காலத்தில் பெரும்பாலான தொழில்களை கான்ஃபெடரேட் அரசே பொறுப்பேற்று நடத்த வாரம்பித்தது. துப்பாக்கிகள், துப்பாக்கி மருந்து, சிறு போர்க் கருவிகள், வெடி மருந்துகள், விஸ்கி உப்பு முதலியவற்றைத் தயாரிக்கும் தொழிற்சாலைகளை கான்ஃபெடரேட் அரசு ஏற்று நடத்தியது. பெரும்பாலான தொழில்கள் இவ்வாறு சற்று முன்னேற முயன்ற நேரத்தில் கைத்தொழில்களும் புத்துயிர்பெற்றன. கைத்தறிகளும் நூல் நூற்கும் கதிர்களும் பயன்படுத்தப்படலாயின. தோட்டப் பொருளாதார முறையிலேயே இராணுவத்தினருக்கும், மற்றவர்களுக்கும் தேவையான காலணிகளும், உடைகளும் தயாரிக்கப்பெற்றன. 'பழக்கமில்லாத பணிகளை மேற்கொண்ட தென்னாட்டு மகளிரின் தியாகமும் கடின உழைப்பும் மிக உயர்ந்தவை; அவ்வாறே அடிமைகளின் பணியும் போற்றத் தகுந்தவை' என்று ஃபால்க்னர் புகழ்ந்துள்ளார். இல்லத் தொழில் உற்பத்தி முறைக்கு ஊக்கமளித்தது நாகரீக வளர்ச்சிக்கு ஊறு விளைவிப்பதாயிருந்தது என்றாலும், மூலதனம் தேவையான அளவில் கிடைக்கப்பெறாமையால் பேரளவுத் தொழில்களை அதிகமாகப் பெருக்கியதில் மிகுந்த சிரமங்கள் இருந்தன என்பதை நாம் மறந்து விடக்கூடாது. இருந்த செல்வத்தை நிலத்திலும் அடிமைகளை வாங்குவதிலும் தென்னாட்டவர் முடக்கிவிட்டிருந்தனர். மேலும் போர் நிகழ்ந்த ஆண்டுகளில் கையிலிருந்த ரொக்க முதலையும் வாணிபத் தடையை மீறிப் பண்டங்களைக் கப்பல்களில் கொண்டுவரும் தொழிலில் ஈடுபடுத்தினர். வாணிபத் தடையை மீறுவதில் மிகுந்த இலாபம் கிடைத்ததே இதற்குக் காரணம்.

### தென்னாட்டில் உணவுத் தட்டுப்பாடு

தென்னாட்டுத் தோட்ட முதலாளிகள் பருத்தியைவிட்டு உணவுப் பொருட்களையோ, இறைச்சியையோ உற்பத்தி செய்ய விரும்பியதில்லை. ஆனால் யுத்தம் சூடு பிடித்தபோது உணவுப் பயிர் வகைகளையும் இறைச்சியையும் உற்பத்தி செய்யவேண்டியது அவசியமாயிற்று. இதனால் தற்காலிகமாக ஒரு விவசாயப் புரட்சி ஏற்பட்டது. 1861ஆம் ஆண்டு முதல் ஒவ்வோர் ஆண்டிலும் உணவிற்குரிய பயிர் வகைகளின் விளைச்சல் பெருகிக்கொண்டேயிருந்தது. என்றாலும் ரொட்டி, இறைச்சி, பால் ஆகியவற்றின் விலைகள் அடுத்தடுத்து உயர்ந்தன. தென்னகத்தின் பல்வேறு பகுதிகளில் பல நேரங்களில் உணவுப் பொருட்கள் கிடைப்பது அரிதாயிற்று. உணவுத் தட்டுப்பாடு

1864-ல் மிகவும் கடுமையாயிற்று. அவ்வாண்டு பிப்ரவரித் திங்கள் 23ஆம் தேதி ஜே. பி. ஜோன்ஸ் (J. B. Jones) பின் வருமாறு குறிப்பிட்டார்: 'வளமான ஆண்டினை எதிர்நோக்கியுள்ளோம். கிடைத்தவற்றை வீணாக்காமல் துய்த்துவிட்டமையால் குப்பையோ கூளமோ சேர்வதில்லை.' உணவு கேட்டு அட்லாண்டா, மொபைல் போன்ற இடங்களில் கிளர்ச்சிகளும் ஆர்ப்பாட்டங்களும் நிகழ்ந்தன. இல்லாமையால் உணவுப் பண்டங்களில் கிடைப்பருமை ஏற்பட வில்லை. சரியான முறையில் விநியோகிக்கப்படாமையாலேயே உணவுத் தட்டுப்பாடு ஏற்பட்டது. ஏனெனில் யுத்த காலத்தில் விளைச்சல் எந்த வகையிலும் பாதிக்கப்படவில்லை. உணவுப் பண்டங் களைச் சரியான முறையில் விநியோகிப்பதற்கான விதத்தில் இருப்புப் பாதைகள் பயன்படுத்தப் பெறவில்லை. மேலும் தென்னாட்டு இரயில் பாதைகளின் பெரும்பகுதியை யூனியன் படையினர் ஆக்கிரமித்துக் கொண்டமையால் உணவுப் பண்டங்களின் அளிப்பும் விநியோகமும் பாதிக்கப்பட்டன. ஜார்ஜியாவில் சுமார் 60 மைல் பரப்பளவை ஷெர்மன் அழித்துவிட்டதாலும், ஷெனந்தோவா (Shenandoah) பள்ளத்தாக்கினை ஷெரிடன் பாழ்படுத்தியதாலும் தென்னகத்தின் நிலை மேலும் மோசமாகி, உணவுப் பண்டங்களின் கிடைப்பருமை தீவிரமடைந்தது.

## தென்னாட்டு நிதிநிலைமையில் மாறுதல்

போரினால் தென்னகத்தின் நிதிநிலைமை பெரிதும் பாதிக்கப் பட்டது என்பது உண்மை. போர் மூண்ட நேரத்தில் தென்மாநில அரசுகள் வடபுலத்திற்கும் ஐரோப்பாவிற்கும் கடன்பட்டிருந்தன. எனவே அயல்நாடுகளிடமிருந்து கடன் பெறுவது என்பது தென் பகுதிக்கு இயலாத செயல். தென்னாட்டில் கைவசமிருந்த மூலதனம் மிகவும் குறைவே. உலோக நாணயங்கள் சிறிதளவு இருந்துவந்தன என்றாலும், அரசு அவற்றைக் கைப்பற்றுவது என்பது மிகவும் சிரமம். வரி விதிப்பதோடு நில்லாது, பத்திரங்களை வெளியிட்டும் கருவூல நோட்டுகளின்மூலம் ஆணைச் செலாவணிகளை வெளியிட்டும் கான் பெடரேட் அரசு நிலைமையை ஓரளவிற்குச் சமாளித்தது. புரட்சி அரசின் உத்தரவாதம் ஒன்றையே சார்ந்திருந்த கருவூல நோட்டு களின் மதிப்பு நாளடைவில் படிப்படியாகக் குறைந்தது. உடனே அரசு 1864ஆம் ஆண்டு ஒரு சட்டத்தை இயற்றி, கருவூல நோட்டுகளை நான்கு சதவிகிதம் வட்டியுள்ள பத்திரங்களாகக் கட்டாயமாக நிதிப்படுத்திக் கொள்ளவேண்டும், அல்லது, நூறு டாலர் மதிப்புக் குக் குறைவாயுள்ள நோட்டுகள் அனைத்தையும் மூன்று டாலர் மதிப்புள்ள பழைய நோட்டுகளுக்கு இரண்டு டாலர் மதிப்புள்ள புதிய நோட்டுகள் என்ற விகிதத்தில் மாற்றிக்கொள்ள வேண்டும்

என்று கூறியது. நாணயத்தின் மதிப்பு தாழ்ந்து கிடந்தமையால் விலைவாசிகள் மிகவும் உயர்ந்திருந்தன. ஒரு நண்பர் கூறியதாக ஜி. சி. எகிள்ஸ்டன் (G. C. Eggleston) 'போருக்கு முன்னர் என்னுடைய பையில் பணத்தை எடுத்துச் சென்று அங்காடியிலிருந்து கூடை நிறைய பண்டங்களை வாங்கி வருவேன். தற்போது கூடையில் பணத்தை எடுத்துச் சென்று பண்டங்களைப் பையில் வாங்கி வருகிறேன்.' என்று குறிப்பிட்டுள்ளார். கருவூல நோட்டுகள் அத்துமீறி வெளியிடப் பெற்றமையால் உருவான நிலை இது. போரின் இறுதிக் கட்டங்களில் மக்கள் பழைய பண்டமாற்று முறையைப் பின்பற்றலாயினர். அடுத்து மாநில அரசும், மாநகராட்சியினரும், நகராட்சியினரும் காகிதத்தையே நாணயமாக வெளியிடத் தொடங்கவே நிதிநிலைமை மேலும் கேடுற்றது. திருத்தியமைக்க முடியாத அளவிற்கு நிதிநிலைமை கெட்டுவிட்டது என்றுணர்ந்த கான்ஃபெடரேட் காங்கிரஸ், 1863-ல் ஒரு சட்டத்தை இயற்றி, விவசாயப் பொருட்களின் பத்தில் ஒரு பகுதியை வரியாக வசூலித்தது; அதோடு சிலவகை சொத்தினங்களைக் கைப்பற்றுமாறு இராணுவ அதிகாரிகளுக்கு ஆணை பிறப்பித்தது. உலோக நாணயம் கைவசம் இல்லாமையாலும், காகிதப் பணம் மதிப்பிழந்து போனமையாலும், அயல்நாட்டு வாணிபம் துண்டிக்கப்பட்டமையாலும் விவசாயப் பண்டங்கள்மீது வரி விதிக்கும் கட்டாயச் சூழ்நிலை தென்னகத்துக்கு ஏற்பட்டது எனலாம். குடிமக்கள் தாமாகவே விரும்பி வழங்கிய விவசாயப் பொருட்களைக் கொண்டும், அரசு வன்முறையில் கைப்பற்றிய பண்டங்களைக் கொண்டும் தென்னாடு போரின் கடைசி இரண்டாண்டுகளில் தமது பொருளாதார பலத்தை வளர்த்துக்கொண்டு போரிட்டது.

உள்நாட்டுப் போர் வடநாட்டையும் தென்னாட்டையும் எவ்வெவ்வாறு பாதித்தது என்பதைப்பற்றி இதுவரை விரிவாகக் கண்டோம். வடநாட்டில் ஏற்பட்ட விளைவுக்கு முற்றிலும் நேர் மாறான விளைவு தென்னாட்டில் ஏற்பட்டது. போரின் விளைவால் தென்னகத்தில் வர்த்தகப் பெருக்கமோ, நிதிச் செழிப்போ, புதிய முன்னேற்றமோ உருவாகவில்லை. தென்னாட்டுப் பொருளாதாரத்தைப் பொறுத்த வரையில் உள்நாட்டுப் போர் அழிவையும் குழப்பத்தையும் குறித்தது. வடநாட்டில் போரின் விளைவாகத் தொழிற் புரட்சி வேரூன்றியது. வர்த்தகம் பெருகியது. தொழில் முன்னேறியது. தொழில் வளர்ச்சி மூலமாக முதலாளித்துவம் தழைத்தது. 'ஐக்கிய அமெரிக்க நாட்டின் பொருளாதார சரித்திரத்தில் உள்நாட்டுப் போருக்கு உயர்ந்த முக்கியத்துவம் உண்டு. தென்னாட்டில் அப்போரினால் அடிமை முறை மறைந்தது.' ஃபால்க்னர்.

# 5. விவசாயப் புரட்சி
## (The Agrarian Revolution)

1860 முதல் 1910 வரை அமெரிக்க நாட்டில் விவசாயப் புரட்சி நிகழ்ந்தது. இப்புரட்சியின்போது வேளாண்மை எந்திரங்களும் விஞ்ஞான உற்பத்தி முறைகளும் நடைமுறைக்கு வந்தன; அரசு, வேளாண்மை வளர்ச்சிமீது கூடுதலான ஆர்வம் காட்டவாரம்பித்தது. 1860-ல் நாட்டில் இருந்த விவசாயப் பண்ணைகளின் எண்ணிக்கை 2,000,000; இது 1910-ல் 6,000,000 ஆக உயர்ந்தது. இந்த அரை நூற்றாண்டில் ஏறக்குறைய 500,000,000 ஏக்கர் புதிய நிலங்கள் சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளப்பட்டன; இதன்மூலமாக இலட்சக் கணக்கான மக்களுக்கு உணவும் இருப்பிடமும் கிடைத்தன. விவசாயப் புரட்சி நடைபெற்ற காலப் பகுதியில் சிறந்த நீர்ப்பாசனத் திட்டங்கள் அமல் செய்யப்பெற்றன; போக்குவரத்து வசதிகள் நன்கு பெருகின; விதவிதமான பண்ணைக் கருவிகள் பழக்கத்திற்கு வந்தன. விவசாயிகளின் பொருளாதார நிலை கணிசமாக முன்னேறியது. கிராமப்புற வாழ்க்கை திருப்திகரமாக அமைந்தது.

### பண்ணைகள் இயந்திரமயமாதல்

*அறுவடை இயந்திரங்கள் :* பேரளவுப் பண்ணைகளும், தொழிலாளர் கிடைப்பருமையுமே பண்ணைகளில் எந்திர ஆட்சி வளர்ச்சியுற முக்கியக் காரணங்களாக இருந்தன. கலப்பை, அறுவடை செய்யும் கருவி, கதிரடிக்கும் எந்திரம் முதலியவற்றில் ஏற்பட்ட பல முக்கிய முன்னேற்றங்கள், வேளாண்மையில் அவை பெரிதும் பயன்பட முடியும் என்ற உண்மையை 1860க்கு முன்னரே தெரிவித்தன. என்றாலும் உள்நாட்டுப் போர் காரணமாகவே அக்கருவிகள் பெருவாரியான உபயோகத்திற்கு வந்தன. ஒரு பெரிய படையை மத்திய அரசு திரட்டிய நேரத்தில், விவசாயத்திற்குத் தொழிலாளர் கிடைக்காது போனதால் பண்ணை அதிபர்கள் உழைப்புச் சேமிப்புக்

கருவிகளைப் பயன்படுத்தத் தொடங்கினர். மேலும் அவ்வாண்டு களில் விவசாயத்திற்குப் பயன்பட்டுவந்த நிலப்பகுதி அளவில் பெரியதாய் இருந்துவந்தமையால், பண்ணைக்குரிய கருவிகள் வேக மாக உபயோகத்திற்கு வந்தன. எனவே, 'இயந்திரமுறை உபயோ கத்தைப் பொறுத்தவரையில், அமெரிக்காவில் விவசாயப் புரட்சி 1860ஆம் ஆண்டிற்குப் பிறகு அரை நூற்றாண்டில் தோன்றியது எனக் கூறுவது பொருத்தமே.' மத்திய மேற்குப் பகுதிகளில் நிலவிய தட்ப வெப்ப நிலை காரணமாக, கோதுமைப் பயிர் முற்றியவுடன் அதனை விரைவாக அறுவடை செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டது; பயிர் பாழாவதற்கு முன் விவசாயி எந்த அளவுக்கு அறுவடை செய்துகொள்ள முடியும் என்பதைப் பொறுத்தே பயிரிடுவதன் அளவு அமைந்திருந்தது. எனவே, அறுவடையைத் துரிதப்படுத்துவதற் குரிய வழிமுறைகளைக் கண்டுபிடிப்பதில் கண்டுபிடிப்பாளர்கள் கவனம் செலுத்தினர். 1858ஆம் ஆண்டில் 'மார்ஷ் ஹார்வெஸ்டர்' (Marsh Harvester) என்ற அறுவடை எந்திரம் உபயோகத்திற்கு வந்தது. ஒரு குறிப்பிட்ட நேரத்தில் இரு மடங்குப் பயிரினை அந்த எந்திரம் அறுவடை செய்யும். அடுத்து 'ட்வைன் பைண்டர்' (Twine Binder) என்ற கருவியை ஜான் எஃப் ஆப்பிள்பை (John F. Appleby) என்பார் 1878-ல் கண்டுபிடித்தார். இக் கருவி அறுவடையை மிகவும் துரிதமாகச் செய்வதற்கும் உதவியது. 'தானிய உற்பத்திப் பெருக்கத்திற்கு, குறிப்பாக கோதுமை உற்பத்திப் பெருக்கத்திற்கு ட்வைன் பைண்டரே வேறு எந்த எந்திரத்தையும்விட முக்கியக் காரணமாக அமைந்தது' என்று பேராசிரியர் கார்வர் அவர்கள் குறிப்பிட்டார். இந்த எந்திரம் காரணமாக நாட்டின் தலை வீத கோதுமை உற்பத்தி 5.6 புஷல்களிலிருந்து (1860) 9.2 புஷல்களுக்கு 1880-ல் உயர்ந்தது என்பது இங்கே நினைவு கூரத்தக்கதாகும். ட்வைன் பைண்டரை யடுத்து 'பண்டில் கேரியர்' (Bundle Carrier) என்ற கட்டுத் தூக்குக் கருவியும், 'கம்பைன்ஸ்' (Combines) என்ற எந்திரமும் உபயோகத்திற்கு வந்தன. குதிரைகள் அல்லது டிராக்டர்களால் இயக்கப்பட்டுவந்த இந்த 'கம்பைன்ஸ்' எந்திரம், தானியக் கதிர்களை அறுத்துப் போரடித்துத் தூய்மைப்படுத்தி, கோணிப் பைகளில் அடைத்து, நிறுத்திவிடும் இயல்பைப் பெற் றிருந்தது.

### மற்ற கருவிகள்

அறுபடை எந்திரங்களைத் தொடர்ந்து, பயிரிடுவதற்கும் உழுவதற்கும் உதவக்கூடிய கருவிகள் பழக்கத்திற்கு வந்தன. 'ஸ்ட்ராடில்-ரோ கல்டிவேட்டர் (Straddle-row Cultivator) என்ற அகன்ற வரிசை உழவுக் கருவியும், சல்கி ப்ளவ் (Sulky Plow) என்ற

கலப்பையும், ஒரே நேரத்தில் விதைத்து, மூடி, வளனுறச் செய்யும் 'சீடர்' (Seeder) என்ற விதை விதைக்கும் கருவியும் பண்ணைகளில் பயன்படுத்தப் பெறலாயின. நிலத்தை நன்கு உழுது விதை விதைக்கும் (Lister) என்ற மற்றொரு கருவி 1880-ல் உபயோகத்திற்கு வந்தது. அடுத்து புல்லறுக்கும் பொறியும், பாரமேற்றவும், வைக்கோற்போர் குவிக்கவும், கட்டுக் கட்டவும் வேண்டிய எந்திரங்களும் பழக்கத்திற்கு வந்தன. கைகளின்மூலம் உமி நீக்கும் முறை மறைந்து, பொறிகள் மூலம் உமி நீக்கும் முறை 1850-ல் தோன்றியது. பண்ணை எந்திரங்களுக்கு 1910-ல் காசோலின் (Gasoline) எஞ்சின் பொருத்தப்பட்டது அக்காலத்தில் நடந்த ஒரு முக்கிய நிகழ்ச்சியாகும். இந்த எஞ்சின் ஆனது, நீராவி அல்லது குதிரை சக்தியைவிடப் பன்மடங்கு உயர்ந்தது; எனவே இது பழக்கத்திற்கு வந்தவுடன் அவை சுவடு தெரியாமல் மறைந்தன. காசோலின் வண்டியையும், உல்லாசக் காரையும் பயன்படுத்திக் கொள்வதன் மூலம் நகர வாழ்க்கையில் இரண்டறக் கலக்கவும், கொள்முதல் செய்யவும் முடிகின்ற நிலையினை விவசாயிகள் அடைந்தனர். விவசாயத்தைப் பால் பண்ணைக்கு உபயோகப்படுத்திக் கொள்ளவும் விவசாயிகள் தெரிந்துகொண்டனர். பால் பிரித்தெடுக்கும் கருவி, வெண்ணெய் எடுக்கும் கருவி, சுத்தப்படுத்தும் கருவி ஆகியவை மின் சக்தியைக்கொண்டு இயக்கப்பட்டன. இதனைத் தொடர்ந்து பல பண்ணை விவசாய எந்திரங்கள் மின்சாரத்தைக்கொண்டு இயங்கலாயின. பண்ணைகளில் உபயோகப்படுத்தப்பெற்று வந்த மின் சக்தி அளவு 1900 - 1935 காலப் பகுதியில் எட்டு மடங்காகப் பெருகியது.

### விளைவுகள்

பண்ணைகளில் இயந்திரங்கள் ஆளப்பட்டு வந்ததன் விளைவாக பண்ணைத் தொழிலாளரின் ஆக்கத்திறன் 400 சதவிகிதம் உயர்ந்தது எனலாம். ஆக்கத்திறன் அதிகரிப்பால் செல்வம் பெருகியது. செல்வம் பெருகியதால் விவசாயிகளின் பொருளாதார நிலை உயர்ந்தது. என்றாலும், இயந்திரமயமாதல் விளைவாகச் செல்வத்தின் பெரும்பகுதி நில உடைமையாளர்களின் கரங்களில் முடங்கிடும் நிலையும் உருவாயிற்று என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. இந்நில உடைமையாளர்கள் தமது பண்ணைகளில் விலை உயர்ந்த இயந்திரங்களை ஆளத் தொடங்கினர். ஏழ்மை நிலையிலிருந்து வந்த சின்னஞ்சிறு விவசாயிகளால் இவ்வாறு இயந்திரங்களை வாங்கவோ அல்லது பயன்படுத்தவோ முடியவில்லை. எனவே குத்தகைக்குச் சாகுபடி செய்பவர்களாகவோ அல்லது விவசாயத் தொழிலாளர்களாகவோ இவர்கள் மாறினர். இவ்வாறாக விவசாயப் புரட்சியின் விளைவாக அமெரிக்க நாட்டில் நிலமற்ற விவசாயத் தொழிலாளர் வர்க்க

மொன்று உருவாகியது ஒரு துரதிருஷ்ட வசமான நிகழ்ச்சியாகும். பண்ணைகளில் இயந்திரங்கள் ஆளப்பட்டமையால் ஏற்பட்ட மற்ற விளைவுகள்: விவசாயப் பொருட்களின் உற்பத்தி பெருகிற்று; பண்ணை வாழ்க்கையிலிருந்து வந்த சலிப்புணர்ச்சி மறைந்தது; குதிரைத் தீவனத்தை உற்பத்தி செய்வதற்குப் பயன்பட்டுவந்த நிலங்கள் வேறு உபயோகங்களுக்கும் பயன்படுத்தப்பெற்றன; நில உடைமையாளர்களின் உண்மை வருமானம் பெருகிற்று; நிலமற்ற விவசாயத் தொழிலாளர் எண்ணிக்கை வளர்ந்தது; 1918ஆம் ஆண்டு முதல் விவசாயப் பண்டங்களின் உற்பத்தி அமோகமாகப் பெருகியது.

### அறிவியல்முறை வேளாண்மை வளர்ச்சி

*பல்வேறு கழகங்களின் பணி:* அமெரிக்க நாட்டில் விஞ்ஞான விவசாய முறையை வளர்ப்பதற்குப் பாடுபட்டவர்களில் வாஷிங்டன், ஜெஃபர்சன், லிவிங்ஸ்டன் ஆகியோர் குறிப்பிடத் தகுந்தோராவர். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிப் பகுதியில்தான் விஞ்ஞான முறை விவசாயத்தைப் பேணுவதில் மக்கள் ஆர்வம் காட்டினர். இவ்வார்வம் பெருகுவதற்கான சூழ்நிலைகளும் அப்போதுதான் நாட்டில் நிலவின எனலாம். போக்குவரத்து வசதிகள் பெருகி அங்காடிகள் விரிந்திருந்தன. விவசாயத்தில் கிடைத்திடும் இலாபங்கள் பெருகின. காலி நிலங்கள் மறைந்தன. விஞ்ஞான முறை விவசாயத்தை வளர்த்திடும் வகையில் செய்தித் தாள்களும், விவசாயக் கழகங்களும் செயல்பட்டன. விஞ்ஞான ரீதியில் விவசாயம் நடைபெறுவதற்கான சூழ்நிலைகளை உருவாக்குவதற்கு அரசும் தன்னாலியன்ற உதவிகளைத் தர முன் வந்தது. விஞ்ஞான விவசாயக் கல்வி மற்றும் ஆராய்ச்சி நடைபெறுவதற்கும், விவசாயிகளுக்குச் சட்டப் பாதுகாப்பினை வழங்குவதற்கும், காலி நிலங்களைச் சாகுபடி செய்வதற்கும், நீர்ப்பாசன வசதிகளைப் பெருக்குவதற்கும் உரிய நடவடிக்கைகளை அரசு உற்சாகத்துடன் மேற்கொண்டது. வேளாண்மைத் துறைகளின்மூலம் விவசாயப் பள்ளிகளும், பரிசோதனை நிலையங்களும் வளர்க்கப் பெற்றன. விவசாயத்தைப்பற்றிய செய்திகளைப் பரப்பி, புதிய, தரமுள்ள விதைகளையும் செடிகளையும் மக்களுக்கு வழங்கிப் பிரச்சாரம் செய்யும் ஒரு கழகம் அமைக்கப்பெற்றது. கால்நடைத் தொழிற் கழகம் (Bureau of Animal Industry), இறைச்சியைக் கண்காணிக்கும் பணியையும், தொற்றுநோய் பரவுதலைத் தடுக்கும் பணியையும் மேற்கொண்டது. கால்நடைகளிடையே பரவக்கூடிய கொடிய நோய்களைத் தடுப்பதற்கு இக்கழகம் ஆற்றிய பணி மகத்தானதாகும். பயிர்த்தொழிற் கழகம் (Bureau of Plant

Industry), செடிகளிடையே பரவக்கூடிய நோய்களைத் தடுத்தது. மேலும், சிறந்த விவசாய உற்பத்தி முறைகளைப்பற்றி ஆராய்ச்சி செய்தல், நிலத்திற்கேற்ற பயிர் வகைகளைத் தயார் செய்தல், விதைகளைப் பகிர்ந்தளித்தல் ஆகிய பணிகளிலும் இக் கழகம் தன்னை ஈடுபடுத்திக்கொண்டது. 34,000க்கு மேற்பட்ட புதிய பயிர் வகைகளை இக் கழகம் நாட்டிற்கு அறிமுகப்படுத்தியது. செடிகளைக் கொல்லும் பூச்சிகளைப்பற்றி ஆராய்ச்சி செய்து, பூச்சிப் பொட்டுக் களைக் களைந்தெறியும் நடவடிக்கையில் மற்றொரு கழகம் ஈடுபட்டது. வேளாண்மை வேதியியல் மற்றும் பொறிஇயல் கழகம் (Bureau of Agricultural Chemistry and Engineering) ஆனது மண் மற்றும் உரங்களிலுள்ள இரசாயன பௌதிகக் கூறுகளை ஆராய்வதிலும், பண்ணைக்குரிய இயந்திரங்களைப்பற்றி ஆராய்ச்சி செய்வதிலும் கவனம் செலுத்தியது.

### விவசாயக் கல்வியும் ஆராய்ச்சியும்

விவசாயக் கடன் வசதிகளைப் பெருக்குதல், விவசாயப் புள்ளி விவரங்களைச் சேகரித்து வெளியிடல், பால்பண்ணை வளர்ச்சி, வனப் பாதுகாப்பு ஆகியவற்றை ஏனைய கழகங்கள் நன்கு கவனித்துக் கொண்டன. விவசாயத்துறை தம்மிடம் உள்ள எல்லாப் பகுதி களிலும் நல்ல அக்கரை காட்டிப் பயன் மிகுந்த கருத்துரைகளை வழங்கியது. விவசாயத் துறையே அல்லாது வேறு பல துறைகளும் விவசாய வளர்ச்சிக்குரிய செயல்களில் ஈடுபட்டன. எடுத்துக் காட்டாக, வணிகத் துறையானது 1940 முதல் வானிலை ஆராய்ச்சி, தட்வெப்ப நிலை ஆராய்ச்சி, நிலநடுக்க ஆராய்ச்சி ஆகியவற்றில் ஈடுபடலாயிற்று. இவ்வாராய்ச்சிகளை முன்பெல்லாம் வேளாண்மைத் துறையே மேற்கொண்டிருந்தது. மத்திய அரசு மட்டும்தான் அறிவியல் முறை வேளாண்மை வளர்ச்சிக்கு உதவியது என்று நாம் நினைத்துவிடக்கூடாது. மாநில அரசுகளும் தம்மாலியன்ற உதவிகளை வழங்கிடத் தவறவில்லை. விவசாய வளர்ச்சிக்குரிய நிதி உதவிகளை மாநில அரசுகள் வழங்கின. விவசாயத் தொழிலுக்குப் பாதுகாப்புக் கொடுக்கும் முறையில் சட்டங்களை இயற்றின. சில விவசாயப் பண்டங்களின் உற்பத்தியை ஊக்குவிப்பதற்காக உதவித் தொகை களை அளித்தன. விவசாயக் கல்வியைப் பரப்புவதற்கு மத்திய மாநில அரசுகள் எடுத்துக்கொண்ட ஆர்வமும் அக்கரையும் போற்றத் தகுந்தனவாகும். ஹவாய், அலாஸ்கா போன்ற பல மாநிலங்களில் விவசாயப் பள்ளிகள் ஏற்பட்டன; கல்லூரிகளும் பல்கலைக் கழகங்களும் தோன்றின. விவசாயக் கல்லூரிகள் குறுங்காலப் பயிற்சித் திட்டத்தையும் விரிவாக்கல் பணியை (Extension work)யும் மேற் கொண்டன. விரிவாக்கல் பணித் திட்டம், கடிதப் போக்குவரத்து

மூலமும் மற்றும் வெளியீடுகள், பண்ணைப் பரிசோதனைகள் ஆகியவை மூலமும் பரப்பப்பட்டது. 1914-ல் காங்கிரஸ் இயற்றிய ஸ்மித்-லீவர் விரிவாக்கல் சட்டம் (Smith-Lever Extension Act) இவ் விரிவாக்கல் பணித் திட்டத்தைப் போற்றும் வகையில் அமைந்தது. இச் சட்டத்தின்கீழ் விரிவாக்கல் பணித் திட்டங்களுக்கென 480,000 டாலர்கள் மாநில அரசுகளுக்கு வழங்கப்பட்டன; பிறகு 600,000 டாலர்கள் கூடுதலாக அளிக்கப்பட்டது. இதற்கென ஆண்டுதோறும் 4,580,000 டாலர்களைச் செலவிடுவதென மத்திய அரசு முடிவெடுத்தது.

விவசாயச் செய்திகளைப் பரப்புதல், விவசாயப் பரிசோதனைகளை நடத்துதல் ஆகியவற்றோடு நின்றுவிடாது, விவசாயக் கல்வியை நாடெங்கும் பரப்புவதிலும் மத்திய அரசின் விவசாயத் துறை பேரார்வம் காட்டியது. பன்னிரண்டுக்குமேற்பட்ட இதழ்களை வெளியிட்டு விவசாயத்தோடு தொடர்பான செய்திகளை மக்களுக்கு வழங்கிட அது முயன்றது. இவ்விதழ்களில் 'வேளாண்மை ஆண்டு நூல்' (Yearbook of Agriculture) 'மாதாந்தர தானிய அறிக்கை' (Monthly Crop Reporter), 'வாராந்தரச் செய்திக் கடிதம்' (Weekly News Letter) 'வேளாண்மை ஆராய்ச்சிப் பத்திரிகை' (Journal of Agricultural Research) ஆகியவை குறிப்பிடத் தகுந்தவை. மத்திய அரசு விவசாயத் துறையைப்போலவே மாநில அரசு விவசாயத் துறைகளும் செயல்பட்டன. பயிர்கள் மற்றும் கால் நடைகள் வளர்ப்புப் பற்றி எடுத்துரைப்பதற்கான நூற்றுக் கணக்கான வேளாண்மைக் கழகங்கள் நாடெங்கும் தோன்றின. விவசாயச் செய்திகளைப் பரப்பிடுவதற்கென சற்றேறக் குறைய 500 பத்திரிகைகள் மாநிலங்களில் ஆரம்பிக்கப்பட்டன 1917-ல் இயற்றப்பட்ட ஸ்மித்-ஹியூஜெஸ் வேலை வாய்ப்புக் கல்விச் சட்டத்தின் (Smith-Hughes Vocational Education Act) கீழ், விவசாயப் பயிற்சிக்குத் தேவையான நிதி உதவி உயர்நிலைப் பள்ளிகளுக்கு வழங்கப்பட்டது. ரேடியோ மூலமும் விவசாயக் கல்விக்குரிய நிகழ்ச்சிகளை எடுத்துக்கூற மத்திய மாநில அரசுகள் முயன்றன. விவசாயச் செய்திகள் நன்கு பரவவே, அறிவியல் முறை வேளாண்மையில் விவசாயிகள் மிகுந்த ஆர்வம் காட்டினர்.

கனெக்டிகட்டில், மிடில் நகரில் உள்ள வெஸ்லியன் பல்கலைக் கழகத்தில் 1875ஆம் ஆண்டு முதல் விவசாயப் பரிசோதனை நிலையம் ஏற்படுத்தப்பெற்றது. 1887-ல் காங்கிரஸ் இயற்றிய ஹாட்ச் சட்டத்தின் (Hatch Act) கீழ் ஒவ்வொரு மாநிலத்திலும் பரிசோதனை நிலையம் தோற்றுவிக்கப்பெற்றது. அவ் வாராய்ச்சி நிலையங்களில் விஞ்ஞானிகள் தத்தம் துறையைச் சார்ந்த ஆராய்ச்சிகளில் ஈடுபட்டனர். அலபாமா ஆராய்ச்சி நிலையத்தில் பருத்திச் செடியின் நோய்கள்பற்றி

யும், பருத்தி வளர்ச்சி பற்றியும் பரிசோதனைகள் செய்யப்பெற்றன. ஃப்ளோரிடாவில் பைன் ஆப்பிளைப்பற்றிய ஆராய்ச்சிகள் நடந்தன. டேக்சாசில் கால் நடை வளர்ப்புப்பற்றிய ஆய்வுகள் செய்யப்பெற்றன. மின்னசோட்டாவில் கோதுமையில் நோய் பரவாமல் தடுக்கும் ஆராய்ச்சியும், லூயிசியானாவில் புது ரகக் கரும்பு உற்பத்தி பற்றிய ஆராய்ச்சியும் நடைபெற்றன. இத்தகைய ஆராய்ச்சிகளின் விளைவாக பயிர் வகைகளின் உற்பத்தி நன்கு பெருகியது.

### நீர்ப்பாசன வசதிகள்

அறிவியல் ரீதியான வேளாண்மை வளர்ச்சியுற்று வந்துகொண்டிருந்த நிலையில் விவசாயத்திற்குத் தேவையான நீர்ப்பாசனத் திட்டங்களைச் செயற்படுத்துவதில் அரசு மிகுந்த அக்கறை காட்டியது. 1902-ல் நிறைவேறிய நிலச் சாகுபடிச் சட்டத்தின்படி மத்திய அரசு நீர்ப்பாசனத் திட்டங்களை மேற்கொண்டது. குறிப்பிட்ட 16 மாநிலங்களில் பொது நில விற்பனையிலிருந்து கிடைத்த தொகையை நீர்ப்பாசனத்துக்கென ஒதுக்கி வைக்கவேண்டும் என அச்சட்டம் கூறியது. அரசின் நிலச் சாகுபடிக் கழகம் இருபதுக்கு மேற்பட்ட நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்றியது. இவற்றால் பல இலட்ச ஏக்கர் நிலங்கள் பாசன வசதிகளைப் பெற்றன. இந் நீர்ப்பாசனத் திட்டங்களில் குறிப்பிடத் தகுந்தவை: அரிசோனாவில் கட்டப்பெற்ற ரூஸ்வெல்ட் அணைக்கட்டு, இடாகோவில் (Idaho) நிறுவப்பெற்ற ஆரோராக் நீர்த்தேக்கம், நியூமெக்சிகோவில் நிர்மாணிக்கப்பட்ட எலிஃபண்ட் பட் அணை, வாஷிங்டனில் கட்டப்பெற்ற கிராண்ட் கொளவி அணைக்கட்டு, கொலராடோ நதிமீது எழுப்பப்பெற்ற போல்டர் நீர்த்தேக்கம் ஆகியவை. இவற்றில் கிராண்ட் கொளவி அணைத் திட்டம் ஒரு பிரம்மாண்டமான திட்டமாகும். இது 10,00,000 ஏக்கர் நிலங்களுக்குப் பாசன வசதிகளையளித்தது. மத்திய அரசு கட்டி முடித்த அணைக்கட்டுகளிடமிருந்து பாசன வசதிகள் மட்டும் அல்லாமல், மின்சக்தியும் கிடைத்தது. பாசன வசதியும் மின்சக்தியளிப்பும் பெருகியதைத் தொடர்ந்து அதிகப்படியான நிலங்கள் சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளப் பெற்றன.

### கடன் வசதிகள்

பண்ணைகள் இயந்திரமயமாயின. அறிவியல் முறை வேளாண்மை ஆல்போல் தழைத்தது. விவசாயக் கல்வி மற்றும் ஆராய்ச்சிகள் விதவிதமான முன்னேற்றங்களை அறிமுகப்படுத்தின. பாசன வசதிகள் பெருகின. விவசாய வேலைகளுக்கு மின்சக்தியைப் பயன்படுத்தும் பழக்கம் நாளுக்குநாள் அதிகரித்தது. என்றாலும் விவசாயிகளுக்குப் போதுமான கடன் வசதிகள் கிடைக்கவில்லை. கடன் வசதிகள் போத

வில்லையெனப் பல ஆண்டுகளாக விவசாயிகள் புகார் செய்துவந்த போதிலும் 1900ஆம் ஆண்டிற்குப் பிறகுதான் நிலைமை ஓரளவிற்குச் சீர்ப்பட்டது. அவ்வாண்டில் ரூஸ்வெல்ட் அவர்களால் நியமிக்கப் பட்ட நாட்டு வாழ்வுக் கமிஷன் (Country Life Commission) விவசாயி களுக்குரிய கடன் வசதிகளைப் பெருக்குவதன் அவசியத்தை மிகவும் வலியுறுத்தியது. கடன் வசதிகளைப் பெருக்குவதற்குப் பாடுபடுவ தென குடியரசுக் கட்சி, ஜனநாயகக் கட்சி, முன்னேற்றக் கட்சி ஆகியவை முடிவெடுத்தன, விவசாய வர்க்கத்தினருக்குக் கடன் வசதிகளை வழங்கிடும் முறையில் செயல்படும் அதிகாரம் ஃபெடரல் ரிசர்வ் திட்டத்திற்கு வழங்கப்பெற்றது. அடுத்து, பண்ணை அடையா ளங்கள்மீது தேசிய பாங்குகள் முதன்முதலாகக் கடன் வழங்க, ஃபெடரல் ரிசர்வ் சட்டம் அனுமதியளித்தது. மேலும், ஆறு மாதங் களுக்குரிய விவசாயப் பத்திரங்களை மறு கழிவு செய்ய ஃபெடரல் ரிசர்வ் பாங்கு முன் வந்தது. விவசாயிகளுக்குக் கடன் வசதிகளைத் தருதல் தொடர்பாக 1916ஆம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட ஃபெடரல் பண்ணைக் கடன் சட்டம் (Federal Farm Loan Act) இரு முக்கிய நோக்கங்களைக் கொண்டிருந்தது : (1) விவசாயிகளுக்குத் தேவை யான கடன் வசதிகளை எளிதாக வழங்குதல்; (2) விவசாயிகளுக்குக் குறைந்த வட்டிக்குக் கடன் கொடுத்தல். சுமார் 12 ஃபெடரல் நில பாங்குகளை நிறுவ இச் சட்டம் அனுமதியளித்தது. இப்பாங்குகள் விவசாயிகளுக்கு நேரிடையாக கடன்களைத் தரவில்லை. 'தேசியப் பண்ணைக் கடன் சங்கங்கள்' (National Farm Loan Association) என் றழைக்கப்படும் கூட்டுறவுக் கடன் வாங்கு குழுக்களுக்கு மட்டுமே மறு கழிவு வழங்கி வந்தன. இச்சங்கங்கள் குறைந்த பட்சம் 10 உறுப் பினர்களைக் கொண்டிருத்தல் வேண்டும்; குறைந்தது 20,000 டாலர் களையேனும் கடனுகக் கோருதல் வேண்டும். நில மதிப்பில் 50 சத விகிதம் வரை கடன்கள் அளிக்கப்படும். ஃபெடரல் நில பாங்குகளைப் போல் செயல்படக்கூடிய கூட்டுப் பங்கு நில பாங்குகளையும் (Joint-Stock land Banks) ஃபெடரல் பண்ணைக் கடன் சட்டம் ஏற்படுத்தி யது. இவை விவசாயிகளுக்கு நேரிடையாகக் கடன்களை வழங்கின. விவசாயிகளுக்கு நெடுங்காலக் கடன்களை வழங்குவதில் தேசிய பாங்கு களும் ஃபெடரல் நில பாங்குகளும், கூட்டுப் பங்கு நில பாங்குகளும் செய்த பணிகள் அமெரிக்க விவசாயத் தொழில் வளர்ச்சிக்கு நன்கு உதவி புரிந்தன.

விவசாயிகளுக்குத் தேவையான குறுங்காலக் கடன் வசதிகளைப் பெருக்குவதற்குரிய ஏற்பாடுகளை 1923ஆம் ஆண்டில் நிறைவேற்றப் பட்ட விவசாயக் கடன் சட்டம் (Agricultural Credits Act) செய்து கொடுத்தது. 12 ஃபெடரல் இடைநிலைக் கடன் பாங்குகளை (Federal Intermediate Credit Banks) இச் சட்டம் ஏற்படுத்தியது. இப்பாங்குகள்

நில அடமானத்தின்மீது நேரடியாகக் கடன் கொடுப்பதில்லை. மாறாக விவசாயப் பத்திரங்களுக்கும் கால் நடைப் பத்திரங்களுக்கும் மறு கழிவு வழங்கி வந்தன. அமெரிக்கக் கருவூலம் இந்த பாங்குகளுக்கு 5 மில்லியன் டாலர்களை மூலதனமாக வழங்கிற்று; குறுங் காலக் கடன்களாக இருந்தாலும் சரி, அல்லது நெடுங்காலக் கடன்களாக இருந்தாலும் சரி, அவற்றை நியாயமான வட்டிக்கு விவசாயி பெற விவசாயக் கடன் சட்டம் வழி வகுத்தது. இச் சட்டத்தின் மூலம் விவசாயி கொடுமையான வட்டி வீதங்களிலிருந்து விடுதலை பெற்றான்.

### விவசாயப் பண்ட ஏற்றுமதிகள்

இருபதாம் நூற்றாண்டு பிறந்தவுடன் அமெரிக்க விவசாயத்தில் புதிய சாதனைகள் தோன்றின. சாகுபடிக்கு எடுத்துக்கொள்ளப்படும் நிலப் பகுதியளவு மிகவும் பெருகியது. இதனால் காட்டுப் பகுதிகளையும் வளம் குன்றிய நிலங்களையும்கூட உழவுக்கு எடுத்துக்கொள்ளும் நிலை சில சமயங்களில் ஏற்பட்டது. தொழிற் றுறை உற்பத்தியைப் போல அல்லது சுரங்கத்தொழில் உற்பத்தியைப்போல விவசாய உற்பத்தி பெருகவில்லையென்றாலும், விவசாயத்தில் குறிப்பிடத் தகுந்த முன்னேற்றம் இருக்கவே செய்தது. இருபதாம் நூற்றாண்டின் துவக்கத்தில் விவசாய உற்பத்தியில் சில மாறுதல்கள் நிகழ்ந்தன. கோழிகள், முட்டைகள், எண்ணெய்ப் பயிர் வகைகள், சர்க்கரை, பழ வகைகள் ஆகியவை நன்கு பெருகின; இறைச்சி, கம்பளி, தானிய வகைகள் போன்றவை குறைந்தன. ஆனால் அமெரிக்க நாடு புகையிலை ஏற்றுமதியில் மிக முக்கிய நாடாக உருவெடுத்தது. புகை பிடிக்கும் பழக்கம் நாட்டினரிடையே நன்கு பெருகியமையால், உள் நாட்டுத் துய்ப்பு பெருகி, புகையிலை உற்பத்தி பெருகியது. 1897 முதல் 1914 வரை பருத்தி உற்பத்தியில் மிகப் பெரும் அதிகரிப்பு காணப்பட்டது. வெளி நாடுகளிடமிருந்து தமக்கு வேண்டிய சர்க்கரையில் ஐந்தில் நான்கு பங்கினை அமெரிக்கா தொடர்ந்து இறக்குமதி செய்துவந்த போதிலும் உள் நாட்டிலேயே சர்க்கரை உற்பத்தி பெருகிக்கொண்டிருந்தது. கரும்பு மூலம் கிடைத்த சர்க்கரையைவிட பீட் கிழங்கு மூலம் கிடைத்த சர்க்கரை மிகுதியாயிருந்தது.

உலகப் போர் நடந்த ஆண்டுகளில் நாட்டுப் பொருளாதாரம் செழிப்பான நிலையில் இருந்தது. பின்னர் பணவாட்டமும் பொருளாதார மந்தமும் நாட்டைச் சூழ்ந்தன. இதனால் நிலத்தின் மதிப்பு திடீரென உயர்ந்தது. பண்ணை நிலங்களின் மதிப்பும், தானிய விலைகளும் நான்கு மடங்கிற்கு அதிகமாகப் பெருகின. பண்ணைப் பண்டங்களின் விலைகள் மூன்று மடங்கு உயர்ந்தன.

பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியிலும், இருபதாம் நூற்றுண்டின் துவக்கத்திலும் மேற்கு ஐரோப்பாவின் மக்கள் தொகை விரைவாகப் பெருகிற்று. இதனுல் அமெரிக்க விவசாயிளுக்கு ஒரு நல்ல அங்காடி கிடைத்தது எனலாம். அங்காடியை நன்கு பயன்படுத்திக் கொள்ளும் முறையில் விவசாயிகள் தமது பண்டங்களின் உற்பத்தியைப் பெருக்கினர். விவசாய ஏற்றுமதி அக்காலத்தில் உச்ச கட்டத்திற்குத் தாவியது. 1860 முதல் விவசாய ஏற்றுமதி கணிசமாகப் பெருகிற்று. தானிய ஏற்றுமதிகள் 1897-ல் உயர்ந்தபட்சமாயிருந்தன; அவ்வாண்டில் சுமார் 212,000,000 புஷல் தானியங்கள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாயின. கோதுமை ஏற்றுமதிக்கு 1900 ஆம் ஆண்டு ஓர் அதிர்ஷ்ட ஆண்டாகும்; அவ்வாண்டில் 170,000,000, டாலர் மதிப்புள்ள கோதுமை ஏற்றுமதி செய்யப்பட்டது. ஐரோப்பிய சந்தைகளில் அமெரிக்க விவசாயப் பண்டங்களுக்குக் கிடைத்த வரவேற்பு காரணமாக ஏற்றுமதிகளில் ஏற்பட்ட அதிகரிப்புகளைப் பற்றுக் கோலாகக் கொண்டு அமெரிக்காவில் எல்லைப்புற முன்னேற்றமும் புது நிலச்சாகுபடியும், குடியேற்றமும், போக்குவரத்து வளர்ச்சியும், விரைவுபடுத்தப்பெற்றன. அமெரிக்காவுக்கும் ஐரோப்பாவுக்கு மிடையிலிருந்து வந்த பாதக வாணிபக் கொடுக்கல் நிலையை அமெரிக்க விவசாய உற்பத்திப் பெருக்கம் முற்றிலும் மாற்றியமைத்தது. மேலும், ஐரோப்பாவிலிருந்து பெருமளவு கடனைப் பெறும் சூழ்நிலையையும் உருவாக்கியது. இதன் மூலம் பொறிவழித் தொழில்கள் செழித்தோங்க வாரம்பித்தன.

## இடவாரி உழைப்புப் பகுப்பு

விவசாயப்புரட்சி நடந்த காலப்பகுதியில் நிகழ்ந்த மற்ருெரு முக்கிய சம்பவம் நாட்டின் பல பகுதிகள் தனித்தனி விவசாய உற்பத்திப் பிரிவுகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டமையாகும். இடாஹோ, நிவேதா, கொலராடோ. அரிசோனு நியூமெக்சிகோ ஆகிய பகுதிகள் கம்பளி மற்றும் கால்நடை வளர்ப்புத் தொழிலில் ஈடுபட்டன. வாஷிங்டன், ஒரேகான், கலிஃபோர்னியா ஆகியவை தானியம் மற்றும் பழ உற்பத்தித் தொழிலை வளர்த்தன; குறிப்பாக கலிஃபோர்னியா, நியூமெக்சிகோ, ஃப்ளோரிடா, டேக்சாஸ், அரிசோனு ஆகிய பகுதிகளில் சைட்ரஸ் பழ (Citrus Fruit) உற்பத்தி செழித்தோங்கியது. நியூ இங்கிலாந்து, மிச்சிகன், ஆயோவா, இல்லினுய்—இப் பிராந்தியங்களில் பால் பண்ணைகள் எழுந்தன. கான்சாஸ், வர்ஜீனியா, பென்சில்வேனியா ஆகிய இடங்களில் இறைச்சித் தயாரிப்புத் தொழில் வளர்ந்தது. டகோடாஸ், மின்னசோட்டா, விஸ்கான்சின், கிரேட் லேக்ஸ்—இவை கோதுமை உற்பத்தியில் முன்னுணியில் நின்றன. மிசிசிப்பி, டேக்சாஸ், ஓக்லஹாமா,

கரோலினு, ஜியார்ஜியா—இப் பகுதிகளில் பருத்தி உற்பத்தி பெருகியது. டேக்சாசிலும் டெனசியிலும் பருத்திக்கொட்டை ஆலைகள் தோன்றின; தென்னுட்டில் சுமார் 300 பருத்திக்கொட்டை ஆலைகள் ஏற்படுத்தப் பெற்றன,

*புதிய தொழில்களின் வளர்ச்சி*

பண்ணைகளில் இயந்திரங்கள் மிகுதியாக ஆளப்பட்டமையாலும், விவசாய உற்பத்தி அதிகரித்தமையாலும், பல புதிய தொழில்கள் நாட்டில் வளர்ந்தன. உதாரணமாகப் பண்ணை இயந்திர உற்பத்தித் தொழில், இறைச்சி கட்டுமானத் தொழில், பழப் பதனத் தொழில் முதலியவை பல இடங்களில் வேரூன்றின 1847 - ல் நிறுவப்பெற்ற மக்கார்மிக் (Mc Cormick) நிறுவனம் 1902 வரையில் விவசாய இயந்திரத் தயாரிப்பில் சிறந்து விளங்கியது. இந் நிறுவனத்தால் தயாரிக்கப்பெற்ற அறுவடை இயந்திரங்கள் மிகவும் பிரசித்தமானவை. துவக்கத்தில் சுமார் 200 நிறுவனங்கள் இயந்திரத் தயாரிப்புத் தொழிலில் ஈடுபட்டிருந்தன. பிறகு இவை 6 ஆகக் குறைந்து 1902-ல் ஒன்ருக இணைந்து இண்டர் நேஷனல் ஹார்வஸ்டர் கம்பெனியாக உருமாறின. நாட்டுக்குத் தேவையான 80 சதவிகித விவசாய இயந்திரங்களை இக் கம்பெனியே தயாரித்தளித்து வந்தது. இறைச்சி கட்டுமானத் (Meat Packing) தொழிலில் சிக்காகோ முக்கிய இடத்தை வகித்தது. பார வண்டிகளில் குளிர் காற்றைப் புகுத்தி இறைச்சியைக் கெடாமல் தூர இடங்களுக்கு எடுத்துச் செல்வதற்குச் செய்யப்பட்ட முயற்சிகள் வெற்றியளிக்கவே, கிழக்கத்திய அங்காடிகளுக்கு மாட்டிறைச்சியைச் சுவை கெடாமல் தருவது எளிதாயிற்று. இதன் விளைவாக இறைச்சி கட்டுமானத் தொழில் 1875—1890 காலப் பகுதியில் நன்கு வளர்ந்தது. பேரளவில் இயங்கி வந்த இத் தொழிலுக்குப் பல சிக்கனங்களும் கிட்டின; துணைப் பண்டங்களும் தயாரிக்கப்பட்டன. சோப்பு, ரசாயன உரம், பசை, கொழுப்பு மெழுகு ஆகியவை இறைச்சி கட்டுமானப் பேரளவுத் தொழில் மூலம் கிடைத்த துணைப் பண்டங்கள் ஆகும். 1890 ஆம் ஆண்டிற்குப் பிறகு ஓமஹா, செயின்ட் ஜோசப் (மிசௌரி) டல்லாஸ் (டேக்சாஸ்) போன்ற நகரங்கள் இறைச்சி கட்டுமானத் தொழிலில் புகுந்து புகழீட்டவாரம்பித்தன. பால் மற்றும் பழங்களை டின்களில் அடைத்து விற்கும் தொழில் மேரிலாந்து, கலிஃபோர்னியா மாநிலங்களில் தோன்றியது. 'ஐரோப்பாவில் உதயமான இத்தொழில் அமெரிக்காவில் தான் முழுமையாக வளர்ச்சியுற்றது. இத்தொழிலுக்கு உள்நாட்டுப்போர் ஊக்கமளித்தது' (ஜோன்ஸ்) டின்களில் பாலை அடைக்கும் முதல் தொழிற்சாலையை 1861-ல் நியூயார்க் நகரில் கெயில் பார்டன் (Gail Borden) ஆரம்பித்தார். உடனே

தொழிற்சாலையின் முழு உற்பத்தியையும் தமது இராணுவத்தினருக்கென மத்திய அரசு வாங்கிக்கொண்டுவிட்டது என்பது இங்கே குறிப்பிடத் தகுந்தது ஆகும். பாலே அல்லாது பழங்கள் மற்றும் காய்கறிகளையும் டின்களில் அடைத்திடும் தொழிற்சாலைகள் பல இடங்களில் ஆரம்பிக்கப்பெற்றன.

1870 வரையில் நியூயார்க், பென்சில் வேனியா, இல்லிஞய் ஆகிய மூன்று மாநிலங்கள் மட்டுமே மாவாலைகளைப் பொறுத்தவரையில் முக்கியமானவையாயிருந்து வந்தன. ஆனல் அதற்கடுத்த இருபதாண்டுகளில் மின்னசோட்டா மாவாலைகளுக்குப் பெயர் பெறலாயிற்று; புதிய மாவரைப்பு முறைகள் அங்கே மலர்ந்தன; வெளிநாட்டுச் சந்தைகளுக்கும் மாவு அனுப்பும் நிலைக்கு மின்னசோட்டா உயர்ந்தது. அடுத்து கான்சாஸ் டேக்சாஸ், ஒக்லஹாமா, நியூயார்க் ஆகியவற்றிலும் புதிய மாவாலைகள் தோன்றின, அமெரிக்க நாட்டின் மாபெரும் மாவரைப்புக் கேந்திரமாக பஃபலோ (Buffalo) நகரம் திகழவாரம்பித்தது.

விவசாயப் புரட்சியின் விளைவாக அமெரிக்க விவசாயிகள் பொருளாதாரத் தாழ்மை நிலையிலிருந்து விடுபட்டனர். பயனற்ற உற்பத்தி முறைகளைக் கைவிட்டனர்; ஒற்றைத்தானிய உற்பத்திப் பழக்கத்திற்கு விடைகொடுத்தனர். அதன் மூலம் நில அரிப்புத் தீமையை ஒழித்தனர். கவனமாக நிலங்களை உழுவதற்கும் சாகுபடி செய்வதற்கும் பழகிக் கொண்டனர். ஒரு இரசாயன உரம், இயந்திரங்கள், நீர்ப்பாசன வசதிகள் ஆகியவற்றைப் பயன்படுத்திக்கொள்ளும் ஆற்றலை வளர்த்துக்கொண்டனர். இதனல் விவசாயத்தில் வியத்தகு முன்னேற்றங்கள் உண்டாயின. உள் நாட்டுத்தொழில் வளர்ச்சிக்கு உதவிடும் முறையில் விவசாய உற்பத்தி பெருகி, ஏற்றுமதிகளை அதிகப்படுத்தி வாணிப வளர்ச்சிக்கு வழி வகுத்தது.

# 6. தொழிற் புரட்சி
## (The Industrial Revolution)

அமெரிக்கப் பொருளாதார வரலாற்றின் ஓர் ஒப்பற்ற நிகழ்ச்சி தொழிற் புரட்சியாகும். இப்புரட்சியின் காரணமாக அமெரிக்கப் பொருளாதார வாழ்வில் பல மாறுதல்கள் தோன்றின. தொழிலமைப்பு, உற்பத்திப் பெருக்கம், ஆக்க நுணுக்கம் - இவையத்தனையிலும் மாறுதல்கள் இழையோடின. போக்குவரத்து வசதிகள் பெருகி உற்பத்திக் காரணிகளின் பெயர்ச்சி கூடுதலாகி, நாடெங்கணும் சிறப்புத் தேர்ச்சி காலூன்றியது. பொருட்களைப் பெரும்பாலும் தமது வீடுகளிலேயே தயாரித்துவந்த உற்பத்தியாளர்கள் ஐரோப்பிய மாதிரியைப் பின்பற்றி தொழிற்சாலை முறையைப் பரப்பினர். விவசாயத்தைமட்டுமே பிரதானமாகக்கொண்டு நாட்களைக் கடத்தி வந்த மக்கள், தொழில்களை வளர்த்து நாட்டுக்குச் செல்வம் சேகரிக்கத் தொடங்கினர். பொறிசெய் பொருட்களின் மதிப்பு விவசாயப் பொருட்களின் மதிப்பைவிட இருமடங்கு மிகுதியாக இருக்கும் நிலை 1900-ல் தென்பட்டது. உண்மையில் 1860ஆம் ஆண்டு முதல் சுமார் அரை நூற்றுண்டு காலம் அமெரிக்கப் பொருளாதாரத்தில் புரட்சிகரமான மாறுதல்கள் நடந்தன. பொறிசெய் பண்டங்களின் உற்பத்தி 12 மடங்கு அதிகரித்தது; அவற்றின் மதிப்பு 8 படங்கு உயர்ந்தது.

### உற்பத்திப் பெருக்கம்

விடுதலைப் போர், 1812ஆம் ஆண்டுப் போர், உள்நாட்டுப் போர் ஆகியவை தொழிற் புரட்சிக்குத் தூண்டுகோல்களாக அமைந்தன. தொழிற் புரட்சியைத் தொடர்ந்து இயந்திரமயமாதலும், நகர்ப்புற வளர்ச்சியும் உண்டாயின. மேலும் சாலை, கால்வாய், மற்றும் ரயில் போக்குவரத்து பெருகி வாணிபம் செழிப்பு நிலை எய்தியது. 1859-லிருந்து 1919ஆம் ஆண்டுக்குள் அமெரிக்கப்

பொறிசெய் பண்டங்களின் மதிப்பு 33 மடங்கு உயர்ந்தது. மற்ற நாடுகளுடன் அமெரிக்காவை ஒப்பிடும்போது, அமெரிக்காவில் தொழிற் பெருக்கம் மிகவும் விரைவாக ஏற்பட்டது என்றே நமக்குப் படுகிறது. பொறிசெய் பண்ட உற்பத்தியில் 1840-ல் உலக நாடுகளுடன் ஐந்தாவது இடத்திலிருந்த அமெரிக்கா, 1860-ல் நான்காவது இடத்தையும், 1894-ல் முதலாவது இடத்தையும் அடைந்தது ஒரு புகழ்மிக்க சாதனையாகும். 1896-ல் இங்கிலாந்து நாட்டைப்போல் இருமடங்கு பொறிசெய் பண்டங்களையும், ஐரோப்பிய நாடுகளனைத்தின் மொத்த உற்பத்தியில் அரைப் பகுதியையும் அமெரிக்கா உற்பத்தி செய்தது. 1859ஆம் ஆண்டு அமெரிக்காவிலிருந்த தொழில் நிறுவனங்களின் எண்ணிக்கை 140; உற்பத்தியான பொருட்களின் மதிப்பு சுமார் 1886 மில்லியன் டாலர்கள்; கொடுக்கப்பட்ட கூலிகள் மதிப்பு 379 மில்லியன் டாலர்கள். 1909-ல் இருந்த தொழில் நிறுவனங்களின் எண்ணிக்கை 265; உற்பத்தியான பொருட்களின் மதிப்பு 20,068 மில்லியன் டாலர்கள்; கொடுக்கப்பெற்ற கூலிகளின் மதிப்பு 3210 மில்லியன் டாலர்கள். 1860-ல் உற்பத்தியான பூட்ஸுகள், ஆடைகள், மதுபானம், டிரசுரங்கள், பருத்திப் பொருட்கள் ஆகியவற்றின் மதிப்பு முறையே 91,889,000 டாலர்கள், 88,095,000 டாலர்கள், 56,588,000 டாலர்கள், 31,063,000 டாலர்கள், 115,026,000 டாலர்கள் ஆகும். 1914-ல் இவற்றின் மதிப்பு முறையே 501,760,000 டாலர்கள், 846,099,000 டாலர்கள், 442,149,000 டாலர்கள், 495,906,000 டாலர்கள், 676,569,000 டாலர்கள் ஆகும்.

1850-லிருந்து பொறிசெய் பொருட்களின் உற்பத்தி அதிகரித்தது என்றாலும், 1857-ல் ஏற்பட்ட வாணிப மந்த நிலைமை உற்பத்தியைச் சிறிது பாதித்தது. எனவே 1860-ஆம் ஆண்டிற்குப் பிறகுதான் அமெரிக்கப் பொருளாதாரத்தில் நிலையான வளர்ச்சி தோன்றியது. 1860ஆம் ஆண்டிலிருந்து 1870ஆம் ஆண்டிற்குள் தொழில் நிறுவனங்களின் எண்ணிக்கை 80 சதவிகிதம் உயர்ந்தது. ஆனால் 1873-ல் ஒரு சோதனை ஏற்பட்டது. அவ்வாண்டில் ஒரு பயங்கர பீதி உருவாகி, பொறிவழித் தொழில் வளர்ச்சியைத் தடுத்தது; அதோடு புதிய நிறுவனங்களின் தோற்றத்தையும் கெடுத்தது. ஆனால் சிறிது காலத்திற்குள் பொருளாதார வாழ்வில் மீட்சி அரும்பித் தொழில் வளர்ச்சிக்குப் பச்சைக்கொடி காட்டியது. 1880ஆம் ஆண்டில் தொடங்கிய பொருளாதார வளர்ச்சி 1909 வரை நீடித்தது. இருபதாம் நூற்றுண்டில் செய்யப்பட்ட உற்பத்தி, அதற்கு முன்னர் செய்யப்பெற்ற உற்பத்தியைவிடப் பன்மடங்கு மிகுதியானதாயிருந்தது. முதலீடுகள், கூலிகள், உற்பத்தி ஆகியவற்றில் வியத்தகு அதிகரிப்புக்கள் ஏற்பட்டன. உதாரணமாக, 1914 முதல் 1919 வரையில் தொழில் நிறுவனங்களின் மூலதனம் 95 சதவிகிதம் பெருகியது.

தொழிலாளர் கூலிகள் 158 சதவிகிதம் மிகுதியாயின; உற்பத்திப் பண்டங்களின் மதிப்பு 157 சதவிகிதம் கூடுதலாகியது. இரும்பு, எஃகுத் தொழில்கள் 1914-ல் நாட்டுத் தொழில்களுள் இரண்டாவது இடத்தைப் பெற்றன; வார்ப்படத் தொழில் மற்றும் இயந்திரத் தயாரிப்புத் தொழில் நான்காவது இடத்தைப் பிடித்தன. அதோடு, நாட்டின் முக்கிய முதல் பத்துத் தொழில்களுள் புதிய இரண்டு தொழில்கள்—மோட்டார் தயாரிப்பும், மோட்டார் போக்கு வரத்தும்—இடம் பெற்றன. தொழிற் புரட்சியின் ஒரு முக்கிய அம்சம் பொறிவழி ஆக்க (Manufacture) வளர்ச்சி. பொறி வழி யாக்கம் வளர்ந்ததால் பிறர் தயவு இன்றி வாழ்ந்திடும் நிலைக்கு அமெரிக்கா உயர்ந்தது. காலனி காலத்திலும், உள்நாட்டுப் போருக்கு முந்திய காலத்திலும் பொறி வழிப் பண்டங்களுக்கு ஐரோப்பிய நாடுகளை எதிர்பார்த்துக் கிடந்து வந்த அமெரிக்கா 1860க்குப் பிறகு தமக்கு வேண்டிய பொறிவழிப் பண்டங்களைத் தாமே துணிவோடும் ஆர்வத்தோடும் உற்பத்தி செய்தது. ஒரு சில கச்சாப் பொருட்களைத் தவிர மற்ற எல்லாக் கச்சாப் பொருட்களும் அமெரிக்காவிடம் இருந்து வந்தன. எனவே தேவையான பண்டங்கள் அவ்வளவையும் அமெரிக்கர்கள் தயாரித்தனர். இதில் அவர்களுக்கு நல்ல வெற்றியும் கிட்டியது.

### தொழிற்புரட்சிக்குக் காரணங்கள்

*சாதன அளிப்பு:* உற்பத்திப் பெருக்கத்திற்கு விடுதலைப் போரும், உள்நாட்டுப் போரும் ஊக்கத்தினை வழங்கின என்றாலும், தொழிற் புரட்சிக்கு வேறு சில அடிப்படைக் காரணங்களும் இருந்தன. இயற்கையன்னை அமெரிக்க நாட்டிற்கு உற்பத்திச் சாதனங்களை எல்லையற்ற அளவில் வழங்கியிருந்தாள். வேளாண்மை முன்னேற்றமும், கால்நடை வளர்ச்சியும், பொறிவழிப் பண்ட உற்பத்திப் பெருக்கத்திற்குத் துணை நின்றன. இரும்பு, எண்ணெய், நிலக்கரி, செம்பு ஆகியவை மிகுதியாகக் கிடைத்தன. ஆற்றல் மிக்க தொழிலாளர்களுக்கும் பஞ்சமில்லை. மக்கள் தொகை பெருகியதால் உள்நாட்டில் தேவைகள் அதிகரித்துப் பண்டங்களுக்கு வேண்டிய அங்காடிகள் போதிய அளவில் உருவாயின. உற்பத்தியான பொருட்களை அங்காடிகளுக்கு எடுத்துச் செல்வதற்கான போக்குவரத்து வசதிகளும் அமெரிக்காவில் நன்கு வளர்ந்திருந்தன. போக்குவரத்துக்குப் பயன்படும் ஆறுகள், ஏரிகள், சாலைகள் நாடெங்கும் காணப்பட்டன. இரயில்வே வளர்ச்சி, போக்குவரத்து வசதிகளில் ஒரு பெரிய முன்னேற்றமாய் அமைந்தது. மேலும் கால்வாய், மற்றும் மோட்டார் போக்குவரத்தும் விரைவில் பெருகின. போக்குவரத்து முன்னேற்றம் பொறிவழி ஆக்க முன்னேற்றத்தை எளிதாக்கிற்று.

## புதிய கண்டுபிடிப்புகள், புதிய தொழில்கள்

பத்தொன்பதாம் நூற்றுண்டில் புதிய கண்டுபிடிப்புகள் மலர்ந்தன. புதிய தொழில்கள் வளர்ந்தன. உதாரணமாக, போக்கு வரத்துச் சாதனங்களுக்குத் தேவையான கருவிகளைத் தயாரிக்கும் தொழிலும், தந்தி, வானொலி, தொலைபேசி, மின்விளக்கு, மோட்டார்கள், விமானங்கள் ஆகியவற்றிற்கான மின்சாரக் கருவிகளைத் தயாரிக்கும் தொழிலும் புதிதாகத் தொடங்கப்பெற்று துரிதமாக வளர்ந்தன. 1865 முதல் பல புதிய விஞ்ஞானக் கண்டுபிடிப்புகள் நாட்டில் அறிமுகமாயின. மிகுந்த தொலைவிலுள்ள இடங்களைத் தந்தி மற்றம் தொலை பேசி மூலம் இணைக்க உதவும் கம்பிச்சுருள் கருவியை மைக்கல் பப்பின் கண்டுபிடித்தார். ஆகாய விமான எந்திரத்தை மான்லி, ரைட் சகோதரர்கள் ஆகியோர் கண்டுபிடித்தனர். லியோ பேக்லாந்து (Leo Backeland) என்பார் செயற்கைக் குங்கிலியத்தைக் கண்டுபிடித்தார். ஜேம்ஸ் நார்த்ருப், ஜார்ஜ் டிரேப்பர் ஆகியோர் புதிய தறி ஒன்றைக் கண்டுபிடித்தனர். இவற்றைத் தவிர வேறு பல கண்டுபிடிப்புகளும் மக்களுக்கு அறிமுகமாயின. தாமஸ் எடிசன், அலெக்சாண்டர்சன், இர்விங் லாங்மூர், தாம்சன் போன்ற விஞ்ஞானிகள் சிறந்த ஆராய்ச்சிகளைச் செய்து பல புதிய விஞ்ஞான உண்மைகளைக் கண்டறிந்து வெளியிட்டு உற்பத்திப் பெருக்கத்திற்கு உதவி புரிந்தனர். அமெரிக்கத் தொழிலாளரின் கூலி உயர்வும், கவர்ச்சிகரமான புதிய விளம்பர முறைகளும் பண்டங்களின் விற்பனையைப் பன்மடங்கு பெருக்கின.

## அறிவியல் உற்பத்தி முறைகள் மற்றும் நிர்வாகம்

அமெரிக்கத் தொழிலகங்கள் அறிவியல் முறைகளை நன்கு பயன்படுத்திக்கொண்டன. தனிப்பட்ட விஞ்ஞானிகளின் ஆராய்ச்சிகளை எந்த ஒரு பெரிய நிறுவனமும் நம்பியிருக்கவில்லை. தமக்கு வேண்டிய ஆராய்ச்சி நிலையங்களை இவை தாமே ஏற்படுத்திக்கொண்டன. இவ்வாராய்ச்சி நிலையங்கள் அரசு ஆராய்ச்சி நிலையங்களைப்போலவே செயல்பட்டன. புதிய உற்பத்தி முறைகளையும் புதிய பண்டங்களையும் இவை கண்டுபிடித்தன. உழைப்பை அறிவியல் ரீதியில் பயன்படுத்திக் கொள்வதற்கான முயற்சிகளும் மேற்கொள்ளப்பட்டன. எஃப். டபுள்யு. டெய்லர் (F. W. Taylor) அவர்களது முயற்சியால், 'அறிவியல் நிர்வாகம்' (Scientific Management) அமெரிக்கத் தொழிற்சாலைகளில் அறிமுகமாகியது. தொழிற்சாலையிலிருக்கின்ற ஒரு வேலையை விரைவாகவும் திறமையாகவும் செய்யும் கலை அறிவியல் நிர்வாகத்தில் அடையப்பெற்றது. திறமை குறைந்தவர்களை நீக்கி, திறமை மிகுந்தவர்களுக்குப் போதுமான கூலியும் ஊக்கமும் அளித்தால் உற்பத்தி நன்கு பெருகும் என்பது நிருபிக்கப்

பட்டது. அறிவியல், நிர்வாகம் அறிமுகமான இடங்களிலெல்லாம் காலதாமதங்கள், சாதன விரயங்கள் ஆகியவை மறைந்தன. தொழிலாளர் ஆக்கத்திறன் உயர்ந்தது.

*தலையிடாக் கொள்கை*

அரசின் கொள்கையும் தொழில் வளர்ச்சிக்கு மிகவும் சாதகமாயிருந்தது என்பதை இங்கே சுட்டிக்காட்டுதல் அவசியமாகிறது. மிகுந்த சுங்க வரியை அரசினர் வசூலித்து வந்தனர். என்றாலும், 1930 ஆம் ஆண்டுவரை தலையிடாக் கொள்கையே பின்பற்றி வந்தனர். இக் கொள்கை தொழில் முயல்வோரிடையே தொழிற்றுணிவை ஏற்படுத்தி வளர்த்தது. 'நாட்டுத் தொழில்களைப் பாதுகாத்திடும் பாங்கையும், தடையற்ற வாணிபத்தையும் அரசு வெற்றிகரமாகப் பின்பற்றியதால்தான் அமெரிக்கா ஏனைய உலக நாடுகளைவிடச் சிறப்பாக முன்னேற முடிந்தது' என ப்ளெய்ன் (Blaine) குறிப்பிட்டது இங்கே நினைவுகூரத் தக்கது. சுதந்திரம் நிறைய வழங்கப்பட்டதால் தொழில் முயல்வோர்கள் தொழிற்சாலைகளை ஆரம்பிப்பதில் நல்ல அக்கறை காட்டினர். இவர்கள் விஞ்ஞானிகளாகவோ அல்லது தொழிலதிபர்களாகவோ இருக்கவில்லை. ஆனால் அவர்களிடம் அசாத்தியத் துணிவும் ஆற்றலும் எல்லையற்றிருந்தன. எஃகு உற்பத்தித் தொழிலில் ஆண்ட்ரு கார்னஜீ அவர்களும், இறைச்சி உற்பத்தித் துறையில் ஆர்மர் அவர்களும், எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிலில் ஜே. டி. ராக்ஃபெல்லர் அவர்களும் ஈடற்ற புகழை ஈட்டினர். இவர்கள் சின்னஞ்சிறு நிறுவனங்களையெல்லாம் ஒன்றாக இணைத்து, நிதி நிலைமைகளைப் பெருக்கி, விற்பனைத்திறனை அதிகப்படுத்தி, உற்பத்திச் செலவுகளைக் குறைத்து உன்னதப்பெரு நிறுவனங்கள் பலவற்றை உருவாக்கினர். தொழில் முயல்வோர்களைப் போல் தொழிலாளர்களும் திறம்பட உழைத்தனர். தமது சொந்த ஊர்களைவிட்டு வேலை கிடைக்கும் எந்த ஊர்களுக்கும் செல்லத் தயாராயிருந்தனர். பழைய உற்பத்தி முறைகளைவிட்டுப் புதிய உற்பத்தி முறைகளைத் தழுவுவதில் ஆர்வம் காட்டினர்.

*விடுதலைப் போரும் உள்நாட்டுப் போரும்*

நாட்டுப் பொருளாதார முன்னேற்றத்தில் அமெரிக்க விடுதலைப் புரட்சி ஒரு முக்கியமான கட்டம் ஆகும். புரட்சிக்கு முன்னர் ஒருசில பொறிவழிப் பண்டத் தொழில்களே அமெரிக்காவிலிருந்து வந்தன. எனவே, தமது தேவைகளுக்கு இங்கிலாந்து, ஐரோப்பா போன்ற நாடுகளிடமிருந்து வரும் இறக்குமதிகளையே அமெரிக்கர்கள் நம்பியிருந்தனர். விடுதலைப் போரின்போது பண்டங்களை இறக்குமதி செய்வதில் சங்கடங்கள் முளைத்தன. ஆகையால் உள்நாட்டுத்

தொழில்களை வளர்த்துத் தமக்குரிய பண்டங்களைத் தயாரிப்பதற்கு நாட்டு மக்கள் முனைந்தனர். வெளி நாடுகளிடமிருந்து இறக்குமதியாகும் பொருட்களை உள் நாட்டிலேயே தயாரிக்கும் முயற்சியில் அனைவரும் ஈடுபட்டனர். இதனால் தொழில் வளர்ச்சி ஓரளவிற்கு முன்னேற்ற மடைந்தது. விடுதலைப் போரைப்போல், உள்நாட்டுப் போரும் தொழில் முன்னேற்றத்திற்கு அடிகோலியது. விரைவான தொழில் முன்னேற்றத்திற்கு அது ஒரு முக்கியக் காரணம் எனலாம். உள்நாட்டுப்போர் நடந்த காலங்களில் இராணுவத்திற்கான வெடி மருந்துகள், படைக் கருவிகள் அதிகமாகத் தேவைப்பட்டன ; படை வீரர்களுக்கு உடைகளும் மிகுதியாகத் தேவைப்பட்டன; இத் தேவைகளை நிறைவேற்றுவதற்குப் பேரளவில் பண்டங்களைத் தயாரிப்பது அத்தியாவசியமாயிற்று. உடனே பொறிவழிப் பண்டத் தொழிற் சாலைகளை ஏற்படுத்தும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. வர்த்தகம், மற்றும் தொழில் நிறுவனங்களின் ஒருங்கிணைப்பும், கூட்டுத் தொழிலமைப்பின் வளர்ச்சியும் பேரளவுத் தொழில்களை உற்சாகப்படுத்தி, தொழில் முன்னேற்றத்திற்கு ஆதரவாயிருந்தன.

### தொழிற்புரட்சியின் அம்சங்கள், தொழிற்சாலை முறை

தொழிற்சாலை முறை (Factory System) அமெரிக்காவில் 1860ஆம் ஆண்டில் ஏற்பட்டது. தொழிற்சாலை முறை முதன் முதலாக நியூ இங்கிலாந்து, மற்றும் மத்திய அட்லாண்டிக் மாநிலங்களில் தோன்றியது. தெற்குப் பகுதியில் தொழிற்சாலை முறை ஏற்படுவதற்குத் தடையாயிருந்தவற்றில் போக்குவரத்து வசதிப் பற்றுக்குறை முக்கியமானது. நெசவு எந்திரங்களைத் தயாரிப்பதற்கு 1790-க்கு முன்பேயே முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்பெற்றன. ஆனால் சாமுவேல் ஸ்லேட்டர் என்ற பிரிட்டிஷ் இயந்திர நிபுணர் 1790-ல் அமெரிக்காவிற்கு வந்ததற்குப் பிறகு தான் அம் முயற்சிகள் வெற்றிபெற்றன. இங்கிலாந்தில் ஆர்க்ரைட் (Arkwright) அவர்களோடு பல ஆண்டுகள் பணிபுரிந்துவந்த ஸ்லேட்டர், நெசவுக்குரிய இயந்திர மாதிரிகளைத் தருவோருக்குப் பரிசு வழங்கப்போவதாக ஓர் அமெரிக்கக் கழகம் விளம்பரப்படுத்தியதைக் கேள்வியுற்று அமெரிக்காவிற்கு வந்து குடியேறினார். பிறகு வில்லியம் ஆமி, மோசஸ் ப்ரௌன் என்ற இரு செல்வந்தர்களுடன் ஓர் ஒப்பந்தத்தைச் செய்து கொண்டு, அவசியமான இயந்திரங்களைக்கொண்டு ஒரு நெசவுத் தொழிற்சாலையை நிறுவுவதில் ஈடுபட்டார். பிரிட்டிஷ் இயந்திரங்களின் பாணியில் தயாரிக்கப்பெற்ற இயந்திரங்களைக்கொண்டு, முதல் அமெரிக்க நெசவுத் தொழிற்சாலை ரோட் ஐலண்டில் உள்ள பாட்டக்கெட் (Pawtucket) என்ற இடத்தில் 1790-ல் உற்பத்திப் பணியை

மேற்கொண்டது. இதனைத் தொடர்ந்து பல பருத்தி ஆலைகள் பல இடங்களில் தோன்றின. அடுத்து, விட்னி அவர்களது கண்டுபிடிப்பான பருத்தி ஜின்(Cotton Gin)னும், சுங்கப் பாதுகாப்பும் பருத்தி ஆலைத் தொழில் வளர்ச்சிக்கு நல்ல தூண்டுகோல்களாக அமைந்தன. பருத்தி நெசவுத் தொழில் மிகவும் விரைவாக வளர்ந்தது. லவல், லாரன்ஸ், மாஞ்சஸ்டர் ஆகிய இடங்களில் ஆலைகள் தோன்றின. 19ஆம் நூற்றுண்டின் பிற்பகுதிக்குள் ஓராயிரத்திற்குமேற்பட்ட பஞ்சாலைகள் அமெரிக்காவில் தோன்றி விட்டன. 1860-ல் இவற்றிற்குச் சுமார் 430 மில்லியன் பவுண்டு கச்சாப் பருத்தி தேவைப்பட்டது. தொழிற்சாலை முறை திடமாக வளர்ந்தது; பழைய உற்பத்தி முறை மெல்ல மறைந்தது.

பருத்தி உற்பத்தியில் தொழிற்சாலை முறை தோன்றியதைப் போன்று கம்பளி உற்பத்தியிலும் தொழிற்சாலை முறை தோன்றியது. ஜான், ஆர்தர் ஷோபீல்டு (Arthur Scholfield) என்ற யார்க்ஷையர் சகோதரர்கள் அமெரிக்காவில் குடியேறி, கம்பளி ஆலைகளுக்குத் தேவையான இயந்திரங்கள் தயாரிக்கும் முறைகளை அமெரிக்கர்களுக்குத் தெரிவித்தனர். இவர்களது உதவியினுல் மாசசூசெட்சிலும், கனெக்டிகட்டிலும் கம்பளி ஆலைகள் எழும்பின. 1812ஆம் ஆண்டுப் போரின்போது கம்பளிப் பண்டங்களுக்கான தேவை மிகவும் பெருகியது. இது கம்பளி ஆலைகளுக்கு நல்ல உற்சாகத்தையளித்தது. கம்பளி ஆலைகள் மேன்மேலும் ஏற்படுத்தப்பெற்றன. போர் முடிந்த பிறகு கம்பளி உற்பத்தி பாதிக்கப்பட்டது. என்ருலும், 1830-க்குப் பிறகு கம்பளி உற்பத்தி சீராக வளர்ந்தது.

பொறிவழிப் பண்டத் தயாரிப்பிலும் தொழிற்சாலை முறை மெல்ல அடி எடுத்து வைத்தது. வார்ப்பு இரும்பைத் தயாரிப்பதில் மாபெரும் மாறுதல்கள் நிகழ்ந்தன. காலனி காலத்தில் கட்டைக் கரியைப் பயன்படுத்தி இரும்பை உருக்கி வந்தனர். எனவே, மரங்கள் ஏராளமாகக் கிடைக்கும் கிராமப்புறங்களில்தான் இரும்புத் தொழிலகங்கள் பெரும்பாலும் இருந்துவந்தன. 1885ஆம் ஆண்டில்தான் இரும்பை உருக்குவதற்கு நிலக்கரியை உபயோகிப்படுத்துவதற்கான முயற்சிகள் முதன்முதலாக எடுத்துக்கொள்ளப் பெற்றன. தொழிற்புரட்சியின் விளைவாக இரும்புப் பொருட்களுக்கான தேவை மிகவும் உயர்ந்தது. தேவைக்கேற்றவாறு உற்பத்தியைப் பெருக்குவதற்குத் தொழிலதிபர்கள் முயன்றபோது இரும்புத் தொழிலில் பல முக்கிய கண்டுபிடிப்புக்கள் செய்யப்பட்டன. இரும்பை உருக்குவதற்குப் புதிய முறைகள், தூய்மைப்படுத்துவதற்குப் புதிய உத்திகள் நடைமுறைக்கு வந்தன. பேரளவுத் தொழிற்சாலைகள் ஆங்காங்கு நிர்மாணிக்கப் பெற்றன. 1866-ல் ஒரு மில்லியனுக்கும் குறைவாக உற்பத்தி செய்த

அமெரிக்கா, 1917-ல் 43 மில்லியன் டன் இரும்பை உற்பத்தி செய்தது. அடுத்து மாவு, மரச்சாமான், தோல், ஷூ ஆகியவற்றைத் தயாரிக்கும் தொழிற்சாலைகள் நாடெங்கிலும் ஏற்படுத்தப்பெற்றன. 19ஆம் நூற்றூண்டின் மத்தியப் பகுதிக்குள் பெரும்பாலான பொருட்களுக்குத் தொழிற்சாலைகள் உண்டாகி விட்டன. தொழிற்சாலைகள் தோன்றியதனுல் தொழில் நகரங்கள் உண்டாயின. மக்கள் கிராமங்களை விட்டு இந்நகரங்களுக்குச் சென்று குடியேறினர். நகரங்களில் மக்கள் பெருக்கம் மிகுதியாகி வீட்டு வசதி, சுகாதாரம் ஆகியவற்ளேடு தொடர்பான பிரச்சினைகள் உருவாயின.

### பேரளவு உற்பத்தி

பேரளவு உற்பத்தியானது அமெரிக்கத் தொழிலின் ஒரு முக்கிய அம்சமாகத் திகழ்ந்தது. பேரளவு உற்பத்தி வழியே பொறிசெய் பொருள் உற்பத்தி ஜீவ நதியெனப் பெருக்கெடுத்தது. நுகர்ச்சிப் பொருட்களைவிட இயந்திரங்கள், கருவிகள் போன்ற முதற் பொருட்கள் பேரளவில் உற்பத்தி செய்யப்பெற்றன. நெடு நாட்களுக்குப் பயன்படும் பொருட்களே உற்பத்தியில் முக்கியத்துவம் பெற்றன. இவற்றில் முதற் கருவிப் பொருட்கள் பிரதானமாக இடம் பெற்றன. இயந்திர ஆட்சியையும் உற்பத்தியையும் அமெரிக்கர்கள் வரவேற்றதைப்போல் எந்த நாட்டினரும் வரவேற்றதில்லை. இயந்திரங்களையும், நெடுபயன் பொருள்களையும் பேரளவில் உற்பத்தி செய்யவே ஒவ்வோர் அமெரிக்க உற்பத்தியாளனும் விரும்பினன். ஏனென்றல் பேரளவில் உற்பத்தி செய்வதனுல் பல நன்மைகள் கிடைத்தன. ஹென்ரி ஃபோர்டு கூறினர்: 'பேரளவில் பண்டங்களைத் தயாரிப்பதனுல், ஏராளமான பொருட்களைத் துரிதமாக உற்பத்தி செய்யமுடியும். சரியாகவும், சிக்கனமாகவும், விரைவாகவும் பண்டங்களைத் தயாரிப்பது எளிது. இவ்வுற்பத்தி முறை பயன் மிகுந்ததாயும், உயர் ரகப் பொருட்களை வழங்குவதாயு மிருக்கிறது. குறைந்த செலவில் நேர்த்தியான பண்டங்களைப் பெறமுடிகிறது.' பேரளவு உற்பத்தி முறை அமெரிக்கர்களுக்குப் புதிதன்று. 1790ஆம் ஆண்டிலேயே விட்னி என்பார் இதன் நன்மைகளை நாட்டு மக்களுக்குப் புலப்படுத்தியிருந்தார். ஏராளமான மூலதனம் கிடைத்தமையாலும், பண்டங்களை விற்பனை செய்வதற்குரிய அங்காடிகள் கிடைத்தமையாலும் பேரளவில் பண்டங்களை உற்பத்தி செய்வது எளிதாயிருந்தது.

### தொழில் இடச் செறிவு

தொழில் வளர்ச்சியின் போக்கில் தொழில் இடச்செறிவு (Localisation of Industry) நாட்டின் பல பகுதிகளில் உருவாயிற்று. மண்

வளம், நீர்வளம், சாதனங்கள் அளிப்பு, கச்சாப் பொருள் வசதி, பாங்கு, மற்றும் போக்குவரத்து வசதிகள் முன்னேற்றம், அங்காடிப் பெருக்கம் ஆகியவை காரணமாக, தொழில் இடச் செறிவு ஓரிடத்தில் தோன்றும். இதன் அடிப்படையில்தான் அமெரிக்காவிலும் தொழிற் புரட்சியின்போது தொழில் இடச் செறிவு காணப்பட்டது. உற்பத்திக்குத் தேவையான மூலப் பொருட்கள் அருகில் கிடைத்தமையால் ஆலைத் தொழில் கான்சாஸ் நகரத்திலும், இறைச்சியைப் பாடம் செய்யும் தொழில் சிக்காகோ, ஓமகா, கான்சாஸ் ஆகிய இடங்களிலும், காய்கறிகளைப் பக்குவம் செய்து டின்களில் அடைக்கும் தொழில் கலிபோர்னியா, நியூயார்க். பால்டிமோர் ஆகியவற்றிலும், மீன்களைப் பக்குவம் செய்து டின்களில் அடைக்கும் தொழில ஓரேகான், நியூ இங்கிலாந்து பகுதிகளிலும், புகையிலைத் தயாரிப்புத் தொழில் வட கரோலினாவிலும் வளர்ந்தன. அவ்வாறே அங்காடிகளுக்கு அருகாமையிலும் தொழில்கள் குவிந்தன. உதாரணமாக நியூயார்க், பென்சில்வேனியா, ஒகியோ, இல்லினாய், மிச்சிகன், கலிபோர்னியா, நியூ ஜெர்சி, மாசசூசெட்ஸ் ஆகிய இடங்களில் பொறி வழிப்பண்ட உற்பத்தித் தொழில்கள் மேன்மேலும் குவிந்துகொண்டிருந்தமைக்கு முக்கியக் காரணம் அங்காடிகள் அருகில் இருந்தமையே. பொறிவழிப் பண்ட மொத்த உற்பத்தியில் இப்பகுதிகள் 1/3 பாகத்தை உற்பத்தி செய்தன. அங்காடிகள் அருகாமை காரணமாகத் தொழில் இடச் செறிவு காணப்பட்ட மற்ற முக்கிய இடங்கள், பிராவிடன்ஸ்(நகைத் தொழில்), பாட்டர்சன் (பட்டுத் தொழில்) நியூயார்க்(கம்பளித் தொழில்). அங்காடிகளுக்கருகாமையில் தொழில் பெருகினால் போக்குவரத்துச் செலவுகள் குறைவாக இருக்கும். தட்ப வெப்ப நிலை காரணமாகவே ஃபால் ரிவர் (Fall River), மற்றும் பெட்ஃபோர்டு போன்ற இடங்களில் பருத்தி ஆலைகள் உண்டாயின. ஒரு குறிப்பிட்ட தொழில் ஓரிடத்தில் முதலில் தோன்றிவிட்டால், பிறகு அத்தொழிலைச் சார்ந்த நிறுவனங்கள் மேன்மேலும் அந்த இடத்தில் குவிவது இயற்கை. இவ் வகையில் தான் ஆம்ஸ்டர்டாம் கம்பள உற்பத்தியில் முக்கிய நகரமாயிற்று. 1750-ல் செருப்புத் தயாரிப்பில் பயிற்சிபெற்றிருந்த ஒரு தொழிலாளி லின் என்ற இடத்தில் தற்செயலாகக் குடியேறினான். பிறகு அந்த இடம் ஷூ உற்பத்தியில் புகழ்மிக்க நகரமாயிற்று. இத்தனைக்கும் அந்நகரம் கச்சாப் பொருட்களை மிகத் தொலைவிலிருந்து பெறவேண்டியிருந்தது. ஒரு புதிய தொழிலைத் தோற்றுவிப்பதற்கு வேண்டிய துணிவை எல்லோரும் பொதுவாகப் பெற்றிருப்பதில்லை. ஆனால் ஆரம்பித்து இயங்கிக்கொண்டிருக்கும் ஒரு தொழிலை நடத்துவது எல்லோருக்கும் எளிது. ஒன்றுக்கு மேற்பட்ட காரணிகளாலும் தொழில் இடச் செறிவு விளைவதுண்டு. உதாரணமாக, பாட்டர்சன், நியூஜெர்சி ஆகிய

இடங்களில் பட்டுத்தொழில் செறிந்திருந்தமைக்குப் பல காரணங்கள் உண்டு. அவற்றில் குறிப்பிடத் தகுந்தவை; திறமை மிகுந்த தொழிலாளர் கிடைத்தமை, தொழிலுக்கு வேண்டிய தட்ப வெப்ப நிலை இருந்தமை, மற்றும் நீர்வளம் ஆகியவை. நியூ இங்கிலாந்து, நியூயார்க், நியூ ஜெர்சி, பென்சில்வேனியா, மாசசூசெட்ஸ்—இவற்றில் பொறிவழிப் பண்ட உற்பத்தித் தொழில்கள் செழித்து வளர்ந்தமைக்குக் காரணங்கள்: அங்காடிகள் கிடைத்தமை, பயிற்சி பெற்ற தொழிலாளர் இருந்தமை, போக்கு வரத்து வசதிகள் பெருகியமை, மற்றும் மூலதன அளிப்பு என்பன ஆகும்.

### பகுதிவாரி உற்பத்தி

பொறிவழிப் பண்ட உற்பத்தியில் வடகிழக்குப்பகுதி—நியூயார்க், நியூ ஜெர்சி, மாசசூசெட்ஸ், பென்சில்வேனியா—முன்னணியில் இருந்தன. உடைகள் தயாரிப்பு, உணவுப் பண்டங்களைப் பக்குவப் படுத்தல், பிரசுர வெளியீடு, இயந்திரத் தயாரிப்பு ஆகியவை நியூயார்க்கின் முக்கியத் தொழில்களாக இருந்தன. நியூ ஜெர்சியில் இரசாயனத் தொழில், மின்சாரக் கருவிகள் தயாரிப்பு, இயந்திர உற்பத்தித் தொழில், ஆடை தயாரிப்பு முதலியவை பிரதானமான தொழில்களாக இருந்தன. பென்சில்வேனியாவில் இரும்பு எஃகுத் தகடு உற்பத்தி, வார்ப்படத் தொழில், இயந்திரக் கருவிகள் உற்பத்தி, அச்சு வேலைகள், மற்றும் மின்சாரக் கருவிகள் உற்பத்தி முக்கியத் தொழில்களாயிருந்தன. ஆடை உற்பத்தியும், ஷூ உற்பத்தியும் மாசசூசெட்ஸ் மாநிலத்தின் முக்கியத் தொழில்களாக இருந்தன. கனெக்டிகட் பகுதியில் வெண்கலம், செம்பு, பித்தளை ஆகிய பொருட்களும், கடிகாரங்கள், மற்றும் வெள்ளிச் சாமான்களும் உற்பத்தி செய்யப் பெற்றன.

வட மேற்குப் பகுதியில் குறிப்பிடத் தகுந்த தொழில் மையங்கள் ஓஹியோ, இந்தியானா, விஸ்கான்சின், மிச்சிகன், மிசௌரி ஆகியவையாகும். ஓஹியோ மாநிலத்தில் இரும்புத் தகட்டுத் தொழிலும், எஃகுத் தொழிலும் பிரதானமாயிருந்தன. முதற் பொருள் உற்பத்தியும், இறைச்சி கட்டுமானத் தொழிலும் இல்லினாய் மாநிலத்தின் முக்கியத் தொழில்களாயிருந்தன. மிச்சிகன் மாநிலத்தில் தயாரிக்கப் பட்ட பொருட்களில் மோட்டார் கார்களும், விஸ்கான்சின் மாநிலத்தில் உற்பத்தி செய்யப்பெற்ற பொருட்களில் இயந்திரக் கருவிகளும் முக்கியமானவை. உணவுப் பொருட்களைப் பக்குவம் செய்யும் தொழில் மிசௌரி மாநிலத்தின் சிறப்பான தொழிலாயிருந்தது.

மலைப்பகுதியைச் சார்ந்த இடாஹோ, கொலராடோ, நெவேதா, அரிசோனா, நியூ மெக்சிகோ போன்ற பகுதிகளிலும் தொழில் வளர்ச்

சிக்குப் பஞ்சம் இருக்கவில்லை. மர வேலைப் பொருட்களுக்கு இடாஹோவும், செம்புத் தொழிலுக்கு நெவேதாவும், இறைச்சி கட்டுமானத் தொழிக்கு கொலராடோவும், பெட்ரோலிய உற்பத்தித் தொழிலுக்கு நியூ மெக்சிகோவும் பெயர் பெற்றன. மலைப்பகுதி மாநிலங்களில் மோட்டார்கள் உற்பத்தித் தொழில் நன்கு வளர்ந்தமை இங்கே குறிப்பிடத் தகுந்தது.

தெற்குப் பகுதியில் மரவேலை முக்கியத் தொழிலாக வளர்ந்தது. 1899 முதல் 1930 வரையில் கரோலினாவும், வர்ஜீனியாவும் மரத் தொழிலில் இணையற்ற மாநிலங்களாக இருந்தன. பிறகு பசிபிக் பகுதி இத்துறையில் முன்னேற்றமடைந்தது. 1880-க்குப் பிறகு வட கரோலினா, தென் கரோலினா போன்ற தெற்கு மாநிலங்கள் பருத்தி உற்பத்தியில் தலையெடுத்தன. பருத்தி உற்பத்திக்கு வட பகுதியை விடத் தென் பகுதியே மிகவும் பொருத்தமானதாயிருந்தது. தென் பகுதியில் பருத்திக்குத் தேவையான கச்சாப் பொருட்கள் நிறையக் கிடைத்தன; வரி விதிப்பும் மிதமாயிருந்தது. மேலும் தென் பகுதி ஆறுகளும், அணைக்கட்டுகளும் மின்சாரத்தை வேண்டிய அளவிற்கு வழங்கி வந்தன. டெனசியிலும், அலபாமாவிலும் நிலக்கரியும் இரும்பும் கிடைத்தமையால், அப் பகுதிகளில் இரும்பு—எஃகுத் தொழில் நன்கு முன்னேறியது. 1880-ல் தெற்குப் பகுதியில் உற்பத்தியான பொறிவழிப் பண்டங்களின் மதிப்பு சுமார் 338,791,898 டாலர்கள். ஆனால் தெற்குப் பகுதிக்குப் பொருத்தமான தொழில் விவசாயமே எனப் பலர் கூறுகின்றனர்.

பசிபிக் பகுதி மாநிலங்களில் விவசாயமும், மரவேலையும், பிரதான தொழில்களாக இருந்தன என்றாலும், மாவுத் தயாரிப்பு, இறைச்சியை டின்களில் அடைத்தல், பழம் மற்றும் காய் கறிகளைப் பாடம் செய்தல் ஆகிய தொழில்களும் வளர்ந்தன. அண்மைக் காலங்களில் அங்கே ஆகாய விமானம், மற்றும் கப்பல் கட்டும் தொழில் பெருகியது ஒரு சிறப்பான முன்னேற்றம் ஆகும்.

1860-ல் அமெரிக்கா சிற்றளவுத் தொழில்களின் நாடாகவே இருந்தது. 1880 வரையில்கூட விவசாயம்தான் அதன் வருமான மூலமாக இருந்தது. 1880 முதல் 1900 வரையிலான இருபதாண்டுகளில் நிலைமை அடியோடு மாறியது; அமெரிக்கா ஒரு பொறிவழித் தொழில் நாடாக உருமாற்றமடைந்தது. தொழில் முன்னேற்றம் மெதுவாக நிகழ்ந்தது; என்றாலும் திடமாக நிகழ்ந்தது. 1900-ல் அமெரிக்கா செய்த உற்பத்தி இங்கிலாந்து நாட்டு உற்பத்தியைப் போல் இரு மடங்கு ஆகும். அனைத்து ஐரோப்பிய நாடுகளின்

உற்பத்தியில் பாதி மடங்கு! இதைவிடப் பிரமிப்பூட்டும் சாதனை 1914-ல் தற்சார்புடைய ஒரு நாடாக அமெரிக்கா திகழ்ந்தது. எதிர்காலத்தில் உலக மத்தியில் ஒரு மாபெரும் நாடாக அது ஒளிவிடப்போகிறது என்பதற்கான அடையாளங்கள் அப்போதே தெரியலாயின! அமெரிக்க வரலாற்றில் தொழிற் புரட்சிக்கு ஒரு தனி இடம் உண்டு.

# 7. இணைப்புக்களின் வளர்ச்சி
## (The Growth of Combination)

### *இணைப்புக்களின் வளர்ச்சிக்குக் காரணங்கள்*

தொழில் நிறுவனங்கள் இணைந்து செயல்பட்டமை அமெரிக்கத் தொழில்முன்னேற்ற வரலாற்றின் ஒரு முக்கிய கட்டமாகும். 1870ஆம் ஆண்டிற்குப் பிறகுதான் தொழில் நிறுவனங்களின் இணைப்புக்கள் நாட்டில் தோன்றின. இணைப்புக்களின் வளர்ச்சி 1897—1904 காலப் பகுதியில் உச்ச கட்டத்தையடைந்தது. பிறகு, அதன் வளர்ச்சியில் தொய்வு காணப்பட்டது. ஆனால், மீண்டும் 1920-க்குப் பிறகு இணைப் புக்களின் வளர்ச்சி சூடு பிடித்தது. சிறிய நிறுவனங்கள் இணைந்து பெரிய நிறுவனங்கள் உருவானதற்குத் தொழிற் புரட்சி ஒரு முக்கிய காரணமாக அமைந்தது. என்றாலும் இணைப்பின் தோற்றத்திற்கும் வளர்ச்சிக்கும் சில முக்கியப் பொருளாதாரக் காரணங்கள் இருந்தன. போட்டியைக் குறித்து உற்பத்தியாளரிடையே நிலவிய அச்சம் ஒரு தலையாய காரணம் எனலாம். நிறுவனங்கள் தமக்குள் கடுமை யாகப் போட்டியிட்டு, பொருட்களின் விலைகளைக் குறைத்தும், விற்ப னைச் செலவுகளை அதிகப்படுத்தியும் வந்தமையால் பணத்தை மிகுதி யாக இழந்தன. போட்டி எல்லை மீறிப் போனால் சிறிய நிறுவனங்கள் மறைந்துபோவதையும், பெரிய நிறுவனங்கள் இழப்புக்குள்ளாவதை யும் கண்ட தொழிலதிபர்கள் இணைப்பு முறையினை விரும்பி ஆதரித் தனர். இணைப்பை ஏற்படுத்துவதனால் இவர்களுக்கு மூன்று முக்கிய நன்மைகள் கிடைத்தன ; அவை இழப்புக்கள் குறைந்து இலாபம் பெருகுதல்; சர்வாதீன சக்தி மிகுந்து விலைகள் உயருதல்; பேரளவு சிக்கனங்கள் வளர்ந்து உற்பத்திச் செலவுகள் குறைதல் என்பன.

'நாட்டு வருமானத்தில் தமக்கிருக்கும் பங்கின் அளவைப் பெருக் கிட அமெரிக்க வர்த்தகர்கள் மேற்கொண்ட ஒரு முயற்சியே இணைப்பு முறை' என்கிறார் ஜோன்ஸ். பத்தொன்பதாம் நூற்றாண்டின் இறுதிப்

பகுதியில் தொழிலின் ஆக்கத்திறன் மிகுதியாயிருந்தது. சமூகத்தின் பல பிரிவினர்களுக்கு நல்ல வருமானங்கள் கிட்டின. ஆனால் தொழில் முயல்வோர் சம்பாத்தியங்களில் கணிசமான அதிகரிப்பு இருக்கவில்லை. நாளுக்குநாள் விரிவடைந்துவந்த அங்காடிகளைத் திருப்தி செய்கின்ற நோக்கத்தில் அமெரிக்கத் தொழில் முயல்வோர்கள் தமது பண்டங்களின் உற்பத்தியை மேன்மேலும் அதிகப்படுத்தியமை காரணமாக, அமித உற்பத்தி (over-production) நிலை ஏற்பட்டுப் பண்டங்களின் விலைகள் சரிந்தன. உதாரணமாக, 1866-ல் 174 ஆக இருந்த மொத்த விற்பனை விலைக் குறியீட்டெண் 1897-ல் 68-க்கு வீழ்ந்தது. இப்படி விலைகள் தாழ்ந்தமையால் உற்பத்தியாளர்கள் அதிர்ச்சியடைந்தனர். என்றாலும், அவர்களால் உற்பத்தியின் அளவை உடனே குறைத்துக்கொள்ள முடியவில்லை. சிறிது காலத்திற்கு உற்பத்தியின் அளவில் எந்தவித மாறுதலும் நிகழவில்லை; செலவுகள் அதிகரித்துக்கொண்டே வந்தன. நல்ல காலம் விரைவில் தோன்றும் என்ற வழக்கமான நம்பிக்கையில் உற்பத்தியாளர்கள் ஊறிக் கிடந்தனர். உற்பத்தி மேலும் பெருகி விலைகள் இன்னும் குறைந்தன. போட்டியின் விளைவுகளிலிருந்து தம்மை விடுவித்துக் கொள்ளத் தொழிலதிபர்கள் சர்வாதீனங்களை உருவாக்குவதில் அக்கறை கொண்டனர். சர்வாதீன சக்திகள் வலுப்பெற்று, பேரளவு உற்பத்தி நாட்டில் அங்கும் இங்கும் தோன்றியவுடன் எஃகு, நெசவு, சுரங்கத் தொழில் முதலியவற்றில் பல தொழில் நுட்ப முன்னேற்றங்கள் ஏற்பட்டன. போட்டியிலிருந்து விடுபெற்ற நிறுவனங்கள் சர்வாதீன நிழலில்தான் இளைப்பாறவும், இலாபங்களைப் பெறவும் முடிந்தது. சர்வாதீனங்களைத் தோற்றுவிப்பதற்கு இணைப்பு முறை உதவியது. உண்மையில் இணைப்பு முறை வழியே பல சர்வாதீனங்கள் உருப்பெற்றன.

இணைப்பு முறையின் வளர்ச்சிக்கு ஃபெடரல் சுங்கச் (Tariffs) சட்டங்கள், உரிமைக் காப்புச் (Patent) சட்டங்கள், நிலக் கொள்கை ஆகியவையும் காரணங்களாக அமைந்திருந்தன. 1861 முதல் 1934 வரை அமெரிக்காவில் சுங்க வரிகள் உயர் மட்டத்திலிருந்தன. இதனால் உள்நாட்டுப் பொருட்களுக்கும், தொழில்களுக்கும் மிகுந்த பாதுகாப்பு கிடைத்தது. காப்புக் கொள்கையை முற்றிலும் பயன்படுத்திக்கொள்ளும் முறையில் பல சின்னஞ் சிறிய நிறுவனங்கள் இணைப்புக்களில் கலந்து பெரிய நிறுவனங்களாக உருமாறின. 'சுங்க வரிகளே டிரஸ்ட் நிறுவனங்களின் அன்னை' என ஹென்றி ஓ ஹேவ்மேயர் (Henry O Havemayer) குறிப்பிட்டார். காப்புக் கொள்கை வழியே பிறந்த நிறுவனம்தான் 'அமெரிக்கச் சர்க்கரை சுத்திகரிப்புக் கம்பெனி' (American Sugar Refining Company). சாதனங்களின் அளிப்பில் சர்வாதீனங்கள் தோன்றுவதற்கு ஃபெடரல் அரசின் நில

மானியக் கொள்கைகள் ஆதரவளித்தன. அவ்வாறே, உரிமைக் காப்புச் சட்டங்களும் சர்வாதீன நிறுவனங்கள் உருவாகி வழியமைத்தன. புதிய கண்டுபிடிப்பின் தயாரிப்பு, விற்பனே, மற்றும் குத்தகை உரிமையைச் சற்றேறச்குறைய 17 ஆண்டுகள் தம்மிடம் கண்டுபிடிப்பாளன் வைத்துக்கொள்வதற்குச் சட்டங்கள் இடம் கொடுத்தன. ஆனல், அதே நேரத்தில் சர்வாதீனங்களே ஏற்படுத்தும் நோக்கத்தில் உள்ள நிறுவனங்கள் உரிமைக் காப்புக்களேக் கண்டுபிடிப்பாளர்களிடமிருந்து பெற்றுக்கொள்ளலாம் என்றும் சட்டங்கள் கூறின. ஷூ தயாரிப்புத் தொழிலில் 'யுனேட்டெட் ஷூ மெஷினரி கம்பெனி' (United Shoe Machinery Company) கொடி கட்டிப் பறந்ததற்குக் காரணம், அது 6000 உரிமைக் காப்புக்களே—இவையனேத்தும் ஷூ தயாரிப்போடு தொடர்புடையவை—சேகரித்து வைத்திருந்ததேயாகும்.

இணேப்பு முறை வலுப்பெறுவதற்கும், சர்வாதீனங்கள் தழைப்பதற்கும் பல மாநில அரசுகள் குறுக்கே நிற்கவில்லே என்பது இங்கே குறிப்பிடத் தகுந்தது. நியூ ஜெர்சி, மேற்கு வர்ஜீனியா, டெலவேர் (Delaware) ஆகிய பகுதிகளில் சர்வாதீன வளர்ச்சிக்கு நல்ல வரவேற்பு இருந்தது. அமெரிக்க நாட்டின் ஏழு மிகப் பெரும் தொழில் இணேப்புக்களான அமெரிக்கச் சர்க்கரை சுத்திகரிப்புக் கம்பெனி (1891), அமல்கமேட்டட் காப்பர் கம்பெனி (1899), அமெரிக்கன் ஸ்மெட்டிங் அண்டு ரிஃபைனிங் கம்பெனி (1899), ஸ்டாண்டர்ட் ஆயில் கம்பெனி (1899), கன்சாலிடேட்டட் டொபாக்கோ கம்பெனி (1901), அமெரிக்க ஸ்டீல் கம்பெனி (1901), இன்டர்நேஷனல் மெர்க்கண்டைல் மேரின் கம்பெனி (1902) ஆகியவை நியூ ஜெர்சியில் 1891 முதல் 1902 வரைக்குள் செயல் உரிமை பெற்றன. இணேப்பு முறையின் வளர்ச்சியும் தொழில் நிறுவனங்களின் முன்னேற்றமும் நெருங்கிய தொடர்பு பெற்றிருந்தன. 3 முக்கியத் தொழில்களில் ஈடுபடுத்தப்பெற்றிருந்த மூலதனம் 1850 முதல் 1910 வரையிலான 60 ஆண்டுகளில் 39 மடங்கு பெருகிற்று. முன்பைவிட 7 மடங்கு கூடுதலான தொழிலாளர்கள் தொழில்களில் இடம் பெற்றனர். உற்பத்தியான பண்டங்களின் மதிப்பு 19 மடங்கு அதிகரித்தது.

### இணேப்பு வகைகள்

இணேப்புக்களில் பின்வருபவை இடம் பெற்றன: (1) தொகுப்பு அல்லது பூல் (Pools) ஒப்பந்தங்கள்; (2) டிரஸ்டுகள் (Trusts); (3) ஓல்டிங் கம்பெனிகள் (Holding Companies). 1978 முதல் 1887 வரையில் பூல் ஒப்பந்தங்கள் அமெரிக்காவின் பிரதான இணேப்பினமாக

இருந்தன. 1887 முதல் 1897 வரையில் டிரஸ்டுகள் வலிவுமிக்க இணைப்புக்களாக இருந்தன. 1897 முதல் 1904 வரையில் ஹோல்டிங் கம்பெனிகள் மிக முக்கிய இணைப்புக்களாகத் திகழ்ந்தன. இவை யத்தனையும் 1920-க்குப் பிறகு புத்துயிர்பெற்றன.

## தொகுப்பு அல்லது பூல் ஒப்பந்தங்கள்

தொகுப்புக்கள் 1873-ல் தோன்றின. தொகுப்பில் சேரும் உற்பத்தியாளர்கள், பண்டங்களின் விலைகளை நிர்ணயிப்பது குறித்தும், அங்காடிகளைப் பகிர்ந்துகொள்வது குறித்தும் தற்காலிக ஒப்பந்தங்களைச் செய்துகொண்டனர். இரயில் போக்குவரத்து நிறுவனங்களிடையே சில பகுதிகளில் கடுமையான போட்டி நிலவியதைத் தவிர்க்கும் நோக்கத்தில், அப்பகுதிகளில் தொகுப்பு ஒப்பந்தங்கள் ஏற்பட்டன. இவற்றைத் தொடர்ந்து பண்டங்களைத் தயாரிப்பதிலும் தொகுப்புக்கள் உருவாயின, உதாரணமாக, பவுடர் தயாரிப்பாளர்கள் தம்மிடையே தலையெடுத்த போட்டியை அகற்றுவதற்காகத் தொகுப்புஒப்பந்தங்களைச்செய்துகொண்டனர். அங்காடிகளைப் பகிர்ந்துகொள்வதற்காக இங்கிலாந்தின் இம்பீரியல் டொபாக்கோ கம்பெனியும், அமெரிக்க டொபாக்கோ கம்பெனியும் தொகுப்பில் சேர்ந்தன; தொகுப்பு ஒப்பந்தப்படி இம்பீரியல் டொபாக்கோ கம்பெனி இங்கிலாந்திலும், அமெரிக்க டொபாக்கோ கம்பெனி அமெரிக்கா, மற்றும் கியூபாவிலும் தம் பொருட்களை விற்பனை செய்து கொள்ளலாம். உப்பு, விஸ்கி, வெடி மருந்து முதலியவற்றின் உற்பத்தியிலும் தொகுப்புக்கள் உருவாயின.

தொகுப்பு ஒப்பந்தங்களில் சில நன்மைகள் இருந்தன. உறுப்பு நிறுவனங்களின் சுதந்திரத்தையும், உரிமைகளையும் இவை பாதிக்க வில்லை. பண்டங்களின் அளிப்பையும் விலைகளையும் கட்டுப்படுத்துவதற்கான ஒரு தற்காலிக ஏற்பாடுகளாக இவை இருந்தன. உற்பத்தி, மற்றும் விலை ஒப்பந்தங்களை மீறும் நிறுவனங்களுக்குரிய தண்டனைகளை அல்லது தண்டத் தொகைகளை ஒரு மத்திய நிர்வாகக் குழு (Central Administrative Committee) நிர்ணயிக்கும். சில நேரங்களில், தனிப்பட்ட நிறுவனங்களின் உற்பத்தித் திறமைக்கேற்ற வகையில் விற்பனைப் பகுதிகள் (Sales areas) பிரித்துக் கொடுக்கப்பட்டன; சில நேரங்களில் மத்திய விற்பனை அமைப்புக்கள்கூட ஏற்படுத்தப்பெற்றன. தொகுப்புக்களில் முக்கியமானவையாயிருந்த மிச்சிகன் சால்ட் அசோசியேஷன், ஸ்டீல்-ரயில் பூல், அசோசியேட்டட் பைப் ஒர்க்ஸ் ஆகியவை முறையே 1868, 1887, 1894ஆம் ஆண்டுகளில் தோன்றின.

தொகுப்புக்கள், அடிப்படையில் 'பண்பாளர் ஒப்பந்தங்களாக' (Gentlemens' agreements) இருந்தனவே ஒழிய, சட்ட பூர்வமான அமைப்புக்களாக இல்லை. எனவே, இவற்றிடம் உறுதியான கட்டுக் கோப்பு இருக்கவில்லை. இவை பலமுறை உடைந்துபோயின. மீண்டும் ஒன்று சேர்ந்தன; மறுபடியும் உடைந்தன. மேலும், இவை 'வாணிபத்தைத் தடுக்கும் சதியமைப்புக்களாக'ச் சட்டத்தின் முன்னே காட்சியளித்தன. ஆகவே, 1890 ஆம் ஆண்டின் ஷெர்மான் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டத்தின் (Sherman Anti-Trust Act) கீழ் இவை தடை செய்யப்பட்டன.

### டிரஸ்டுகள் (Trusts)

டிரஸ்டுகள், 1879 ஆம் ஆண்டு முதல் ஏற்படுத்தப்பெற்றன. டிரஸ்ட் முறைப்படி, நிறுவனங்களின் பங்குதாரர்கள் ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டு, டிரஸ்ட் குழுவிடம் தம் பங்குகளின் ஒரு பகுதியை வழங்கிவிட்டு, அதற்குப் பதிலாகச் சான்றிதழ்களைப் பெற்றுக் கொள்வர். இணைக்கப்பட்ட நிறுவனங்களை டிரஸ்டிகள் நிர்வகித்து வருவர். மொத்த வருமானங்கள் சான்றிதழ்க்காரர்களிடையே பகிர்ந்தளிக்கப்படும். தனிப்பட்ட முதலாளிகள் குறிப்பிட்ட நிறுவனங்களைப்பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. எந்தெந்த நிறுவனங்களைப் பெருக்குவது, எந்தெந்த நிறுவனங்களைக் குறுக்குவது, எந்த எந்திரத்தை வாங்குவது, எந்தப் பண்டத்தின் உற்பத்தியை நிறுத்துவது என்பன போன்ற பிரச்சினைகளெல்லாம் டிரஸ்ட் குழுவினரைச் சார்ந்தவை. வெற்றிகரமாக இயங்கி வந்த டிரஸ்டுகளில் குறிப்பிடத் தகுத்தவை; ஸ்டாண்டர்டு ஆயில் (1879), காட்டன் ஆயில் டிரஸ்ட் (1884), டிஸ்டிலர்ஸ் அண்டு கேட்டில் ஃபீட் டிரஸ்ட் (Distillers' and Cattlefeed Trust, 1887), சுகர் டிரஸ்ட், மற்றும் லெட் டிரஸ்ட் (Lead Trust) முதலியன.

டிரஸ்டுகள் உறுதியானவையாகவும், திறமை மிகுந்தவையாகவுமிருந்தன. ஆனால், டிரஸ்டிகளிடம் அபரிமிதமான அதிகாரங்கள் குவிந்து கிடந்தமையால், அவை மூலமாக சர்வாதீன சக்திகள் தலையெடுத்தன. இதைப் பலர் விரும்பவில்லை. ஹென்றி ஜார்ஜ், டெமரஸ்ட் லாயிட் (Demarest Loyd), டார்பெல் (Tarbell) முதலியோர் டிரஸ்ட் முறையினை எதிர்த்துக் கடும் பிரச்சாரம் செய்தனர். 1889ஆம் ஆண்டில் பல மாநில அரசுகள் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டங்களை நிறைவேற்றின. நியூயார்க் அப்பீல் நீதி மன்றம், 1890-ல் நார்த் ரிவர் சுகர் ரிஃபைனிங் கம்பெனி என்ற டிரஸ்ட் அமைப்பைக் கலைக்க வேண்டுமென்று கட்டளையிட்டது. அவ்வாறே ஒஹியோ நீதிமன்றங்கள், 1892-ல் வழங்கிய தீர்ப்புக்களில் ஸ்டாண்டர்டு ஆயில்

டிரஸ்ட் மூடப்படவேண்டுமென ஆணையிட்டன. தமக்களிக்கப்படும் உரிமைகளின் எல்லைகளை டிரஸ்டுகள் பல நேரங்களில் மீறிவிடுகின்றன என்கின்ற அடிப்படையில்தான் நீதிமன்றங்கள் டிரஸ்டுகளைச் சட்ட விரோதமானவை எனத் தீர்ப்பளித்தன. சட்ட எதிர்ப்புக்களைக் கண்ட உற்பத்தியாளர்கள் 1892 ஆம் ஆண்டிற்குப் பிறகு டிரஸ்ட் முறையைப் பின்பற்றவில்லை.

### ஓல்டிங் கம்பெனி (Holding Company)

சில போட்டி நிறுவனங்களின் பங்குகளை வாங்கிக் கொள்வதன் மூலம், நிர்வாகத்தில் பெரும்பான்மை பலத்தைப்பெற்று, நிறுவனங் களுக்கிடையேயான போட்டியைத் தவிர்க்கும் வகையில், அவைகளின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தும் ஓர் அமைப்பு ஓல்டிங் கம்பெனி யாகும். ஷெர்மான் டிரஸ்ட் எதிர்ப்புச்சட்டம், டிங்லி சுங்கவரிச் சட்டம் (Dingley Tariff Act) ஆகியவை அமலுக்குக் கொண்டுவரப் பெற்ற பிறகுதான் ஓல்டிங் கம்பெனி என்ற இணைப்பு முறை அமெரிக் காவில் விரைவாகப் பரவியது. சட்டவிரோதமானவை எனக் கருதப் பட்ட டிரஸ்டுகள், ஓல்டிங் கம்பெனிகளாக உருமாறினால் சட்டங் களின் எதிர்ப்பின்றித் தொழில் உலகில் தொடர்ந்திருக்கமுடியும். எனவேதான், 1897 முதல் 1904 வரையில் தொழில் முயல்வோர்கள் பெரும்பாலும் ஓல்டிங் கம்பெனியின் உதவியை நாடினர். ஏற்கனவே பென்சில்வேனியா கம்பெனியும், பெல் டெலிஃபோன் கம்பெனியும் ஓல்டிங் கம்பெனி முறையைத் தழுவியிருந்தன. இவற்றைத் தொடர்ந்து ஸ்டாண்டர்டு ஆயில் கம்பெனியும் ஓல்டிங் கம்பெனி முறையைப் பின்பற்றியது. 1897—1904 காலப் பகுதியில் மிகப்பெரும் ஓல்டிங் கம்பெனியாக யுனைட்டெட் ஸ்டீல் கார்ப்பரேஷன் திகழ்ந்தது. இதன் உறுப்பு நிறுவனங்களின் எண்ணிக்கை 11 ஆகும். துணை நிறுவனங்களின் எண்ணிக்கை 170.

ஓல்டிங் கம்பெனியின் வளர்ச்சிக்கு உதவியாயிருக்கக்கூடிய சட்டங்கள் நியூ ஜெர்சி, நியூயார்க், டேலவேர், மெய்ன் ஆகிய மாநிலங்களில் இயற்றப்பட்டன. ஆகையால் ஓல்டிங் கம்பெனிமுறை நன்கு வளர்ந்தது. இன்று நாட்டில் கொலுவீற்றிருக்கும் பல மாபெரும் கூட்டுப்பங்கு நிறுவனங்கள் அக் காலத்தில் தோன்றிய வையே. பல ஓல்டிங் கம்பெனிகள் திறமையுடன் செயல்பட்டன. என்றாலும், இன்டர்நேஷனல் மெர்கண்டைல் மேரின் கம்பெனி, யுனைட்டெட் ஸ்டேட்ஸ் ஷிப் பில்டிங் கம்பெனி முதலிய சில கம்பெ னிகள் இழப்புக்களுக்குள்ளாயின. மேலும், ஓல்டிங் கம்பெனிகளும் டிரஸ்டுகளைப்போல் சர்வாதீனங்களாக வளர்ச்சியுற்றன. ஆகை யால், இவையும் அரசின் எதிர்ப்புக்கு இலக்காயின. வடமேற்குப்

பகுதியிலிருந்த மூன்று இரயில்வே நிறுவனங்களின் பங்குகளைப் பெற்றிருந்த வடக்குப் பத்திரக் கம்பெனி (Northern Securities Company) 1904-ல் கலைக்கப்பட்டது. ரூஸ்வெல்ட் நிர்வாகத்தில் எடுக்கப்பட்ட இந்த நடவடிக்கைக்கு நீதி மன்றமும் ஆதரவு நல்கியது. ஓல்டிங் கம்பெனி ஏற்படுவதற்குச் சட்டம் மறுப்புத் தெரிவிக்கவில்லை. ஆனால், அது சர்வாதீனமாக வளர்ந்தெழுந்தால் சட்டம் எதிர்ப்புத் தெரிவிக்கவே செய்தது. இதன் அடிப்படையில்தான் ஸ்டாண்டர்டு ஆயில் கம்பெனியும், அமெரிக்கன் டொபாக்கோ கம்பெனியும் கலைக்கப்பட்டன.

இச்சோதனைகளால் ஓல்டிங் கம்பெனி மறைந்துவிடவில்லை. இன்றைக்கும் அமெரிக்க நாட்டில் கூட்டுப் பங்கு நிறுவனங்களுள் ஓல்டிங் கம்பெனியே மிகவும் முக்கியமானதாயிருந்து வருகிறது. ஆனால், அதன் அமைப்பில் அண்மைக் காலங்களில் சில மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. இணைப்புக்களின் வளர்ச்சிப் போக்கில் சில புதிய முறைகளும் தோன்றியிருக்கின்றன. கலப்பு (Merger), தொழில் ஐக்கியம் (Amalgamation), வர்த்தக நலச் சமுதாயம் (Community of Interests) முதலியவை இவற்றில் முக்கியமானவை.

### டிரஸ்ட் எதிர்ப்பு இயக்கம்

1904ஆம் வருடத்திற்குள் நாட்டின் பெரும்பாலான முக்கியத் தொழில்கள் இணைப்புக்களின் ஆதிக்கத்திற்குட்பட்டு விட்டன எனலாம். அனேக உற்பத்திப் பொருட்கள் இணைப்புக்களின் தயாரிப்புக்களாகவே இருந்தன. நாட்டின் உற்பத்திச் சாதனங்கள் இவ்வாறு ஒரு சில சர்வாதீன நிறுவனங்களின் கரங்களில் முடங்குவதை மக்கள் விரும்பவில்லை. இந் நிறுவனங்கள், இணைப்புக்களில் கலவாதிருந்த ஏனைய நிறுவனங்களுக்கு இடையூறுகளை விளைவித்தன. மேலும், பல நேரங்களில் சட்டத்தை மீறியதோடல்லாமல் அரசியல் அதிகாரத்தைக் கைப்பற்றுவதற்கும் நேர்மையற்ற நடவடிக்கைகளை மேற்கொண்டன. உதாரணமாக, தேர்தல் காலங்களில் சர்வாதீனங்கள் நடந்துகொண்ட முறை கண்டனத்திற்குரியதாயிருந்தது. 'சில கூட்டுப் பங்கு நிறுவனங்கள் ஏராளமான பணத்தை ஈட்டியிருக்கின்றன. அவைகளிடம் உள்ள செல்வக் கொழிப்பைப் பார்க்கும் போது இந்த நாட்டில் சுதந்திரமாகச் செயல்படும் அரசு இருக்க முடியுமா என்ற சந்தேகம் எழுகிறது. தனி நபர் இலாபங்களைப் பெருக்கும் வகையில் நாட்டின் சொத்து, மற்றும் வர்த்தகத்தை விருப்பம்போல் ஆட்டி வைப்பதற்கு இச் செல்வம் பயன்படுத்தப்படுகிறது. இதனால் பொதுமக்களின் நலன்கள் பாதிக்கப்படுகின்றன' என்று மிச்சிகன் மாநிலத் தலைமை நீதிமன்றம், 'டயமண்ட் மாட்ச்

கம்பெனி' என்ற டிரஸ்ட் நிறுவனம் பற்றிய வழக்கில் தீர்ப்பு வழங்கும்போது குறிப்பிட்டது இங்கே நினைவு கூரத்தக்கதாகும். இணைப்புக்களின் போக்குபற்றி மக்கள் கொண்டிருந்த கருத்துக்களை இக்கூற்று பிரதிபலித்தது. இணைப்புக்கள் வழியே சர்வாதீனங்கள் உருவாவதையும், அவற்றின் அதிகாரங்கள் பெருகுவதையும் மக்கள் வெறுத்தனர். சர்வாதீன நிறுவனங்கள் நிதி நிர்வாகத்திலும் நாணயத்துடன் நடந்துகொள்ளவில்லை. ஆகையால், அவற்றின் பங்குகள் மதிப்பிழந்தன. சர்வாதீன நிறுவனங்களின் வளர்ச்சியால் தொழிலாளர்கள் பாதிக்கப்பட்டனர். ஏனென்றால் சர்வாதீன நிறுவனங்களுடன் அவர்களால் பேரம் செய்ய முடியவில்லை. யுனைட்டெட் ஸ்டேட்ஸ் ஸ்டீல் கார்ப்பரேஷன் என்ற டிரஸ்ட் நிறுவனம் சுமார் 30 ஆண்டுகள் தொழிலாளர் சங்கங்கள் ஏற்படுவதைத் தடை செய்தது. மேலும், தொழில் நிறுவனங்கள் இணைக்கப்பட்டமையால் சில தொழிலாளர்கள் வேலைகளையுமிழந்தனர்.

பொதுமக்கள், தொழிலாளர் ஆகியோர் மட்டும் இணைப்புக்களை எதிர்க்கவில்லை. அரசியல் வாதிகளும் எதிர்த்தனர். குடியரசுக் கட்சி, ஜனநாயகக் கட்சி, மதுவிலக்குக் கட்சி, தொழிலாளர் கட்சி ஆகிய எல்லா அரசியல் கட்சிகளும் இணைப்புக்களையும், சர்வாதீனங்களையும் எதிர்த்துக் கண்டனக் கணைகளைத் தொடுத்தன. எதிர்ப்புக்களுக்கு மாநில அரசுகளும் செவிசாய்த்து, சர்வாதீன எதிர்ப்புச் சட்டங்களை இயற்றும் பணியில் ஈடுபட்டன. 1890ஆம் ஆண்டிற்குள் 27 மாநிலங்கள் சர்வாதீன எதிர்ப்புச் சட்டங்களை இயற்றி விட்டன. 15 மாநிலங்கள் சர்வாதீனங்களை ஒழிப்பதற்குரிய முறையில் தமது அரசியல் அமைப்புக்களை மாற்றியமைத்தன. மாநில அரசுகளைத் தொடர்ந்து மத்திய அரசும் 1890-ல் சர்வாதீன எதிர்ப்புச் சட்டமியற்றும் பணியில் ஈடுபட்டது. நாட்டையும் வர்த்தகத்தையும் சர்வாதீனங்களின் பிடியிலிருந்து விடுவித்து, பொதுமக்களின் நலன்களை மேம்பாடடையச் செய்வதற்கு இச்சட்டங்கள் துணைபுரியும் என எதிர்பார்க்கப்பட்டது.

## ஷெர்மான் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டம்

(Sherman Anti trust Act) டிரஸ்டுகளின் வளர்ச்சியை முறியடிப்பதற்கு மாநில அரசுச் சட்டங்கள் போதாவென்று, மக்கள் மத்திய அரசின் சட்டங்களையும் வேண்டுமென்று கோரிய நிலையில், செனட் உறுப்பினர் ஷெர்மான் அவர்களால் கொண்டுவரப்பெற்ற ஷெர்மான் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டம் 1890-ல் அமலுக்கு வந்தது. சட்டத்தின் பகுதி 1-ல் காணப்பட்ட வாசகங்கள் : 'பல்வேறு மாநிலங்களுக்கிடையே அல்லது அமெரிக்காவிற்கும் வெளி நாடுகளுக்குமிடையே இருக்கும் வாணிபம் அல்லது வர்த்தகத்தைப் பாதிக்கும் ஓர்

ஒப்பந்தம் அல்லது டிரஸ்ட் வகை இணைப்பு அல்லது இரகசியத் திட்டம் சட்ட விரோதமானது என அறிவிக்கப்படுகிறது.'

சட்டத்தின் பகுதி 2-ல் காணப்பட்ட வாசகங்கள் : 'மாநிலங்களுக்கிடையோ அல்லது அமெரிக்காவிற்கும் வெளி நாடுகளுக்குமிடையோ இருக்கும் வாணிபம் அல்லது வர்த்தகத்தைப் பகுதியளவாகவோ அல்லது முழுமையாகவோ சர்வாதீனப்படுத்தும் அல்லது சர்வாதீனப்படுத்த முயலும் நபர் குற்றவாளி எனக் கருதப்படுவார்.'

சட்டம் மேலும் கூறியதாவது : சட்டத்தை மீறுவோர் அபராதமும் சிறைத் தண்டனையும் விதிக்கப்படுவர். சர்வாதீனத்தால் பாதிக்கப்படுவோர் தமது இழப்பைப்போல் மும்மடங்குத் தொகையினை இழப்பீடாகப் பெறலாம். சட்டம் மீறப்படுவதைத் தடுப்பதற்கும் ஒடுக்குவதற்கும் உரிய அதிகாரங்கள் நாட்டின் பல்வேறு நீதிமன்றங்களுக்குத் தரப்படுகின்றன. சட்டத்தை மீறுவோர்மீது அட்டார்னி ஜெனரல் வழக்குத் தொடர்வார்.

பல ஆண்டுகளுக்கு ஷெர்மான் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டம் வெற்றிகரமாகச் செயல்பட முடியவில்லை. இதற்கு மூன்று காரணங்கள் இருந்தன : (1) சட்டத்தைச் சரிவர அமல் செய்வதற்கான ஏற்பாடுகள் செய்யப்படவில்லை; (2) நீதிமன்றத் தீர்ப்புக்கள் இச்சட்டத்திற்குப் பாதகமாயிருந்தன; (3) மத்திய அரசு சட்டத்தை நடைமுறைப்படுத்துவதில் அக்கறை காட்டவில்லை.

டிரஸ்டுகளை முறியடிப்பதற்குக் கடுமையான முயற்சிகளை எடுத்துக்கொண்ட ரூஸ்வெல்ட் அரசுகூட, டிரஸ்ட் எதிர்ப்புப் பணிக்கென ஐந்து அட்டார்னிகளைத்தான் நியமித்தது. சட்டத்தில் காணப்பட்ட 'வர்த்தகம்' என்ற சொல் பொறிவழித் தொழிலைக் குறிக்காது என்று அமெரிக்க நீதிமன்றங்கள் 1899 வரை கூறி வந்தன. அவ் வாண்டில் நடைபெற்ற அடிசன் பைப் அண்ட் ஸ்டீல் நிறுவன வழக்கின்போதுதான் 'வர்த்தகம்' என்ற சொல் பொறிவழித் தொழில்களையும் குறிக்கும் என்பது தெளிவாயிற்று. இச் சட்டத்தின்கீழ் ஹோல்டிங் கம்பெனிகளின் இணைப்பை எதிர்த்தும் வழக்குத் தொடர முடியவில்லை. ஏனென்றால், ஹோல்டிங் கம்பெனிகளின் இணைப்பு சட்ட வரம்பிற்கப்பாற்பட்டது என நீதிமன்றங்கள் கருதின. 1904-ல் நிகழ்ந்த வடக்குப் பத்திரக்கம்பெனி (Northern Securities Company) வழக்கின்போதுதான், ஹோல்டிங் கம்பெனிகளின் இணைப்பு சட்ட வரம்பிற்குட்பட்டது என்றும், சட்டப்படி அது செல்லாது என்றும் உணரப்பட்டது. ஆக, 1911 வரையில் ஷெர்மான் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டம் வெற்றிகரமா

கச் செயற்படுத்தப்படவில்லை. அவ்வாண்டில் அமெரிக்கத் தலைமை நீதிமன்றம், ஸ்டாண்டர்ட் ஆயில் டிரஸ்டையும், அமெரிக்கன் டொபாக்கோ டிரஸ்டையும் கலைக்கும்படி உத்தரவிட்டபோதுதான் சட்டத்தின்கீழ் மேற்கொள்ளப்பட்ட டிரஸ்ட் எதிர்ப்பு நடவடிக்கை வலிவடைந்தது.

புகையிலை, மற்றும் எண்ணெய் சர்வாதீனங்களைக் கண்டித்துத் தீர்ப்பு வழங்கிய நீதிமன்றம்கூட, 'விவேக விதி' (Rule of reason) என்கிற தத்துவத்தின் அடிப்படையில்தான் தமது தீர்ப்புக்களை வழங்கியது. இந்த 'விவேக விதி' பிறகு எல்லா நீதி மன்றங்களாலும் பின்பற்றப்பட்டது. டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டமீறல்களைக் கண்டித்து வழக்குப் போடுவதில் பல தொல்லைகள் முளைத்தன. ஏனென்றால் 'விவேக விதி'ப்படி விரும்பத் தகாத பொருளாதார விளைவுகளை உண்டு பண்ணக்கூடியவை என்று எந்தெந்த இணைப்புக்களை ('வாணிபக் குறுக்கீடுகளை') நீதிபதிகள் கருதுகின்றனரோ, அவை மட்டுமே சட்ட விரோதமானவை ஆகும். இந்த விதி பின்பற்றப் பட்டதினால் ஷெர்மான் சட்டம் மிகவும் பாதிக்கப்பட்டது. இச் சட்டத்தின் கீழ் தொடரப்பட்ட பல வழக்குகள் தோல்வியுற்றன. 1920-ல் யுனைட்டெட் ஸ்டேட்ஸ் ஸ்டீல் கார்ப்பரேஷன் மீது போடப் பட்ட வழக்கின் தீர்ப்பு கம்பெனிக்குச் சாதகமாயிருந்தது: தொழிலில் உள்ள போட்டியினை யு. எஸ். ஸ்டீல் பாதிக்கவில்லை என்றும், அக் கம்பெனியின் ஒருங்கிணைக்கட்டமைப்பு அதன் திறமை உயர்வுக்கு இன்றியமையாததா யிருக்கிறது என்றும் தீர்ப்பு கூறப்பட்டது! யு. எஸ். ஸ்டீல் கார்ப்பரேஷனைப் போல இண்டர்நேஷனல் ஹார்வஸ்டர் அண்ட் யுனைட்டெட் ஷூ மெஷினரி கம்பெனியும் கருதப்பட்டது.

## கிளேட்டன் சட்டம் (Clayton Act)

'விவேக விதி' பின்பற்றப்படுவதனால் டிரஸ்ட் எதிர்ப்பு முயற்சியில் விளையக்கூடிய சிரமங்களை அகற்றும் நோக்கத்தில், காங்கிரஸ் மன்றம் 1914-ல் கிளேட்டன் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டத்தை இயற்றியது. டிரஸ்டுகளைக் கட்டுப்படுத்த வேண்டும், சர்வாதீன சக்திகளை வளரவிடக் கூடாது என்று ஜனநாயகவாதிகள் விரும்பியதன் விளைவு இச் சட்டம். நியூ இங்கிலாந்தில் இருந்த இரயில்வே நிறுவனங்கள் இணைந்த நிகழ்ச்சி, டிரஸ்ட் எதிர்ப்பு இயக்கத்தை ஊக்குவித்தது. நியூயார்க், நியூ ஹேவன், மற்றும் ஹார்ட்ஃபோர்டு இரயில்பாதை முதலாளிகள், நியூ ஹேவன் கம்பெனியின் பணத்தைக் கண்டவாறு செலவு செய்து போஸ்டன் அண்டு மெய்ன், போஸ்டன் அண்டு அல்பானி, நியூயார்க், ஒன்டோரியோ மற்றும் வெஸ்டர்ன்

இரயில்வே கம்பெனிகளைத் தம் ஆதிக்கத்தின்கீழ்க் கொண்டுவந்தனர். மேலும், இரயில்வே டிராலிகளையும், நியூ இங்கிலாந்து பகுதிக் கடற்கரை நீர்ப்போக்குவரத்தையும் சர்வாதீனப் படுத்தினர். சர்வாதீனத்தைத் தோற்றுவிப்பதற்கு இவர்கள் மேற்கொண்ட நடவடிக்கைகள் கண்டிக்கத்தக்கனவாயிருந்தன. ஊதாரித்தனமாகப் பணத்தைச் செலவிட்டனர். சட்டமன்ற உறுப்பினர்களுக்கும், அரசியல்வாதிகளுக்கும் லஞ்சம் கொடுத்தனர். பங்குகளின் விலைகளை உயர்த்துவதற்கென்றே போலி விற்பனைகளை மும்முரப்படுத்தினர். கம்பெனி நிதிகளைத் தம் சொந்த நலன்களுக்குப் பயன் படுத்தினர். எனவே ஜனநாயகவாதிகள் டிரஸ்ட் எதிர்ப்புப் பணியின் ஒரு முக்கியக் கூறாக கிளேட்டன் சட்டத்தை அமலுக்குக் கொண்டுவந்தனர். சட்டத்தின் முக்கிய ஷரத்துக்கள் பின்வருவன வாகும்.

1. (a) பண்டங்களை வாங்குவோரிடையே நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ விலை பேதங் காட்டுவதனால் போட்டி குறைந்துவிடுவதாகவோ அல்லது சர்வாதீனம் உருவாவதாகவோ இருப்பின், விலைபேதங் காட்டுதலை இச் சட்டம் தடைசெய்கிறது. (b) தமது பண்டங்களை வாங்கி வருவோர் மற்ற நிறுவனங்களின் பண்டங் களை வாங்கக்கூடாது. எந்த ஒரு நிறுவனமும் வற்புறுத்துவதை இச் சட்டம் தடை செய்கிறது.

2. கம்பெனிகள், மற்ற கம்பெனிகளின் பங்குகளை வாங்கித் தொழிலிலுள்ள போட்டியைக் குறைப்பது கூடாது. ஆனால், போட்டி யைக் கெடுக்காமல் தம் நிதிகளை முதலீடு செய்ய முடியுமென்றால் செய்துகொள்ளலாம்.

3. மாநிலங்களுக்கிடையேயான வர்த்தகத்தில் ஈடுபட்டிருக்கும் நிறுவனங்கள் 1 மில்லியன் டாலர்களை மூலதனமாகவும், உபரிநிதி யாகவும், பங்கிடப்படா இலாபமாகவும் பெற்றிருந்து, அந்நிறுவனங் களிடையே போட்டியும் நிலவுமானால், அவை பிணைந்த இயக்குநர் முறையைப் (Interlocking Directorates) பின்பற்றக்கூடாது.

4. பாங்குகளைப் பொறுத்தவரையில், ஒரு நிறுவனத்தின் டெபா சிட்டுகள், மூலதனம், பங்கிடப்படா இலாபம் ஆகியவை 5 மில்லியன் டாலர்களுக்கு மிகுதியாயிருந்தால், அதன் ஓர் இயக்குநர் அல்லது அதிகாரி மற்றொரு நிறுவனத்தில் இயக்குநராகவோ அல்லது அதிகாரி யாகவோ இருக்கக்கூடாது.

5. வாணிபத்தைப் பாதிக்கின்ற சதியமைப்புக்களாகத் தொழிலாளர் சங்கங்களும், விவசாயிகள் கழகங்களும் இருக்கவில்லை என அறிவிக்கப்படுகிறது.

கிளேட்டன் சட்டத்தைப்போன்ற மற்ருெரு முக்கிய சட்டமான ஃபெடரல் வாணிபக்குழு (Federal Trade Commission) 1914-ல் இயற்றப்பட்டது. இச்சட்டப்படி, ஃபெடரல் வாணிபக் குழு ஏற்படுத்தப்பட்டது. நீதித் துறையுடன் இணைந்து கிளேட்டன் சட்டத்தை அமல்செய்யும் அதிகாரம் இக் குழுவிற்குத் தரப்பட்டது. சட்டத்தை மீறுகின்ற நிறுவனங்கள்மீது இக் குழு வழக்குத் தொடரும். உத்தரவுகளையும் வழக்குகளையும் போடுவதற்கு அடிப்படையாகத் தேவைப்படும் உண்மைகளையும் தகவல்களையும் கண்டறிவதற்கு இக் குழு பொருளாதார நிபுணர்கள், சட்ட ஆலோசகர்கள் ஆகியோரின் பணிகளைப் பயன்படுத்திக்கொள்ளும். சர்வாதீன நடவடிக்கைகளை எதிர்த்துச் செயல்படுவதற்கும், நேர்மையற்ற போட்டி முறைகளைத் தடுப்பதற்கும் உரிய அதிகாரம் வாணிபக் குழுவிற்கு ஃபெடரல் வாணிபக்குழுச் சட்டத்தின் 5ஆம் பிரிவில் வழங்கப்பட்டது. இக் குழுவிடம் ஆண்டொன்றிற்கு 4000 முறையீடுகள் வருகின்றன. குழுவினுல் தீர்க்கமுடியாத வழக்குகள் நீதிமன்றங்களுக்குச் செல்கின்றன.

கிளேட்டன் சட்டம் திறமையாகச் செயற்படுத்தப்படவில்லை. சில நீதிமன்றங்களின் தீர்ப்புக்கள் சட்டத்திற்கு முட்டுக்கட்டைகளாக அமைந்தன. விலை பேதங் காட்டுதலை எதிர்த்துத் தொடங்கப்பெற்ற வழக்குகளை விசாரித்த நீதிமன்றங்கள், விற்பனையாளர் செய்த விலைக் குறைப்புக்களைக் குற்றமெனக் கருதவில்லை. மேலும், உற்பத்தியாளர்கள், விற்பனையளவை அடிப்படையாகக்கொண்டு விலை பேதங்காட்டுவது குற்றமாகாது என வாதாடி, அதில் வெற்றியும் கண்டனர். வாணிபக் குழுவினுல் எதையும் விரைவாகச் செய்து முடிக்க முடியவில்லை. ஃபெடரல் வாணிபக் குழுச் சட்டத்தின் 5ஆம் பிரிவினுலும் எந்தவித உபயோகமும் இருக்கவில்லை. எவை எவை 'நேர்மையற்ற போட்டி முறைகள்' என்று நீதிமன்றங்களிடம் விளக்குவதில் வாணிபக் குழு குழம்பித் தவித்தது.

அமெரிக்க நிறுவனங்களை வெளிநாட்டு நிறுவனங்களுடன் வெற்றிகரமாகப் போட்டியிட வைப்பதற்காக, 1918-ல் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டத்தில் மாறுதல் செய்யப்பட்டது. வெப் ஏற்றுமதிச் சட்டப்படி (Webb Export Act), ஏற்றுமதி செய்வதற்காக இணைப்பு முறையைப் பயன்படுத்தும் நிறுவனங்கள் ஷெர்மான் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டத்தின்கீழ் சட்ட விரோதமானவை ஆகா. ஆனுல், இவை உள்நாட்டில் போட்டியைத் தடுப்பதாகவோ அல்லது விலையைக

கட்டுப்படுத்துவதாகவோ இருக்கக்கூடாது. அடுத்து, ஏற்றுமதித் தொழிலில் ஈடுபட்டுள்ள ஒரு நிறுவனம், ஏற்றுமதித் தொழிலை வளர்க்கும் நோக்கத்தில் உருவான ஏனைய நிறுவனங்களின் பங்குகளை முழுமையாகவோ அல்லது பகுதியளவாகவோ வாங்கலாம் என்பதை கிளேட்டன் சட்டம் தடை செய்கிறது என்று எடுத்துக் கொள்ளக்கூடாது.

சர்வாதீனங்களைக் கிள்ளியெறிந்து, போட்டி முறையைக் காப்பாற்றி வளர்க்க அரசு மேற்கொண்ட நடவடிக்கைகள் போதிய பலனைக் கொடுக்காமற் போனதற்குப் பல காரணங்கள் இருந்தன. மந்த காலங்களில் டிரஸ்டுகள்மீது காட்டிய வெறுப்பையும் எதிர்ப்பையும் மக்கள் செழிப்பான காலங்களில் காட்டிடவில்லை. நீதித் துறையின் கிளையாகப் பணிபுரிந்த டிரஸ்ட் எதிர்ப்பு இலாக்காவிற்கு அரசு போதிய அளவு நிதிகளைக் கொடுத்து உதவவில்லை. ஆகையால் இந்தத் துறை தமது பணிகளைச் செம்மையாக ஆற்ற முடியவில்லை. மேலும், அமெரிக்க நீதிமன்றங்கள் ஒன்றுக்கொன்று ஒவ்வாத தீர்ப்புக்களை பல்வேறு நேரங்களில் கொடுத்தமையால் குழப்பம் ஏற்பட்டது. ஏனென்றால் நீதிமன்றத்தின் கருத்துக்கள் யாவை என்பது யாருக்கும் தெளிவாகத் தெரியவில்லை. இத்தகைய காரணங்களால் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டங்கள் ஓரளவிற்கு உபயோகமற்றவையாகவே இருந்தன என்றுகூடக் கூறலாம். ஆனால், டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டங்கள் சர்வாதீன சக்திகளின் வளர்ச்சிப் பாதையில் தடைக்கற்களாக இருந்தன என்பதையும் நாம் மறந்துவிடக்கூடாது. டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டங்கள் இல்லாதுபோயிருப்பின் தொழில் தொகுப்புக்களும், கலப்புக்களும் விஸ்வரூபமெடுத்து, அமெரிக்கப் பொருளாதாரத்தை ஆக்ரமித்துக் கிடக்கும் சூழ்நிலைகள் ஏற்பட்டு, போட்டி முறையின் குரல்வளை முழுமையாக நெறிக்கப்பட்டிருக்கும் என்பது உறுதி.

*டிரஸ்ட் எதிர்ப்பில் அண்மைக்கால வளர்ச்சி :* அண்மைக் காலங்களில் டிரஸ்ட் எதிர்ப்பு இயக்கத்தில் சில முன்னேற்றங்கள் காணப்படுகின்றன. உரிமைக் காப்புத் தொகுப்புக்களையும் (Patent Pooling), தடுப்பு மருந்துத் தயாரிப்பாளரின் விலைக்கட்டுப்பாடுகளையும் நேர்மையற்ற போட்டி நடவடிக்கைகள் என ஃபெடரல் வாணிபக் குழு வழக்குத் தொடுத்து வெற்றி கண்டிருக்கிறது. 1936-ல் இயற்றப்பட்ட ராபின்சன்-பேட்மேன் சட்டம் (Robinson-Patman Act) கிளேட்டன் சட்டத்தின் 2ஆம் பிரிவிற்கு வலிமையைக் கொடுத்தது. இச்சட்டம் விலை பேதங் காட்டுதலை வன்மையாகக் கண்டித்தது. போட்டியை வளர்ப்பதாயுள்ள விலைபேதங் காட்டுகையைக்கூட இச்சட்டம் சில நேரங்களில் தடை செய்தது என்று திறனாய்வாளர் சுட்டிக் காட்டினர். கிளேட்டன் சட்டத்தின் 3ஆம் பிரிவின்கீழ் பல நிறுவனங்களுக்

கெதிராகத் தொடர்ந்த வழக்குகளில் அரசுக்குக் கணிசமான வெற்றி கள் கிடைத்தன.

புதுக் கொள்கை (New Deal) காலத்திற்குப் பிறகு அரசின் டிரஸ்ட் எதிர்ப்புக் கொள்கையில் சிறிது சூடு காணப்பட்டது. பொருளாதாரச் சக்தி ஒரு சிலரிடம் குவிவதை எதிர்த்து காங்கிரஸ் மன்றத்தில் குரல்கள் எழும்பின. மருத்துவமனைகளில் சர்வாதீன நடவடிக்கை களைப் புகுத்தியதற்காக மருந்து தயாரிப்பு இணைப்பு ஒன்று தண்டிக் கப்பட்டது. கட்டுமான தொழிலில் இருந்த பெரும் தொகுப்புக்களை எதிர்த்துக் கடுமையான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. அடுத்து, 'விவேக விதி' தத்துவத்தை ஆட்சேபித்து நீதிமன்றத்தில் வழக்குகள் தொடரப்பட்டன; ஆட்சேபத்தை ஏற்றுக்கொண்டு நீதி மன்றங்கள் பழைய நடவடிக்கைகளை ரத்துசெய்தன. 'உள் நாட்டு அல்லது வெளிநாட்டு வாணிபத்தில் இடம்பெறும் ஒரு பண்டத்தின் விலையை உயர்த்துவதற்காக, குறைப்பதற்காக, நிர்ணயிப்பதற்காக, நிலைப்படுத்துவதற்காக நிறுவப்படும் ஓர் இணைப்பு சட்ட விரோத மானது ஆகும்' என்று அமெரிக்கத் தலைமை நீதிமன்றம் கூறியது. டிரஸ்ட் எதிர்ப்பு இயக்கம் புத்துயிர்பெற்றதன் அடையாளம் இது.

இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு டிரஸ்ட் எதிர்ப்பு இயக் கத்திடம் கூடுதலான உற்சாகம் தென்பட்டது. அலுமினியத் தொழி லில் இருந்த ஒரு மாபெரும் நிறுவனத்தைச் சட்ட விரோதமான கம் பெனி என்று நீதிமன்றம் தீர்ப்பு வழங்கிற்று. போட்டியைத் தடுப்ப தற்குரிய சக்தியை வைத்திருப்பதும், அச் சக்தியைப் பயன்படுத்த முயலுவதும் சட்ட விரோதச் செயல்கள் என்று புகையிலைக் கம்பெனி களின் வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது. திரைப்படக் கம்பெனிகள் தனித்தனி நிறுவனங்களாக இருந்துதான் படங்களை எடுக்க வேண் டும், வெளியிடவேண்டும் என்று கட்டளையிடப்பட்டது. எண்ணெய்க் கம்பெனிகள், டுபாண்ட் (Dupont), ஜெனரல் எலக்ட்ரிக், ஹில்டன் ஓட்டல்கள், ஈஸ்ட்மென் கோடக் (Eastman Kodak), நேஷனல் ஃபுட் பால் லீக் (National Football League), ஆர். சி. ஏ., பெரிய பாங்குகள், பிரசுரகர்த்தர்கள், விளம்பர நிறுவனங்கள் ஆகியவற்றிற்கெதிராக வழக்குகள் தொடரப்பெற்றன. இன்டர்நேஷனல் பிசினஸ் மெஷின்ஸ் (International Business Machines), யுனைடெட் ஷூ மெஷினரி முதலிய கம்பெனிகள் தமது பழைய வர்த்தக முறைகளை மாற்றிக்கொள்வ தற்கு இசைந்தன. யுனைடெட் ஃப்ரூட் (United Fruit) கம்பெனி இரண் டாகப் பிரிவதற்குச் சம்மதித்தது. கட்டுமானத் தொழிலில் இருந்த வட்டாரத் தொகுப்புக்கள் நீதிமன்றங்களுக்கு இழுக்கப்பட்டன. ஐசநோவர் ஆட்சியில் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டங்கள் நன்கு அமல் செய்யப்பட்டன.

1950-ல் கிளேட்டன் சட்டத்திற்குக் கொண்டுவரப்பெற்ற செல்லர் திருத்தத்தின் (Cellar Amendment) படி, கம்பெனிகளின் முதலையும் பங்குகளையும் கைப்பற்றிக் கொள்வதன் மூலம் உருவாகும் கலப்புக்கள் சட்ட விரோதமானவையாகும். எல்லா நிலைகளிலும் போட்டிமுறை சிறந்து நன்கு வளரவேண்டுமெனில் கலப்புக்கள் தடைசெய்யப்பட வேண்டுமென இத்திருத்தம் எடுத்துக் கூறியது. செங்குத்து இணைப்புக்களும் (Vertical combinations) சட்ட விரோத மானவை என்று 1957-ல் நீதிமன்றங்கள் தீர்ப்புக்கூறின. பெத்லஹம் ஸ்டீல் கம்பெனிக் (Bethelehem Steel company)கும், யங்ஸ்டவுன் ஷீட் அண்டு டியூப் (Youngstown sheet and tube) கம்பெனிக்கும் இடையி லான கலப்பு, சட்டப்படி செல்லாது என்று ஃபெடரல் நீதி மன்றம் 1958-ல் தீர்ப்பளித்தது. இக்கலப்பின் வாதங்களை ஏற்றுக்கொள்ள மறுத்த நீதிமன்றம், இதைப்போன்ற கலப்புக்கள் அனுமதிக்கப் பட்டால் எஃகுத் தொழிலில் மூன்று அல்லது நான்கு அசுரப் போட்டி யாளர் மட்டுமே எதிர்காலத்தில் இருப்பர்' எனக் கூறியது. டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டங்களுக்கு நீதி மன்றங்களில் முன்பிருந்த சோதனைகள் தற்போது கிடையா. ஆனால், டிரஸ்ட் எதிப்பு இலாக்கா இன்றைக்கும் நிதிப்பற்றுக்குறையினால் அவதியுற்று வருகிறது. ஆண்டு தோறும் காங்கிரஸ் மன்றம் அனுமதிக்கும் 4 மில்லியன் டாலர் தொகை இந்த இலாக்காவிற்குப் போதவில்லை. 200-க்கும் மேற்பட்ட அட்டார்னிகள், பல கணக்காயர்கள், புலனாய்வாளர்கள், பொருளாதார நிபுணர்கள் ஆகியோரைக் கொண்டு ஆண்டுதோறும் 1000-க்கு மேற்பட்ட வழக் குகளை நடத்துவதற்கு இத் தொகை போதவில்லை.

# 8. போக்குவரத்து வளர்ச்சி

## (Development of Transport)

மேற்குப்புறக் குடியேற்ற வளர்ச்சியைத் தொடர்ந்து போக்கு வரத்து வசதிகளுக்கான தேவைகள் மிகவும் அதிகரித்தன. மேற்கத்திய பிராந்தியங்களில் குடியேறியவர்களால் தயாரிக்கப்பட்ட பண்டங்களை அங்காடிகளுக்கு அனுப்பிவைப்பதற்குத் தொடக்கத்தில் சாலைகள் பயன்பட்டன. 1812 வரையில் சாலைகள்தாம் போக்குவரத்து வசதிகளைப் பொறுத்தவரையில் முக்கியமானவை. ஆனாலும் சாலைகளும் மிகுதியாக இருக்கவில்லை. தவிரவும் பண்டங்களைச் சாலைகள் மூலம் அனுப்புகையில் போக்குவரத்துச் செலவுகளும் மிகுதியாயிருந்தன. உதாரணமாக, ஃபிலடெல்ஃபியாவிலிருந்து கென்டக்கிக்குப் பண்டங்களை அனுப்பினால், கடத்துச்செலவு, விலையில் மூன்றில் ஒரு பங்காக இருக்கும். மேலும், சாலைப் போக்குவரத்திலிருந்த ஒரு முக்கியக் குறைபாடு நெடுந்தொலைவிலிருந்த அங்காடிகளுக்கு மாவுப் பொருட்களை அனுப்பமுடியாது போனமை. சாலைப் போக்குவரத்திலிருந்த இக் குறைபாடுகள் காரணமாக மக்கள் கால்வாய்ப் போக்குவரத்தை நாடினர். 1850 வரையில் அமெரிக்காவில் கால்வாய்ப்போக்குவரத்து பிரதான போக்குவரத்துச்சாதனமாயிருந்தது. 1837-ல் கால்வாய் அமைப்புப் பணி தொடர்பாக பல மாநிலங்களுக்குக் கடன்கள் ஏற்பட்டன. அப்போது இரயில் போக்குவரத்து வசதியின் அவசியமும் நன்மையும் நன்கு தெளிவாயிற்று. உடனே இரயில் போக்கு வரத்தை ஏற்படுத்துவதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. கப்பல் போக்குவரத்தும் விமானப் போக்குவரத்தும் இருபதாம் நூற்றூண்டில்தான் முக்கியப் போக்குவரத்து வசதிகளாயின. அமெரிக்கப் போக்குவரத்து வரலாற்றில் தற்போது முக்கியமாயிருப்பவை இரயில்போக்குவரத்து, கப்பல்போக்குவரத்து, விமானப் போக்குவரத்து ஆகியவை. இவற்றில் இரயில் போக்கு

வரத்து பற்றியும் கப்பல் போக்குவரத்து பற்றியும் இப் பகுதியில் ஆராய்வோம்.

### இரயில் போக்குவரத்து

**தொடக்கங்கள்:** அமெரிக்க நாட்டுப் பொருளாதார வளர்ச்சியில் இரயில் போக்கு வரத்துக்கு ஓர் இன்றியமையாத பங்குண்டு. இரயில் போக்குவரத்து மூலமே நாட்டின் பல பகுதிகளுக்கிடையில் தொடர்புகள் உண்டாயின. மேற்கு பிராந்தியம் கிழக்கு பிராந்தியத்துடன் நெருங்கிய வாணிப உறவுகொண்டதும், மிசிசிப்பிக்கும் அப்பால் குடியேற்றங்கள் நிகழ்ந்ததும் இரயில் போக்குவரத்து தோன்றியவுடன் ஏற்பட்ட முக்கிய நிகழ்ச்சிகளாகும். நெடுந் தொலைவிலிருந்த புதிய பகுதிகளில் குடியேறுவதற்கான வாய்ப்புக்கள் இரயில்வேயினால் உண்டாயின. 1831 முதல் 1853 வரையில் கிழக்கத்திய மாநிலங்களில்தான் இரயில் பாதைகள் பெரும்பாலும் அமைக்கப் பெற்றன. பின்னர் மலைகளுக்கு மேற்குப்புறம் இரயில் பாதைகள் போடப்பட்டன. 1840க்குள் 2755 மைல் நீளமுள்ள இரயில் பாதைகள் போடப்பட்டன. 1850-ல் இவற்றின் நீளம் 8571 மைல்களாகும். இரயில் போக்குவரத்து ஓரளவு வளர்ந்த பிறகே தானியங்களை ஏற்றுமதி செய்வது எளிதாயிற்று.

கண்டத்தைக்கடக்கும் இரயில்பாதை (Transcontinental railway( ஒன்றை ஏற்படுத்தும் முயற்சி, 1834-ல் மேற்கொள்ளப்பட்டு, பின்னர் சாத்தியமில்லை எனக் கைவிடப் பெற்றது. ஆனால், கலிஃபோர்னியாவில் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டதன் விளைவாக, அட்லாண்டிக் கடற்கரைக்கும் பசிபிக் கடற்கரைக்கும் இடையில் போக்குவரத்து மிகுதியாகவே, கண்டத்தைக் கடக்க உதவும் இருப்புப் பாதைகளை ஏற்படுத்தும் அவசியம் உண்டாயிற்று. உள்நாட்டுப் போரின்போது இந்த அவசியம் மேலும் தீவிரமடைந்தது. எனவே 1862-ல் கண்டத்தைக் கடக்க உதவும் இரயில் பாதையை அமைப்பதற்கு அனுமதி வழங்கப்பட்டது. இந்த இரயில் பாதையமைப்பு 1869-ல் முடிவுற்றது. உள்நாட்டுப் போருக்குப் பின்னர்தான் இரயில் பாதைகளைப் பேரளவில் அமைக்கும் முயற்சிகள் ஆரம்பமாயின. உள்நாட்டுப் போர் முடிவடைந்தபோது நாட்டிலிருந்த இரயில் பாதைகளின் நீளம் 28919 மைல்கள்.

இரயில் பாதைகள் அமைத்தலைப் பொறுத்தவரையில் அமெரிக்காவில் மிகவும் சாதகமான சூழ்நிலைகள் இருந்தன. நிலம் மலிவாகக் கிடைத்தது; அரசின் ஆதரவும் இருந்தது. இரயில்வே கம்பெனிகளுக்குக் கடன் உதவிகளையும், நிலக் கொடைகளையும் வழங்குவதற்கு

மாநில அரசுகள் முன்வந்தன. ஃபெடரல் அரசும் இரயில்வே கம்பெனிகளுக்கு நிலங்களை இனமாக வழங்கியது. 1850 முதல் 1871 வரையில் இரயில்வே கம்பெனிகளுக்கு ஃபெடரல் அரசு 159 மில்லியன் ஏக்கர் நிலங்களையும், மாநில அரசுகள் 55 மில்லியன் ஏக்கர் நிலங்களையும் இரயில் பாதையமைப்புக்காக வழங்கின. புதிய நிலங்களைத் தேடிச் செல்வோர்களுக்கும், விவசாயிகளுக்கும் இரயில்வே கம்பெனிகள் கட்டணச் சலுகைகளை வழங்கின. இதனால் பயணிகள் மற்றும் பண்டப் போக்குவரத்து கூடுதலாயிற்று. தொடக்கத்தில் இரயில்வே கம்பெனிகளிடையே பல நேரங்களில் கடுமையான போட்டிகள் ஏற்பட்டன; பயணிகளைக் கவர்வதற்குப் போட்டி போட்டுக்கொண்டு கட்டணங்களைக் குறைத்தன. இதன் காரணமாக, சில நேரங்களில் இழப்புக்கள் ஏற்பட்டதுமுண்டு.

1870க்கு முன்னர், அமெரிக்க இரயில்வே துறையில் ஏற்பட்ட ஒரு முக்கிய முன்னேற்றம் இரும்புத் தண்டவாளங்களுக்குப் பதிலாக எஃகுத் தண்டவாளங்களைப் பயன்படுத்தியமையாகும். இரும்புத் தண்டவாளங்களைவிட எஃகுத் தண்டவாளங்கள் மிகுதியான பளுவைத் தாங்கக்கூடியவை. எனவே, எஃகுத் தண்டவாளங்களைப் போட்ட பிறகு இரயில் வண்டிகள் கூடுதலான அளவில் பயணிகளையும் பண்டங்களையும் ஏற்றிச் சென்றன. இதனால் போக்குவரத்துச் செலவு கணிசமாகக் குறைந்தது. பண்டக் கடத்துக் கட்டணங்களும் குறைந்தன. பண்டங்களைக் குறைந்த கட்டணங்களில் அனுப்ப முடிந்தமையால், விவசாயிகள் ஐரோப்பியச் சந்தைகளுக்கு விவசாயப் பொருள்களை அனுப்பலாயினர். 1867-ல் நாட்டின் கோதுமை உற்பத்தியில் 8·3 சதவீதம்தான் ஏற்றுமதியாயிற்று. ஆனால் 1870-ல் 20 சதவீதமும், 1880-ல் 40 சதவீதமும் ஏற்றுமதியாயிற்று. 1870-ல் ஏற்றுமதியான விவசாயப் பொருள்களின் மதிப்பு 361,188,483 டாலர்களாகும். இது 1881-ல் 685,961,091 டாலர்களுக்கு உயர்ந்தது. ஏற்றுமதிகள் பெரும்பாலும் ஐரோப்பாவிற்கே சென்றன.

1869-ல் பசிபிக் இரயில்பாதை ஏற்பட்டதற்குப் பின்னர் மேற்குப் பிரதேசத்திலிருந்த நெடுந்தூர இடங்களுக்குக் கால்நடைகளை அனுப்பி வைப்பது சாத்தியமாயிற்று. இரயில் வண்டிப் பெட்டிகள் அகலமாயிருந்தனவாதலால் கால்நடைகளை ஏற்றிச் செல்வதில் சிரமங்களிருக்கவில்லை. 1878-ஆம் ஆண்டில் குளிர் சாதனமுள்ள வண்டிகள் (Refrigerator cars) நடைமுறைக்கு வந்தன. இவற்றில் இறைச்சியைக் கெடாமல் எடுத்துச் செல்ல முடியுமாதலால், மேற்குப் புறமிருந்த கால்நடைப் பண்ணையாளர்களும் மற்றவர்களும் ஐரோப்பாவிற்கு இறைச்சியை ஏற்றுமதி செய்யத் தொடங்கினர்.

இருப்புப்பாதை வளர்ச்சி 1865-ஆம் ஆண்டிற்குப் பின்னர் துரித மடைந்தது. 1867லிருந்து 1873ஆம் ஆண்டிற்குள் 33000 மைல் இரயில் பாதைகள் போடப்பட்டன. 1860லிருந்து 1875க்குள் கண்டத்தைக் கடக்க உதவும் இரயில் பாதைகள் ஏற்படுத்தப்பெற்றன. அதோடு, நியூயார்க் சென்ட்ரல் (New York Central), தி பென்சில்வேனியா (The Pensylvania), தி பால்டிமோர் அண்ட் ஓஹியோ (The Baltimore and Ohio), தி கிராண்டு ட்ரங்க் (The Grand Trunk) என்ற நான்கு முக்கிய இரயில் பாதைகள் அட்லாண்டிக் கடற்கரையிலிருந்து சிக்காகோவிற்கு நீட்டிக்கப்பட்டன. 1880-ல் இருந்த இருப்புப்பாதை களின் நீளம் 93261 மைல்களாகும். இது 1890-ல் 167191 மைல்களாக உயர்ந்தது. 1893-ல் ஒரு நெருக்கடி ஏற்பட்டு இரயில் பாதை வளர்ச் சியைப் பாதித்தது என்றாலும், 1898க்குப் பின்னர் இரயில்வேயில் சீரான வளர்ச்சி தொடர்ந்து நீடித்தது. 1900 வரையில் ஆண்டு தோறும் 5000 மைல்கள் புதிய இருப்புப் பாதைகள் அமைக்கப் பட்டன. அவ்வாண்டில் நாட்டிலிருந்த மொத்த இருப்புப் பாதை களின் நீளம் 198,964 மைல்கள். பயணிகளை ஏற்றிச் செல்வதைவிட, பொருள்களை ஏற்றிச் செல்வதுதான் இரயில்வே கம்பெனிகளுக்கு மிகுதியான வருவாயை ஈந்தது. 1914-ல் 252,000 மைல் நீளமுள்ள இரயில் பாதைகள் அமெரிக்காவில் இருந்தன.

### குறைபாடுகளும் கிரேஞ்சர் இயக்கமும்

முதல் உலகப்போருக்கு முன்னால் வரை, அமெரிக்காவில் இரயில் போக்குவரத்து இப்படி விரைவாக வளர்ந்துவந்த அதே நேரத்தில் இரயில்வே கம்பெனிகளிடம் பல குறைபாடுகளும் சில நேரங்களில் மலிந்து கிடந்தன. இரயில்வே கம்பெனிகளின் நிர்வாகிகள் கம்பெனிப் பணத்தை நேர்மையற்ற வழிகளில் செலவிட்டனர். கம்பெனிகளை அவர்கள் தமது சொந்த நலன்களை மேம்படுத்திக்கொள்வதற்காகப் பயன்படுத்தலாயினர். எனவே இரயில்வே தொழிலின் பங்குகளும் பத்திரங்களும் மதிப்பை இழந்தன. பங்குதாரர்களால் இலாப ஈவைப் பெற முடியவில்லை. கம்பெனிகளின் கடன்கள் 1883-ல் 7,500,000,000 டாலர்கள் இருந்தன. இதில் 2,000,000,000 டாலர்கள் அவசியமற்ற செலவுகளால் ஏற்பட்டவை. 1897ஆம் ஆண்டின் போது இரயில்வே கம்பெனிகளின் மொத்தப் பங்குகளில் 29.9 சத வீதமே இலாப ஈவைப் பெற்றது. கம்பெனிகளில் லஞ்ச ஊழல்கள் பரவலாகக் காணப்பட்டன. சாதகமான சாசனங்களைப் பெறு வதற்காகச் சட்டமன்ற உறுப்பினர்களைச் சரிக்கட்ட சில கம்பெனிகள் லஞ்சம் கொடுக்க முன்வந்ததோடு, லஞ்சம் கொடுப்பதற்காகவே ஒரு தொகையையும் ஆண்டுதோறும் ஒதுக்கலாயின. செழிப்பான காலங்களிலும் இக் கம்பெனிகள் சும்மாவிருக்கவில்லை. மிகுதியான

போட்டியில் ஈடுபட்டு, கட்டணங்களை அளவுக்கு மீறிக் குறைத்து இழப்புக்களை வலிய ஏற்படுத்திக்கொண்டன. உதாரணமாக, 1876-ல் சிகாகோவிலிருந்து நியூயார்க் நகரத்துக்கு ஒரு டாலரைக் கட்டணமாக ஏற்றுக்கொண்டு, ஒரு பெட்டி முழுவதும் இக் கம்பெனிகள் கால்நடைகளை ஏற்றிச் சென்றன. போட்டி மிகுந்த தடங்களில் ஏற்படும் இழப்பை ஈடு செய்வதற்காகப் போட்டியற்ற தடங்களில் கட்டணங்களை உயர்த்தின. இதனால் விவசாயிகள் பாதிக்கப்பட்டனர்.

ஆகையால், குடியானவர்கள், குறிப்பாக இல்லினாய், மின்னசோட்டா, அயோவா, விஸ்கான்சின் ஆகிய பகுதிகளில் இருந்த குடியானவர்கள் இரயில்வே கம்பெனிகளின் ஊழல்களை எதிர்த்துப் போராட்டம் நடத்தினர். இப்போராட்டத்தை 'கிரேஞ்சர் இயக்கம்' (Granger movement) என அழைப்பர். 1869 முதல் 1875 வரை இவ் வியக்கம் பெரும் போராட்டத்தை நடத்தியது. இரயில்வே கம்பெனிகள் நியாயமான, ஒரே மாதிரியான கட்டணங்களையே வசூலிக்க வேண்டும் என்ற சட்டத்தை முதன் முதலாக இல்லினாய் மாநிலம் 1870-ல் நிறைவேற்றியது. பின்னர் மின்னசோட்டா, அயோவா, விஸ்கான்சின் மாநிலங்கள் இதைப்போன்ற சட்டங்களை இயற்றின. இந்த கிரேஞ்சர் சட்டங்களால் இரயில்வே கம்பெனிகளின் கட்டணங்களுக்கு உச்சவரம்பு ஏற்படுத்தப்பட்டது; போட்டி மறையாமலிருக்க ஏற்பாடு செய்யப்பட்டது; அரசு அதிகாரிகளுக்குக் கிடைத்த இலவசப் பயணச் சலுகை ரத்து செய்யப்பட்டது. கிரேஞ்சர் சட்டங்களைத் தொடர்ந்து உண்டாகக்கூடிய ஊழல்களை நீக்க ஃபெடரல் அரசு பின்னர் சில சட்டங்களை இயற்றியது.

1887ஆம் ஆண்டு முதல், ஃபெடரல் அரசு, ரயில்வே நிறுவனங்களைக் கண்காணிப்பதற்கும் கட்டுப்பாடு செய்வதற்கும் ஆரம்பித்தது. அவ்வாண்டில் இயற்றப்பட்ட மாநிலங்களின் வாணிபச் சட்டம் (Interstate Commerce Act), இரயில்வே நிறுவனங்கள் கட்டணங்களை வசூலிப்பதில் பேதங் காட்டக்கூடாது; 'பூல்' (Pool) ஒப்பந்தங்களைச் செய்துகொள்ளக் கூடாது; கட்டணங்கள்பற்றிய தகவல்கள் அனைத்தையும் அச்சிட்டு மக்களுக்கு விளம்பரப்படுத்தவேண்டும். இச்சட்டத்தை அமல் செய்வதற்காக ஐவர் கொண்ட வாணிபக் குழு ஒன்று ஏற்படுத்தப்பட்டது. சட்டம் மீறி நடக்கும் இரயில்வே கம்பெனிகளை எதிர்த்து நீதிமன்றத்தில் நடவடிக்கைகளை எடுப்பது இக் குழுவின் பணி. குழுவின் முடிவுகளைக் கம்பெனிகள் ஏற்றுக் கொள்ளவேண்டும் என்று கம்பெனிகளை வற்புறுத்தும் அதிகாரம் இக்குழுவிடம் இருக்கவில்லை. நீதிமன்றத் தீர்ப்புக்களும் குழுவின் கரத்தை வலிவு படுத்துவதாக அமையவில்லை. 1887 முதல் 1905 வரை

நீதிமன்றத்திற்கு வந்த 16 வழக்குகளில் ஒன்றே ஒன்றுதான் குழுவிற்கு வெற்றியளித்தது. மேலும், இக்குழு, நீதிமன்றத்திற்குக் கீழ்ப்படிந்து அதன் முடிவுகளைச் செயலாற்றவேண்டிய நிலையிலிருந்தது. எனவே, 1887ஆம் ஆண்டுச் சட்டத்தால் எதையும் பரிபூரணமாகச் செய்துமுடிக்க முடியவில்லை; ஊழலையும் அகற்ற இயலவில்லை. சட்டத்தை எல்லா வழிகளிலும் கம்பெனிகள் மீறி நடந்தன. இரயில்வே கம்பெனிகள் பேதங் காட்டுதலைத் தொடர்ந்து கடைப்பிடித்து வந்தன. வாணிபக் குழுவால் இப்பிரச்சினைகளைத் தீர்க்கமுடியவில்லை: அதனிடம் போதிய அதிகாரங்களும் இருக்கவில்லை; இருந்த அதிகாரங்களையும் அது உரிய நேரத்தில் பயன்படுத்திக்கொள்ளவில்லை. 'திறமையின்மைக்கும், கால தாமதமான நடவடிக்கைக்கும் இக்குழு ஓர் எடுத்துக்காட்டாக இருந்தது'. (நோல்ஸ்)

### அரசின் கட்டுப்பாடு அதிகரிப்பு

இரயில்வே நிறுவனங்களில் மண்டிக்கிடந்த குறைபாடுகளைக் களைந்தெறிவதற்கு ஃபெடரல் அரசு மற்றுமொரு சட்டத்தை இயற்றியது. அதன் பெயர் எல்கின்ஸ் சட்டம் (Elkins Act). அது 1903-ல் இயற்றப்பட்டது. இச் சட்டப்படி, முறையற்ற கட்டணங்களை வசூலிக்கும் இரயில்வே அதிகாரிகளே அல்லாது, இரயில்வே கம்பெனிகள் மற்றும் கப்பல் கம்பெனிகள்மீது வாணிபக் குழு வழக்குத் தொடரலாம். 1906-ல் இயற்றப்பட்ட ஹேபன் சட்டத்தின் (Hepburn Act) கீழ், குழுவின் அதிகாரங்கள் விரிவு செய்யப்பட்டன. பயணிகளுக்குத் தேவையான சில முக்கிய வசதிகளை இரயில் வண்டிகளில் செய்து கொடுக்குமாறு கம்பெனிகளை இக்குழு வற்புறுத்தலாம் என இச் சட்டம் கூறியது. 1910ஆம் ஆண்டின் மன்-எல்கின்ஸ் சட்டம் (Mann-Elkins Act) மேலும் சில அதிகாரங்களை வழங்கியது. இரயில்வே வழக்குகளை விசாரிப்பதற்கென்று தனி நீதிமன்றங்களை இச்சட்டம் ஏற்படுத்திக் கொடுத்தது. புதிய கட்டணங்களைப்பற்றி விசாரிக்கும்போது, 6 மாத காலத்திற்கு அவை அமலில் இருக்கக் கூடாதென்று உத்தரவிடும் அதிகாரத்தைக் குழுவிற்கு இச் சட்டம் வழங்கியது.

1913-ல் மாநிலங்களின் வாணிபச் சட்டம் திருத்தம் பெற்றது. இதன்படி எல்லா இரயில்வே கம்பெனிகளின் சொத்துக்களின் மதிப்புப்பற்றிய தகவல்களை வாணிபக்குழு அரசுக்குத் தெரிவிக்கவேண்டும். 1913ஆம் ஆண்டின் நியூலாண்ட்ஸ் சட்டம் (Newlands Act), இரயில்வே பூசல்களை நிறுவனங்கள் தமக்குள்ளாகவே சமாதான முறையில் தீர்த்துக்கொள்ளலாம் எனக் கூறிற்று. 1916-ல் இயற்றப்பட்ட

ஆடம்சன் எட்டுமணி நேர வேலைச் சட்டத்தின் (Adamson Eight-Hour Act) மூலம், அரசு இரயில்வே தொழிலாளரின் வேலை நேரத்தை நிர்ணயிக்கும் பணியில் ஈடுபட்டது.

இவ்வாறு, அரசு, இரயில்வே கம்பெனிகளைக் கட்டுப்படுத்த ஒரு புறம் முயன்றுகொண்டிருந்த அதேபோது, இக் கம்பெனிகள் கடுமையான போட்டியின் கேடுகளிலிருந்து தம்மை விடுவித்துக்கொள்ளும் குறிக்கோளில் இணைப்பு முறையின் (Consolidation) உதவியை நாடலாயின. 1880 முதல் இணைப்பு நடவடிக்கை விரைவாகப் பரவிற்று. பெரிய இரயில்வே நிறுவனங்களின் சொந்தக்காரர்கள் சிறிய நிறுவனங்களின் பங்குகளை வாங்கிக்கொண்டோ அல்லது 'லீசு'க்கு எடுத்துக்கொண்டோ அந் நிறுவனங்களைத் தமது துணைக் கம்பெனிகளாக்கிக் கொண்டனர். ஹாரிமன் நிறுவனமானது யூனியன் பசிபிக், தென் பசிபிக் ஆகிய நிறுவனங்களைத் தன்னுடன் இணைத்துக்கொண்டது. கிரேட் நார்தர்ன் கம்பெனியை மார்கன்-ஹில் நிறுவனம் தன்னுடன் இணைத்துக்கொண்டது. ஹாரிமன் - நிறுவனமும், மார்கன்-ஹில் நிறுவனமும் பின்னர் வடக்குப் பத்திரக் கம்பெனி (Northern Securities Company) என்ற ஒரு ஹோல்டிங் கம்பெனியை ஆரம்பித்து கிரேட் நார்தர்ன், நார்தர்ன் பசிபிக் ஆகிய கம்பெனிகளை வாங்கிக்கொண்டன. இதன் விளைவாக வடமேற்கு பிராந்தியத்தில் போட்டி அறவே மறைந்தது. ஆனால், சிறிது காலத்திற்குள் ட்ரஸ்ட் எதிர்ப்பு கோஷங்கள் எழுந்து, ட்ரஸ்ட் எதிர்ப்பு இயக்கம் வளர்ந்து பெருகவே, அரசு, ஷெர்மான் சட்டப்படி இவ்விணைப்பை எதிர்த்துத் தலைமை நீதிமன்றத்தில் வழக்குத் தொடர்ந்தது. 1904-ல் தலைமை நீதிமன்றம் இவ்விணைப்பைக் கலைக்கவேண்டுமென்று உத்தரவிட்டது. 1906ஆம் ஆண்டில் இணைப்பு நடவடிக்கை உச்சநிலை எய்திற்று. நாட்டிலிருந்த 228,000 மைல் நீள இரயில்பாதைகளில் மூன்றில் இரண்டு பங்கு 8 நிறுவனங்களின் வசம் முடங்கின. இந் நிறுவனங்களின் பெயர்கள் வருமாறு: வேண்டர்பில்ட், ஹில், மார்கன், பென்சில்வேனியா, கூல்டு (Gould), ஹாரிமன், மூர், ராக்பெல்லர் ஆகியவை. வேண்டர்பில்ட் நிறுவனத்திடம் மட்டும் 21353 மைல் நீள இரயில் பாதைகளிருந்தன. இரயில் போக்குவரத்து வருவாய்களில் 85 சதவீதம் இக்கம்பெனிகளுக்கே சென்றது.

1914ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட கிளேட்டன் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டப்படி (Clayton Anti-Trust Act), ஒரு நிறுவனம் மற்றொரு நிறுவனத்தின் பங்குகளை நேரிடையாகவோ அல்லது மறைமுகமாகவோ வாங்குதல் கூடாது. ஏனென்றால், அவ்வாறு வாங்கினால் இரு நிறுவனங்களுக்கிடையே இருக்கக்கூடிய போட்டி மறைந்துவிடும் எனக் கருதப்பட்டது. கிளேட்டன் டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டம்

அமலுக்கு வருமுன்பே பெரும்பாலான இணைப்புக்கள் முடிவுற்று விட்டனவாதலால் இவற்றைக் கலைக்க இயலவில்லை.

### முதல் உலகப் போரின்போதும் அதற்குப் பின்னரும்

முதல் உலகப்போர் ஆரம்பித்தவுடன் அரசுக் கட்டுப்பாடுகள் கடுமையாயின என்றாலும், இரயில்வே நிறுவனங்களின் திறமையற்ற நிர்வாகமும், வீணான செலவுகளும் தொடர்ந்து நீடிக்கவே செய்தன. தொழிலாளர்களும் அவ்வப்போது பூசலை உண்டுபண்ணினர். எனவே, இரயில்வேயில் மிதமான வளர்ச்சியே இருந்தது. செலவுகள் மிகுதியாகவும் இலாபங்கள் குறைவாகவும் இருந்தன. பல தடங்களில் வண்டிகள் பழுதுபார்க்கப்படாமலும் புதுப்பிக்கப்படாமலும் இருந்தன. புதிய இரயில் பாதைகளையமைப்பதில் நிறுவனங்கள் ஆர்வம் காட்டவில்லை. இருக்கின்ற தடங்களில் இலாபம் கிடைத்தால் போதும் என்ற நிலையில் அவை இருந்தன. இழப்புக்களைத் தவிர்க்கும் நோக்கத்தில் கட்டணங்களை உயர்த்தவேண்டும் என்றும் கம்பெனிகள் கேட்டுக்கொண்டன. மிகுந்த கால தாமதத்திற்குப் பின்னர் கட்டண உயர்வுக்கு அரசு இசைந்தது.

அமெரிக்கா, முதல் உலகப் போரில் ஈடுபட்டவுடன், இரயில்வே நிர்வாகத்தை ஃபெடரல் அரசு எடுத்துக்கொள்ள விரும்பியது 1818 ஆம் ஆண்டு, ஜனவரி மாதம் முதல் தேதி முதல், இரயில்வே நிறுவனங்கள் இரயில்பாதை நிர்வாகத்துறை (Railroad Administration) யின் கீழ் இயங்கவாரம்பித்தன. இரயில் போக்குவரத்தோடு தொடர்புடைய அத்தனை விஷயங்களையும் இந்தத்துறை கவனித்துக் கொண்டது. இரயில் பாதை நிர்வாகத் துறையானது கருவூலச் செயலர் மக்அடூ (McAdoo) தலைமையின் கீழ் வெற்றிகரமாகவே செயல்பட்டது. 1918 ஆம் ஆண்டு மார்ச் மாதம் இயற்றப் பட்ட ஒரு சட்டம், 1914 முதல் 1917 வரையிலான மூன்று வருடங்களின் சம்பாத்தியங்களில் ஒரு குறிப்பிட்ட தொகையை ஒவ்வொரு இரயில்வே கம்பெனிக்கும் அரசு கொடுக்கும் என்ற உத்தரவாதத்தை யளித்தது. இரயில்வே நிர்வாகத்தை அரசு ஏற்றுநடத்திய முதல் இரு ஆண்டுகளில் அரசுக்கு நிதி பற்றாக்குறை ஏற்பட்டது. என்றாலும், பின்னர் அது சமாளிக்கப்பட்டது. இரயில்வே நிறுவனங்கள் அரசின் நிர்வாகத்திலிருந்தபோதுதான் இரயில்வே தளவாட இருப்பு அதிகமாயிற்று; அதோடுகூட முதன் முதலாகத் தொழில் சீரமைப்பும் (Rationalisation) அறிமுகப்படுத்தப்பட்டது. வீணான செலவுகள் குறைந்தன. போட்டி மனப்பான்மை மறைந்தது. கணக்குகளை முறையாக வைத்திருக்கும் வழக்கம் நடைமுறைக்கு வந்தது.

1920 ஆம் ஆண்டு மார்ச் மாதம் முதல் தேதி இயற்றப்பட்ட போக்குவரத்துச் சட்டப்படி (Transportaion Acts) இரயில்வே நிறுவனங்களை அரசு அவற்றின் சொந்தக்காரர்களுக்குத் திருப்பியளித்தது. இச் சட்டம் மாநிலங்களின் வாணிபக் குழுவின் அதிகாரங்களை விரிவு செய்தது. குழுவின் உறுப்பினர் எண்ணிக்கை ஐந்திலிருந்து ஏழுக்கு உயர்ந்தது. இரயில்வே நிறுவனங்கள் அனைத்தையும் அது கட்டுப்பாடு செய்யலாம். இலாபகரமற்றதாயிருக்கும் புதிய பாதைகளை நிறுத்திவிடலாம். கட்டணங்களை நிர்ணயிக்கும் பொறுப்பும் இக்குழுவையே சார்ந்தது. போட்டி, அளவுக்கு மீறிப்போனால் அதைக் கட்டுப்படுத்துவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளவேண்டும். ஒரு குறிப்பிட்ட அளவிற்கு அதிகமான வருமானங்களைப் பெறுகின்ற இரயில்வே நிறுவனங்கள் அவ் வருமானத்தின் ஒரு சிறு தொகையை வாணிபக்குழுவிற்குக் கொடுத்துவிடவேண்டும். இத்தொகை, இலாபகரமற்ற நிலையிலுள்ள நிறுவனங்களுக்குக் கடனாக அளிக்கப்படும். இன்னலுற்ற நிறுவனங்களுக்கு இது பேருதவியாயிருந்தது. தொழிற் பூசல்களைத் தீர்ப்பதற்கான சில வழி முறைகளும் 1920 ஆம் ஆண்டுச் சட்டத்தில் இடம் பெற்றிருந்தன. அடுத்து, இரயில்வே ஒருங்கிணைப் புத்திட்டம் ஒன்றைத் தீட்டுமாறும் அரசு வாணிபக் குழுவைக் கேட்டுக்கொண்டது. 1929-ல் ஒருங்கிணைப்புத்திட்டம் ஒன்றைக் குழு தயாரித்தது. ஆனால், இது செயல்படுத்தப்பட முடியவில்லை. காரணம் இதற்குப் பலத்த எதிர்ப்புக்கள் எழுந்தன. கிழக்கத்திய இரயில்வே கம்பெனிகள் இத் திட்டத்தைக் கடுமையாக எதிர்த்து நின்றன.

1920 ஆம் ஆண்டுச் சட்டத்தின் காரணமாக இரயில்வே நிறுவனங்கள் 1920 முதல் 1929 வரை செழிப்பு நிலையில் இருந்தன. இரயில்வே நிர்வாகத்தில் நல்ல முன்னேற்றம் காணப்பட்டது. பயணிகளுக்குத் தேவையான வசதிகள் செய்துகொடுக்கப்பட்டன. 1921—1940 காலப் பகுதியில் தளவாடம் மற்றும் கட்டமைப்புக்காக இரயில்வே நிறுவனங்கள் 11 பில்லியன் டாலர்களைச் செலவிட்டன; நிகர முதலீடு 5 பில்லியன் டாலர்களுக்கும் மிகுதியாயிருந்தது. 1925-ல் டீசல் மின்சார இரயில் வண்டிகள் அறிமுகப்படுத்தப்பட்டன. மின்சாரவண்டிகள் நீராவிவண்டிகளை எதிர்த்து வெற்றிகரமாகப் போட்டியிட்டுப் பயணிகளைக் கவர்ந்தன. மின்சார வண்டிகள் நகர மக்களின் தேவையைப் பூர்த்தி செய்தன. மேலும், அவற்றை ஓட்டுவதும் சிக்கனமானது. 1927 முதல் இரயில்வண்டிகளில் குளிர் சாதன வசதிகள் செய்து கொடுக்கப்பட்டன.

## இரண்டாவது உலகப்போரும் அதற்குப் பின்னரும்

முதல் உலகப் போரின் அனுபவம் காரணமாக, இரண்டாவது உலகப் போர் சமயத்தில் இரயில்வே நிறுவனங்கள் திறமையாகச் செயல்பட்டன. நிறுவனங்களுக்கிடையே நல்ல ஒத்துழைப்பு காணப் பட்டது. போக்குவரத்து வசதிகளைப் பெருக்குவதற்கும், போருக்குத் தேவையான பண்டங்களைத் துரிதமாகக் கொண்டு போவதற்கும் இரயில்வே நிறுவனங்கள் நன்கு பாடுபட்டன. 98 சதவிகித போர் வீரர்களும், 91 சதவிகித போர்த் தளவாடங்களும் பெரும்பாலும் இரயில்வே மூலம் தான் ஓரிடத்திலிருந்து மற்றொரிடத்திற்குக் கொண்டு செல்லப்பட்ட ன.

இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர், இரயில்வேநிறுவனங் கள் அரசு நிர்வாகத்தின்கீழ் வந்தன. இரயில் போக்குவரத்து முழுவ தும் அரசின் கட்டுப்பாட்டுக்குட்பட்டது. 1940-ஆம் ஆண்டின் போக்கு வரத்துச்சட்டம், எதிர்காலத்தில் அரசே எல்லாவகைப் போக்குவரத் துச் சாதனங்களையும் கட்டுப்படுத்தி, அமெரிக்க மக்களின் தேவை களுக்கேற்பவும், நாட்டின் நிலைமைக்கேற்பவும் அவற்றை வளர்த்து வரும் என அறிவித்தது. இரயில்வே நிறுவனங்களை நிர்வகிக்கும் பொறுப்பு மாநிலங்களில் வாணிபக் குழுவிற்கு விடப்பட்டது. 1940ஆம் ஆண்டுச் சட்டத்தில் மாறுதல்கள் ஏதும் தேவையா என் பதை அறியும்பொருட்டு 1954-ல் குடியரசுத் தலைவர் ஐசநோவர் ஒரு கேபினட் கமிட்டியை நியமித்தார். போட்டி நிலவரங்களை அடிப் படையாகக்கொண்டு இரயில்வே கட்டணங்கள் நிர்ணயிக்கப்பட வேண்டுமென இக்கமிட்டி பரிந்துரைத்தது.

அண்மைக் காலங்களில் அமெரிக்கஇரயில்வே அமைப்பு, பல பிரச் சினைகளுக்கு உள்ளாகியிருக்கிறது. சாலைப் போக்குவரத்து, விமானப் போக்குவரத்து, கால்வாய்ப் போக்குவரத்து ஆகியவை இரயில் போக்குவரத்துடன் கடுமையாகப் போட்டியிட்டு வருகின்றன. இருப தாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் நாட்டுப் போக்குவரத்தில் 60 சத வீதம் இரயில்வேமூலம் நடைபெற்றது. தற்போது இது 50 சதவீதத் திற்கும் குறைவாயிருக்கிறது. விமானப் போக்குவரத்து நாள்தோறும் அதிகரித்து வருகிறது. இதற்கு முக்கியக் காரணம் விமானத்தில் பயண நேரம் மிகவும் குறைவாயிருப்பதேயாம். நிலக்கரி போன்ற கனமான பொருள்களை அனுப்புவதற்குத் தற்போது மக்கள் பெரும்பாலும் கால்வாய்களைப் பயன்படுத்தி வருகின்றனர். இது சிக்கனமானது என அவர்கள் கருதுகின்றனர். இரயில்வே அமைப்பை நோக்கியுள்ள மற்றொரு பிரச்சினை, அரசின் அளவுக்கு மீறிய கட்டுப்பாடும் கண் காணிப்பும்ஆகும். இதனால் இரயில்வே அமைப்பில் மெத்தனம்

வளர்ந்து புத்தமைப்புக்களை அறிமுகப்படுத்தும் ஆர்வம் இல்லாமல் போய் விட்டது என நம்பப்படுகிறது. நாட்டு மக்களின் நலன்களை முன்னிட்டு இலாபகரமற்ற தடங்களில்கூட அரசு இரயில்களை விட்டுக் கொண்டிருக்கிறது. இதனால் பல நேரங்களில் இழப்புக்கள் நேர்கின்றன. இழப்புக்களைச் சரிக்கட்ட அரசு உதவிக் கொடைகளையளித்து வருகிறது என்றாலும் கூடுதலான இழப்புக்களைத் தரும் தடங்களில் இரயில்களை நிறுத்திவிடலாம் என்ற யோசனையைப் பலர் தெரிவிக்கிறார்கள்.

## கப்பல் போக்குவரத்து

*தொடக்க கால வளர்ச்சி:* காலனிகள் இருந்த காலத்திலேயே கப்பல் கட்டும் தொழில் பரவலாக இருந்தது. காலனிகளில் தயாரான கப்பல்கள் இங்கிலாந்துக்கு விற்கப்பட்டன. சுதந்திரப் புரட்சி தொடங்குவதற்குமுன்னர் நியூ இங்கிலாந்து வாசிகளிடம் சுமார் 2000 கப்பல்கள் இருந்தன. 18ஆம் நூற்றாண்டின் இறுதியில் அமெரிக்கக் கப்பல்கள் சீனா வரையில் சென்று வந்தன. 1789-ல் காண்டன் துறைமுகத்திற்கு 46 வெளிநாட்டுக் கப்பல்கள் சென்றன; அவற்றில் 18 கப்பல்கள் அமெரிக்காவைச் சேர்ந்தவை. அவ்வாண்டிலே தான் தோல் வகைகளைத் தேடி நியூ இங்கிலாந்து மாலுமிகள் வடமேற்குக் கடற்கரையை நோக்கிச் சென்றனர். அவர்கள் 1787-1790 ஆண்டுகளில் ஓரிகன், சைனா ஆகிய பகுதிகளை நோக்கித் தமது கடற் பயணத்தை மேற்கொண்டனர். இதன் விளைவாக, 'நியூ இங்கிலாந்து—வட மேற்கு—சைனா' வர்த்தகம் பிறந்து செழித்தது. நியூ இங்கிலாந்து வர்த்தகர்கள், தமது பொறிவழிப் பொருள்களை வட மேற்கத்தியரிடம் விற்றுவிட்டு, அவற்றிற்குப் பதிலாகத் தோல் வகைப் பண்டங்களைப் பெற்று, அவற்றை சீனாவுக்கு எடுத்துச்சென்று அங்கே கீழை நாட்டுப் பொருள்களுக்காகப் பரிவர்த்தனை செய்து கொண்டனர். தூரக் கிழக்குப் பகுதியுடன் வணிகத் தொடர்பு கொண்டமை மூலமாக அமெரிக்கக் கப்பல் போக்குவரத்தில் ஒரு பொற்காலம் தோன்றியது எனலாம். இலாபம் பெறும் வாய்ப்பினை நல்கும் ஒவ்வொரு துறைமுகத்தினுள்ளும் அமெரிக்க வர்த்தகர்கள் அடி எடுத்து வைத்து அமெரிக்கக் கொடியைப் பறக்கவிட்டனர். பண்டங்களைக்கொண்டு செல்வதற்கான கப்பல்களை அவர்களே தயாரித்துக்கொண்டனர்; கப்பல்களைத் தமது ஏஜண்டுகளின் பொறுப்பில் அனுப்பி வைத்தனர். விற்பனை, மற்றும் வாங்கற்பாடுகளை இந்த ஏஜண்டுகள் கவனித்துக்கொண்டனர்.

அரசியல் சட்டம் நடைமுறைக்கு வந்தமை, பொதுக்கடன் வசதி ஏற்படுத்தப் பெற்றமை, அயல்நாட்டுக் கப்பல்களின்மீது எடை

விதிக்கப்பட்டமை, ஐரோப்பியப் போர்களின் விளைவாக அமெரிக்கப் பொருள்களுக்குத் தேவை பெருகியமை ஆகியவற்றின் காரணமாக அமெரிக்கக் கப்பல் போக்குவரத்து சிறப்பாக அதிகரித்தது. அயல் நாடுகளுக்கு ஏற்றிச் செல்லும் பண்டங்களின் எடை 1789-ல் 1,23,893 டன்களாக இருந்தது. 1810ஆம் ஆண்டில் 98,71,000 டன் களாக உயர்ந்தது. 1789-ல் இயற்றப்பட்ட ஒரு சட்டம் கப்பல் கட்டுந் தொழிலுக்கு நல்ல பாதுகாப்பு வழங்கியது. அமெரிக்கக் குடிமக்க ளால் தயாரிக்கப்பட்டு, அவர்கள் கண்காணிப்பிலேயே இருந்துவரும் கப்பல்களில் கொண்டுவரப்படும் இறக்குமதிகள்மீது, இச் சட்டத்தின் படி குறைவான வரிகள் விதிக்கப்பட்டன. 1789ஆம் ஆண்டிலேயே இயற்றப்பட்ட மற்ெருரு சட்டத்தின்படி, அமெரிக்கர்களால் தயாரிக் கப்பட்டு, அவர்களுக்கே சொந்தமாக உள்ள கப்பல்கள் அமெரிக்கத் துறைமுகங்களினுள் நுழையும்போது, டன் ஒன்றுக்கு 6 சென்ட்டுகளை வரியாகச் செலுத்தினல் போதுமானது; அமெரிக்கர்களால் தயாரிக் கப்பட்டு அயல் நாட்டுக்காரர்களுக்குச் சொந்தமாயுள்ள கப்பல்கள் அமெரிக்கத் துறைமுகங்களினுள் நுழையும்போது டன் ஒன்றுக்கு 30 சென்ட்டுகளை வரியாகச் செலுத்தவேண்டும். ஆனல், அயல்நாட்டி னரால் தயாரிக்கப்பட்டு, அவர்களுக்கே சொந்தமாயுள்ள கப்பல்கள் அமெரிக்கத் துறைமுகங்களினுள் நுழையும்போது டன் ஒன்றுக்கு 50 சென்ட்டுகளை வரியாகச் செலுத்தவேண்டும். தொடக்கத்தில் கப்பல் தொழிலின் வளர்ச்சி பெரும்பாலும் தூரக் கிழக்கு வர்த்த கத்தைச் சார்ந்திருந்தது. பின்னர், ஐரோப்பிய நாடுகள் நெப்போ லியப் போர்களில் ஈடுபட்டபோது, எங்கெங்கு வியாபார வாய்ப்புக் கள் இருந்தனவோ அங்கெல்லாம் அமெரிக்கக் கப்பல் வியாபாரிகள் சென்றனர், எனவே, இங்கிலாந்துக்கு அடுத்தபடியாக அமெரிக்க வெளிநாட்டு வர்த்தகத்தின் மதிப்பு உயர்ந்திருந்தது.

ஆனல், 1790-க்குப் பின்னர் சுமார் இருபதாண்டு காலம் அமெ ரிக்கக் கப்பல்துறை வளர்ச்சிக்குப் பலவகையான சோதனைகளும் இடையூறுகளும் ஏற்பட்டன. முதலில் பிரிட்டிஷ் கப்பல்களின் போட்டி யைச் சமாளிக்கவேண்டியிருந்தது. அமெரிக்கக் கப்பல்துறை வளர்ச்சி யைத் தடுக்கும்பொருட்டு, பிரிட்டன், காலனிகளுடன் நடைபெறும் வர்த்தகத்தைத் தடை செய்தது. மேலும், அமெரிக்கக் கப்பல்களில் வேலை செய்துவந்த பிரிட்டிஷ் மாலுமிகளைப் பலவந்தமாக அகற்றி பிரிட்டிஷ் கப்பல்களில் வேலைக்கமர்த்தவும் முயன்றது. இதையடுத்து பிரான்சும் அமெரிக்காவுடன் மோத வாரம்பித்தது. இங்கிலாந் துடன் நடைபெறும் போர்களில் அமெரிக்கா தன்னை ஆதரிக்கவில்லை என்ற ஆத்திரத்தில், பிரான்சு 1798 முதல் 1800 வரையில் அமெரிக்கக் கப்பல்களைத் தாக்குவதில் ஈடுபட்டது. இத்தகைய எதிர்ப்புக்களின் மத்தியிலும் அமெரிக்க வர்த்தகக் கப்பல் தொழில் நன்கு செழித்து

வந்தது. போரில் தீவிரமாக ஈடுபட்டிருந்த ஐரோப்பா, தனக்கு வேண்டியிருந்த உணவுப் பண்டங்களுக்கும், பருத்தி, கம்பளி, தோல் ஆகிய பொருள்களுக்கும் அமெரிக்காவையே நம்பி யிருந்தது. இவற்றை எடுத்துச் செல்வதில் அமெரிக்கக் கப்பல்களுக்குக் கூடுத லான இலாபங்கள் கிடைத்தன. கப்பல் கட்டுந் தொழிலும் சிறப் பாக வளர்ந்தது.

இச்செழிப்பு நிலைக்கு இங்கிலாந்திஞல் குந்தகம் ஏற்பட்டது. 1801 முதல் 1807 வரையிலான காலப்பகுதியில், எல்பி (Elbe)யிலிருந்து பிரஸ்ட் (Brest) வரையில் உள்ள வட ஐரோப்பாவைச் சுற்றிலும் வாணிபத் தடை நிலவும் என பிரிட்டிஷ் அரசு அறிவித்தது. பிரிட்டிஷ் துறைமுகத்திற்கு வந்து நின்று சுங்க வரிகளைச் செலுத்தாமல் பிரான்சு நாட்டுத் துறைமுகங்களையோ அல்லது அதன் நேச நாடு களின் துறைமுகங்களையோ நடுநிலை நாடுகளின் கப்பல்கள் நெருங்க முடியாது என்று அது கூறியது. பிரிட்டிஷ் தீவுகளைச் சுற்றி வாணிபத் தடை விதித்திருப்பதாகவும், இதனை மீறும் கப்பல்களைக் கைப்பற்ற நேரும் எனவும் பிரான்சு பதில் விடுத்தது. இவ்விரு நாடுகளின் வாணி பத் தடைகளும் சரிவர நடைமுறைப்படுத்தப்படவில்லை என்றாலும், இவற்ருல் அமெரிக்கக் கப்பல்களுக்கு மிகுதியான இழப்புக்கள் ஏற்பட் டன; அமைதி நாட்டங் கொண்ட ஜெபர்சன், வாணிபத் தடை மூலம் ஐரோப்பாவை வழிக்குக் கொண்டுவர முயன்ருர். 1807ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட வாணிபத் தடைச் சட்டத்தின்படி, வெளி நாட்டுத் துறைமுகங்களுக்கு அமெரிக்கக் கப்பல்கள் செல்வது தடை செய்யப்பட்டது. ஆஞல், வாணிபத்தில் ஈடுபட்டுள்ள அமெரிக்கக் கப்பல்கள் மீண்டும் அமெரிக்காவுக்கே திரும்பி வந்துவிடும் என்று வாக்குறுதியளித்து, கப்பல்களில் ஏற்றியுள்ள சரக்குகளின் மதிப்பைப் போல் இருமடங்கு மதிப்புள்ள பத்திரங்களைக் கப்பல் சொந்தக் காரர்கள் கொடுத்தால், கடற்கரையோர வர்த்தகத்தை அரசு அனு மதிக்கும் என்று இச்சட்டம் கூறியது. பிரிட்டனைப் பணிய வைப்ப தற்குப் பதிலாக இச்சட்டம் அமெரிக்கக் கப்பல் தொழிலைத்தான் மிகவும் பாதித்தது. இச்சட்டத்திஞல் அமெரிக்க நாட்டின் ஏற்றுமதி களும் இறக்குமதிகளும் குறைந்தன. கப்பல்கள் செயலற்றுப் போயின. வேலையின்மையும் இழப்பும் அதிகரித்தன. வாணிபத் தடைச் சட்டம் காரணமாக, 125,00,000 டாலர் மதிப்புள்ள வருமா னத்தை அமெரிக்கக் கப்பல்கள் இழந்தன; சுமார் 55,000 மாலுமி களும், 10,000 தொழிலாளர்களும், மற்றவர்களும் வேலை வாய்ப்புக் களை இழந்தனர்.

### 19ஆம் நூற்ருண்டில் நிலைமை

வாணிபத் தடைச் சட்டத்திஞல் கப்பல் முதலாளிகளுக்கு மிகுதியான இழப்புக்கள் ஏற்பட்டதிஞல், இச்சட்டத்திற்குப் பலத்த எதிர்ப்புக்கள் எழுந்தன. கப்பல் முதலாளிகளின் கோரிக்கைகளுக்கிணங்கி அமெரிக்க அரசு, 1809ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் வாணிபத் தடைச் சட்டத்தை ரத்து செய்துவிட்டு வாணிபத் தொடர்பின்மைச் சட்டத்தை (Non intercource Act) இயற்றியது. இச்சட்டப்படி அமெரிக்கக் கப்பல்கள் இங்கிலாந்து, பிரான்சு ஆகிய நாடுகளுடனும், அவற்றின் ஆதிக்கத்திலுள்ள நாடுகளுடனும் உறவுகொள்ளக்கூடாது என அறிவிக்கப்பட்டது. இச்சட்டமும் 1810ஆம் ஆண்டு ரத்தாகி, அதற்குப் பதிலாக மேகன் சட்டம் என்ளுெரு புதிய சட்டம் அமல் செய்யப்பட்டது. இச்சட்டப்படி அமெரிக்கக் கப்பல்களுக்கு எதிராக நிறைவேற்றியுள்ள பிரகடனங்களை இங்கிலாந்தோ அல்லது பிரான்சோ திரும்பப் பெற்றுக்கொண்டால், அரசு தனது நிலையை மறு பரிசிலனை செய்யும் எனக் கூறப்பட்டது. உடனே பிரான்சு தனது உத்தரவுகளை ரத்து செய்தது. ஆஞல் இங்கிலாந்து மட்டும் பிடிவாதமாயிருந்தது. பிரான்சும் பெயரளவில்தான் உத்தரவுகளை ரத்து செய்திருந்தது. இருந்தபோதிலும் அமெரிக்கக் கப்பல் தொழில் இதஞல் பெருமளவில் பாதிக்கப்படவில்லை. வர்த்தகம் ஓரளவிற்குத் திருப்திகரமாயிருந்தது.

1812-ல் இங்கிலாந்துடன் ஏற்பட்ட போரிஞல் அமெரிக்கக் கப்பல் துறை மிகவும் பாதிக்கப்பட்டது. போர் முடிவுறும் சமயத்தில் 1000 கப்பல்களைக்கொண்ட இங்கிலாந்துக் கப்பற்படை, அமெரிக்கக் கடற்கரை முழுவதையும் சுற்றி முற்றுகையிட்டு, 1400 வணிகக் கப்பல்களையும் மீன் பிடிக்கும் கப்பல்களையும் கைப்பற்றியது. அமெரிக்கக் கப்பல்கள் இங்கிலாந்திற்குச் சொந்தமான 254 போர்க் கப்பல்களையும் வணிகக் கப்பல்களையும் கைப்பற்றின. 1814ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் சமாதானம் ஏற்பட்டது. அதற்குப் பின்னர் வாணிபத் தடைகளகன்றன. கப்பல் சரக்குகளின் எடை 8,24,300 டன்களுக்கு உயர்ந்தது. ஏற்றுமதிகளின் மதிப்பு 93,281,100 டாலர்களாக உயர்ந்தது. போருக்குப் பின்னர் பரஸ்பர பரிமாற்றக் கொள்கையின் அடிப்படையில் கப்பல்துறையை வளர்க்க அரசு விரும்பிற்று. மற்ற நாடுகள் பேதங் காட்டும் வரிகளை விதிக்காமலிருந்தால், அமெரிக்காவும் இறக்குமதிகளின்மீது பேதங் காட்டும் வரிகளை விதிக்காது என 1815ஆம் ஆண்டின் ஒரு சட்டம் கூறியது. 1817-ல் நிறைவேறிய மற்ளுெரு சட்டம், அமெரிக்கக் கப்பலைத் தவிர வேறு எந்தக் கப்பலின் மூலமும் வெளி நாட்டுத் துறைமுகத்திலிருந்து இறக்குமதியாகும் பண்டங்களைத் தடை செய்தது. அதேபோல், எந்த நாட்டிலிருந்து

பண்டங்கள் வருகின்றனவோ அந்த நாட்டுக் கப்பல்களைத் தவிர, வேறு எந்தக் கப்பலின் மூலமும் இறக்குமதியாகும் பண்டங்களை இச் சட்டம் தடை செய்தது. அமெரிக்கக் கப்பல்கள்மீது மற்ற நாடுகள் விதித்த தடைகள் நீக்கப்பெற்றால், மற்ற நாட்டுக் கப்பல்கள் மீதான தடைகளை நீக்குவது என அரசு முடிவெடுத்தது. இதைத் தொடர்ந்து, இங்கிலாந்து, பிரான்சு, பிரஷ்யா ஆகியவற்றுடன் பரஸ்பர பரிமாற்ற உடன்படிக்கைகள் ஏற்பட்டன. பின்னர் பல ஐரோப்பிய நாடுகளுடனும், தென் அமெரிக்காவுடனும் உடன்படிக்கைகள் ஏற்பட்டன. இவற்றின் விளைவாக, 1820 முதல் 1830 வரையில் நாட்டில் செழிப்பு நீடித்தது. கப்பல் வாணிபத் தொழிலும் சிறந்து விளங்கியது. 1815-லிருந்து 1840-க்குள் 540,000 டன் எடையுள்ள கப்பல்களை அமெரிக்கர்கள் வெளி நாட்டவருக்கு விற்றனர்.

1840 முதல் 1860 வரையிலான காலப் பகுதியில் அமெரிக்கக் கப்பல் தொழில் ஒரு பூரிப்பு நிலையை எய்தியது எனலாம். இக் காலப் பகுதியில் அமெரிக்காவின் வாணிபமே அல்லாது, உலக வாணிபமும் துரிதமாகப் பெருகிற்று. கலிஃபோர்னியாவில் தங்கம் கண்டுபிடிக்கப்பட்டதைத் தொடர்ந்து பசிபிக் பகுதியில் போக்குவரத்து மேன் மேலும் அதிகரித்துச் சென்றது. கப்பல் போக்குவரத்துக்குத் தேவை உயர்வதைக் கண்ட அமெரிக்கக் கப்பல் துறையினர் அத்தொழிலைப் பன்மடங்கு பெருக்கினர். 1820 முதல் 1830 வரையில் கட்டப்பட்ட கப்பல்களின் பருமனைப்போல், மூன்று மடங்கு அதிகமான பருமனையுடைய வாணிபக் கப்பல்களை 1850-1860ஆம் ஆண்டுகளில் கட்டினர். மரக் கப்பல்களுக்குப் பதிலாக இரும்புக் கப்பல்களையும் எஃகுக் கப்பல்களையும் கட்டினர். கப்பல்களில் பாய்மரத்தை நீக்கிவிட்டு நீராவி சக்தியைப் பயன்படுத்தினர். மிகவும் விரைவாகச் செல்லக்கூடிய கப்பல்களையும் கட்டினர்; கிளிப்பர்கள் (Clippers) என அழைக்கப்பட்ட இவை நாள் ஒன்றுக்கு 300 மைல்கள் செல்லக் கூடியவை. வெளி நாட்டு வர்த்தகத்தில் கப்பல் சரக்கேற்றிய எடையளவு 1862-ல் 24,96,894 டன்களாகும். கப்பல்துறை வளர்ச்சிக்கு, கிரிமியப் போரும் உதவிற்று.

உள்நாட்டுப் போர்க்காலத்தில் கப்பல் தொழில் மிகவும் பாதிக்கப்பட்டு மந்த நிலைக்கு உள்ளானது. அமெரிக்கக் கப்பல்கள் மூலம் நடந்த ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் படிப்படியாகக் குறைந்தன. வெளிநாட்டு வர்த்தகத்தில் அமெரிக்கக் கப்பல்கள் சரக்கேற்றிய எடையளவு, 518,350 டன்களாகக் குறைந்தது. உள்நாட்டுப் போர்க்காலத்தில் கப்பல் தொழில் சுணங்கியதற்கு, போரினால் அமெரிக்கப் பருத்தி பாதிக்கப்பட்டமையும், அதன் ஏற்றுமதி குறைந்தமையும், இன்சூரன்ஸ் வீதங்கள் உயர்ந்தமையும், கூட்டாட்சியினர் கப்பல்

களைக் கைப்பற்றியமையால் இழப்புக்கள் ஏற்பட்டமையும் முக்கியக் காரணங்களாகும். 1861-ல் அமெரிக்கக் கப்பல்கள் அயல் நாட்டு வர்த்தகத்தில் இடம்பெற்ற பண்டங்களில் 65 சதவீதத்தைச் சரக்கேற்றிச் சென்றன. இது 1904-ல் 10 சதவீதமாகக் குறைந்தது. தவிரவும் 1904, 1905ஆம் ஆண்டுகளில் ஆண்டொன்றிற்கு 30,000,000 பவுண்டுகளை அமெரிக்கா வெளிநாட்டுக் கப்பல்களுக்குச் சரக்கேற்றுக் கட்டணமாகவும் கொடுக்க வேண்டியிருந்தது.

## இருபதாம் நூற்றாண்டில் வளர்ச்சி

அமெரிக்கக் கப்பல் தொழில் தொடர்ந்து சுணங்கிக்கொண்டிருந்த நிலையில் 1904-5-ல் நியமிக்கப்பட்ட ஒரு கமிஷன், கப்பல்களைக் கட்டுவதற்குத் தேவைப்படும் பொருள்களின் விலையேறியமையும், கடற் கடவுச் சட்டங்கள் (Navigation Acts) இல்லாமையும் காரணமாகவே கப்பல்கட்டுந் தொழில் பாதிக்கப்பட்டுக் கிடப்பதாகக் கண்டது. எனவே, அரசு மிகுதியான நிதி உதவிகளைக் கப்பல்கட்டுந் தொழிலுக்கு வழங்கவேண்டுமென்று கேட்டுக்கொண்டது. அரசு உடனே இதற்கு ஒப்புக்கொண்டது. அதோடு, அமெரிக்காவிற்கும் ஃபிலிப்பைன்சுக்கும் இடையிலான கடற்கரை வாணிபத்தையும், அமெரிக்காவிற்கும் கியூபாவிற்கும் இடையிலான கடற்கரை வாணிபத்தையும் அமெரிக்கக் கப்பல்களுக்கென பிரத்தியேகமாக ஒதுக்கி வைத்தது. இந்நடவடிக்கைகளாலும் அமெரிக்கக் கப்பல் தொழில் மீட்சியடையவில்லை. அமெரிக்க ஏற்றுமதி, இறக்குமதிகளில் அமெரிக்கக் கப்பல்கள் சரக்கேற்றிய அளவு 1912-ல் 10 சதவீதமாகக் குறைந்தது.

1913 ஆம் ஆண்டிற்குப் பின்னர் அமெரிக்கக் கப்பல் தொழில் மீட்சியுற்று மீண்டும் வளர ஆரம்பித்தது. முதல் உலகப் போர் அருமையான வாய்ப்புக்களை உருவாக்கிக் கொடுத்தது. அப்போரின் போது ஜெர்மன் வர்த்தகக் கப்பல்களின் போட்டி மறைந்தது. பிரிட்டிஷ், மற்றும் ஃபிரெஞ்சுக் கப்பல்களில் பெரும்பாலனவை போரில் ஈடுபடவேண்டியிருந்தது. அவற்றில் பல ஜெர்மன் நீர்மூழ்கிக் கப்பல்களால் தாக்கப்பட்டு அழிந்துபோயின. எனவே அமெரிக்க அயல்நாட்டு வாணிபத்திற்கு அமெரிக்கக் கப்பல்களின் பணி மிகவும் தேவைப்பட்டது. இதைப் பற்றுக்கோலாகக் கொண்டு கப்பல் முதலாளிகள் கப்பல்களை மிகுதியான அளவில் கட்டத்தலைப்பட்டனர். 1916 ஆம் ஆண்டு செம்படம்பர் மாதம் இயற்றப்பட்ட கப்பல் தொழில் சட்டம் ஒன்று கப்பல் கட்டுமான வேலைகளுக்கு ஊக்கம் அளித்தது. ஒரு மாபெரும் கப்பல் கட்டுந் திட்டத்திற்கு இச்சட்டம் வழி கோலிற்று. வெளி நாட்டில் கட்டப்பெற்ற கப்பல்களைக்கூட

அமெரிக்காவில் பதிவுசெய்து கொள்ளலாம் என காங்கிரஸ் மன்றம் அனுமதி யளித்தது. 1916 ஆம் ஆண்டில் கப்பல் போக்குவரத்து வாரியம் (Shipping Board) ஒன்று ஏற்படுத்தப் பெற்றது. 1917 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் அவசரக் கப்பல் கார்ப்பரேஷன் (Emergency Fleet Corporation) ஏற்படுத்தப்பெற்றது. தனியார் கப்பல்களைக் கண்காணித்து வருவதற்கும், எதிரிக் கப்பல்களைக் கைப்பற்றுவதற்கும், நடுநிலை நாடுகளிடமிருந்து கப்பல்களை விலைக்கு வாங்குவதற்கும், புதிய கப்பல்களை விரைவாகக் கட்டுவதற்கும் இவ்விரு அமைப்புக்கள் உதவிபுரிந்தன. இதன் விளைவாக அமெரிக்கக் கப்பல்களின் எண்ணிக்கை வளர்ந்தது. 1920-ல் அமெரிக்காவிடம் சுமார் 5000 கப்பல்கள் இருந்தன; இவை சரக்கேற்றிய எடை அளவு 14 மில்லியன் டன்களாகும்.

1920-ல் இயற்றப்பட்ட ஜோன்ஸ் வணிகக் கப்பல் சட்டத்தின்படி (Jones Merchant Marine Acts), அரசுக் கப்பல் தடங்களில் சில தனியார் கப்பல்களுக்குக் கொடுக்கப்பட்டன. இதனால் கப்பல் கட்டுந் தொழில் செழிப்புற்றது. 1925-ல் 30 சதவீத அயல் நாட்டு வாணிபம் அமெரிக்கப் கப்பல்கள் மூலம் நடைபெற்றது. 1928 ஆம் ஆண்டின் ஒயிட்-ஜோன்ஸ் சட்டம் (White-Jones Act), கப்பல் கட்டுவோருக்குக் குறைந்த வட்டி விகிதங்களில் கடன்களை வழங்க ஏற்பாடு செய்தது என்றாலும், அச் சட்டத்தால் குறிப்பிடத் தகுந்த நன்மைகள் விளையவில்லை. எனவே, மீண்டும் 1936-ல் வணிகக் கப்பல் சட்டம் (Merchant Marine Act) என்றொரு சட்டம் இயற்றப்பட்டது. கப்பல்களைக் கட்டுவதற்கும், நிர்வாகம் செய்வதற்கும் உரிய பண உதவிகளைத் தருவதற்கான ஒரு விரிவான திட்டத்தை இச் சட்டம் வகுத்துக் கொடுத்த தோடல்லாது, அத் திட்டத்தைச் செயல்படுத்துவதற்கென அமெரிக்கப் கப்பல் போக்குவரத்துக் குழு (U. S. Maritime Commission) என்றொரு அமைப்பையும் ஏற்படுத்தியது. கப்பல் வாரியத்திற்குப் பதிலாக ஆரம்பிக்கப்பட்ட அமைப்பு இது.

இரண்டாவது உலகப் போரின் போதும் கப்பல் கட்டுந்தொழில் செழிப்பு நிலைக்கு உயர்ந்தது. கப்பல் போக்குவரத்தைக் கவனித்துக் கொள்வதற்காகப் 'போர்க்காலக் கப்பல் போக்குவரத்து நிர்வாகத் துறை' 1942-ல் ஏற்படுத்தப்பட்டது. போர் முடிந்ததும் இத்துறையின் பணிகள், கப்பல் போக்கு வரத்துக் குழுவிடம் ஒப்படைக்கப்பட்டன. இரண்டாவது உலகப் போர் முடிவடைந்த நிலையில் அமெரிக்கா கப்பல் போக்குவரத்தில் உலகத்திலேயே தலைசிறந்து விளங்கியது. எந்த நாட்டையும்விட அமெரிக்காவில்தான் மிகக் கூடுதலான அளவில் கப்பல்கள் இருந்தன. 1950-ல் கப்பல் போக்குவரத்துக் குழு நீக்கப்பட்டு அதன் பணிகள் அரசின் வணிக இலாக்காவி

விருக்கும் ஃபெடரல் கப்பல் போக்குவரத்து மன்றத்திடம் (Federal Maritime Board) ஒப்படைக்கப்பட்டன. இம்மன்றம் கப்பல் தொழில் வளர்ச்சியில் பேரார்வம் காட்டிவருகிறது. கப்பல் கட்டுவோருக்கு இவ்வமைப்பு பல மில்லியன் டாலர்களை உதவிப் பணமாக வழங்கி வருகிறது. நாட்டுப் பாதுகாப்புக்கும் வர்த்தக வளர்ச்சிக்கும் கப்பல் தொழிலை வளர்ப்பது அத்தியாவசியம் என்பது அரசின் கொள்கையாயிருக்கிறது.

# 9. அமெரிக்கப் பாங்குத் திட்டம்
## (The U. S. Banking System)

ஃபெடரல் ரிசர்வ் பாங்குகள், வாணிபப் பாங்குகள் என்ற இரு வகை பாங்குகள் அமெரிக்க ஐக்கிய நாட்டில் உள்ளன. ஃபெடரல் ரிசர்வ் பாங்குகளின் எண்ணிக்கை 12. அமெரிக்க அரசுக் கருவூலமும் வாணிபப் பாங்குகளும் இவற்றுடன் வணிகம் செய்கின்றன. வாணிபப் பாங்குகளின் எண்ணிக்கை சுமார் 14,000. பொதுமக்கள் இவற்றுடன் வணிகம் செய்கின்றனர். சில மாநிலங்களில் ஒரு பாங்குக்குக் கிளைகளை வைத்துக்கொள்ளும் அனுமதி உண்டு. 2100 பாங்குகள் 8800 கிளைகளைக் கொண்டிருக்கின்றன. கலிஃபோர்னியாவிலுள்ள பாங்க் ஆஃப் அமெரிக்காவிற்கு 600 கிளைகள் இருக்கின்றன. மிக அதிகமான கிளைகளைக்கொண்ட பாங்கு இதுவே. அமெரிக்க நாட்டு வரலாற்றில் ஒரு நகரத்திற்கு ஒரு பாங்கு என்ற நிலை இருந்ததும் உண்டு. ஆனால், அப்போது பெரும்பாலான பாங்குகள் அளவில் மிகவும் சிறியவை. அரை நூற்றாண்டிற்கு முன்னர் இப்போதிருக்கும் பாங்குகளின் எண்ணிக்கையைப்போல் இரு மடங்கு பாங்குகள் இருந்தன. இத்தனைக்கும் அப்போதைய மக்கள் தொகை, இப்போதைய மக்கள் தொகையில் ஐந்தில் மூன்று பங்குக்கும் குறைவாகவே இருந்தது. 1921 முதல் 1933-க்குள் இப்பாங்குகளில் பாதியளவு திவாலாகிப் போயின. 1921-க்குப் பின்னர்தான் அமெரிக்கப் பாங்குகளுக்குச் சோதனை ஏற்பட்டது என்று கருதக்கூடாது. தொடக்கத்திலிருந்தே அவற்றிற்குச் சோதனைகள் முளைத்தவண்ணமிருந்தன.

அமெரிக்கப் பாங்குகளின் ஓர் முக்கிய அம்சம் அவற்றின் எண்ணிக்கை மிகுதியாயிருத்தல். இதற்கு முக்கியக் காரணம் பாங்குத் தொழில் கூடுதலான இலாபத்தைக் கொடுத்தமை. 20,000 டாலர்களை மூலதனமாகக்கொண்டு பாங்கர்கள் தொழிலை ஆரம்பித்தால், அத் தொகையைப்போல் பத்து மடங்குத் தொகையைக் கடனாகை வழங்கலாம். வட்டி வீதம் 8 சத வீதமாயிருப்பின் ஆண்டொன்றிற்கு

அவர்கள் சம்பாதிக்கும் தொகை 16,000 டாலர்கள் ஆக இருக்கும், அதாவது மூலதனத்தில் 80 சத வீதத்திற்குச் சமமான தொகையினை இலாபமாக ஈட்டுகின்றனர். எனவே பழைய காலங்களில் பலர் பாங்குகளை ஏற்படுத்த முன் வந்தனர். யாரும் பாங்கைத் தொடங்கிக்கொள்ளலாம் என்ற நிலையும் அப்போது நிலவியது. வர்த்தகர்களுக்கும் விவசாயிகளுக்கும் பணத் தட்டுப்பாடு இருந்தது. ஆகையால் கடன் வழங்குவதற்கு ஏராளமான பாங்குகள் இருக்கவேண்டும் என்று விரும்பினர். அமெரிக்கக் காங்கிரஸ் சபையோ அல்லது மாநிலச் சட்ட மன்றங்களோ இதற்குக் குறுக்கே நிற்க விரும்பவில்லை. எனவே சுதந்தரமிகுந்த பாங்குத் திட்டம்—யாரும் எங்கும் பாங்கை ஆரம்பிக்கலாம் என்ற நிலை முன்பெல்லாம் காணப்பட்டது. இதன் விளைவாக ஏராளமான பாங்குகள் நாடெங்கும் ஆரம்பிக்கப்பட்டன. சில பாங்குகள் தமது வட்டாரங்களுடன் நெருக்கமான உறவைக்கொண்டிருந்தன. ஆகையால், ஒரு வட்டாரத்தைச் சார்ந்த பாங்கு, அவ் வட்டாரத்தின் பண்ணைகளில் சாகுபடி மோசமாயிருந்தாலோ அல்லது அவ் வட்டாரத்தின் தொழிற்சாலை மந்தத்திற்குள்ளானாலோ உடனே திவாலாகிவிடும் நிலையிலிருந்தது. ஆபத்துக்களை மிதமாக்கிக் கொள்ளும் ஆற்றல் இவற்றிடம் இருக்கவில்லை.

1861-ல் போர் மூண்டபோது, அமெரிக்க நாட்டுத் தென்பகுதி தனக்கென ஒரு செலாவணியை வெளியிட்டது. தனக்கென சில பாங்குகளை அமைத்துக்கொண்டது. செலவாணியை மேன் மேலும் வெளியிட்டது. இதனால் பணவீக்கம் ஏற்பட்டு நாட்டுப் பணமதிப்பு குறைந்தது வட பகுதியும் தனக்கென தாள் பணத்தை வெளியிட்டது. இதனாலும் பண வீக்கம் உண்டாயிற்று. விளைவு? 1865-ல் அமெரிக்க டாலர் தனது பாதி மதிப்பை இழந்துபோயிற்று. இதற்கிடையில் 1863-ல் காங்கிரஸ் மன்றம் தேசீய பாங்குத் திட்டத்தை (National Banking Svstem) ஏற்படுத்தியது என்றாலும் தடையற்ற பாங்குத்திட்டத்தை அது ஆதரிக்கவே செய்தது. ஃபெடரல் அரசின் அனுமதி பெறும் பாங்குகள் ஒரு குறைந்த பட்ச மூலதனத்தைப் பெற்றிருத்தல் வேண்டும் என்று புதிய சட்டம் கூறியது. இச்சட்டப்படி பாங்குகள் தமது பொறுப்புக்களுக்கென குறைந்தபட்ச இருப்புக்களை—காப்பு நிதிகளை—வைத்திருக்க வேண்டியது அவசியம். மேலும் கடன்களை ஒரு குறிப்பிட்ட அளவிற்கு மேல் கொடுக்கக்கூடாது. பாங்குகளைத் தணிக்கை செய்யும் அதிகாரம் செலாவணிக் கம்ட்ரோலரிடம் (Comptroller of Currency) வழங்கப்பட்டது. ஃபெடரல் அரசின் அனுமதி பெற்ற பாங்குகள், ஃபெடரல் அரசின் பத்திரங்களை வைத்துச் செலவாணியை வெளியிடலாம் என்ற சலுகையைப் பெற்றன. பத்திரங்கள் மீதான வட்டியையும் இவை பெற்றுக்கொண்டன. அதோடு தான் வழங்கிய(தாள் நாணயக்)கடன்

களுக்கும் வட்டியை வாங்கிக்கொண்டன. காங்கிரஸ் மன்றம், பத்திர விற்பனையை அதிகப்படுத்தி, போருக்கு வேண்டிய நிதிகளைத் திரட்டு வதிலும், செலாவணி மற்றும் பாங்குத் திட்டத்தைச் சீர்திருத்து வதிலும் குறியாயிருந்தது. எனவே, தேசீய பாங்குகள் வளர்வதை இது வரவேற்றது. மாநில பாங்குகளை உற்சாகமிழக்கச் செய்யும் வகையில் இம் மன்றம் அவை மீது ஒருவகை வரியை விதித்ததுஇங்கே குறிப்பிடத் தகுந்தது.

1965-ல் போர் முடிவடைந்தபோது, வடபகுதிச் செலாவணி மட்டுமே நாடு முழுவதிலும் புழங்கவேண்டி யிருந்தது. வடபகுதிச் செலாவணி கிரீன் பேக்ஸ் (Green backs) எனப்பட்ட காகிதப் பணம் ஆகும். இத் தாள்களின் புறத்தில் பச்சை மசியைப் பயன்படுத்தி எழுத்துக்களை அச்சிட்டதால் மக்கள் இவற்றை கிரீன்பேக்ஸ் என அழைத்தனர். நோட்டுப் பொருளாதாரம் விரிவடைந்து கொண்டு வந்த நிலையில் இந்தக் காகிதப் பணத்தின் அளிப்பு போதவில்லை. தவிரவும் அதன் அளிப்பும் குறைந்தது. பொருளாதாரம் விரிவடை யும்போது பணத்தின் அளிப்பு குறைந்தால் எத்தகைய இடர்கள் தோன்றும் என்பதை 1870 முதல் 1890 வரை ஏற்பட்ட வாணிப மந்தங்கள் அனுபவ பூர்வமாக எடுத்துக்காட்டின. எனவே, பணத் திட்டத்தின் மீது மக்கள் அவநம்பிக்கை கொண்டனர். திட்டத்தில் நெகிழ்ச்சித் தன்மை இருக்கவில்லை. தேவைகளுக்கேற்ப நெகிழ்ந்து கொடுக்கவில்லை. பலர் செக்குகளை மிகுதியாகப் பயன்படுத்திக் கொண்டனர். அரசனுமதி பெற்ற பாங்குகள் கூட பாங்கு நோட்டுக் களை வெளியிடாமல் செக்குகள் மூலம் தமது தொழில் தேவையைப் பூர்த்தி செய்து கொண்டன. அப்போதிருந்த தேசீய, மாநில பாங்கு களிடம் ஒரு பழக்கம் இருந்தது. அவை, தமது காப்பு நிதிகளை நியூயார்க்கிலுள்ள மாநகர் பாங்குகளிடத்தில் தேவை வைப்பாக வைத்து வந்தன. எனவே, இம்மாநகர் பாங்குகள் முறிய நேர்ந்தால் இவற்றோடு தொடர்புகொண்ட மற்ற பாங்குகளும் முறிவது தவிர்க்க முடியாத ஒன்றாகும். இப்படித்தான் 1907-ல் ஒரு பாங்கு திவாலான போது, அடுத்தடுத்துப் பல பாங்குகள் திவாலாயின. இதற்குப் பின்னரும் காங்கிரஸ் மன்றம் வாளாவிருக்கவில்லை. 1913-ல் ஃபெடரல் ரிசர்வ் திட்டத்தை ஏற்படுத்தியது.

### ஃபெடரல் ரிசர்வ் திட்டம் : கட்டமைப்பும் முக்கியப் பணிகளும்

*அமைப்பு :* ஒரு மத்திய பாங்கு இருப்பதா அல்லது சில பிராந்திய பாங்குகள் இருப்பதா என்பது தொடக்கத்தில் சர்ச்சைக்குரிய விஷயமாயிருந்தது. ஒரு மத்திய பாங்கு மட்டும் இருந்தால் திட்டம் உறுதி மிக்கதாயிருக்கும்; பணம் மொத்தமாகச் சேகரிக்கப்பட்டுத்

தேவைக்கேற்ப நாட்டின் பல பகுதிகளுக்கும் அனுப்பி வைக்கப்படும்; முடிவுகளை உடனுக்குடன் எடுப்பது எளிது. சில பிராந்திய பாங்குகளைக் கொண்டிருப்பதிலும் சில நன்மைகள் இருந்தன. அவை சர்வாதீனமாயிரா; அரசியல் வாதிகளால் பணத் திட்டத்தில் குழப்பங்கள் இரா—'வால் ஸ்ட்ரீட் மெயின் ஸ்ட்ரீட்டைக் கெடுத்து விடாது'. தமது வட்டாரத்தின் தனிப்பட்ட தேவைகளுக்கேற்ப பிராந்திய பாங்குகளால்தான் வளைந்து கொடுக்க முடியும். இவற்றை ஆராய்ந்து பார்த்த பின்னர் சில பிராந்திய பாங்குகளை ஏற்படுத்துவது என்று அரசு முடிவெடுத்தது. 12 பிராந்திய பாங்குகள் ஏற்படுத்தப்பட்டன. இவற்றின் தலைமையகம் வாஷிங்டன். இந்தப் பன்னிரண்டு பாங்குகளும் தமது பிராந்தியங்களைப் பொறுத்தவரையில் வாணிபப் பாங்குகளுக்கு மத்திய பாங்காகச் செயல்படும். இவ்வாணிபப் பாங்குகளும் தேசியத் திட்டத்தில் சேர்ந்துகொண்டன. தேசியப் பாங்குகள் (National Banks) அனைத்தும் திட்டத்தில் சேர்ந்துவிட வேண்டுமென காங்கிரஸ் மன்றம் அறிவித்தது. மாநில அரசு அனுமதிபெற்ற பாங்குகள் நிபந்தனைகளை ஒப்புக்கொண்டு திட்டத்தில் சேர்வதாயிருப்பின், சேர்ந்துகொள்ளலாம். நிபந்தனைகளை ஏற்றுக்கொள்ளாதவை திட்டத்தில் சேராதிருக்கலாம். மொத்த எண்ணிக்கையில் சுமார் 50 சதவீதப் பாங்குகள் தற்போது ஃபெடரல் ரிசர்வ் திட்டத்தில் சேர்ந்துள்ளன. நாட்டின் தேவை வைப்புக்களில் 85 சதவீதம் இவற்றிடம் வைக்கப் பட்டுள்ளன. உறுப்பினரல்லாத பாங்குகள் சிறியவை. அவற்றின் முக்கியத்துவமும் மிதமே.

12 ஃபெடரல் ரிசர்வ் பாங்குகள் ஒவ்வொன்றும் அதன் பிராந்திய உறுப்பு பாங்குகளுக்குச் சொந்தமானது. இதன் மூலதனத்தைத் திரட்டுவதற்கு அவைதான் பிரதானமாயிருந்தன. ஏனைய வர்த்தகக் கம்பெனிகளைப்போன்று ஃபெடரல் ரிசர்வ் பாங்குகளுக்கும் இயக்குநர் குழு (Board of Directors) ஒன்றுண்டு. இதன் உறுப்பினர் பலர் பாங்குகள், தொழில், வணிகம், வேளாண்மை ஆகிய துறைகளிலிருந்து தேர்ந்தெடுக்கப்படுவர். இக் குழுவுக்குமேல் ஆளுநர் குழு (Board of Governors) என்று ஒன்றிருக்கிறது. இதன் ஏழு உறுப்பினர்கள் குடியரசுத் தலைவரால் நியமிக்கப்படுவர். ஃபெடரல் ரிசர்வ் திட்டத்தின் முக்கிய முடிவுகளை எடுப்பது இக் குழுவே. எனவே, இத் திட்டத்தைப் பொறுத்தவரையில் இதுவே மிக முக்கிய அமைப்பு. அமெரிக்க நாட்டு ஃபெடரல் ரிசர்வ் திட்டம், ஏனைய நாடுகளில் இருக்கின்ற மத்திய பாங்குத் திட்டத்தைப்போலவே செயல்படுகிறது என்றாலும், தனிப்பட்ட பிராந்திய விஷயங்களைப் பொறுத்தவரையில் இந்த 12 பாங்குகளும், அவற்றின் 24 கிளைகளும் சற்றுச் சுதந்திரமாக—

பிராந்திய நிலவரங்களுக்கேற்றவாறு—செயல்களை யமைத்துக்கொள்ளும் உரிமை பெற்றிருக்கின்றன.

### ஃபெடரல் ரிசர்வ் திட்டப் பணிகள்

ஃபெடரல் ரிசர்வ் திட்டம் உறுப்பு பாங்குகளின் காப்பு நிதிகளை (Reserves) தம்மிடம் வைத்துக்கொள்கிறது. திட்டத்தின் முக்கிய மான பணிகளில் இதுவும் ஒன்று. உறுப்பு பாங்குகளின் காப்பு நிதிகள் பாங்குகளின் பாதுகாப்பறைகளில் செலாவணியாக வைத்திருக்கப் படவில்லை; அல்லது தாளாளர் பாங்கிடம் (Correspondent Bank) வைப்புக்களாக இருக்கவுமில்லை. மாருக ஃபெடரல் ரிசர்வ் திட்டத் திடம் வைப்புக்களாக இருக்கின்றன. உறுப்பு பாங்கு ஒவ்வொன்றும் அதன் பொறுப்புத் (Liability) தொகையின் ஒவ்வொரு டாலருக்கும் வைப்புக்கள்மீதான ஒரு குறிப்பிட்ட சதவிகிதத் தொகையை ஃபெடரல் ரிசர்வ் பாங்கிடம் காப்பு நிதியாக வைத்திருத்தல் வேண்டும். நாணயங்கள், காகிதப்பணம் அல்லது செக் ஆகியவற்றை ஒரு பாங்கு ஃபெடரல் ரிசர்வ் பாங்குக்கு அனுப்பி, வைப்பு ஏற்படுத்துகிறது. செக்குக்கு வேண்டிய பணத்தை மற்ற பாங்குகள் அனுப்பி வைக்கின்றன; அல்லது அப்பணத்தை ஃபெடரல் ரிசர்வ் பாங்கிடம் உள்ள வைப்பிலிருந்து எடுத்துக்கொள்வதற்கு ஏற்பாடு செய்கின்றன. வைப்பாளர்கள் வாணிபப் பாங்குகளுடன் எத்தகைய தொடர்பினைக் கொண்டிருக்கின்றனரோ அதே வகைத் தொடர்பினை வாணிபப் பாங்குகள் ஃபெடரல் ரிசர்வ் பாங்குகளிடம் கொண்டுள்ளன. ஃபெடரல் ரிசர்வ் பாங்கிடம் காப்பு நிதிகளை வைத்திருக்கும் ஒரு பாங்கு வாடிக்கைக்காரர்களுக்குக் கடன் கொடுக்கும்போது வைப்புக்களை உருவாக்குகிறது. ஃபெடரல் ரிசர்வ் பாங்கிடம் வைத்திருக்கும் காப்பு நிதியைக்கொண்டு உறுப்பு பாங்கு எதையும் சம்பாதிப்பதில்லை. எனவே, அந்தப் பணம் ஆக்கமற்றிருப்பதாகக் கூறுவர். வாணிபப் பாங்குகளைப்போன்று ஃபெடரல் ரிசர்வ் பாங்கும் வைப்புக்களை உருவாக்குகின்றன.

உறுப்பு பாங்குகளின் காப்பு நிதிகளை வைத்திருத்தலைவிட, அக்காப்பு நிதிகளைக் கட்டுப்பாடு செய்வது மிக முக்கியமானதொரு பணியாகும். பாங்குகளின் சட்ட பூர்வமான காப்பு நிதிகளைக் கட்டுப்படுத்துவதற்குள்ள அதிகாரம் மூலமாகத்தான் அப் பாங்குகளைக் கட்டுப்படுத்தும் வல்லமையை ஃபெடரல் ரிசர்வ் பாங்கு பெறுகிறது. ஒரு வாணிபப் பாங்கு எந்த அளவிற்குக் கடன் வழங்கலாம், எந்த அளவிற்கு வைப்புக்களை ஏற்றுக்கொள்ளலாம் என்பவை அப் பாங்கின் சட்ட பூர்வக் காப்பு நிதிகளைப் பொறுத்தவை. இக் காப்பு நிதிகள் தான் மொத்தப்பண அளிப்பின் ஒரு பகுதியாயிருக்கும் வைப்புக்களின்

—செக்குக் கணக்குகளில் உள்ள வைப்புக்களின்—மொத்த அளவை நிர்ணயிக்கின்றன. உறுப்பு பாங்குகள் ஃபெடரல் ரிசர்வ் பாங்குகளிடம் வைத்துள்ள டெபாசிட்டுகள் 19 பில்லியன் டாலர்கள் ஆகும்.

ஃபெடரல் ரிசர்வ் பாங்குகளின் மற்றப் பணிகள் வருமாறு : மறு கழிவு செய்தல் (rediscounting), வெளி அங்காடி நடவடிக்கைகள் (Open Market Operations), ரொக்கக் காப்பு நிதிகளை மாற்றல், தேர்வுக் கடனளிப்புக் கட்டுப்பாடு (Selective Credit Control) ஆகியவை. ஃபெடரல் ரிசர்வ் பாங்கிடம் உள்ள தனது வைப்புக்களை அதிகப்படுத்திக்கொள்ள விழையும் ஓர் உறுப்பு பாங்கு, தன்னிடம் கடன் வாங்குவோர் தரும் குறுங்கால நோட்டுக்களை (Short-term Notes) ஃபெடரல் ரிசர்வ் பாங்கிடம் கொடுக்கிறது. இக் குறுங்கால நோட்டுக்கள்மீது கடன் வழங்கும் ஃபெடரல் ரிசர்வ் பாங்கு கடன் வழங்குதலுக்கு ஒரு கட்டணத்தை வசூலிக்கிறது. இதனை வட்டி என்று அது அழைப்பதில்லை; மறு கழிவு என்றே அழைக்கிறது. குறுங்கால நோட்டுக்கள்மீது கடன் வழங்கும்போது மற்ற பாங்குகள் வசூலிக்கும் கட்டணம் கழிவு எனப்படும். மறு கழிவுத் திட்டம் ஏற்பட்டதின் நோக்கம் பணம் அளிப்புக்கு நெகிழ்ச்சியை அளித்தல் ஆகும். தொழில்களுக்குப் பணத் தட்டுப்பாடு உண்டாகும்போது மறுகழிவுத் திட்டத்தின்கீழ் வாணிபப் பாங்குகள் ஃபெடரல் ரிசர்வ் பாங்குகளிடமிருந்து கடன்களைப் பெற்று அவற்றை வாடிக்கைக்காரர்களுக்கு வழங்குகின்றன. இதனால் பணத் தட்டுப்பாடு குறைந்து தொழில் சீராக இயங்குகிறது.

வெளி அங்காடி நடவடிக்கைகளைப்பற்றி முக்கிய முடிவுகளை எடுக்கும் அதிகாரம் வெளி அங்காடி நடவடிக்கைக் கமிட்டி (open market committee) யிடம் இருக்கிறது. 12 ஃபெடரல் ரிசர்வ் பாங்குகளின் 5 பிரதிநிதிகளும் ஆளுநர் குழுவின் 7 உறுப்பினர்களும் இக் கமிட்டியில் இடம் பெறுகின்றனர். இக் கமிட்டியின் ஆணைப்படி ஃபெடரல் ரிசர்வ் பாங்குகள் கருவூல உண்டியல்களை (Treasury Bills) வாங்குகின்றன, விற்கின்றன. வெளி அங்காடி நடவடிக்கைகள் பெரும்பாலும் நியூயார்க்கில் நடைபெறுகின்றன. மற்ற 11 பாங்குகளுக்கும் உரிய வாங்கற்பாடுகள், மற்றும் விற்பனைகள்கூட அங்கே தான் நிகழ்கின்றன. உறுப்பு பாங்குகளின் ரொக்கப் காப்பு நிதிகளை (Bank reserved) க் குறைக்க வேண்டும் என்றால் ஃபெடரல் ரிசர்வ் பாங்குகள் கருவூலப் பத்திரங்களை விற்கின்றன. இன்சூரன்ஸ் கம்பெனிகள், சேமிப்பு பாங்குகள், வாணிபப் பாங்குகள், தனியார் முதலீட்டு நிறுவனங்கள் ஆகியவை இப்பத்திரங்களை வாங்குகின்றன. உறுப்பு பாங்குகளின் காப்புநிதிகளை அதிகப்படுத்த வேண்டும் என்றால், ஃபெடரல் ரிசர்வ் பாங்குகள் பாண்டுகளை, பத்திரங்களை

வாங்குகின்றன. இப்படி வாங்கும்போது செக்குகளைக் கொடுக்கின்றன. இதனால் உறுப்பு பாங்குகளின் இருப்புக்கள் கூடுகின்றன. இவ்வாறாக, வாணிபப் பாங்குகளின் ரொக்கக் காப்பு நிதிகளின் அளவு ஃபெடரல் ரிசர்வ் பாங்குகளின் வெளி அங்காடி நடவடிக்கைகளைப் பொறுத்தது. வாணிபப் பாங்குகளின் கடன் கொடுக்கும் வல்லமை ரொக்கக் காப்பு நிதிகளின் அளவைப் பொறுத்தது. காப்பு நிதிகள் மிகுதியானால் கடன்களைக் கூடுதலாகக் கொடுக்க முடியும். காப்பு நிதிகள் குறைந்தால் குறைவான அளவில்தான் கடன்களைக் கொடுக்கமுடியும்.

நாட்டுப்பண அளிப்பைக் கட்டுப்படுத்துவதற்கு ஃபெடரல் ரிசர்வ் திட்டத்திடம் உள்ள மற்றொரு அதிகாரம் ஃபெடரல் ரிசர்வ் பாங்குகளிடம் வாணிபப் பாங்குகள் வைத்திருக்கக்கூடிய காப்பு நிதிகளின் அளவை மாற்றியமைத்தலோடு தொடர்புடையது. காப்பு நிதிகளின் அளவைக் கூட்டினால் பாங்குகளின் கடன் வழங்கற்பாடு குறைகிறது. காப்பு நிதிகளின் அளவைக் குறைத்தால் பாங்குகளின் கடன் வழங்கற்பாடு மிகுதியடைகிறது.

### ஃபெடரல் ரிசர்வ் திட்டமும் கருவூலமும்

மறு கழிவுப் பணிமூலம் ஃபெடரல் ரிசர்வ் பாங்குகளுக்கு ஆண்டுதோறும் சுமார் 800 மில்லியன் டாலர்கள் வட்டி வருமானமாகக் கிடைக்கிறது. இதிலிருந்துதான் ஃபெடரல் ரிசர்வ் பாங்குகளின் அதிகாரிகள் மற்றும் அலுவலர்களுக்குச் சம்பளங்கள் கொடுக்கப்படுகின்றன. மீதியிருக்கும் தொகையில் 90 சதவீதம் கருவூலத்திற்கு அனுப்பப்படுகிறது. இவ்வாறாக, ஃபெடரல் ரிசர்வ் திட்டம் வைத்துள்ள கடன்மீது கருவூலம் செலுத்தும் வட்டித் தொகையின் பெரும் பகுதியைக் கருவூலம் திரும்பப் பெற்றுக் கொள்கிறது. அமெரிக்கக் கருவூலப் பிரச்சினைகளை ஃபெடரல் ரிசர்வ் பணத்துறைக் கைக்கோள் கவனத்திற்கு எடுத்துக் கொள்கிறது. கருவூலக் கடன்பாடு மிகுதியாயிருக்கிறது. அதன் கடன்கள் பெரும்பாலும் குறுங்காலத்தவை. எனவே, கெடு தேதி முடிந்தவுடன் புதிய கடன்கள் உடனுக்குடன் வாங்கப்படுகின்றன. கடன்கள்மீது 8 மில்லியன் டாலர்களை ஆண்டுதோறும் வட்டியாகச் செலுத்துவது என்பது ஒரு குறிப்பிடத் தகுந்த செலவினமாயிருக்கிறது என்பது இங்கே நினைவுகூரத் தக்கது. ஆகவே, நிதியங்காடிகள் ஒழுங்குற அமைந்திருக்கவேண்டும் என்பதிலும், கடன் வாங்கும்போது எந்தவிதக் குழப்பங்களும் இருக்கக்கூடாது என்பதிலும் கருவூலம் அக்கறை செலுத்துகிறது. வட்டி வீதங்கள் குறைவாயிருப்பதையே அது பொதுவாக விரும்பும். இவ்விருப்பத்திற்கேற்ப எல்லாக் காலங்களிலும் ஃபெடரல் ரிசர்வ் திட்டம் செயல்பட்

டால், சில வேளைகளில் பணவீக்கத்தைக் கட்டுப்படுத்த முடியாமற் போகலாம்.

இரண்டாவது உலகப் போரின்போது ஃபெடரல் ரிசர்வ் பாங்குகள் யு. எஸ். பத்திரங்களை வாங்கின. இவை வெளியங்காடி வாங்கற் பாடுகள். இதனால் கருவூலத்திற்கு டெபாசிட்டுகள் உருவாயின. புதிய பணத்தை வெடி மருந்துகள் வாங்க அரசு பயன்படுத்திக் கொண்டது. வெடி மருந்துகளை விற்றோர், தாம் பெற்ற செக்குகளை வாணிபப் பாங்குகளிடம் கொடுத்து, தமது கணக்குகளில் வரவு வைத்துக்கொண்டனர். வாணிபப் பாங்குகளின் காப்பு நிதிகள் அதிகரித்தன. ஃபெடரல் ரிசர்வ் பாங்குகளிடம் அவை வைக்கும் டெபாசிட்டுகள் கூடின. அந்த அளவிற்குக் கருவூலத்தின் டெபாசிட்டுகள் குறைந்தன. பாங்குகள் கூடுதலாகப் பத்திரங்களை வாங்கின. இதனால் கருவூல டெபாசிட்டுகள் அதிகரித்தன. இப்படிக் கடன் கொடுப்பதில் பாங்குகளுக்குச் சிரமம் இருக்கவில்லை. ஏனென்றால் அவற்றிடம் நிதிகள் நிறைய இருந்தன. எனவே, கருவூலம் குறைந்த வட்டி வீதங்களில் கடன் வாங்க முடிந்தது. பண இருப்பு பெருகியது. போர் முடிந்தபோது, வட்டி வீதங்கள் தொடர்ந்து தாழ்வான மட்டத்தில் இருந்துவர வேண்டுமென்று கருவூலம் விரும்பியது. எனவே, ஃபெடரல் ரிசர்வ் திட்டத்தால் பணத்துறைக் கட்டுப்பாடுகளைச் செய்து பண வீக்கத்தைக் கட்டுப்படுத்துவதற்கு உதவிட முடியாமல் போயிற்று. பண அளிப்பைக் கட்டுப்படுத்தியிருந்தால் வட்டி வீதம் உயர்ந்துபோயிருக்கும். ஆகையால் ஃபெடரல் ரிசர்வ் திட்டம் பணத்துறைக் கட்டுப்பாடுகளைப் பிரயோகப்படுத்தவில்லை.

1951-க்குப் பின்னர் நிலைமை சற்று சீர்ப்பட்டது. வட்டி வீதங்களை அளவுக்குமீறிக் குறைக்கும் வகையில்—பணத்துறைக் கட்டுப்பாடுகளைத் தடுக்கும் முறையில்—ஃபெடரல் ரிசர்வ் பாங்குகள் அரசுப் பத்திரங்களை வாங்கத் தேவையில்லை என்ற நிலை பிறந்தது. கருவூலக் கடன் தேவைகளுக்கேற்ற முறையான நிலவரங்களை ஏற்படுத்தும் வகையில் ஃபெடரல் ரிசர்வ் திட்டம் தனது அன்றாட நடவடிக்கைகளை அமைத்துக்கொள்ள வேண்டும் என்றும், குறைவான வட்டி வீதங்களில் கடன் வாங்கவேண்டும் என்ற கருவூல விருப்பம் அடிப்படை பணத்துறைக் கைக்கோளை அடிமைப்படுத்தக்கூடாது என்றும் இரு தரப்பினரும் ஒப்புக்கொண்டனர். என்றாலும், ஃபெடரல் கடன் மீதான வட்டிவீதம் உயர்வாயிருக்கக்கூடாது என்று பொதுமக்களும், காங்கிரஸ் மன்றமும், கருவூலமும் விரும்பினால் கூடுதலாகப் பணத்தை உருவாக்குமாறு ஃபெடரல் ரிசர்வ் திட்டத்தை வற்புறுத்தலாம் என்ற நிலை இன்னமும் இருக்கத்தான் செய்கிறது. அப்படிப் பணம்

கூடுதலாக உருவாகும்போது கருவூலத்தால் கடன்களைக் குறைவான வட்டி வீதத்தில் பெற முடியும்.

இந்தப் பிரச்சினை வேறு பல நாடுகளிலும் இருந்துவருகிறது. கருவூலத்திற்காகப் பணத்தை உருவாக்குமாறு மத்திய பணத் துறை நிலையங்கள் - மத்திய பாங்குகள் - வற்புறுத்தப்படுமா? அதாவது, தடையற்ற அங்காடிகளில் நிலவும் வட்டி வீதங்களுக்குக் குறைவான வட்டி வீதங்களில் அரசுக்குக் கடன் வழங்குமாறு மத்திய பாங்குகள் வற்புறுத்தப்படுமா? மந்தக் காலங்களில் இது நிகழும் சாத்தியக் கூறுகள் உண்டு. ஆனால், வட்டி வீதக் குறைப்பால் ஏற்படக்கூடிய நன்மைகள், பணப் பெருக்கம் வழியே தோன்றும் பணவீக்க அழுத்தங்களால் மிகவும் பாதிக்கப்படுகின்றன என்பதை நாம் மறந்து விடக்கூடாது.

## பாங்கு முறிவுகளைத் தடுத்தல்

20ஆம் நூற்றுண்டின் முதல் கால் பகுதியில் பாங்கு முறிவுகள் என்பது மிகவும் சாதாரணமான ஒரு நிகழ்ச்சியாக இருந்தது. திவால் (Insolvency), நீர்மையின்மை (Illiquidity) என்ற இரு காரணங்களால் பாங்குகள் முறிந்துவந்தன. ஒரு பாங்குச் சொத்துகளின் மதிப்பு அதன் மொத்தப் பொறுப்புகளுக்குக் (Liabilities) குறைவாயிருப்பின் திவால் நிலை உண்டாகும். ரொக்கம் கேட்கும் வைப்பாளர்களுக்கு உடனே ரொக்கத்தைக் கொடுக்க முடியாத நிலையில் பாங்கு இருப்பின் நீர்மையின்மை ஏற்பட்டிருக்கிறது என்பது பொருள். இவ்விரு காரணங்களால் பாங்குகள் முறிந்து போவதைத் தடுப்பதற்கு அமெரிக்காவில் நடவடிக்கைகள் எடுக்கப்பட்டிருக்கின்றன. இதனால் பாங்கு முறிவுகள் ஓரளவிற்குக் குறைந்திருக்கின்றன. பாங்குகள் முன்னர் இருந்ததைவிட, தற்போது பாதுகாப்பான நிலையில் இருக்கின்றன. இதற்கான காரணங்கள் வருமாறு:

பாங்குகள் தரமான சொத்துக்களைப் பெற்றிருக்கவேண்டும் என்று ஃபெடரல், மற்றும் மாநில அரசுச் சட்டங்கள் வற்புறுத்துகின்றன. ஒரேவிதமான கடன்களைத் தராமல் பலவகைக் கடன்களைக் கொடுத்து வருமாறு பாங்குகள் கேட்டுக்கொள்ளப்பட்டிருக்கின்றன. கடன்களைப் பல்வகைப்படுத்தும் (Diversification) போது, ஆபத்துக்களின் எண்ணிக்கை குறைகிறது. சிறந்த முறையில் முதலீடு செய்ய வேண்டும் என்று பாங்குகளிடமிருந்து எதிர்பார்க்கப்படுகிறது. பாங்கர்களும் முன்பு இருந்ததைப்போல் இல்லாமல் தற்போது திறமை மிகுந்தவர்களாய், பயிற்சியுடையோராய், அனுபவமிக்கோராய், எச்சரிக்கையுடன் செயல்படுவோராய் இருந்து வருகின்றனர். புதிய

பாங்குகளுக்கு அனுமதி கொடுப்பதற்கு முன்னர், அவற்றால் நிலைத்து நிற்க முடியுமா என்று நன்கு ஆராய்ந்து பார்த்த பின்னரே அரசு அனுமதி வழங்குகிறது.

ஆண்டுக்கொருமுறை அரசுத் தணிக்கையாளர்கள் ஒவ்வொரு பாங்கின் நடவடிக்கைகளையும் பரிசோதித்துப் பார்க்கின்றனர். ஆண்டுப் பரிசோதனை உண்டு என்பதால் பல பாங்கர்கள் எச்சரிக்கையோடு செயல்படுகின்றனர். பரிசோதனைகளின்போது ஒரு பாங்கின் போக்கு தெளிவாகத் தெரிந்துவிடுவதாலும், குறைகளிருந்தால் அவற்றைக் களைவதற்கான வழிமுறைகள் உடனுக்குடன் மேற்கொள்ளப்படுவதாலும் பாங்கு முறிவுகள் தடுக்கப்படுகின்றன.

பாங்குகள் முன்பைவிட மிகுதியாக அரசுப் பத்திரங்களை வைத்திருக்கின்றன. இவை ஒருவகை இருப்புக்களாக இருக்கக்கூடியவை. பாங்குகளுக்கு ரொக்கம் தேவைப்பட்டால் இப்பத்திரங்களை விற்று ரொக்கப் பணத்தைப் பெற்றுக்கொள்ளலாம். இப்பத்திரங்களின் மதிப்பு நிலையானது. ஏனென்றால் இவற்றின் விலை வீழ்ச்சியைத் தடுக்கும் அதிகாரம் அமெரிக்கக் கருவூலத்திடமும், ஃபெடரல் ரிசர்வ் திட்டத்திடமும் இருக்கிறது.

பாங்குகளின் டெபாசிட்டுகள் இன்சூர் செய்யப்பட்டிருக்கின்றன. டெபாசிட்டுகளை இன்சூர் செய்ய 1935-ல் ஏற்படுத்தப்பெற்ற ஃபெடரல் டெபாசிட் இன்சூரன்ஸ் கார்ப்பரேஷன் (Federal Deposit Insurance Corporation), வைப்பாளர்களிடையே நல்ல நம்பிக்கையை உருவாக்கியிருக்கிறது. ஃபெடரல் ரிசர்வ் திட்ட உறுப்புப் பாங்குகள் அனைத்தும் இன்சூர் செய்துகொண்டாக வேண்டும். மற்ற பாங்குகள் கார்ப்பரேஷனின் நிபந்தனைகளை ஏற்றுக்கொண்டால், அவையும் இன்சூர் செய்துகொள்ளும் வாய்ப்புக்களைப் பெறும். சற்றேறக்குறைய 95 சதவீதப் பாங்குகள் ஃபெடரல் டெபாசிட் இன்சூரன்ஸ் கார்ப்பரேஷன் திட்டத்தின்கீழ் இன்சூர் செய்துகொண்டிருக்கின்றன. மொத்த டெபாசிட்டுகளில் 1 சதவீதத்தின் $\frac{1}{12}$ பகுதியை ஒவ்வொரு பாங்கும் ஆண்டுதோறும் பிரிமியமாகச் (Premium) செலுத்தி வருகிறது. எந்த ஒரு பாங்கும் மூடப்படுவதற்குக் கார்ப்பரேஷன் விட்டுவிடுவதில்லை. திவாலாகும் நிலையினை எட்டும் சில பாங்குகளைத் தானே ஏற்று நடத்துவதற்கும் அது தயாராயிருக்கிறது. இழப்புக்களைச் சந்திப்பதற்கென சுமார் 2 பில்லியன் டாலர்களைக் கார்ப்பரேஷன் திரட்டியிருக்கிறது. தேவைப்பட்டால் கூடுதலான நிதிகளைக் கருவூலத்திடமிருந்தோ அல்லது ஃபெடரல் ரிசர்வ் திட்டத்திடமிருந்தோ அது பெற்றுக்கொள்ள முடியும். கார்ப்பரேஷனிடம் இத்தகைய பொருளாதாரச் சக்தி போதுமான அளவில் இருப்பதால்தான் டெபாசிட்

டர்கள் பாங்கு முறிவுகளைப்பற்றிய கவலைகளை விட்டு பாங்குத் திட்டத்தின்மீது மிகுதியான நம்பிக்கையினை வளர்த்துக்கொண்டிருக்கின்றனர். பாங்கு முறிவுகளைக் கார்ப்பரேஷன் தடுக்க முடியும்.

இத்தகைய காரணங்களால்தான் அமெரிக்க வாணிபப் பாங்குகள் முன்பைவிடத் தற்போது பாதுகாப்பான நிலையில் உள்ளன எனக் கூறுகிறோம்.

*முதலீடு செய்யும் நிறுவனங்கள்* (Investment Institutions): சேமிப்பாளரும் முதலீடு செய்வோரும் ஒருவர் அல்லர். எனவே, சேமிப்பாளரிடமிருந்து பணத்தைத் திரட்டி, முதலீடு செய்ய விரும்புவோரிடம் அதனை ஒப்படைக்கக்கூடிய நிதி நிலையங்கள் ஒரு நாட்டிற்கு மிகவும் தேவை. இவை சேமிப்பாளர்களுக்கும், சேமிப்பைப் பயன்படுத்த விழைவோருக்கும் இடையில் இடையீட்டாளர்களாகப் (Middlemen) பணியாற்றி வருகின்றன. அமெரிக்காவில் உள்ள இத்தகைய நிதி நிலையங்களைப் (வாணிபப் பாங்குகளைத் தவிர்த்து) பற்றிச் சற்று விவரிப்போம்.

*ஆயுள் இன்சூரன்ஸ் கம்பெனிகள்* (Life Insurance Companies): 1949-ல் அமெரிக்க இன்சூரென்ஸ் கம்பெனிகளின் சொத்துக்களின் மதிப்பு சுமார் 53 பில்லியன் டாலர்கள். இது 1959-ல் 110 பில்லியன் டாலர்களாக உயர்ந்தது. அமெரிக்க நிதி நிலையங்களில் தலைசிறந்து நிற்பவை ஆயுள் இன்சூரன்ஸ் கம்பெனிகள். அவை வெற்றிகரமாகச் செயலாற்றி வருகின்றன; வலிவோடு இருந்து வருகின்றன. ஒரு இன்சூரன்ஸ் கம்பெனி, மக்களின் ஆயுளை இன்சூர் செய்வதோடு தனது பணியை முடித்துக்கொள்வதில்லை. இன்சூர் செய்துகொண்டோரின் சேமிப்புக்களை வளர்த்து உருவாக்குவதற்கும் துணைசெய்கிறது. இதனால் வாடிக்கையாளரின் சேமிப்புக்கள் அதனிடம் ஏராளமாயிருக்கின்றன. எனவே, பணத்தைக் கடனாகக் கொடுக்கும் நிலையிலும், நிதிச் சொத்துக்களை (Financial assets) வாங்கும் நிலையிலும் இன்சூரன்ஸ் கம்பெனிகள் இருக்கின்றன. இத் தொழிலில் சில மிகப் பெரிய நிறுவனங்களும், எண்ணற்ற சிறிய நிறுவனங்களும் இருக்கின்றன. இன்சூரன்ஸ் தொழிலைப் பெரும்பாலும் இந்தப் பெரிய நிறுவனங்கள்தான் செய்து வருகின்றன.

ஆயுள் இன்சூரன்ஸ் திட்டத்தில் சேமிப்பும் இடம் பெறுவதால், இக் கம்பெனிகளின் சொத்துக்கள் பெருகியுள்ளன. பத்திரதாரர்கள் (Policy holders), ஆண்டுத் தொகை ஒப்பந்தச் (Annuity Contracts) சொந்தக்காரர்கள் ஆகியோர்களுக்கு ஒரு குறைந்த பட்ச வட்டி வீதம்—சுமார் 2·5 சதவீதம்—உத்தரவாதமளிக்கப்படுகிறது. ஆனால்,

உண்மையில் இதைவிட உயர்வான வட்டி வீதத்தைக் கொடுக்க இன்சூரன்ஸ் கம்பெனிகள் முன் வருவதனுல், அவற்றிடம் சேமிப்புக்கள் நிறைய ஓடி வருகின்றன. அவை வழங்கும் கடன்களுக்கு இன்னும் சற்றுக் கூடுதலான வட்டி வீதம் வசூலிக்கப்படும்.

பிரிமியம் வருவாய், சொத்து வழி வருவாய் ஆகியவைமுலம் இன்சூரன்ஸ் கம்பெனிகள் ஆண்டு ஒன்றிற்குச் சுமார் 20 பில்லியன் டாலர்களை வருமானமாகப் பெற்று வருகின்றன. அன்றாட ரொக்கத் தேவைகளைச் சமாளிக்க இதுவே போதும். வாங்கப்படும் புதிய சொத்துக்களிலிருந்து வருமானத்தைக் கூடுதலாகப் பெறுவது எங்ஙனம் என்பதைப்பற்றி இன்சூரன்ஸ் கம்பெனிகள் ஆராய்ந்து வருகின்றன. 20ஆம் நூற்றுண்டின் முதற் பாதியில் இன்சூரன்ஸ் கம்பெனிகள் அமெரிக்க அரசுப் பாண்டுகளை வாங்குவதில் மிகுந்த அக்கறை காட்டவில்லை. பத்திர வாங்கற்பாடுகள் மிகவும் குறைவாக இருந்தன. 1940-க்குப் பின்னர்தான் இவை அரசுப் பத்திரங்களைச் சற்று மிகுதியாக வாங்கின; 1945ஆம் ஆண்டில் அரசுப் பத்திர வாங்கற்பாடுகள் கம்பெனிகளின் மொத்தச் சொத்துகளில் 45 சதவீதமாயிருந்தன. ஆனுல், கம்பெனிகள் பின்னர் இவற்றைக் குறைத்துக் கொண்டன. காரணம், பத்திர வட்டி வருவாய் மிகவும் குறைவு. இரண்டாவது உலகப் போரின்போது பத்திரங்கள் இன்சூரன்ஸ் கம்பெனிகளின் சொத்துக்களில் 25 சதவீதமாயிருந்தன. பின்னர் 1959-ல் இது மிகவும் உயர்ந்தது; சுமார் 50 பில்லியன் டாலர் மதிப்புடைய பத்திரங்கள் இக்கம்பெனிகளிடம் இருந்தன. இவை பெரும்பாலும் தொழில் நிறுவனங்கள், பொது வசதி (Public utilities) நிலையங்கள், இரயில்வே நிறுவனங்கள் ஆகியவற்றின் பத்திரங்கள் ஆகும். இவை வெளியூர்களுக்கு விற்கப்படுவதில்லை. தொழிற் பங்குகள், குறிப்பாகச் சலுகைப் பங்குகள், மொத்த சொத்துக்களில் 4 சதவீதமாயிருக்கின்றன. அடைமானப் பத்திரங்களை முன்பு இன்சூரன்ஸ் கம்பெனிகள் ஏற்று வந்தன; ஆனுல், இதில் பல நேரங்களில் இழப்பு நேர்ந்தமையால், இவற்றில் முதலீடு செய்யும் அளவைக் குறைத்துக் கொண்டன.

இவ்வாருக, இன்சூரன்ஸ் கம்பெனிகள் தமது வருவாயில் ஒரு சிறிய பகுதியை ரொக்கமாக வைத்துக்கொண்டு, மீதிப் பகுதி முழுவதையும் முதலீடு செய்து இலாபமீட்ட முயன்று வருகின்றன. இலாபகரமான இனங்களில் மட்டுமே முதலீடு செய்கின்றன. நாட்டின் பல பாகங்களுக்கும் அவை கடன் வழங்குகின்றன. இதனுல் நாட்டுச் சேமிப்புக்களுக்கு இடவாரிப் பெயர்ச்சித் தன்மை கிட்டுகிறது. 1950 முதல் 1960 வரையிலான காலப் பகுதியில் இந்த இன்சூரன்ஸ் கம்பெனிகள் சுமார் 25 பில்லியன் டாலர்களைத் தொழில் நிறுவனங்

கட்குக் கடனுகை வழங்கின. பாலிசிதாரர்களின் நிதிகளை நாட்டுத் தொழில் பெருக்கத்திற்குப் பயன்படுத்த அமெரிக்க இன்சூரன்ஸ் கம்பெனிகள் எவ்வாறு உதவியளிக்கின்றன என்பதை இது தெளி வாக்குகிறது. பொருளாதார வளர்ச்சிக்கு இவற்றின் பங்கு சிறப் பானது.

**சேமிப்பு பாங்குகளும் (Savings Banks), சேமிப்பு மற்றும் கடன் வசதிக் கழகங்களும் :**

சேமிப்பு பாங்குகளின் அமைப்பு மாநிலத்திற்கு மாநிலம் வேறு படுகிறது. குறைவான சம்பாத்தியக்காரர்கள் ஒரு சில டாலர்களைச் சேமிப்பதற்கும், அதைப் பத்திரமாக வைத்துக்கொள்வதற்கும் சேமிப்பு பாங்குகள் உதவியளிக்கின்றன. இவர்களைப் பொறுத்த வரை, சேமிப்புத் தொகைக்கு வட்டி வேண்டும். அதோடு தேவைப் படும்போது பணத்தை உடனே எடுத்துக்கொள்ளும் வசதி வேண்டும், இவ் வசதிகளைச் சேமிப்பு பாங்குகள் ஏற்படுத்திக் கொடுக்கின்றன. தன் கணக்கிலிருந்து பணத்தை வைப்பாளன் எடுக்க விரும்பினுல் பாங்குக்கு முன் அறிவிப்புதரவேண்டும் என்பது விதி. ஆனுல், உண்மை யில் பெரும்பாலான பாங்குகள் இதை வற்புறுத்துவதில்லை. வைப் பாளர்கள் கேட்டவுடனேயே பணத்தைக் கொடுத்து விடுகின்றன. இவ்வேறுபாடு மிகவும் சௌகரியமாயிருப்பதனுல் பலர் சேமிப்பு பாங்குகளில் கணக்கு வைத்துக்கொள்ள முன் வருகின்றனர். வைப் பாளர் எண்ணிக்கை அதிகரித்துக்கொண்டே யிருக்கிறது. 1940-ல் சேமிப்பு பாங்குகளிடம் இருந்த சொத்துக்கள் மற்றும், ரொக்கம் 12 பில்லியன் டாலர்கள். இவை 1960-ல் 38 பில்லியன் டாலர்களாக உயர்ந்தன. 1970-ல் இவை 50 பில்லியன் டாலர்களைத் தாண்டி யிருக்கும் எனக் கருதப்பட்டது. சேமிப்பு பாங்குகள் தமது பணத்தை எவற்றில் முதலீடு செய்வது என்பதைப்பற்றி மாநில அரசுச் சட்டங் கள் வரையறுத்திருக்கின்றன. அரசு பத்திரங்கள் போன்றவற்றி லும், தரமிக்க பாண்டுகளிலும்தான் சேமிப்பு பாங்குகள் முதலீடு செய்யவேண்டும் என்று இவை வற்புறுத்துகின்றன.

சேமிப்புக்களை, சேமிப்பு பாங்குகள் ஏற்றுக் கொள்வதைப் போன்றுதான் சேமிப்பு, மற்றும் கடன் வசதிக் கழகங்கள் (Savings and Loan Association) ஏற்றுக்கொள்கின்றன. சேமிப்பு பாங்குகளை விடக் கூடுதலான வட்டி வீதங்களைக்கொடுத்து வாடிக்கையாளர்களை ஈர்க்க இவை முயன்று வருகின்றன. தம்மிடம் வைக்கப்படும் டெபா சிட்டுகளை அடைமானங்கள் (mortgages) பெற இவை பயன்படுத்து கின்றன. சேமிப்பு மற்றும் கடன்வசதிக் கழகங்களின் எண்ணிக்கை சுமார் 6000. இவற்றில் சில ஃபெடரல் அரசுக் கட்டுப்பாட்டிலும்,

மற்றவை மாநில அரசுக் கட்டுப்பாட்டிலும் இருந்து வருகின்றன. இக்கழகங்கள் டெபாசிட் இன்சூரன்ஸ் வசதியைத் தற்போது அளித்து வருகின்றன.

*முதலீடு செய்யும் டிரஸ்டுகள் (Investment Trusts):*

பாண்டுகள் மற்றும் பத்திரங்களைச் சொத்துக்களாகப் பெற்றிருக்கக்கூடிய முதலீட்டு டிரஸ்டுகள், தமது பங்குகளையும் (Shares) விற்று வருகின்றன. சில டாலர்களை வைத்திருப்போர் முதலீடு செய்ய விரும்பினால்—சேமிப்பு பாங்குகளிடமிருந்து கிடைக்கும் வருமானத்தைவிடக் கூடுதலான வருமானத்தை ஈட்ட விழைந்தால்—ஒரு தரகன், பாங்கு அல்லது முதலீடு செய்யும் நிறுவனத்திடம் சென்று, ஒரு முதலீட்டு டிரஸ்டின் பங்குகளை வாங்கிக்கொள்ளலாம். ஒருவன் அவ்வாறு செய்கின்றபோது, சில முக்கியத் தொழில்களில் முதலீடு செய்துள்ள ஒரு கம்பெனிச் சொந்தக்காரர்களில் ஒருவனாகிறான். சேமிப்பாளர்களின் பணத்தைச் சிறந்த முறையில் முதலீடு செய்வதற்கு இந்த டிரஸ்டுகள் உதவி செய்கின்றன. அவர்களுக்குப் பணம் பின்னர் தேவைப்பட்டால், இப்பங்குகளை விற்றுப் பணம் திரட்டிக் கொள்ளலாம் என்ற வசதியும் உண்டு. இந்த டிரஸ்டுகளிடம் 13 பில்லியன் டாலர் சொத்துக்களும் பணமும் இருக்கின்றன. நம்பிக்கையான கம்பெனிகளின் பங்குகளை மட்டுமே இவை வாங்குகின்றன.

மேலே விவரித்த நிதி நிலையங்களே அல்லாது வேறு பல நிதியமைப்புக்களும் அமெரிக்காவிலிருக்கின்றன. சுமார் 18000 கூட்டுறவுக் கடன் வசதிக் கழகங்கள், 10 பில்லியன் உறுப்பினர்களைக்கொண்டு செயலாற்றி வருகின்றன. உறுப்பினர்களிடமிருந்து இக்கழகங்கள் டெபாசிட்டுகளைப்பெற்று, அவர்களுக்குத் தேவையானபோது கடன்களை வழங்குகின்றன. ஒரு வாரம் அல்லது மாதத்திற்குள் திருப்பித் தரக்கூடிய மிகக் குறுங்காலக் கடன்களைத் தொழில் பாங்குகள் (Industrial Banks) அளித்து வருகின்றன. புனரமைப்பு நிதிக் கார்ப்பரேஷன் (Reconstruction Finance Corporation) மூடப்பட்ட பின்னர், சிறு தொழில் நிர்வாகத் துறையை (Small Business Administration) அரசு ஏற்படுத்தியது. இத்துறையின் பணி, சிறிய தொழில்களுக்குக் கடன் உதவி வழங்குதல். விவசாயிகளுக்குக் கடன்களைத் தருவதற்கென பண்ணைக் கடன் வசதித்துறை (Farm Credit Administration) தோன்றியிருக்கிறது. இவ்வாறாக, சேமிப்பதற்கும், சேமிப்புக்களை முதலீடு செய்வதற்கும், கடன் வசதிகளைப் பெறுவதற்கும் மக்களுக்கு உதவிடக்கூடிய பலவகை நிதி நிலையங்கள் அமெரிக்க நாட்டில் இருக்கின்றன.

# 10. தொழிலாளர் இயக்கம்
## (The Labour Movement)

19ஆம் நூற்றுண்டின் முதற் பாதிப் பகுதியில் தொழிலாளர் அளிப்பு அமெரிக்காவில் குறைவாயிருந்தது. மிகவும் குறைவான அளவிலேதான் வெளி நாட்டுத் தொழிலாளர்கள் அங்கு வந்து குடியேறிக்கொண்டிருந்தனர். இவர்களிடையே இருந்த தொழி லாளர் அமைப்புக்கள் பெரும்பாலும் கைவினைஞர் சங்கங்களாகவே (Craft Unions) அமைந்திருந்தன, வெளி நாடுகளிலிருந்து வந்து குடியேறும் தொழிலாளர் தொகை 1820-ல் 10,000-க்கும் குறை வாகவே இருந்தது. இவர்களில் பெரும்பாலோர் இங்கிலாந்து, அயர் லாந்து, ஜெர்மனி ஆகிய நாடுகளிலிருந்து வந்தோராவர். குடியேற் றத் தொழிலாளர் எண்ணிக்கை 1830 முதல் தொடர்ந்து அதிகரித் தது; ஆண்டுதோறும் சுமார் 50,000 தொழிலாளர்கள் அந்நாட்டிற்கு வந்து குடியேறத் தொடங்கினர். இவர்களில் பெரும் பகுதியினர் அயர்லாந்து அல்லது ஜெர்மனியிலிருந்து வந்தனர். 1840-1850 காலப் பகுதியில் ஆண்டுதோறும் சுமார் 150,000 தொழிலாளர் குடியேறினர். இவர்களில் 50 சத விகிதத்திற்கு அதிகமானோர் அயர்லாந்தைச் சார்ந்தவர்கள். 1850-ல் அமெரிக்க மக்கள் தொகை 23 மில்லியன். இம் மக்கள் தொகையில் சுமார் 1 மில்லியன் ஐரிஷ்காரர்களிருந் தனர். இவர்கள் பெரும்பாலும் வட அட்லாண்டிக் மாநிலங்களில் குடியேறியிருந்தனர். ஜெர்மானியத் தொழிலாளர்கள் பெரும் பாலும் நாட்டின் மேற்கு மற்றும் வடக்குப் பகுதியில் குடியேறியிருந் தனர். இவர்களது எண்ணிக்கை 50,000. பொருளாதார, மத வேற்றுமைகள் காரணமாக இத் தொழிலாளர்களிடையே கருத்து வேற்றுமைகள் மிகுதியாயிருந்தன. பல நேரங்களில் மோதல்கள் ஏற்படவும் செய்தன.

என்றாலும், இவர்களனைவரையும் ஒன்றுபடுத்தி ஒரு தொழி லாளர் இயக்கத்தைத் தோற்றுவிப்பதற்குரிய முயற்சிகள் எடுத்துக்

கொள்ளப்பட்டன என்பது இங்கே நினைவுகூரத் தக்கது. உதாரணமாக 1851-ல், கார்ல் மார்க்ச் அவர்களது ஜெர்மானிய சீடரான ஜோசப் வெய்டிமெயர் (Joseph Weydemeyer) என்பார், அமெரிக்காவிற்கு வந்து அங்கே ஒரு செய்தித் தாளை ஆரம்பித்து மார்க்சிய கருத்துக்களைத் தொழிலாளர் மத்தியில் பரப்பினர். இதில் இவருக்கு வெற்றி அவ்வளவாகக் கிட்டவில்லை. அடுத்து, ஃபிரெஞ்சு சோசலிச வாதியான சார்லஸ் ஃபூரியர் (Charles Fourier) அவர்களது கருத்துக்களை ஏற்றுக்கொண்ட சிலர் சில சங்கங்களை அமைத்துக்கொண்டு 1840 முதல் 1850 வரையில் சமுதாய மறுமலர்ச்சிக் கருத்துக்களைக் கூறி வந்தனர். பிரிட்டிஷ் சோசலிசத்தின் தந்தையான ராபர்ட் ஓவன் (Robert Owen) 1830-ல் அமெரிக்காவில் சுற்றுப் பயணம் செய்து, பல சொற்பொழிவுகளை ஆற்றியதோடு இந்தியானுவில் உள்ள நியூ ஹார்மனி என்ற இடத்தில் ஒரு சோசலிச சங்கத்தையும் ஏற்படுத்தினர். தொழிலாளர்களிடையே உடன்பாடு ஏற்படவேண்டும் என்றும், தொழிலாளரின் ஆக்க சக்திகள் அதிகரிக்க வேண்டுமெனில் சமுதாய அரசியல் மாறுதல்கள் நிகழவேண்டும் என்றும் ஓவன் எடுத்துக் கூறினர்.

### தொழிலாளர் கோரிக்கைகள் :

உள்நாட்டுப் போருக்கு முந்திய காலங்களில் தொழிலாளர் தலைவர்கள் சமூகம், பொருளாதாரம், மற்றும் அரசியலோடு தொடர்புடைய பலவிதமான கோரிக்கைகளை வலியுறுத்தி வந்தனர். அரசியலோடு தொடர்புடைய ஒரு முக்கிய கோரிக்கை, ஓட்டளிக்கும் உரிமை எல்லோருக்கும் விரிவு செய்யப்படவேண்டும் என்பது. ஆனல் நீக்ரோக்களுக்கோ அல்லது மகளிருக்கோ ஓட்டுரிமை வேண்டும் என்பதில் அவர்கள் அவ்வளவாக அக்கறை செலுத்தவில்லை. அவர்களது மற்ற கோரிக்கைகள் : இலவசப் பொதுக்கல்வித் திட்டம் அமல் செய்யப் பெற வேண்டும்; தொழிலாளர் வேலை நேரம் நாள் ஒன்றுக்குப் பத்து மணி என்றிருத்தல் வேண்டும்; கூட்டாக வேலை நிறுத்தம் செய்யும் உரிமை தொழிலாளர்களுக்குக் கிடைக்க வேண்டும்; கூலிகள் டிரக் முறையில் (Truck Systems) தரப்படுவது நிறுத்தப்பட்டு, பணமாகக் கொடுக்கப் பெறவேண்டும்; தொழிற்சாலைகளில் தொழிலாளரின் உடல் பாதுகாப்புக்கான ஏற்பாடுகள் செய்யப் பெறவேண்டும். 1827 முதல் 1832 வரையில் பெரும்பாலான கைவினைஞர் சங்கங்களும் நகரத் தொழிலாளர் சங்கங்களும் அரசியல் பிரச்சினைகளில் கவனம் செலுத்த ஓட்டுரிமைத் திட்ட சீர்திருத்தத்திற்கு முயன்றன. 1833 முதல் 1837 வரையில் தொழிலாளர் சங்க வளர்ச்சியில் நல்லதொரு முன்னேற்றம் காணப்பட்டது. இக்காலப் பகுதியில் ஒயில்டுகேட் செழிப்பு (Wild-Cat Prosperity) நிலை நிலவியது : விலைப் பண வீக்கம்

மிகுதியடைந்து இறுதியில் நிதி நெருக்கடி உருவாயிற்று. 1837 முதல் 1862 வரையில் தொழிலாளர் சங்க வளர்ச்சியில் தொய்வு காணப் பட்டது. தீவிரப் போக்குடைய பல சங்கங்கள் படிப்படியாக மறைந் தன. யுடோபியன் சோசலிச வாதிகள் மக்கள் மத்தியில் செல்வாக் குப் பெற்றனர்.

தொழிலாளர் சங்க வளர்ச்சிக்குத் தொடக்கக் காலத்தில் பல முட்டுக்கட்டைகள் இருந்தன. தொழிலாளருக்குக் கொடுக்கப்படக் கூடிய அதிகபட்சக் கூலிகள் சட்ட பூர்வமாக நிர்ணயிக்கப்பட முடி யும் என்றும், தொழிலாளர்கள் வேலை செய்வதற்குக் கட்டாயப்படுத் தப்பட முடியும் என்றும் கூறிய மத்திய கால பிரிட்டிஷ் சட்டங்களை அமெரிக்கச் சட்டங்கள் பிரதிபலித்தன. ஒரு குறிப்பிட்ட வேலைக்குத் தரப்படும் சராசரி கூலிக்கு மிகுதியாகக் கூலி கேட்டுத் தொழி லாளர்கள் வற்புறுத்துவார்களேயானால், அது சட்டப்படி குற்ற மாகும். இந் நிலை 1810 ஆம் ஆண்டு வரைகூட நீடித்தது. என்றாலும், தொழிலாளர்கள் இதனால் துவண்டு விடவில்லை; துணிவை வளர்த்துக் கொள்ளத் தவறவும் இல்லை. தமக்குள் ஒற்றுமை தோன்றி, வேற்று மைகள் மறைந்து, வேதனை தரும் சூழ்நிலைகளைப் போக்கிடும் முறை யில் தொழிலாளர் சங்கங்கள் உருவாகவேண்டும் என்பதைத் தொழி லாளர்கள் மறந்துவிடவில்லை. என்றாலும் மெய்யான தொழிலாளர் சங்கம் தோன்றிடுவதற்கு அவர்கள் 1827 வரை காத்திருக்கவேண்டி யிருந்தது.

கைவினைஞர் சங்கங்கள் :

நாள் ஒன்றுக்கு 6 டாலர்கள் குறைந்தபட்ச கூலியாகத் தரப்பட வேண்டும் எனக் கோரி ஃபிலடெல்ஃபியா அச்சுத் தொழிலாளர்கள் 1786-ல் வேலை நிறுத்தம் செய்தனர். அமெரிக்காவில் முதன் முதலாக நடந்த வேலை நிறுத்தங்களில் முக்கியமானது இது. அடுத்து, 1791, 1795, 1805, 1807 ஆகிய ஆண்டுகளில் வேலை நிறுத்தங்கள் நடந்தன. இவற்றால் எந்தவிதமான நிலையான நன்மைகளும் விளையவில்லை. ஒரு குறிப்பிட்ட நோக்கத்தை நிறைவேற்றுவதற்கென வேலை நிறுத்தத் திற்கு ஏற்பாடுசெய்து, பிறகு வேலைநிறுத்தம் முடிந்தவுடன் மறைந்து விடுவதாக ஒரு தொழிலாளர் சங்கம் இருத்தல் கூடாது என்றும், அது தொடர்ந்து தொழிலாளர் நலத்திற்காகப் பாடுபடும் நிலையான அமைப்பாக அமைந்திருக்க வேண்டும் என்றும் 1792-ல் ஃபிலடெல் ஃபியா ஷூ தொழிலாளர்கள் வற்புறுத்தினர். அவர்களுடைய சங்கம் 1794 முதல் 1806 வரையில் இந்தப் பாணியில்தான் செயல் பட்டது. இச்சங்கத்தால் 1799-ல் நடத்தப்பெற்ற ஒரு வேலை நிறுத்த மானது மிகவும் திறம்பட நடத்தப்பெற்றது; வேலை நிறுத்தம் சுமார்

பத்து வார காலம் நீடித்தது. சங்க உறுப்பினர்களே வேலைக்கு எடுத்துக்கொள்ளப் பெறவேண்டும் என்று வேலை யளிப்போரிடம் வன்மையாக எடுத்துக் கூறியதும் இச்சங்கமேயாகும். 1794-ல் உருவான நியூயார்க் அச்சுத் தொழிலாளர் சங்கம் 1804 வரையில் நீடித்திருந்தது. 1830-க்குள் போஸ்டன், நியூயார்க், பால்டிமோர், ஃபிலடெல்ஃபியா ஆகிய இடங்களில் அச்சுத் தொழிலாளர், ஷூ தொழிலாளர், கண்ணாடி உற்பத்தித் தொழிலாளர், மரச் சாமான் தொழிலாளர்கள் ஆகியோருக்குச் சங்கங்கள் தோன்றி விட்டன. இவையனைத்தும் கைவினைஞர் சங்கங்களாக இருந்தன.

### தொழிலாளர் அமைப்பில் அரசியல் :

1827-ல் ஃபிலடெல்ஃபியா வர்த்தகக் கழக இயந்திரத் தொழிலாளர் சங்கம் (Mechanics Union Trade Association of Philadelphia) உருவாகியது. பல்வேறு துறைகளில் ஈடுபட்டிருந்த தொழிலாளருக்கான மத்திய தொழிலாளர் அமைப்பு இது. இதில் பிறகு 11 ஒன்றியங்கள் இணைந்தன. இம் மத்திய அமைப்பைத் தொடர்ந்து நியூயார்க், போஸ்டன் நகரங்களில் வேறு சில மத்திய அமைப்புக்கள் உருவாயின. தச்சு வேலைத் தொழிலாளர், அச்சுத் தொழிலாளர், கைத்தறி நெசவாளர் ஆகியோருக்கான தேசிய சங்கங்கள் (National Unions) 1830-ல் தோன்றின. தொழிலாளர் அமைப்பில் ஏற்பட்ட இந்த வளர்ச்சி தொழிலாளர் சங்கங்களை அரசியலுக்கு இழுத்துச் சென்றது. உதாரணமாக, 1828-ல் நடந்த பொதுத் தேர்தலில் ஃபிலடெல்ஃபியா வர்த்தகச் சங்க இயந்திரத் தொழிலாளர் ஒன்றியம் ஆனது, தேர்தலில் வேட்பாளர்களை நிறுத்துமாறு மற்ற ஒன்றியங்களுக்கு ஆலோசனை வழங்கியது. இவ் வேட்பாளர்களில் சிலர் வெற்றி பெறவும் செய்தனர். தொழிலாளர் அரசியல் கட்சிகள் பதினைந்து மாநிலங்களில் ஆரம்பிக்கப்பெற்றன. தொழிலாளருக்கென பல செய்தித் தாள்களும் தொடங்கப்பெற்றன. என்றாலும், அரசியல் அனுபவம் குறைவாகப் பெற்றிருந்த தொழிலாளர் தலைவர்களால்-சங்கங்களால் அரசியலில் தாக்குப் பிடிக்க முடியவில்லை. அரசியல் ஈடுபாடு தொடர்பாக அவர்களிடையே அபிப்பிராய பேதங்கள் முளைத்தன; அரசியல் ஆர்வமும் ஈடுபாடும் குறைந்தன.

அரசியல் தொடர்பிலிருந்து துண்டித்துக்கொண்ட தொழிலாளர் இயக்கம் 1833 முதல் 1837 வரையில் நன்கு பரவியது. தொழிலாளர் பிரதிநிதிகளைக்கொண்ட மாநாடு ஒன்று 1834-ல் நடந்தது. 1835 முதல் 1837 வரையிலான பொருளாதாரப் பூரிப்பு நிலையைத் தொடர்ந்து தொழிலாளர் சங்கங்கள் சிறப்பான அளவில் வளர்ந்தன. தொழில் பெருகி, வாணிபம் தழைத்து, நாட்டு வருமானம்

உயர்ந்திடுவதைக் கண்ணுற்ற தொழிலாளர்கள் தமக்குக் கூடுதலான கூலிகள் தரப்படவேண்டும் என்றும், தமது பொருளாதார நிலைமைகள் உயர்வதற்குரிய உதவிகள் வழங்கப்பட வேண்டும் என்றும் சங்கங்கள் மூலம் வற்புறுத்தினர். இக்காலப் பகுதியில் சில துறைகளில் பெண்களையும் தொழிலாளர் சங்கங்கள் உறுப்பினர்களாகச் சேர்த்துக்கொண்டு அவர்களது நலன்களுக்காகப் போராடின. இச் சங்கங்கள் லின் (Lynn) மாசசூசெட்ஸ் பகுதியிலிருந்த பெண் தொழிலாளரிடையே—இவர்கள் பெரும்பாலும் ஷூ தயாரிப்புத் தொழிலாளர்கள்—அமைக்கப்பெற்றன. நியூயார்க்கில் மகளிர் ஒன்றியக் கழகம் (Female Union Association) ஒன்றும் நிறுவப்பெற்றது. 1835-ல் அமெரிக்கப் பெண் தொழிலாளருக்கென ஃபிலடெல்ஃபியாவில் ஒரு கூட்டிணைப்பு (Federation) ஏற்படுத்தப்பெற்றது இங்கே குறிப்பிடத்தக்கது. தொழிலாளர் இயக்கத்தில் ஏற்பட்டுவந்த இந்த அருமையான வளர்ச்சி, 1837ஆம் ஆண்டு நாட்டில் தோன்றிய வாணிப மந்த நிலைமை (Depression) காரணமாக மிகவும் பாதிக்கப்பட்டது ஒரு துரதிருஷ்ட நிகழ்ச்சியாகும். வாணிப மந்தத்தால் தொழில் ஊனமுற்றது; தொழிற்சாலைகள் மூடப்பெற்றன; வேலையின்மைப் பிரச்னை விஸ்வரூபமெடுத்தது; தொழிலாளர்கள் தளர்ச்சியுற்றனர்; தொழிலாளர் சங்கக் கருவூலங்கள் காலியாயின. ஆங்காங்கிருந்த சின்னஞ்சிறு சங்கங்களையன்றி, நியூயார்க்கிலிருந்த 'தேசியத் தொழிலாளர் அமைப்பு'ப் (National Trades Union) போன்ற தேசிய அமைப்புக்கள்கூட நிலை தடுமாறி முறிந்துபோயின. தொழில் உலக முழுவதும் சோர்வு நிலை நர்த்தனமாடியது.

### வேலை நிர்ணயக் கோரிக்கை :

பத்தொன்பதாம் நூற்றாண்டின் மத்தியப் பகுதியில் நடந்த அனேக வேலை நிறுத்தங்கள் வேலை நேர நிர்ணயக் கோரிக்கையோடு தொடர்புகொண்டிருந்தன. 1830-ல் அமெரிக்கத் தொழிலாளர்கள் ஒருநாளைக்கு 12½-மணி நேரம் உழைக்கவேண்டியிருந்தது. தொழிலாளர்கள் இதனைக் கடுமையாக எதிர்த்தனர். வேலைநேரம் குறைக்கப்பட வேண்டுமென 1830 முதல் 1840 வரையில் தொழிலாளர்கள், தொழிலாளர் சங்கங்கள்மூலம் எடுத்துக் கூறினர். கோரிக்கையில் நியாயமிருப்பதைக்கண்ட குடியரசுத் தலைவர் வான் பியூரன் (Van Buren) ஃபெடரல் தொழிலாளர்களின் வேலை நேரத்தை நாள் ஒன்றிற்குப் பத்து மணி எனக் குறைத்தார். 1844-ல் போஸ்டனில் கூடிய 'நியூ இங்கிலாந்து மாநாடு', வேலை நேரம் எல்லா வேலைகளிலும் நாள் ஒன்றிற்குப் பத்து மணி என நிர்ணயிக்கப் பெறவேண்டும் என்று ஏகோபித்த குரலில் வற்புறுத்தியது. பல மாநில அரசுகள் இதற்கு மசிந்து கொடுப்பதாக இல்லை. ஆகவே, மாநில சட்ட மன்றங்களின்

உதவிகளைத் தொழிலாளர் சங்கங்கள் நாடின. அம் முயற்சியும் பலிக்காமல் போகவே, நாடெங்கும் ஆர்ப்பாட்டங்கள், வேலை நிறுத்தங்கள் நடந்தன. இதன் விளைவாக, பல மாநில அரசுகளின் போக்கில் மாறுதல்கள் நிகழ்ந்தன. தொழிலாளரின் வேலை நேரங்கள் நாள் ஒன்றுக்குப் பத்து மணியே என்பதைத் தெளிவுபடுத்தும் சட்டங்கள் நியூ ஹாம்ஷயர், பென்சில்வேனியா, மெய்ன், ஓஹியோ, நியூ ஜெர்சி ஆகிய மாநிலங்களில் 1853-க்குள் இயற்றப்பட்டன. ஆனால் இச் சட்டங்கள் நடை முறையில் சரிவர அமல் செய்யப் பெறவில்லை. ஒப்புக்கு இயற்றப்பட்ட சட்டங்களாக இருந்தனவே தவிர, ஒழுங்காக செயற்படுத்தப்படும் சட்டங்களாயிருக்கவில்லை. மாநில அரசுகள் இவ்விஷயத்தில் மிகவும் பாராமுகமாயிருந்தன. எனவே, பல மாநிலங்களில் மறுபடியும் கிளர்ச்சிகள் நடந்தன. 1860ஆம் ஆண்டிற்குப் பிறகுதான் வேலை நேரம் 10 மணி என்பது நாடெங்கும் ஒப்புக்கொள்ளப்பட்டது; தொழிலாளருக்கும் சற்று நிம்மதி கிடைத்தது. 1860 வரையில் தொழிலாளர்களது கோரிக்கைகளில் வேலை நேரப் பிரச்சினைதான் பிரதானமாயிருந்ததே தவிர, கூலிப் பிரச்சினைகள் அல்ல. கூலிப் பிரச்சினைகள் தலையெடுக்காமலிருந்ததற்குக் காரணம், 1820 முதல் 1860 வரையில் தொழிலாளரின் மெய்க் கூலிகள் அதிகரித்தமையே என்று சில ஆசிரியர்கள் கருதுகின்றனர். இக்காலப் பகுதியில் மெய்க்கூலிகள் சுமார் 13 சதவீதம் அதிகரித்தது என இவர்கள் சுட்டிக் காட்டுகின்றனர்.

### 1850 முதல் 1900 வரையிலான வளர்ச்சி :

இரயில்பாதை வளர்ச்சி, பொன்வயல் கண்டுபிடிப்புக்கள், பொது வாணிப மீட்சி ஆகியவை காரணமாக 1850-க்குப்பிறகு தொழிலாளர் இயக்கம் சுறுசுறுப்படைந்தது. சுமார் 10 தேசிய அமைப்புக்கள் தோன்றின. இவற்றில் அச்சுத் தொழிலாளர் அமைப்பு (1850), தொப்பித் தயாரிப்புத் தொழிலாளர் அமைப்பு (1854), இயந்திரத் தொழிலாளர் மற்றும் கொல்லர் தேசீய அமைப்பு (1859), ஆகியவை முக்கியமானவை. தொழிலாளர் இயக்க வளர்ச்சி 1857ஆம் ஆண்டின் வாணிப நெருக்கடியினால் பெரிதும் பாதிக்கப்பட்டது. மூன்று அமைப்புக்கள் மட்டுமே நெருக்கடியின் கோரப்பிடியிலிருந்து தப்பின; மற்றவை மறைந்தன. நெருக்கடியால் உண்டான அதிர்ச்சி நெடு நாட்களுக்குத் தொழிலாளர் இயக்கத்தை அலைக்கழித்தது. இதற்கிடையில் வேலை நிறுத்த உரிமை தொழிலாளர் சங்கங்களுக்கு உண்டென்பதை அமெரிக்க நீதிமன்றங்கள் ஒப்புக்கொண்டன. இது, தொழிலாளர் இயக்க வரலாற்றின் ஒரு முக்கிய நிகழ்ச்சி. என்றாலும், வேலை நிறுத்தம் தொடர்பாகப் பல சங்கங்கள் அவ்வப்போது நீதி மன்றங்களுக்குச் செல்லவேண்டியே யிருந்தது.

இக் கட்டத்தில் உள்நாட்டுப் போர் தோன்றியது. நாட்டில் பல குழப்பங்கள் தலையெடுத்தன. தொழிலாளர் அமைப்பில் மாறுதல்கள் உண்டாயின. தொழிலாளர் இயக்கத் தலைவர்கள் அரசியலுக்கு முழுக்குப் போட்டுவிட்டுத் தொழிலாளர் அமைப்பை வலிவுபடுத்தும் பணியினை மேற்கொண்டனர். உள்நாட்டுப் போரும், பொருளாதாரப் புரட்சியும் மக்களின் குறுகிய எண்ணங்களை, கோட்பாடுகளைக் குழிதோண்டிப் புதைத்தன. தேசிய அளவில் தொழிலாளர் அமைப்பை வளர்க்கவேண்டும் என்ற ஆர்வம் தொழிலாளரிடையே அரும்பியது. அமைப்பின் உறுப்பினர்களாக ஆகவேண்டும் என்ற ஆவல் அவர்களிடையே அதிகரித்தது. கூட்டு முயற்சி, கூட்டு பேரம்—இவற்றின் மூலமே தமது தொல்லைகளுக்குப் பரிகாரம் காண முடியும் என்ற உணர்வு அவர்களிடையே மேன்மேலும் தீவிரமடைந்தது. 1869-ல் தொழிலாளர் சங்கங்களில் இருந்த தொழிலாளர் எண்ணிக்கை 170,000. இது 1871-ல் 300,000 ஆக உயர்ந்தது. 1872-க்குள் 32 தேசியத் தொழிலாளர் அமைப்புக்கள் தோன்றி விட்டன. சுரங்கத் தொழிலாளர், ஷூ தயாரிப்புத் தொழிலாளர், கட்டிடத் தொழிலாளர் போன்றவர்கள் இத் தேசிய அமைப்புக்களை ஏற்படுத்திக்கொண்டிருந்தனர். இந்நேரத்தில் அமெரிக்க மக்கள் தொகையில் மிகுதியான பெருக்கம் ஏற்பட்டது. தொழிற்சாலைகள், சுரங்கங்கள், இரயில்பாதைப்போக்குவரத்துஆகியவற்றில்பணிபுரிந்துவரும் தொழிலாளர் எண்ணிக்கை பெரிதும் அதிகரித்தது; இவற்றில் ஈடுபட்டிருந்த தொழிலாளர் தொகை 1860-1900 காலப் பகுதியில் சுமார் 5 மடங்கு கூடுதலாகியது. பத்தொன்பதாம் நூற்றுண்டின் இறுதியில் வேலையளிப்போருக்கும் தொழிலாளிகளுக்குமிடையில் பல மோதல்கள் ஏற்பட்டன. பல துறைகளில் வேலை நிறுத்தங்கள் நடைபெற்றன. உதாரணத்திற்குச் சில: இரயில்பாதை வேலைநிறுத்தம் (1877), சுரங்க வேலை நிறுத்தம் (1886), எஃகுத்தொழில் வேலை நிறுத்தம் (1892), சிக்காகோ வேலை நிறுத்தம் (1894). வர்க்கப் போராட்டம் வடிவமெடுத்ததற்கான சான்றுகள் இவை.

### மீண்டும் வேலை நேர நிர்ணயப் பிரச்சினை :

வில்லியம் சில்விஸ் என்பார் 1866-ல் தொழிலாளர் சங்கக் கூட்டிணைப்பை ஏற்படுத்தவும், தேசியத் தொழிலாளர் சங்கத்தை (National Labour Union) மாற்றியமைக்கவும் முயன்றார். தேசியத் தொழிலாளர்சங்கம் ஒரு முக்கியத் தொழிலாளர் அமைப்பாக செயல்பட்டு வந்தது. அரசியல் சார்புடன் இயங்கிய இச்சங்கம் 1872-ல் மறைந்தது. 1866-க்குப் பிறகு வேலை நேர நிர்ணயப் பிரச்சினை மீண்டும் தலையெடுத்தது. பால்டிமோர் நகரில் நடந்த தொழிலாளர் பிரதிநிதிகள் மாநாடு ஒன்று, தொழிலாளர் வேலை நேரம் நாள்

ஒன்றுக்கு எட்டு மணியாக இருத்தல் வேண்டும் எனத் தீர்மானம் போட்டது. வேலை நேரம் எட்டு மணி யாகத்தானிருக்கவேண்டும் என்று ஸ்டீவர்டு (Steward) போன்ற தொழிலாளர் இயக்கத் தலைவர்கள் வலியுறுத்தினர். இதன் விளைவாக, 1688-ல் குடியரசுத் தலைவர் ஆண்ட்ரூ ஜான்சன், பொதுப்பணி வேலைகளில் ஈடுபட்டுள்ள ஃபெடரல் தொழிலாளரின் வேலை நேரம் எட்டு மணியாக இருக்கும் என அறிவிக்கும் மசோதாவில் கையெழுத்திட்டார். இதைத் தொடர்ந்து நியூயார்க், இல்லினாய், விஸ்கான்சின், மிசௌரி, கனெக்டிகட், கலிஃபோர்னியா போன்ற பல மாநிலங்கள் தொழிலாளர் வேலை நேரத்தை எட்டு மணியாகக் குறைத்தன. தொழிற்சாலைகளில் வேலை நேரம் உண்மையில் எட்டு மணியாகத்தான் இருக்கிறதா என்பதைக் கண்காணித்து வருவதற்கான ஏற்பாடுகள் இல்லாமையால், பல தொழிற்சாலைகளில் தொழிலாளர்கள் எட்டுமணிக் கதிகமாக வேலை செய்யவேண்டி யிருந்தது. என்றாலும், எட்டுமணி வேலை நேரம் பெயரளவுக்கு ஒப்புக்கொள்ளப்பட்டிருந்ததே அவர்களுக்கு ஒரு பெரிய வெற்றியாக இருந்தது எனலாம்.

**'தி நைட்ஸ் ஆஃப் லேபர்' :**

'நைட்ஸ் ஆஃப் செயின்ட் கிரிஸ்பின்' (Knights of St. Grispin) என்றொரு சங்கம் 1867ஆம் ஆண்டு மில்வாகியில் நிறுவப்பட்டது. 1868 முதல் 1870 வரையில் இச்சங்கம் மிகவும் பயனுள்ள முறையில் செயல்பட்டது. 1870-ல் இது உலகிலேயே மிகச் சிறந்த தொழிலாளர் சங்கமாக இருந்தது. யுரியா எஸ். ஸ்டீஃபன்ஸ் (Uriah S. Stephens) என்ற தையல்காரர், 1869-ல் ஃபிலடெல்ஃபியாவில் 'தி நைட்ஸ் ஆஃப் லேபர்' (The Nights of Labour) என்ற தொழிலாளர் அமைப்பை ஏற்படுத்தினர். ஓர் இலக்கியச் சங்கமாக இருந்த இவ் வமைப்பின் மூன்று முக்கிய குறிக்கோள்கள் பின்வருவன: (1) தொழிலாளர்களால் உருவாக்கப்படும் செல்வத்தில் ஒரு நியாயமான பகுதி ஏன் தொழிலாளர்களுக்குக் கூலியாகக் கொடுக்கப்படவேண்டும் என்பதைப்பற்றிப் பொதுமக்களுக்கு எடுத்துக்கூறல் ; (2) தொழிலாளர்களின் வேலைப் பளுவைக் குறைப்பதற்கான சட்டங்களை இயற்றப் பாடுபடல்; (3) உறுப்பினர்களுக்குத் துன்பம் நேர்கையில் உதவிகளை வழங்கல். தொழிலாளர்களுக்கு ஒரு நாளைக்கு எட்டுமணி நேர வேலையே தரப்படவேண்டும் என்பதையும், வருமானம், சொத்துப் பேறு, அஞ்சலகச் சேமிப்புப் பாங்குப் பணம் ஆகியவைமீது வரி விதிக்கப்படவேண்டும் என்பதையும், வேலை செய்கின்றபோது தொழிலாளர்களுக்கு ஏற்படும் விபத்துக்களுக்கான இழப்பீட்டுப் பணம் அவர்களுக்கு அளிக்கப்படவேண்டும் என்பதையும், நிலச் சொந்தக்காரர்கள் பெறும் உழைப்பிலா வருமானத்தை அரசே எடுத்

துக்கொள்ளவேண்டும் என்பதையும் இச்சங்கத்தினர் ஆதரித்தனர். இரயில்போக்குவரத்து, குடிநீர் அளிப்பு, வாயு உற்பத்தி ஆகியவற்றை அரசே எடுத்துக்கொள்ள வேண்டும் என இவர்கள் வற்புறுத்தினர். வேலைநிறுத்தங்களைத் தவிர்த்து, போராட்டங்களைச் செய்வதன்மூலமே தொழிலாளர்கள் தமது குறைபாடுகளை நீக்க முயலவேண்டும் என்று இவ்வமைப்பின் தலைவர்கள் சிலர் கருதினர். தொழிலாளரிடையே ஒற்றுமையை வளர்ப்பதிலும், அமைப்பைப் பலப்படுத்துவதிலும் இவர்கள் கண்ணும் கருத்துமாயிருந்தனர்.

தொடக்கத்தில் 'நைட்ஸ் ஆஃப் லேபர்' அமைப்பில் 11 உறுப்பினர்களைக்கொண்ட ஒரு கிளைச் சங்கமே இருந்தது. 1873-ல் 6 கிளைச் சங்கங்கள் உருவாயின. 1875-ல் 80 கிளைச் சங்கங்கள் தோன்றின. 1883-ல் இவ்வமைப்பில் 52,000 உறுப்பினர்கள் இருந்தனர். 1886-ல் உறுப்பினர் எண்ணிக்கை 700,000-க்குத் தாவியது. பிறகு இது 1 மில்லியனாயிற்று. இரகசியமாகப் பணிபுரிந்து வந்ததால் இவ்வமைப்பின்மீது பலருக்குச் சந்தேகம் ஏற்பட்டது. எனவே, 1881 முதல் இரகசியமாகச் செயல்படும் பழக்கத்தை இவ்வமைப்பு கைவிட்டது. ஒரு மாபெரும் தொழிலாளர் அமைப்பாகத் திகழ்ந்துவந்த இச்சங்கத்தில் கருத்து வேற்றுமைகள் முளைத்தது ஒரு வருந்தத்தக்க சம்பவம் ஆகும். கருத்து வேற்றுமைகள் விளைவாகப் பிளவு ஏற்பட்டு இரு பிரிவுகள் உண்டாயின. ஒரு பிரிவினர் அரசியல் வழிகளைப் பின்பற்றிச் சீர்திருத்தம் கொணர விரும்பினர். மற்றொரு பிரிவினர் நேரடி நடவடிக்கை மூலம் சீர்திருத்தம் கொணர விரும்பினர்; வேலை நிறுத்தம் போன்ற எல்லா முறைகளிலும் தொழிலாளர் நிலை உயரப் பாடுபட வேண்டும் என இவர்கள் விழைந்தனர்; இவர்கள் கரமே ஓங்கியது. ஒரு சில வேலை நிறுத்தங்களை வெற்றிகரமாக நடத்திய இவ்வமைப்பு, 1886-ல் வலிவான சங்கம் என்ற வாழ்த்துக்களைப்பெற்றது. என்றாலும், பயனற்ற வேலை நிறுத்தங்கள் இதன் பெயரைக் கெடுத்தன. மக்களது ஆதரவு படிப்படியாகக் குறைந்தது. 1888ஆம் ஆண்டிற்குப் பிறகு ஆற்றல் குன்றி இவ்வமைப்பு மறைந்துபோயிற்று. 'தி அமெரிக்கன் ஃபெடரேஷன் ஆஃப் லேபர்' என்ற அமெரிக்கத் தொழிலாளர் கூட்டிணைப்பின் தோற்றமும் இதன் மறைவுக்கு ஒரு முக்கியக் காரணம் ஆகும், 'நைட்ஸ் ஆஃப் லேபர்' அமைப்பின் தோற்றம், வளர்ச்சி, வெற்றி, மறைவு ஆகிய எல்லாமே ஒரு குறுகிய காலத்தினுள் அடங்கிவிட்டன. என்றாலும், அதன் சாதனைகள் மகத்தானவை என்பதை யாரும் மறுக்க முடியாது. இவ்வமைப்பின் முயற்சியால் பல சின்னஞ்சிறிய சங்கங்கள் மாற்றியமைக்கப்பட்டன; தெம்புடன் செயல்படும் நிலையை அடைந்தன; புதிய சங்கங்கள் தோன்றின; உழைப்பின் பெருமையும், ஒற்றுமையின் நன்மைகளும், அமைப்பின் அவசியமும் மக்களுக்கு நன்கு புலப்பட்டன. வேலை

நேரத்தை எட்டு மணியாகக் குறைப்பதற்கும், தொழிலாளர் இயக்கத்திற்குச் சட்டப் பாதுகாப்பு கிடைப்பதற்கும், தொழிற்சாலை மற்றும் சுரங்கச் சட்டங்களை இயற்றுமாறு செய்வதற்கும், சிசு வேலை முறையை ஒழிப்பதற்கும், கூட்டுறவை வளர்ப்பதற்கும், தொழிலாளர் புள்ளி விவரக் கழகத்தை (Bureau of Labour Statistics) நிறுவுவதற்கும், 'நைட்ஸ் ஆஃப் லேபர்' அமைப்பு எடுத்துக்கொண்ட சிரமங்கள் அமெரிக்கர்களால் மறக்க முடியாதவை.

**'தி அமெரிக்கன் ஃபெடரேஷன் ஆஃப் லேபர்':**

'தி அமெரிக்கன் ஃபெடரேஷன் ஆஃப் லேபர்' 1881-ல் தோன்றியது. தோன்றிய இடம் பிட்ஸ்பர்க். 5 ஆண்டுகளுக்குப் பிறகு இவ்வமைப்பு திருத்தியமைக்கப் பெற்றது. வர்த்தகர் மற்றும் தொழிலாளர் சங்கங்களே இந்த ஃபெடரேஷனின் உறுப்பினர்களாக இருக்க முடியும்; ஒவ்வொரு சங்கத்தின் உறுப்பினர் அளவைப் பொறுத்து அச்சங்கத்திற்கு ஃபெடரேஷனில் பிரதிநிதித்வம் கிடைக்கும். உறுப்பினர்கள் தமது சங்கத்திற்குத் தலா மூன்று சென்ட் சந்தாத் தொகையாகக் கொடுத்துவர வேண்டும். இவ்வமைப்பில் 1884ஆம் ஆண்டு 50,000 உறுப்பினர்களிருந்தனர்; 1890-ல் இது 190,000 ஆகப் பெருகிற்று. முதல் உலகப் போர் தொடங்கிய வேளையில் இதில் 2 மில்லியன் தொழிலாளர்கள் உறுப்பினர்களாயிருந்தனர்: பெரும்பாலான தேசியத் தொழிலாளர் சங்கங்கள் இதனுடன் இணைந்திருந்தன. 1890-ல் இவ்வமைப்புக்குக் கடுமையான எதிர்ப்புக்கள் மூண்டன; அவையனைத்தையும் இது துணிவோடு சந்தித்தது. இரு எஃகுத் தொழில் வேலை நிறுத்தங்களில் தோல்வி கண்டது; என்றாலும், துவண்டுவிடாது மேலும் முன்னேறிச் சென்றது. எல். எல். லார்வின் (L. L. Lorwin) என்ற தொழிலாளர் இயக்க வரலாற்றாசிரியர், ஃபெடரேஷன் நன்கு வளர்ந்த இக்காலப் பகுதியை, தொழிலாளர் இயக்கத்தின் வீரமான நாட்கள் என வருணிக்கிறார். உயர்ந்த இலட்சியங்களைக்கொண்டு உன்னத முறையில் இவ்வமைப்பு செயல்பட்டதால் பல முதலாளிகள் இதனை அங்கீகரித்தனர். அங்கீகாரப் பிரச்சினை ஒரு தொல்லையாக இருக்கவில்லை. முதலாளிகள், தொழிலாளிகளுக்கிடையே சுமூகமான உறவு ஓரளவுக்கு நிலவியது. இதன் காரணமாக, இக் காலத்தை செலிக் பெர்ல்மான் (Selig Perlman) என்ற பொருளாதார வரலாற்றாசிரியர் 'முதலாளி, தொழிலாளி தேன் நிலவுக் காலம்' எனக் கூறினார்.

புதுக் கொள்கை (New Deal) காலத்திலும், இரண்டாம் உலகப் போர்க் காலத்திலும் ஃபெடரேஷன் நன்கு வளர்ந்தது. சிறிய கைவினைத் தொழிலாளரும், பேரளவுத் தொழிற்சாலைத் தொழி

லாளரும் இதில் சேர்ந்தனர். உதாரணமாக, ஐக்கியச் சுரங்க வேலைத் தொழிலாளர் சங்கமும், பன்னாட்டு மதுபான உற்பத்தித் தொழிலாளர் சங்கமும் இதனுடன் இணைந்திருந்தன. இவை மிகப் பெருந் தொழிலாளர் சங்கங்களாகும். ஃபெடரேஷன் ஒரு தலைவரையும், 15 துணைத் தலைவர்களையும், ஒரு செயலாளரையும் கொண்டிருந்தது. ஆண்டுதோறும் நடக்கும் கூட்டங்களில் இவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவர். ஃபெடரேஷனுக்கென வாஷிங்டனில் ஒரு செயலகம் இருந்தது. ஃபெடரேஷனின் மூன்று முக்கியக் குறிக்கோள்கள் : (1) தொழிலாளர் நலன்களைப் பேணும் சட்டங்கள் உருவாகப் பாடுபடுவதோடு, தீமை விளைவிக்கும் சட்டங்களை எதிர்த்துப் போராடல்; (2) தொழிலாளரைச் சூழ்ந்திருக்கும் தொல்லைகளை அகற்றி அவர்களுக்கு நியாயமான உரிமைகளும் சலுகைகளும் கிடைக்கச் செய்தல்; (3) தொழிலாளர் நலம் பெறும் வகையில் தொழிலாளர் அமைப்பை வளர்த்தல். இன்னும் முக்கியமாகக் கூலிகளை உயர்த்தல், வேலை நேரத்தைக் குறைத்தல், வேலைச் சூழ்நிலைகளைச் சீர்ப்படுத்தல், இன்சூரன்ஸ் திட்டங்கள் மூலம் தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பு அளித்தல் ஆகியவற்றில் ஃபெடரேஷன் மிகுந்த அக்கறை காட்டியது.

அமைதி வழிகளில் தமது கோரிக்கைகளை நிறைவேற்றிக் கொள்ள ஃபெடரேஷன் முயன்றது. என்றாலும், தம்முடன் இணைந்துள்ள சங்கங்கள் தீவிர வழிகளை நாடினால் அதை அனுமதிக்கவே செய்தது. தேசீய சங்கங்களில் இடம் பெற்றிருந்த வட்டாரச் சங்கங்கள், தேசீய சங்கங்களின் ஒப்புதல் இன்றி வேலை நிறுத்தம் செய்ய முடியாது. ஒப்புதல் அளித்தால், வேலை நிறுத்தத்தை வெற்றிகரமாகச் செய்து முடிப்பது தேசீய சங்கங்களின் பொறுப்பாகும். ஃபெடரேஷன் வளர வளர, தொழிலாளர் பிரச்சினைகளையும் தொழிற் பூசல்களையும் தீர்ப்பதற்குரிய நல்ல வழிமுறைகள் நடைமுறைக்கு வந்தன. என்றாலும் வேலை நிறுத்தங்களும், கதவடைப்புக்களும் எண்ணிக்கையில் அதிகரித்துக்கொண்டேயிருந்தன. இரண்டு நோக்கங்களுக்காகத் தொழிலாளர்கள் அவ்வப்போது வேலை நிறுத்தம் செய்து வந்தனர். அவை : (1) தொழிலாளர் சங்கங்களை வேலையளிப்போர் அங்கீகரிக்க வேண்டும். (2) கூலிகள் உயர்த்தப் பெறவேண்டும். 1881-ல் நடைபெற்ற வேலை நிறுத்தங்களில் மூன்றில் இரண்டு மடங்கு, கூலி உயர்வு கோரி நடந்தவையாகும். 1905-ல் உண்டான பல வேலை நிறுத்தங்களுக்குக் கூலி உயர்வு கோரிக்கை, சங்க அங்கீகார வேண்டுகோள் ஆகிய இரண்டுமே முக்கியக் காரணங்களாக இருந்தன. சங்கங்களுக்கு அங்கீகாரம் வழங்க மறுக்கும் முதலாளிகளால் தயாரிக்கப்படும் பண்டங்களைப் பகிஷ்காரம் செய்வதன் மூலம் சங்கங்களுக்கு

அங்கீகாரம் கிடைத்திட, சில நேரங்களில் தொழிலாளர்கள் முயன்று அதில் வெற்றியும் கண்டனர். பயன் மிகுந்த முறையில் செயல் பட்டதால் ஃபெடரேஷனுக்கு மக்களின் நல்லாதரவு கிட்டியது. ஃபெடரேஷன் ஆனது, பல சங்கங்களை இணைத்து நின்ற ஒரு கூட்டுக் குழு ஆகும். 1950ஆம் ஆண்டில் ஃபெடரேஷனில் 108 தேசீய, சர்வ தேச சங்கங்கள் இருந்தன; இவை சுமார் 9,000,000 உறுப்பினர்களைக் கொண்டிருந்தன. இவையே அல்லாது, 50 மாநிலக் கூட்டிணைப்புக்கள், 1000 நகர மத்திய குழுக்கள் இருந்தன.

உலகத் தொழிலாளர் சங்கம் (Industrial Workers of the World): ஹேவுட் (Haywood) என்பார் உலகத் தொழிலாளர் சங்கத்தை 1905-ல் நிறுவினர். ஃபிரெஞ்சு சிண்டிகாலிசக் (Syndicalism) கொள்கைகளில் இவர் ஈடுபாடு கொண்டிருந்தார். மார்க்சிஸ சோசலிசவாதி டேனியல் டிலியன் (Daniel Deleon), புல்மான் வேலை நிறுத்தப் புகழ் யூஜின் வி. டெப்ஸ் (Eugene V. Debs) ஆகியோரின் ஆதரவு ஹேவுட்டுக்கு இருந்தது. உலகத் தொழிலாளர் சங்கத்தின ரின் கருத்துக்கள்: தொழிலாளர் வகுப்பைச் சூழ்ந்துள்ள துன்பங்கள் தொழிலாளர் இயக்கம் மூலம்தான் அகல முடியும்; இதை நன்கு உணர்ந்து எல்லாத் தொழிலாளர்களும் ஒரே இயக்கத்தில் சேர வேண்டும் உலகத் தொழிலாளர் சங்கம், கைவினைத் தொழில்கள், பேரளவுத் தொழில்கள் ஆகியவை தமக்குரிய சுதந்திரத்தைப் பெறப் பாடுபடும்; சர்வதேச அளவில் தொழில்களுக்குச் சுதந்திரம் கிடைக்க வும் போராடும். நிலைமை சீர்ப்பட வேண்டுமெனில் தொழிலாளர் அனைவரும் ஒரே வகுப்பைச் சார்ந்தவர் என்ற எண்ணம் வளர வேண்டும். வேலையளிப்போர்—தொழிலாளர்—இவர்களுக்கிடையே யான வர்க்கப் போராட்டத்தைத் தொழிலாளர்கள் மனத்தில் எப்போதும் வைத்திருக்க வேண்டும். வெற்றிக்கு வழி நேரடி நடவடிக்கையே. நேரடி நடவடிக்கை என்றால் வேலை நிறுத்தம், பகிஷ்காரம், நாச வேலை ஆகியவற்றைக் குறிக்கும். 'பூமியையும் உற்பத்திச் சாதனங்களையும் புவனத்துத் தொழிலாளர் கைப்பற்றி, கூலி வேலை முறையைக் கூண்டோடு அழிக்கும் வரையில் தொழிலா ளர் போராட்டம் தொடர்ந்துகொண்டேயிருக்கவேண்டும்.' உலகத் தொழிலாளர் சங்கம் உண்மையில் புரட்சி சோசலிசத்தின் ஒரு வகை யாக இருந்தது. இச்சங்கத்தின் கொள்கைகள் நெசவுத் தொழி லாளர்கள், அறுவடைத் தொழிலாளிகள், கிழக்கு மற்றும் மேற்குப் பகுதியிலிருந்த தொழிலாளர்கள் முதலியோரைக் கவர்ந்தன. 'ஒருவ ருக்குத் தீங்கு என்றால், எல்லோருக்கும் தீங்கு என்பது பொருள்' என்ற இச்சங்கத்தினரின் தாரகமந்திரம் பல தொழிலாளர்களின் மனத்தை மயக்கியது. சங்க நடவடிக்கைகளில் குறிப்பிடத்தகுந்தவை 1912ஆம்

ஆண்டின் லாரன்ஸ் வேலை நிறுத்தமும், 1912—13-ல் நடந்த பேட்டர்சன் வேலை நிறுத்தமும் (Paterson Strike) ஆகும். லாரன்ஸ் வேலை நிறுத்தம் வெற்றியைக் கொடுத்தது. பேட்டர்சன் வேலை நிறுத்தம் தோல்வியினைத் தழுவியது. 1909 முதல் 1917 வரையில் இச் சங்கம் வன்செயற் போக்கினைக் கொண்டிருந்தது. இதன் புரட்சி மிகுந்த போக்கும் முறைகளும் பொதுமக்களிடம் வெறுப்புணர்ச்சியை உருவாக்கின. அதோடு, 1914-ல் தொடங்கிய போரில் அமெரிக்கா தலையிட்டபோது, இச்சங்கம் அரசின் கொள்கையை ஆதரிக்க மறுத்ததால், அரசின் எதிர்ப்புக்கும் இலக்காகியது. உறுப்பினர்களுக்குள்ளும் கருத்து வேற்றுமைகள் முளைத்தன; பிளவுகள் தலையெடுத்தன. அரசின் தொல்லை, உட்பூசல், நிதிப் பற்றாக்குறை ஆகியவை காரணமாக உலகத் தொழிலாளர் சங்கம் அழிவுக்குள்ளாகியது. உயிரோடிருந்தபோது அது தொழிலாளர்களிடம் நல்ல செல்வாக்கைப் பெற்றிருந்தது. திறமைபெறாத் தொழிலாளர்கள் (unskilled workers) இதன் மூலம் சில நன்மைகளைப் பெற்றனர். தையல் துறைத் தொழிலாளர்கள் லாரன்ஸ், பேட்டர்சன் வேலை நிறுத்தங்களைச் சரிவர நடத்த முடியாது தவித்தபோது, இச்சங்கம் அவற்றில் தலையிட்டு வேலை நிறுத்தங்களைத் துணிவோடு நடத்த உதவியது. நீக்ரோ இனத்தவர்கள் இச் சங்கத்தினால் சில உதவிகளைப் பெற்றனர்.

*நீதிமன்றத்தில் தொழிலாளர் சங்கங்கள்:*

பல வேளைகளில் தொழிலாளர் சங்கங்கள் நீதிமன்றங்களுக்கு இழுக்கப்பட்டன. தொடக்க காலத்தில் தொழிலாளர் சங்கங்கள் சட்ட விரோதமானவை என்றும், பொதுமக்களின் நலன்களுக்கு ஊறுவிளைவிப்பவை என்றும் வேலையளிப்போர் கருதினர். 19ஆம் நூற்றாண்டின் துவக்கத்தில் நீதிமன்றத்தின் தீர்ப்புக்கள் தொழிலாளர்களுக்குப் பாதகமாக இருந்தன. ஆனால் நாளடைவில் நீதிமன்றத்தின் போக்கில் மாறுதல் தென்பட்டது. தொழிலாளர் சங்கங்கள் ஏற்படுவதை மறுக்காமல், நோக்கங்களை நிறைவேற்றிக் கொள்ள அவை பயன்படுத்தும் வழிமுறைகளைப்பற்றி பரிசீலனை செய்ய முயன்றமை நீதிமன்றப் போக்கில் நிகழ்ந்த முக்கிய மாறுதலாகும். தொழிலாளருக்குச் சாதகமாயிருந்த பல சட்டங்களை நீதிமன்றம் பல நேரங்களில் நிராகரித்துவிட்டது. உதாரணமாக, பொதுப்பணித்துறைத் தொழிலாளர் வேலை நேரத்தைக் கட்டுப்பாடு செய்யும் சட்டம், டிரக் (Truck) முறையில் கூலி வழங்கும் பழக்கத்தைக் கண்டனம் செய்யும் சட்டம், விபத்துக்குள்ளாகும் தொழிலாளர்களுக்கு இழப்பீடு வழங்குதல் பற்றிய சட்டம் முதலியவற்றை அரசியலமைப்புக்கு முரணானவை என்று கூறி நீதிமன்றம் நிரா

கரித்துவிட்டது. நீதிமன்றங்கள் அளித்த தீர்ப்புக்கள் தொழிலாளர் சங்கங்களின் நடவடிக்கைகளைப் பாதித்தன. தொழிலாளர்கள் மறியல் செய்யும் உரிமையைக்கூட இழந்தனர். தொழிலாளர்களுக்குச் சாதகமான எல்லாச் சட்டங்களும் அரசியலமைப்புக்கு முரண்பட்டவை எனத் தீர்ப்பளிக்கப்பட்டது

1895-ல் இல்லினாய் உயர்நீதிமன்றம், மகளிர் ஒரு நாளைக்கு 8-மணி நேரமே வேலை செய்யலாம் என்ற சட்டத்தை நிராகரித்தது. உருக்குத் தொழிலில் தொழிலாளர் வேலை நேரம் நாள் ஒன்றுக்கு எட்டு மணியாக இருத்தல் வேண்டும் என்ற மற்றொரு சட்டத்தை கொலராடோ 1899-ல் ரத்து செய்தது. அவ்வாறே, ரொட்டி உற்பத்தித் தொழிலில் உள்ள தொழிலாளர் வேலை நேரம் 10-மணிக்கு மிகாமலிருக்க வேண்டும் என்ற சட்டம் அரசின் அதிகார வரம்பிற்குட்பட்டதன்று என்று அமெரிக்கத் தலைமை நீதிமன்றம் 1905-ல் தீர்ப்பளித்தது. மகளிர் இரவு வேலை செய்வதைத் தடை செய்யும் சட்டத்தையும் தலைமை நீதிமன்றம் 1907-ல் நிராகரித்தது. கொலம்பியா மாவட்ட குறைந்தபட்சக் கூலிச் சட்டத்தைத் தலைமை நீதிமன்றம் 1923-ல் செல்லாது என அறிவித்தது. இத்தீர்ப்புக்கள் தொழிலாளர் இயக்கத்தின் வளர்ச்சியைத் தடுத்தன. என்றாலும், நீதிமன்றம் பிறகு தமது போக்கைச் சற்று மாற்றிக்கொண்டு தொழிலாளர் சட்டங்களை மாறுபட்ட கண்ணோட்டத்திலிருந்து பார்த்து, பழைய தீர்ப்புக்களை மாற்றியது. அரசியலமைப்புக்கு முரண்பட்டவை எனத் தொழிலாளர் சட்டங்கள் தற்போது பெரும்பாலும் கருதப்படுவதில்லை.

## தொழிலாளர் சங்கங்களின் அடிப்படைக் குறிக்கோள்கள், கொள்கைகள் :

அமெரிக்கத் தொழிலாளர் சங்கங்கள் ஜனநாயக வழிமுறைகளைப் பின்பற்றி வருகின்றன. வட்டார அளவிலும் சரி, அல்லது தேசிய அளவிலும் சரி ஜனநாயக மரபுகளுக்கே மதிப்புக் கொடுக்கப்படுகிறது. ஒவ்வொரு வட்டாரச் சங்கத்திற்கும் ஒரு தலைவர், ஒரு செயலாளர்—பொருளாளர், ஒரு நிர்வாகக் குழு உண்டு. மாதத்திற்கு ஒருமுறை அல்லது இருமுறை உறுப்பினர் கூட்டங்கள் நடைபெறுகின்றன; இதில் எல்லோரும் பங்கேற்பது ஒரு விசேஷ நிகழ்ச்சி, தேசிய (அல்லது சர்வதேசச்) சங்கங்கள் வட்டாரச் சங்கங்களுக்கு வழிகாட்டுகின்றன. வட்டாரச் சங்கங்களின் நடவடிக்கைகளைத் தேசிய சங்கங்களே நிர்ணயிக்கின்றன. தேசிய சங்க மாநாடு மிகவும் வலிமை மிகுந்தது. தேசிய சங்க அலுவலர்களும் நிர்வாகக் குழுவினரும் அங்கே தேர்ந்தெடுக்கப்படுவர். தேசிய சங்க மாநாட்டுப் பிரதிநிதிகள் வட்டாரச் சங்கங்களால் தேர்ந்தெடுக்கப்படுவர். தேசிய

சங்க மாநாடுகள் ஆண்டுக் கொருமுறை அல்லது இருமுறை நடக்கின்றன. அமெரிக்கத் தொழிலாளர் சங்கங்களின் அடிப்படைக் குறிக்கோள்கள் பின்வருவன :

1. தொழிலாளர்களுக்கு வேலைப் பாதுகாப்பு.

2. தொழிலாளர்களுக்குப் போதுமான கூலிகள்.

3. இயலா நிலையினர் மற்றும் வயோதிகருக்குப் பாதுகாப்பு.

4. நியாயமான வேலை நேரங்கள், வேலைச் சூழ்நிலைகள்.

5. தொழிலாளர்களுக்குக் கடமைகளைப் போதித்தல்.

குறிக்கோள்களை அடைவதற்குத் தொழிலாளர் சங்கங்கள் ஆளுகின்ற கருவிகளில் மிகவும் முக்கியமானதாயிருப்பது கூட்டு பேரம் (Collective Bargaining). கூலிகள், வேலைச் சூழ்நிலைகள் ஆகியவை பற்றி முடிவெடுக்க தொழிலாளர் சங்கங்கள் அடிக்கடி வேலையளிப்போரோடு கூட்டு பேரங்களைச் செய்திருக்கின்றன. கூட்டு பேரத்தின் முடிவுகள் பிறகு ஓர் ஒப்பந்தத்தில் இடம் பெறுகின்றன. ஒப்பந்தம் சங்கத்திற்கும் வேலையளிப்போருக்குமிடையில் செய்யப்படுகிறது. ஒப்பந்தத்தை நடைமுறைப்படுத்துவதில் ஏற்படும் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு அவ்வப்போது இரு பிரிவினருக்குமிடையில் பரஸ்பர பேச்சு வார்த்தைகள் நடக்கின்றன. தொழிலாளர்கள் தமக்குள் ஒற்றுமையை வளர்த்து, கூட்டுபேரம் மூலம் வலிமையைப் பெருக்கிக்கொண்டிருப்பதைக் கண்ட வேலையளிப்போரும் தொழிலதிபர்களும் தமக்குள்ளும் ஒற்றுமையை உருவாக்கி, கூட்டுபேரத்தை வளர்த்துத் தமது பலத்தைப் பெருக்க முயலுகின்றனர். சங்கத்தை அங்கீகாரம் பெற வைப்பதற்கும், சாதகமான கூட்டு உடன்படிக்கைகளைப் பெறுவதற்கும் தொழிலாளர் சங்கங்கள் வேலை நிறுத்தம், பகிஷ்காரம், மறியல் ஆகியவற்றையும் கருவியாகப் பயன்படுத்துகின்றன. கூலிகள், வேலை நேரங்கள், வேலைச் சூழ்நிலைகள்—இவற்றின் தொடர்பாகப் பல வேலை நிறுத்தங்கள், பகிஷ்கரிப்புக்கள் நிகழ்ந்திருக்கின்றன. தொழிலாளர்களைப் பணிய வைப்பதற்கென்று தொழிலதிபர்களும் கதவடைப்பு முறைகளை நாடுவதுண்டு.

தொழிலாளர் சங்கங்களைப் பொறுத்தவரையில் முக்கியமாயிருக்கின்ற ஒரு ஃபெடரல் சட்டம் டாஃப்ட்—ஹார்ட்லி சட்டம் (Taft Hartly Act) ஆகும். தொழிலாளர் சங்கங்களின் நடவடிக்கைகளில் நியாயமற்றவை எவை எவை என்பதை இச்சட்டம் தெரிவிக்கிறது. போராட்டங்களைச் செய்கின்றபோது சங்கங்கள் யாரையும்

பலவந்தம் செய்வதோ, அல்லது ஓரம் காட்டுவதோ கூடாது என்று இச் சட்டம் கூறுகிறது. இது வேலையளிப்போருக்கும் பொருந்தும். இரண்டாந்தர பகிஷ்காரம், அனுதாப வேலைநிறுத்தம் முதலியவற்றைச் சங்கங்கள் விருப்பம்போல் பயன்படுத்திட முடியாது என்றும் இச் சட்டம் எடுத்துரைக்கிறது. தொழிலாளர் சங்கங்களின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்துவதற்குப் பல மாநில அரசுகளும் சட்டங்களை இயற்றியுள்ளன.

தொழிற் பூசல்களைத் தீர்ப்பதற்குத் தன்னிச்சை மத்தியஸ்தம் (Voluntary Arbitration), கட்டாய மத்தியஸ்தம் (Compulsory Arbitration), சமரசம் (Conciliation) முதலியவற்றை ஆள்வதற்கான ஏற்பாடுகளையும் அரசு செய்துகொடுத்துள்ளது. இவை யத்தனையும் தோல்வியுற்றால் தொழிற்சாலை அல்லது நிறுவனத்தை அரசே எடுத்துக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை. இரு தரப்பினருக்கிடையே சமரசத்தை ஏற்படுத்துவதற்கு இது ஓர் அதிர்ச்சி வைத்தியமாகப் பயன்படுத்தப் பெறும்.

# 11. முதல் உலகப் போரின் விளைவுகள்

## (The Effects of the First World War)

1917ஆம் ஆண்டு ஏப்ரல் 2ஆம் நாள் ஜனாதிபதி உட்ரோ வில்சன் தமது போர்ச் செய்தியை காங்கிரஸ் மன்றத்திற்குத் தெரிவித்தார். நான்கு நாட்களுக்குப் பிறகு, 'ஜெர்மன் பேரரசுமீது போர் தொடுக்கப்படும்' என்ற கூட்டுத் தீர்மானத்தைச் சட்டமன்றம் நிறைவேற்றியது. முதல் உலகப் போரில் அமெரிக்கா ஈடுபட்டிருந்த காலம் 17 மாதங்களே என்றாலும், அப் போரின் விளைவாக அமெரிக்கப் பொருளாதாரத்தில் பலத்த மாறுதல்கள் தோன்றின. போரில் ஈடுபட்டிருந்த நாடுகள் அமெரிக்காவிடமிருந்து பலவிதப் பண்டங்களை வேண்டி நின்றன. இதனால் அமெரிக்காவிலிருந்து யுத்தத் தளவாடங்கள், இரும்பு, எஃகு, செம்பு மற்றும் பித்தளைப் பண்டங்கள், கச்சாப் பொருட்கள், மோட்டார் வண்டிகள் ஆகியவை மிகுதியாக ஏற்றுமதியாயின. 1914-ல் ஏற்பட்டிருந்த வாணிப மந்த நிலைமை ஏற்றுமதி அதிகரிப்பைக்கொண்டு வெற்றிகரமாகச் சமாளிக்கப்பட்டது. 1916-ல் அமெரிக்காவிலிருந்து ஏற்றுமதியான பண்டங்களின் மதிப்பு 5500 மில்லியன் டாலர்கள் ஆகும். அவ் வாண்டில் ஏற்றுமதிகளின் மதிப்பு இறக்குமதிகளின் மதிப்பைவிட 3000 மில்லியன் டாலர்கள் அதிகமாயிருந்தது. 1917-ல் செய்யப்பட்ட ஏற்றுமதிகளின் மதிப்பு 6,200 மில்லியன் டாலர்கள். இறக்குமதியான பண்டங்களின் மதிப்பு 2920 மில்லியன் டாலர்கள். போர்த் தேவை காரணமாக அமெரிக்க வெளிநாட்டு வாணிபம் வியத்தகு முறையில் அதிகரித்து சாதக வாணிப இருப்பு நிலை உருவாகியது.

### தேசீயப் பாதுகாப்புக் குழு

உலகப் போர் மத்தியில் நாட்டுப் பாதுகாப்பைப் பேணுவதற்கான நடவடிக்கைகளை அரசு மும்முரமாக மேற்கொண்டது. நாட்டுப் பாதுகாப்பையும் நலத்தையும் மேம்படுத்தும் முறையில், பொருளா

தாரச் சாதனங்களைப் பயன்படுத்துவதற்கான ஏற்பாடுகளைச் செய்வதற்கென தேசீயப் பாதுகாப்புக் குழு (Council of National Defence) ஒன்று 1916-ல் ஏற்படுத்தப்பெற்றது. இராணுவம், கப்பற்படை, விவசாயம், வணிகம், தொழிலாளர் நலம் ஆகிய துறைகளின் செயலர்களும், உள்துறைச் செயலரும் இக் குழுவில் இடம் பெற்றனர். தேவையான உற்பத்திச் சாதனங்களை எந்த ஒரு நேரத்திலும் இக் குழு விரைவாகத் திரட்டிக் கொடுக்கும் என எதிர்பார்க்கப்பட்டது. தேசீயப் பாதுகாப்புக் குழுவிற்கு வேண்டிய தகவல்களைத் தருவதற்கென ஒரு துணைக் குழுவும் நிறுவப்பட்டது. இதில் ஏழு வல்லுநர்கள் இடம் பெற்றனர். இவர்களை ஜனாதிபதி தேர்ந்தெடுப்பார். குழு உறுப்பினர்களுக்கு ஊதியம் கிடையாது. போரை முன்னிட்டுப் பிறகு ஏற்படுத்தப்பெற்ற பல கட்டுப்பாட்டு அமைப்புக்களுக்கு இக் குழுவே தாயமைப்பாக அமைந்தது. தேசீய நெருக்கடி ஒன்று உருவாகின்ற போது கூட்டு நடவடிக்கை எடுப்பது அவசியமாகிறது. அதிலும் உலகப் போர் போன்ற மிக முக்கிய நெருக்கடி தோன்றும்போது தனியார் பொருளாதார நடவடிக்கைகளையும், அரசியல் நடவடிக்கைகளையும் அரசு கட்டுப்பாடு செய்வது அத்தியாவசியமாகிறது. முதல் உலகப் போரின்போது அமெரிக்க அரசுக்கும் இந்த அவசியம் ஏற்பட்டது. மாபெரும் பொருளாதார அமைப்பைக் கட்டுப்படுத்துவதற்கும், கண்காணித்து வருவதற்கும், வழி நடத்திச் செல்வதற்கும் பல அமைப்புக்கள் நிறுவப்பட்டன. இவற்றில் முக்கியமாயிருந்தவை: போர்த் தொழில் வாரியம் (War Industries Board), எரிபொருள் நிர்வாகத்துறை, கப்பற்றுறை வாரியம், இரயில் பாதை வாரியம், உணவு நிர்வாகத் துறை, போர்த் தொழிலாளர் வாரியம், மற்றும் போர்நிதிக் கார்ப்பரேஷன் என்பன.

### போர்த் தொழில் வாரியமும், தொழில் நிர்வாகமும்

இவற்றில் மிகவும் முக்கியமானதாயிருந்தது போர்த் தொழில் வாரியம். மத்திய ஒருங்கிணைப்பு அமைப்பாக இது செயல்பட்டது. நாட்டுப் பாதுகாப்புக்குழு இதனை 1917ஆம் ஆண்டு ஜூலை 8ஆம் தேதி ஏற்படுத்தியது. தொடக்கத்தில் இவ்வாரியத்திடம் போதிய அதிகாரங்கள் இல்லாமையால் சரிவரச் செயலாற்ற முடியவில்லை. எனவே, ஜனாதிபதி வில்சன் இதனை நாட்டுப் பாதுகாப்புக் குழுவிடமிருந்து பிரித்துத் தனியே சுதந்திரமாகச் செயல்பட வைத்தார். நாட்டின் தொழில், விவசாயம் மற்றும் நிதித் துறைகளின் நடவடிக்கைகளை ஒருங்கிணைத்துச் செல்லும் அதிகாரத்தையும் இதற்கு வழங்கினர். ஒவ்வொரு தொழிலுக்கும் 'போர்ப்பணிக் கமிட்டிகள்' (War Service Committees) நிறுவப்பட்டன. போர்த் தொழில் வாரியத்துக்கும் உற்பத்தியாளர்களுக்குமிடையில் இவை பாலங்களாக இருந்தன. விலைகளை நிர்ணயித்தல், தொழில்களைத் தரப்படுத்தல், அடிப்படைப்

பண்டங்களின் உற்பத்தி, மற்றும் விநியோகத்தை உத்தரவாதப் படுத்தல் ஆகியவை மூலமாகத் தொழில்களைக் கட்டுப்படுத்துவதற்கு இவ்வாரியம் முயன்றது. வாரியத்தின் முயற்சிகளால் தொழில் பெருகியது. பல பண்டங்களின் உற்பத்தி கணிசமாக அதிகரித்தது. ஆனால், வாரியத்தின் விலை நிர்ணயக் கைகோள் அவ்வளவாக வெற்றிபெறவில்லை என்றே கூறவேண்டும். பணவீக்கத்தை வாரியத் தால் தடுத்திட முடியவில்லை. அவ்வாறே, சுலபமான வழிகளில் பல முதலாளிகள் இலாபம் குவித்ததையும் கட்டுப்படுத்த இயலவில்லை.

உலகப் போர் தொடங்கிய இரண்டரை ஆண்டுகளுக்குப் பிறகே அமெரிக்கா போரில் ஈடுபட்டது. போருக்குத் தேவையான பொருட் களைத் திரட்டுதல் எவ்வளவு சிரமமான செயல் என்பதை ஐரோப்பிய நாடுகளின் அனுபவத்தை அடிப்படையாகக்கொண்டு, அமெரிக்கா ஓரளவுக்குத் தெரிந்துகொண்டது எனலாம். உற்பத்திச் சாதனங் களைக் கணக்கெடுத்து, அமைதிக்கால உற்பத்தி முறையிலிருந்து யுத்த கால உற்பத்தி முறைக்கு மாறவேண்டி யிருந்தது. எதையும் விரை வாகச் செய்து முடிப்பதும் அவசியமாயிருந்தது. பண்டங்களையும் கச்சாப் பொருட்களையும் வாங்குவதற்கும், அவற்றை உரிய அளவு களில் பல்வேறு துறைகளிடையே பகிர்வு செய்வதற்கும் ஏற்பாடு செய்யவேண்டி யிருந்தது. இதற்காகப் பல நிர்வாக அமைப்புக்கள் நிறுவப்பெற்றன. இவ் வமைப்புக்களின் பணிகளை ஒருங்கிணைத்துச் செல்வதில் பல சிரமங்கள் முளைத்தன. இராணுவம் மற்றும் குடி மக்கள் தேவைகளைப் பூர்த்திசெய்வதற்காகப் பல பண்டங்களின் உற்பத்தியைப் பேரளவில் அதிகப்படுத்த வேண்டியிருந்தது. நைட் ரேட் உற்பத்தி, கப்பல் தயாரிப்பு ஆகியவற்றில் அரசே ஈடுபட வேண்டியிருந்தது. தொழில்களிடையே கச்சாப் பொருட்களைப் பகிர்வு செய்வதற்குப் பங்கீட்டு முறையினையும், முன்னுரிமைப் பட்டி யல் விதிகளையும் (Priority rules) கடைப்பிடிக்க வேண்டியிருந்தது. தனி நபர் சுதந்திரம் தழைத்திருந்த ஒரு மாபெரும் நாட்டில் இப் படிப்பட்ட அரசு நடவடிக்கைகளுக்கு எவ்வளவு சோதனைகள் ஏற்பட் டிருக்கும் என்பதை நாம் விளக்கத் தேவையில்லை. 'குறிப்பிட்ட சில திட்டங்களில் தகுந்த ஏற்பாடுகளின்மை, திறமையின்மை, தவறுகள், தோல்விகள் காணப்பட்டன என்றாலும், மொத்தத்தில் நிலைமை சமாளிக்கப்படவே செய்தது' என்கிறார் ஒரு பொருளாதார வரலாற் றாசிரியர்.

### எரிபொருள் நிர்வாகத் துறை (Fuel Administration)

எரிபொருள் பிரச்சினையைக் கவனித்துக் கொள்வதற்கென, 1917ஆம் ஆண்டின் உணவு மற்றும் எரிபொருள் கட்டுப்பாட்டுச் சட்டத்தின் (Food and Fuel Control Act) கீழ், எரிபொருள் நிர்வாகத்

துறை நிறுவப்பட்டது. இந்தத் துறையின் முன்னே இருந்த தலையாய பிரச்சினை நிலக்கரி பற்றுக்குறை. போர்க்காலத் தேவை, போக்கு வரத்து அதிகரிப்பு, சுரங்கத் தொழிலாளர் கிடைப்பருமை, நுகர்ச்சிக் கூடுதல் ஆகியவை காரணமாக நிலக்கரித் தட்டுப்பாடு மிகவும் கடுமையாக இருந்தது. சுரங்கத் தொழிலாளர் கிடைப்பது அரிதா யிருந்ததற்குக் காரணம், சுரங்கங்களில் வேலைச் சூழ்நிலைகள் மிகவும் மோசமாயிருந்தமையால் பல தொழிலாளர்கள் இராணுவத்தில் சேர்ந்துவிட்டதேயாகும். சாராயத் தொழிற்சாலைகளுக்குக் குறை வான அளவில் நிலக்கரியை வழங்குதல், அவசியமற்ற தொழில் களுக்கு நிலக்கரி யளிப்பதை நிறுத்துதல், சுரங்கத் தொழிற் பூசல்களை நல்ல முறையில் தீர்த்து வைத்தல், சுரங்கத் தொழிலாளரை இராணு வத்திற்குச் செல்லாதிருக்கச் செய்தல் ஆகியவை மூலமாக, எரி பொருள் நிர்வாகத்துறை நிலக்கரி அளிப்பையும் உற்பத்தியையும் அதிகப்படுத்த முயன்று, அதில் போற்றத்தக்க வெற்றியையும் அடைந்தது. மொத்த உற்பத்தியே அல்லாது தொழிலாளரின் சராசரி ஆக்கத்திறனும் கூடியது என்பது இங்கே குறிப்பிடத்தக்கது. 1914-ல் சுரங்கத் தொழிலாளரின் சராசரி உற்பத்தி ஆண்டொன்றிற்கு 833 டன்கள் என்றிருந்தது. ஆனால், 1918-ல் இது 1151 டன்களுக்கு உயர்ந்தது. நிலக்கரி உற்பத்தி பெருகியது என்றாலும், நிலக்கரி பற்றுக்குறை போர் முடியுமட்டும் நாட்டில் இருக்கவே செய்தது.

### கப்பற்றுறை வாரியம்

1916ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதற்கொண்டு கப்பற் றுறை வாரியம் (Shipping Board) செயல்பட்டது. இதனிடம் மிகுதி யான அளவில் அதிகாரங்கள் இருந்தன. இவ்வாரியம் அரசிடமிருந்த கப்பல்களைக் கட்டுப்பாடு செய்தது; கப்பல் கட்டுந் தொழிலை மேற் பார்வையிட்டது; வர்த்தகக் கப்பல்களில் பணிபுரிவோருக்குப் பயிற்சி யளித்தது. அமெரிக்கா போரில் அடி எடுத்து வைத்த நேரத்தில் ஜெர்மனி அசுர வேகத்தில் கப்பல்களை மூழ்கடித்தவண்ணமிருந்தது. அமெரிக்காவை நோக்கியிருந்த முக்கியப் பிரச்சினை இந்த நிலைமையை மாற்றி, கப்பற் படையை வலிவுபடுத்திப் பெருக்கித் தடையற்ற முறையில் பண்டங்களை வெளி நாடுகளுக்கு அனுப்பி வைப்பதற்கான ஏற்பாட்டைச் செய்தல். வர்த்தகக் கப்பல் கட்டும் பணியை மேற் கொள்வதற்கென ஓர் அவசரக் கப்பற்படைக் கழகத்தை (Emergency Fleet Corporation) 1917ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் கப்பற்றுறை வாரியம் ஏற்படுத்தியது. வாரியத்தின் துணை நிறுவனமாயிருந்த இக்கழகம் 50 மில்லியன் டாலர்களை மூலதனமாகக்கொண்டு செயல் பட்டது. அட்லாண்டிக் கடலின் குறுக்கே ஒரு 'கப்பல் பாலம்' அமைக்கவேண்டும் என்பதில் மிகுந்த அக்கறை காட்டிய இக்கழகம்,

கப்பல்களை மேன்மேலும் கூடுதலாகத் தயாரிப்பதில் ஈடுபட்டது. அத்துடன் பழைய கப்பல் தளங்களை விரிவுபடுத்தியது; புதிய தளங் களை அமைத்தது. 1917-ல் அமெரிக்காவில் 61 கப்பல் தளங்களிருந் தன; 1918-ல் இவை 341-க்கு உயர்ந்தன. 1918ஆம் ஆண்டு செப்டம் பர் மாதம் 8,693,579 டன்கள் எடையுள்ள கப்பல்கள் கப்பற்றுறை வாரியத்திடம் இருந்தன. கப்பற்றுறை வாரியமும், அவசரக் கப்பற் படைக் கழகமும் எதையும் விரைவாகச் செய்து முடிக்கவில்லை என்று பலர் குறைபட்டுக்கொண்டார்கள். என்றாலும், தனியார் கப்பல் களை அரசு எடுத்துக்கொள்வதற்கும், எதிரிக் கப்பல்களைக் கைப்பற்று வதற்கும், நடுநிலை நாட்டுக் கப்பல்களை விலைக்கு வாங்கிக்கொள்வ தற்கும் இவை ஆற்றிய பணிகள் மிகவும் பயன் மிகுந்தவை என்பதை நாம் சுட்டிக் காட்டுதல் வேண்டும்.

### இரயில்வே நிர்வாகம்

போர்க் காலத்தில் இரயில்வே நிறுவனங்கள் தம்மாலியன்ற வரையில் அரசுடன் ஒத்துழைக்க முயன்றன. தேசீயப் பாதுகாப்புக் குழுவின் ஆலோசனைக் கமிஷனின் (Advisory Commission of the Council of National Defence) போக்குவரத்துத்துறை நிபுணரான டேனியல் வில்லார்ட் (Daniel Willard) என்பார் தேசீயப் பாதுகாப் புத் தனிக் கமிட்டி என்ற குழுவை அமைத்தார். ஐந்து உறுப்பினர் களைக்கொண்டிருந்த இக்குழு 'போர்க்கால இரயில் பாதை வாரியம்' (Rail Roads War Board) என அழைக்கப்பட்டது. இரயில்வே நிர்வா கத்தைப் பொறுத்தவரையில் அரசுடன் பரிபூரணமாக ஒத்துழைத்து அதன் தேவைகளை நிறைவேற்றவும், ஆணைகளை அமல் செய்யவும் முயன்ற இவ்வாரியம் வெற்றிகரமாகச் செயல்பட முடியவில்லை. காலப்போக்கில் பல கடுமையான பிரச்சினைகள் தலையெடுத்தன. பல இரயில்வே நிறுவனங்கள் இக்கமிட்டியின் உத்தரவுகளுக்குக் கீழ்ப் படிய மறுத்தன. இராணுவத் தேவைகளைப் பூர்த்தி செய்வதில் சிரமங்கள் தோன்றின. போட்டி நிறுவனங்கள் கூட்டாகச் செயல் பட மறுத்தன. தொழிலாளர்கள் மிகுதியான கூலிகள் வேண்டு மென்று கூக்குரலிட்டனர். இரயில்வே நிர்வாக அமைப்பு முழுவதும் திறமையின்மை காணப்பட்டது. இப்பிரச்சினைகளைத் தீர்ப்பதற்குத் தனியார் இரயில்வே கம்பெனிகளை அரசே மேற்கொள்ளுவதைத் தவிர வேறு வழியில்லை. எனவே, மாநிலங்களுக்கிடையேயான வர்த்தகக் குழுவின் ஆலோசனைப்படி, 1917ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 26ஆம் தேதி ஜனாதிபதி இரயில்வே நிறுவனங்களை அரசு எடுத் துக்கொள்கிறது என்று பிரகடனம் செய்தார்.

ஜனாதிபதியின் பிரகடனத்தை ஒட்டி, 1918ஆம் ஆண்டு மார்ச் மாதம் இரயில் பாதைக் கட்டுப்பாட்டுச் சட்டம் (Rail Road Control

Act) இயற்றப்பட்டது. இச்சட்டத்தின் முக்கிய ஷரத்துக்கள் 'அரசால் எடுத்துக்கொள்ளப்பட்ட ஒவ்வொரு கம்பெனியும் ஒரு குறிப்பிட்ட தொகையை ஆண்டுதோறும் ஈட்டுப் பணமாகப் பெறும்; 1917ஆம் ஆண்டு ஜூன் மாதம் 30ஆம் தேதி முடிவடையும் மூன்றாண்டு காலத்தில் இக்கம்பெனிகள் பெற்ற சராசரி நிகர வருமானத்திற்கதிகமாக ஈட்டுப் பணத்தொகை இருக்கக்கூடாது; இரயில்வே நிறுவனங்களை நடத்திச்செல்வதற்கு 500 மில்லியன் டாலர் கொண்ட ஒரு நிதி ஏற்படுத்தப்பெறும்; சமாதான உடன்படிக்கைக்குப் பிறகு 1¾ வருடத்திற்குள் கம்பெனிகள் அவற்றின் சொந்தக்காரர்களுக்குத் திருப்பிக் கொடுக்கப்படவேண்டும்; திருப்பிக் கொடுக்கப்படும்போது இருப்புப் பாதைகளும் இன்ன பிற சொத்துக்களும் அரசு கட்டுப்பாட்டிற்கு முன்பு எவ்வாறிருந்தனவோ அதே நிலையில் இருக்க வேண்டும்'.

இரயில்வே நிர்வாகத்தை மேற்கொண்ட முதல் இரண்டாண்டுகளில் அரசுக்குச் சில சிரமங்கள் ஏற்பட்டன. நிதிப் பற்றாக் குறையும் எழுந்தது. ஆனால், நாளடைவில் இச்சிரமங்கள் மறைந்தன. இரயில்வே நிர்வாகத்தை அரசு தன் பொறுப்பில் வைத்துக்கொண்டதால் போரை வெற்றிகரமாக நடத்த முடிந்தது. பயணிகள் வண்டிகளைத் திறம்படக் கண்காணித்து வருவதும், பொது மக்களுக்குத் தேவையான வசதிகளைச் செய்து கொடுப்பதும் எளிதாயிற்று. இரயில்வே தளவாடங்கள் நிறைய வாங்கப்பட்டன. நிர்வாகத்தில் தொழிற் சீரமைப்பு (Rationalisation) சிறந்த முறையில் ஏற்படுத்தப் பட்டது.

### உணவுப் பண்ட உற்பத்தியும் நிர்வாகமும்

உணவு நிர்வாகத்துறை 1917ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் உருவாக்கப்பட்டது. இதன் தலைவராக ஹெபர்ட் ஹூவர் (Hebert Hoover) பொறுப்பேற்றார். உணவுப் பண்டங்களைப் பாதுகாப்பதும் உரிய முறையில் விநியோகம் செய்வதும் உணவு நிர்வாகத் துறையின் நோக்கங்களாக இருந்தன. சில்லறை விற்பனையில் பங்கீட்டு முறையையோ அல்லது விலைக் கட்டுப்பாட்டையோ ஏற்படுத்த இவ்வமைப்பு விரும்பவில்லை. மாறாக, மொத்த விற்பனை விலைகளைக் கட்டுப்படுத்தவும், மொத்த விற்பனை அங்காடிகளில் இருக்கக்கூடிய யூக வாணிபத்தைத் தடுக்கவும், பண்டங்களின் விநியோகத்தைச் சீராக இருக்கச் செய்யவும் உணவு நிர்வாகத்துறை முயன்றது. இராணுவம், கப்பற்படை, நேச நாடுகள், செஞ்சிலுவைச் சங்கம் ஆகியவற்றிற்கு உணவு நிர்வாகத்துறை கூடுதலான பொருட்களைப் பெறவேண்டியிருந்ததனால், விலைகளைக் கட்டுப்படுத்துவது அவசியு

மாயிற்று. என்றாலும், விவசாயிகளுக்கு உற்பத்தியைப் பெருக்குவதற்கு வேண்டிய உற்சாகத்தையும் ஊக்கத்தையும் அளிக்கவேண்டும் என்ற குறிக்கோளில் இத்துறை உணவுப் பண்டங்களின் விலைகளைப் பெரும்பாலும் உயர் மட்டங்களில் நிலைப்படுத்தியது.

**1917**-ல் இயற்றப்பட்ட உணவு மற்றும் எரிபொருள் கட்டுப்பாட்டுச் சட்டத்தின் (Food and Fuel Control Act) படி உணவுப் பண்டங்களைப் பதுக்கி வைத்தல், வீணாக்குதல், அவற்றை அநியாய விலைகளில் விற்றல் முதலியவை சட்ட விரோதச் செயல்களாகும். ஆனால், உணவு நிர்வாகத் துறை எதையும் கட்டாயப்படுத்திச் செய்ய விரும்பவில்லை. விளம்பரம் மற்றும் போதனை மூலமே எதையும் செய்ய முயன்றது. உணவுப் பண்டங்களைத் தயாரிப்போர், இருப்பு செய்வோர், விநியோகம் செய்வோர் லைசென்சுகளைப் பெற்ற பிறகே தமது தொழில்களைச் செய்யவேண்டும். எனவே, லைசென்சு வழங்கல் அதிகாரத்தைப் பயன்படுத்தி, உணவு நிர்வாகத்துறையானது சர்க்கரை, கோதுமை, இறைச்சி, வெண்ணெய் முதலிய உணவுப் பண்டங்களின் வாங்கற்பாடுகளையும் விற்பனைகளையும் நன்கு கட்டுப்பாடு செய்து முறைப்படுத்தியது. அத்துடன் உணவுப் பண்டங்களைச் சிக்கனமாகப் பயன்படுத்தவேண்டும், அரிதாயுள்ள பண்டங்களுக்குப் பதிலாக வேறு பொருட்களைப் பயன்படுத்திக்கொள்ள மக்கள் முன்வரவேண்டும் என்றும் இத்துறை நாட்டினரைக் கேட்டுக்கொண்டது. மக்களிடையே தன்-மறுப்பு (Self denial) வளரவேண்டும் என்று ஹூவர் வேண்டுகோள் விடுத்தார். ஹூவர் என்ற பெயரைக் கேட்டவுடன் மக்களுக்குச் சிக்கனமே நினைவுக்கு வரக்கூடிய அளவுக்குச் சிக்கனத்தைப்பற்றி இத்துறை நாடெங்கும் எடுத்துக் கூறியது.

கோதுமைக்கும் சர்க்கரைக்கும் இரு தனி அமைப்புக்கள் ஏற்படுத்தப்பட்டன. யுனைடெட் ஸ்டேட்ஸ் தானியக் கழகம் (United States Grain Corporation) என்றோர் அமைப்பு 150 மில்லியன் டாலர்களை மூலதனமாகக் கொண்டு நிறுவப்பட்டது. கோதுமை தானியத்தை இக்கழகம் உற்பத்தியாளர்களிடமிருந்து வாங்கி, பிறகு ஆலைகளுக்கு விநியோகம் செய்தது. அரைப்புத் திறனுக்கேற்றவாறு ஆலைகளுக்குக் கோதுமை வழங்கப்பட்டது. சர்க்கரை சமப்படுத்து வாரியம் (Sugar Equalisation Board) ஆனது அமெரிக்கா, கியூபா, ஹவாய் ஆகிய நாடுகளின் உற்பத்தியாளர்களிடமிருந்து கச்சாச் சர்க்கரையைப் பல்வேறு விலைகளில் வாங்கி, பிறகு அதனை அமெரிக்கச் சுத்திகரிப்பு ஆலைகளுக்கு ஒரு குறிப்பிட்ட விலையில் விற்றது.

### தொழிலாளர் பிரச்சினைகள்

போர்க் காலத்தில் தொழிலாளரைப் பொறுத்த வரையில் அரசு என்னென்ன நடவடிக்கைகளை மேற்கொண்டது என்பதைப்பற்றி

நாம் இனி ஆராயவேண்டும். இராணுவத்திற்கும் தொழில்களுக்கும் ஆட்கள் ஏராளமாகத் தேவைப்பட்டனர். வேறு பல துறைகளுக்கும் ஆட்கள் வேண்டியிருந்தது. எனவே, உடலுழைப்பு வழங்கும் நிலையில் எத்துணைபேர் நாட்டிலிருக்கின்றனர் என்று அறிந்துகொள்வது அவசியமாயிற்று. 1917ஆம் ஆண்டு மே 18ஆம் தேதி இயற்றப்பட்ட தேர்வுப்பணிச் சட்டத்தின் (Selective Service Act) படி, 25 முதல் 30 வயது வரையிலிருக்கும் ஆண்கள் அனைவரும் தமது பெயர்களைப் பதிவு செய்துகொள்ளவேண்டும் எனக் கேட்டுக்கொள்ளப்பட்டது. 10 மில்லியன் ஆண்கள் விரைவில் பதிவு செய்துகொண்டனர். இவர்களில் 3 மில்லியன் பேர் உடனே இராணுவத்திற்கு எடுத்துக் கொள்ளப்பட்டனர். உழைக்கும் சக்தி பெற்றிருந்து, ஆனால் அதே நேரத்தில் வேலை செய்யாதிருந்து வந்த ஆண்கள் அனைவரையும் 'உழைக்க வாருங்கள் அல்லது படையில் சேருங்கள்' என அரசு கேட்டுக் கொண்டது. எந்தவித வேலையும் செய்யாமல் யாரும் நாட்டில் இருக்கக்கூடாது என்பதில் அரசு குறியாயிருந்தது. ஆண் உழைப்பாளர்களில் சுமார் 16 சதவிகிதம் படையில் சேர்த்துக்கொள்ளப் பட்டனர்.

இராணுவத்திற்கு ஆட்கள் சென்றுவிட்டமையாலும், குடியிறக்கம் (Immigration) நிறுத்தப்பட்டமையாலும் தொழில்களில் பணிபுரிவதற்குத் தொழிலாளர்கள் கிடைப்பதில் சிரமங்கள் இருந்தன. மேலும் கூலிகளும் வேலைச் சூழ்நிலைகளும் திருப்திகரமாக இருக்கவில்லை. எனவே தொழிலாளர்களைத் தொழிற்சாலைகளுக்கு வரத் தூண்டுவதற்காகக் கூலிகளையும் வேலைச் சூழ்நிலைகளையும் அரசு தரப்படுத்த வேண்டியிருந்தது. காம்பர்ஸ் (Gompers) தலைமையிலான அமெரிக்கன் ஃபெடரேஷன் ஆஃப் லேபர், போர்க்காலத்தில் அரசுக்குத் தமது ஒத்துழைப்பைத் தர முன்வந்தது. காம்பர்ஸ், தேசியப் பாதுகாப்பு ஆலோசனைக் கமிட்டி (Advisory Committee of National Defence)யின் உறுப்பினராகச் சேர்த்துக்கொள்ளப்பட்டார். அவ்வாறே, மற்ற தொழிலாளர் தலைவர்களும் போர்க்கால வாரியங்களில் இடம் பெற்றனர். காம்பர்ஸ் முயற்சியால் வேலையளிப்போர் தொழிலாளர் பிரதிநிதிகளைக் கொண்ட மாநாடு ஒன்று கூட்டப்பட்டது. அரசின் போர் நடவடிக்கையைப் பாதிக்கும் வகையில் தம் உரிமைகளை வலியுறுத்தப் போவதில்லை என்று இப்பிரதிநிதிகள் வாக்களித்தனர். வாக்களித்தபடி நடந்தும் கொண்டனர். போர் நடந்த 19 மாதங்களில் 6000 வேலைநிறுத்தங்கள் நிகழ்ந்தன என்பது உண்மை. என்றாலும், அவை தொழிலாளர்களின் முயற்சியாலேயே உடனுக்குடன் நிறுத்தப்பட்டுவிட்டன என்பது இங்கே நினைவு கூரத்தக்கது.

1918-ல் தேசியப் போர் உழைப்பு வாரியமும் (National War Labour Board), போர் உழைப்புக் கைகோள் வாரியமும் (War Labour Policies Board) நிறுவப்பட்டன. வேலை நேரங்கள், வேலைச் சூழ்நிலைகள், கூலிகள், வேலையளிப்போர்—தொழிலாளர் உறவுகள் ஆகியவை பற்றிய அரசின் கொள்கைகளை நிர்ணயிப்பது போர் உழைப்புக் கைகோள் வாரியத்தின் பொறுப்பாக இருந்தது. போர் உழைப்பு வாரியம் ஒரு நீதிமன்றமாகச் செயலாற்றியது. வேலை யளிப்போருக்கும் தொழிலாளருக்குமிடையில் ஏற்படும் பூசல்களைப் பரிசீலனை செய்து முடிவு காண்பது இதன் பொறுப்பு. இவ் வாரியத்தில் 5 வேலையளிப்போர் பிரதிநிதிகளும், 5 தொழிலாளர் பிரதிநிதிகளும் இடம் பெற்றனர். டபிள்யூ. எச். டாஃப்ட் (W. H. Taft) என்பாரும், ப்ராங்க் பி. வால்ஷ் (Frank P. Walsh) என்பாரும் இதன் இணைத் தலைவர்களாகப் பொறுப்பேற்றனர். இதன் மத்தியஸ்தத் தீர்ப்புக்கள் பொதுவாக எல்லோராலும் ஏற்றுக்கொள்ளப்பட்டன. சுமார் 1500 பூசல்கள் தீர்த்துவைக்கப்பட்டன. மேலும் பூசல்கள் ஏற்படாதிருப்பதற்கான நடவடிக்கைகளும் மேற்கொள்ளப்பட்டன. பூசல்களைத் தடுப்பதற்காகப் பல கமிட்டிகள் நிறுவப்பட்டன. சில குறிப்பிட்ட தொழில்களுக்கெனச் சிறப்புக் குழுக்கள் அமைக்கப் பட்டன; தொழிலாளர் பிரச்சினைகளைத் தீர்த்து வைப்பதற்காக அரசின் போர்த் துறையின் பல்வேறு பிரிவுகளில் தொழிற் பணிக் கழகங்கள் ஏற்பட்டன. இரயில் பாதை கூலிக் குழு (Railroad Wage Commission), இரயில்வே தொழிலாளரின் கூலி சம்பந்தப்பட்ட பிரச்சினைகளைக் கவனித்துக்கொண்டது. போரில் நாடு வெற்றி பெறுவதற்குத் தொழிலாளர்கள் பாடுபட்டனர். இதை உணர்ந்த அரசும் அவர்களது நிலையை உயர்த்துவதற்கும், அவர்களது குறைகளை அகற்றுவதற்கும் முன் வந்தது; போர் முடிந்தவுடன் சர்வதேசத் தொழிலாளர் மாநாடு (International Labour Conference) ஒன்றை வாஷிங்டனில் நடத்தியது. இதன் விளைவாகத் தோன்றியதுதான் சர்வதேசத் தொழிலாளர் சங்கம் (International Labour Organisation).

### போர் நிதி திரட்டல்

முதல் உலகப் போரினால் அமெரிக்காவிற்கு ஏற்பட்ட செலவுத் தொகை சுமார் 32,700 மில்லியன் டாலர்கள் ஆகும். இவ்வளவு பெரிய தொகையை ஃபெடரல் அரசு எவ்வாறு திரட்டியது? செலவுத் தொகையில் 31 சதவிகிதத்தை வரி விதிப்பு மூலம் திரட்டியது. மீதியைக் கடன்கள்மூலம் திரட்டியது.

கருவூலச் செயலாளர் மக்அடு (McAdoo) அவர்களின் முக்கியக் கருத்து: ‘போர் நிதிகளைத் திரட்டுவதற்கு வரி விதிப்பே சிறந்த சாத

னம்' என்பது. ஏனென்றால் வரி விதிப்பானது நுகர்வோர் வாங்குந் திறனைக் குறைக்கிறது; போட்டியை மிதப்படுத்துகிறது; விலைகளைத் தாழ்த்துகிறது. போருக்குத் தேவையான நிதியின் 50 சதவிகிதத்தை வரிவிதிப்பு மூலமே பெற்றுவிட வேண்டும் என்று தொடக்கத்தில் மக் அடு விரும்பினார். ஆனால், மக்கள் அதனை எதிர்த்தனர். கடுமையான வரி விதிப்பிற்கு அவர்கள் கண்டனம் தெரிவித்தனர். எனவே, மக் அடு தமது கருத்தைச் சற்று மாற்றிக்கொள்ள வேண்டியிருந்தது. 30 சதவிகிதத் தொகை வரிவிதிப்பு மூலம் கிடைத்தால் போதும் என்ற நிலைக்கு அவர் வந்தார்.

வரிவிதிப்பு மூலம் உடனடியாகப் பணம் பெறுதல் முடியாது. ஆகவே, தொடக்கத்திலிருந்தே வரி விதிப்போடு கடன்கள் மூலமும் நிதி திரட்டுவதில் அரசு ஊக்கம் காட்டியது; ஆனால், உள்நாட்டுப் போரின்போது செய்ததைப்போல் நோட்டுக்களை அச்சிட்டுச் செலாவணிப் பண வீக்கத்தை முதல் உலகப் போரின்போது அரசு உருவாக்க விரும்பவில்லை.

புதிய வரிகள் விதிக்கப்பட்டன. சுங்க வரிகள்மீது அரசுக்கு நம்பிக்கை இருக்கவில்லை. ஆகையால் சுங்க வரிகள் மிதமாகவே இருந்தன. வரிகள் மூலம் பெறப்பட்ட வருவாயில் 5 சதவிகிதமே சுங்க வரிகள்மூலம் கிடைத்தது. வருமான வரிகள் அதிகப்படுத்தப் பெற்றன. திருமணமாகாதவர்கள் தமது வருமானத்தில் 1000 டாலர்களுக்கு வரிசெலுத்தத் தேவையில்லை; அவ்வாறே, திருமணமானவர்கள் தமது வருமானத்தில் 2000 டாலர்களுக்கு வரி செலுத்தத் தேவையில்லை; வரிவிதிப்புக்குட்படாத இவ் வருமானப் பகுதிக்கு எச்சமாயிருக்கும் முதல் 4000 டாலர்களுக்கு 6 சதவிகிதம் வரி செலுத்தப்பட வேண்டும். ஒரு மில்லியன் டாலர்களை வருமானமாகப் பெறுவோர் 63 சதவிகிதம் வரியாகச் செலுத்தவேண்டும். ஆக, இவ்வருமான வரி ஒரு படித்தர வரியாக (Graduated Tax) அமைந்திருந்தது. வருமான அளவுக்கேற்ப வரியானது 6 சதவிகிதத்திலிருந்து 63 சதவிகிதம் வரை இருந்தது.

வருமான வரியைத் தவிர, பின்வரும் வரிகளும் விதிக்கப்பட்டன: (1) போர் எச்ச இலாப வரி. கம்பெனிகள், கூட்டு வியாபாரிகள் மற்றும் தனி நபர்கள் இதனைச் செலுத்தினர். வர்த்தகத்தில் முதலீடு செய்யப்பெற்ற மூலதன அளவைப் பொறுத்து இவ்வரி விகிதம் 15 முதல் 60 சதவீதம் வரை இருக்கும்; (2) மதுபானம், புகையிலை மீது கூடுதல் வரிகள்; (3) ஆடம்பரப் பொருட்கள் மற்றும் பொழுதுபோக்குமீதான வரிகள்; (4) சொத்துப் பேறுமீது கூடுதல் வரிகள்; (5) ஆவணங்கள் மற்றும் செலாவணிப் பத்திரங்கள் மீதான வரிகள்.

இவ்வரிகள் மூலம் அரசுக்கு 1917, 1918, 1919ஆம் ஆண்டுகளில் முறையே 1118 மில்லியன் டாலர்கள், 4174 மில்லியன் டாலர்கள், 4648 மில்லியன் டாலர்கள் கிடைத்தன.

ஏற்கனவே கூறியபடி, போர்ச் செலவுக்கு வேண்டியிருந்த பணத்தை அரசு பெரும்பாலும் கடன்கள் வாயிலாகவே திரட்டியது. குறுங்காலச் சான்றிதழ் (Short term Certificates) விற்பனை, நெடுங் கால 'விடுதலைப் பத்திர' (Long term Liberty Bonds) விற்பனை என்ற இரு வழிகளில் அரசு கடன்களைப் பெற்றது. கடன் வாங்கல் விளைவாகப் பாங்குக் கடன் செலாவணிப் பணவீக்கம் (Credit Inflation) உண்டாயிற்று. உடனே பண்டங்களின் விலைகள் உயர்ந்தன. 1915ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் மொத்த விற்பனை விலைக் குறியீட்டெண் 106 ஆக இருந்தது. இது, 1917ஆம் ஆண்டு ஜூலை மாதம் 187-க்குத் தாவியது. பணவீக்கச் சூழ்நிலைகளை அகற்றும் நோக்கத்தில் அரசு எடுத்துக்கொண்ட விலைக் கட்டுப்பாடு முயற்சிகள் தோல்வியுற்றன. 1918ஆம் ஆண்டு நவம்பர் மாதம் குறியீட்டெண் 206 ஆக இருந்தது. பண்டங்களின் விலைகள் இரு மடங்கு உயர்ந்து கிடந்த உண்மையை இது பிரதிபலித்தது. போருக்குமுன் நாட்டின் மொத்தக் கடன் 1000 மில்லியன் டாலர்களாக இருந்தது; 1919-ல் இது 26600 மில்லியன் டாலர்களாக இருந்தது.

வியாபாரிகளுக்கும் விவசாயிகளுக்கும் உதவி புரிவதற்காக, காங்கிரஸ் மன்றமானது 1918ஆம் ஆண்டு ஏப்ரல் 5ஆம் தேதி போர் நிதிக் கழகத்தை (War Finance Corporation) நிறுவியது. அரசால் வழங்கப்பட்ட 500 மில்லியன் டாலர்களை இக்கழகம் மூலதனமாகக் கொண்டிருந்தது. பாங்குகள், டிரஸ்ட் கம்பெனிகள், வீடு கட்டிக்கொடுக்கும் கழகங்கள், கடன் வழங்கு நிலையங்கள் முதலியவற்றிற்குக் கடன் உதவிகளைத் தருவது இக்கழகத்தின் நோக்கம். 1916ஆம் ஆண்டுச் சட்டப்படி ஏற்படுத்தப்பட்டிருந்த ஃபெடரல் பண்ணை நில பாங்குகள் (Federal Farm Land Banks) விவசாயிகளுக்குக் கடன் உதவி தரும் பொறுப்பை ஏற்றுக்கொண்டன.

## பொறிவழித் தொழிலும் விவசாயமும்:

போரின் விளைவாக வர்த்தகக் கம்பெனிகள் பயனடைந்தன. முதலீடு செய்வோரின் இலாப ஈவுகள் பெருகியதோடன்றி, பங்கிடப்படா இலாபங்களும் கூடின. பிந்திய காலத்தில் ஏற்பட்ட வாணிப மந்த நிலையின்போது இந்தப் பங்கிடப்படா இலாபங்களை வைத்தே பல வர்த்தகக் கம்பெனிகள் உயிர் வாழ்ந்தன. முதல் உலகப் போரினால் தொழில் வட்டாரத்தில் ஏற்பட்ட ஒரு குறிப்பிடத் தகுந்த மாறுதல் தொழிற்சாலைகளின் வளர்ச்சியும், தொழிற்சாலைகளில்

ஆளப்படும் எந்திரம் மற்றும் தளவாடங்கள் பெருகியமையும் ஆகும். இதன் மூலமாக நாட்டின் ஆக்கத்திறன் உயர்ந்தது. தொழில்வளம் பரவலாகக் காணப்பட்டது. மோட்டார்கார் உற்பத்தி நான்கு மடங்கு பெருகியது. ரப்பர் உற்பத்தி மூன்று மடங்கு பெருகியது. பால்டின் உற்பத்தி இரு மடங்கு பெருகியது. இவைபோலவே இரும்பு, எஃகு, இறைச்சி, பெட்ரோலியம் முதலியவற்றின் உற்பத்தியும் பெருகியது. ஆனால், குடியிருப்புக் கட்டுமானம், கப்பல் மற்றும் விமானத் தயாரிப்பில் இத்தகைய அதிகரிப்புக்கள் இருக்கவில்லை.

பொறிவழித் தொழில்களைப்போல் விவசாயமும் போரினால் பயனுற்றது. விவசாயத்தின் மொத்த உற்பத்தி பெரிதாகி அதிகரிக்கவில்லை என்றாலும், உற்பத்தியளவு பழைய நிலைக்குக் குறைவாயிருக்கவில்லை. பண்ணைப் பண்டங்களின் விலைகள் போர்க்காலத்தில் விரைவாக உயர்ந்தன. உதாரணமாக, விவசாயக் கச்சாப் பொருட்களின் விலைகள் 1913-ல் இருந்ததைவிட, 1918-ல் 106 சத விகிதம் உயர்ந்து கிடந்தன. விலை ஏற்றம் காரணமாக விவசாயிகளின் வருமானங்கள் உயர்ந்தன. 1915—18 காலப் பகுதியில் விவசாயிகளின் உண்மை வருமானம் 29 சத விகிதம் அதிகரித்தது எனப் பொருளாதார வரலாற்றாசிரியர்கள் கருதுகின்றனர். போரினால் இறுதிநிலை விவசாயிகள்கூட நிறைந்த நன்மைகளைப் பெற்றனர் என்றறிகிறோம். ஆனால், நிலக்கிழார்களைப்போல பண்ணைத் தொழிலாளர்கள் அந்த அளவுக்குப் பயனடையவில்லை. 1915—18 காலப் பகுதியில் இவர்களது உண்மை வருமானம் 2 சத விகிதமே அதிகரித்தது. கூடுதலாகக் கிடைத்த வருமானங்களை, விவசாயிகள் பெரும்பாலும் புதிய நிலங்களை வாங்கிச் சாகுபடி செய்யப் பயன்படுத்தினர்,

முதல் உலகப் போரின் விளைவாக அமெரிக்கப் பொருளாதாரத்தைப் பொறுத்தவரையில் அக மாறுதல்களும் ஏற்பட்டன; புற மாறுதல்களும் எற்பட்டன. கடனாளி நாடாக இருந்த அமெரிக்கா உலக நாடுகள் மத்தியில் கடன் வழங்கு நாடாக மாறியது. அதன் நிதித் தலைநகரான நியூயார்க் உலகின் நிதித் தலைநகராகியது. இறக்குமதிகள் ஏற்றுமதிகளைவிடக் கூடுதலாயிருந்த காலம் மாறி, ஏற்றுமதிகள். இறக்குமதிகளைவிடப் பன்மடங்கு மிகுதியாயிருக்கும் காலம் உருவாகியது. போர் முடிவில் ஐரோப்பிய நாடுகள் அமெரிக்காவுக்கு 12,600 மில்லியன் டாலர்களைக் கடனாகக் கொடுக்க வேண்டியிருந்தது.

# 12. சுங்கவரிக் கைக்கோள் வரலாறு

## (The History of Tariff Policy)

*நிதி திரட்டுவதற்குச் சங்கம் :* 1789-ல் இயற்றப்பட்ட சுங்கவரிச் சட்டமே அமெரிக்காவின் முதல் சுங்கவரிச் சட்டம் ஆகும். "அரசுக்கு நிதி திரட்டுவதற்கும், உள்நாட்டுப் பொறிவழிப் பண்டங்களைப் பாது காத்து ஊக்குவிப்பதற்கும் வரிகளை விதிப்பது அவசியமாகிறது" என்று அச்சட்டம் கூறியது. ஆனால் அச்சட்டத்தின் முக்கியக் குறிக் கோள் அரசுக்கு நிதி திரட்டுவதேயாகும். பண்டங்களின் மதிப்பில் $8\frac{1}{2}$ சத விகிதம் வரியாக வசூலிக்கப்பட்டது. அமெரிக்கக் கப்பல்களில் வரும் பொருட்களுக்குச் சில வரிச் சலுகைகள் வழங்கப்பட்டன. நேர் முக வரிகள் அல்லது ஆயத் தீர்வைகள் (Excise duties) மூலம், நிதி திரட்டுவதற்கு வாய்ப்புக்கள் இல்லாத நிலையில் சுங்க வரிகள் மூலம் நிதி திரட்ட அரசு முயன்றது. மேலும் அப்போதிருந்த சூழ்நிலையில் தொழில்களுக்குப் பாதுகாப்பு வழங்குவது என்பது அவசியமற்ற ஒரு செயல். மக்களில் மிகப் பெரும் பகுதியினர் வேளாண்மையை நம்பி யிருந்தனர். பொறிவழிப் பண்ட உற்பத்தித் தொழில்கள் அவ்வள வாகத் தலையெடுக்கவில்லை. திறம்பெற்ற தொழிலாளர்கள் கிடைப் பது அரிதாயிருந்தது. கூலிகள் உயர்வாயிருந்தன. இயந்திரங்கள் பழக்கத்தில் இல்லை. மூலதனம் குறைவாயிருந்தது. இவ்விதச் சூழ் நிலையால் தொழில்வளம் வேரூன்ற முடியவில்லை. எனவே தொழி லுக்குப் பாதுகாப்பு கொடுப்பதற்கான தேவையே உண்டாகவில்லை. விவசாயிகளும், வணிகர்களும் மலிவான இறக்குமதிகளை விரும்பினர். போக்குவரத்து வசதிகள் மிகவும் மோசமான நிலையிலிருந்தன. இதனால் பண்டங்களை எடுத்துச் செல்வதில் பல சங்கடங்கள் வர்த்தக மையங்களுக்கிடையில் நெருங்கிய தொடர்புகள் தோன்ற முடிய வில்லை. எனவே அங்காடிகள் திருப்திகரமாக அமைய முடியவில்லை. அங்காடிகள் சரிவர அமைந்திருந்தால்தானே தொழில்வளம் முன் னேற முடியும்? இத்தகைய நிலவரங்களில் தலையிடா வாணியக்

கொள்கையைப் பின்பற்றுவதே சரியான செயலாக அரசுக்குப் பட்டது. என்றாலும் அரசுக்கு வருமானம் வேண்டுமே! அதற்காக சுங்கவரிகளை விதித்தது. அதே நேரத்தில் பாதுகாப்புக் கொள்கையினரை அமைதிப்படுத்துவதற்காக வரிகளைக் குறைந்த அளவில் விதித்தது.

1790-ல் அரசுக்கு நிதி கூடுதலாகத் தேவைப்பட்டது. ஆகையால் சுங்க வரிகள் சற்று உயர்த்தப்பட்டன. அதே ஆண்டில் அத்தியாவசியப் பொருட்களில் நாடு தன்னிறைவு பெறவேண்டுமெனில் எந்தெந்தப் பொறிவழிப் பண்டங்களை அரசு ஊக்குவிக்க வேண்டும் என்பதைப்பற்றிய ஓர் அறிக்கை தயாரிக்குமாறு கருவூலச் செயலாளர் ஹாமில்டன் (Hamilton) அவர்களை அரசு கேட்டுக்கொண்டது. பொறிவழிப் பண்டங்களைப்பற்றிய தமது அறிக்கையை 1791-ல் இவர் சமர்ப்பித்தார். இவ் வறிக்கையில் பொறிவழிப் பண்டத் தொழில்களுக்குப் பாதுகாப்பு கொடுக்க வேண்டுவதன் அவசியத்தைப் பெரிதும் வலியுறுத்தியிருந்தார். இவ் வறிக்கையே பின்னர் அமெரிக்கப் பாதுகாப்புக் கொள்கைக்கான அடித்தளமாக அமைந்தது. என்றாலும், அப்போதைக்கு அது அரசின் கவனத்திற்குள்ளாகவில்லை. அறிக்கை ஏட்டளவிலே நின்றது; நடைமுறைப்படுத்தப் பெறவில்லை.

1789 முதல் 1808 வரையில் 12 சுங்க வரிச் சட்டங்கள் இயற்றப்பட்டன. இவை சுங்க வரிகளை உயர்த்தின. இதனால் சுங்க வரிகள் சுமார் மூன்று மடங்கு அதிகரித்தன. வரிகளை உயர்த்தியதன் நோக்கம் வருவாயைப் பெருக்குவதே. அரசின் செலவுகள் அதிகரித்து வந்தன. வேறு வழிகளில் வருவாயைத் திரட்டுவது என்பது முடியாது. எனவே, சுங்க வரிகளை அரசு உயர்த்திற்று. காப்புக் கொள்கை பின்பற்றப்படாமலிருக்கும் நிலையிலேயே பாதுகாப்பளவுக்கு நிகராகச் சுங்க வரிகள் உயர்ந்து கிடந்தன!

### காப்புக் கொள்கைக்கு (Protection) ஆதரவு:

1814ஆம் ஆண்டின் இறுதியில் அமெரிக்காவுக்கும் இங்கிலாந்துக்குமிடையில் ஒரு சமாதான உடன்படிக்கை கையெழுத்திடப்பட்டது. இதன் விளைவாக இறக்குமதிகள் பெருமளவில் அதிகரித்தன; பிரிட்டிஷ் பண்டங்கள் அமெரிக்காவை நோக்கிப் படையெடுத்தன. 1814-ல் இறக்குமதியான பண்டங்களின் மதிப்பு 12,000,000 டாலர்கள். 1816-ல் இறக்குமதியான பண்டங்களின் மதிப்பு 147,000,000 டாலர்கள்! இறக்குமதியில் காணப்பட்ட இந்த அதிகரிப்பு நாட்டுப் பொறிவழிப் பண்ட உற்பத்தியை மிகவும் பாதித்தது. உள்நாட்டுப் பொருட்களின் விலைகள் சரிந்தன. இலாபங்கள்

குறைந்தன. பல தொழிற்சாலைகள் மூடப்பட்டன. பொறிவழிப் பண்டத் தயாரிப்பாளர்கள் திவாலாகிப் போயினர். இதற்கிடையில் அமெரிக்கக் கச்சாப் பருத்திக்கு அயல் நாடுகளில் தேவை அதிகரித்தது. இதனுல் கச்சாப் பருத்தியின் விலை உயர்ந்தது. அமெரிக்கப் பஞ்சாலைகளுக்கு மலிவான விலையில் பருத்தி கிடைக்கவில்லை. தொழில் சுணக்கமுற்றது. இதைத் தொடர்ந்து உள்நாட்டுத் தொழிலுக்குப் பாதுகாப்பு வழங்கப்படவேண்டும் என்ற கோரிக்கை வலிமை பெற்றது அரசியல் நிபுணர்களும், பொருளாதார அறிஞர்களும், பொறிவழித் தொழிலதிபர்களும் காப்பு முறையை (Protective System) ஆதரித்தனர். நாட்டின் சிற்றிளந் தொழில்கள் (Infant Industries) அழிந்துவிடுமோ என்ற அச்சம் நாட்டினரிடையே அரும்பியது. தொழில்களுக்கு ஓரளவு பாதுகாப்பு அளிக்கும் முறையில் 1816ஆம் ஆண்டின் சுங்கவரிச் சட்டம் இயற்றப்பட்டது. இது காப்பு முறை இயக்கத்தின் துவக்கமாக, 'அமெரிக்க அமைப்பு முறை'யின் (American Systems) ஆரம்பமாக அமைந்தது. இச் சட்டத்தின்படி 7½ முதல் 30 சத விகிதம் வரையில் பெறுமான வீத (Advalorem) வரிகள் விதிக்கப்பட்டன. பருத்தித் துணி வகைகள், கம்பளி, இரும்பு மற்றும் ஏனைய பொறிவழிப் பொருட்கள்மீது இவ் வரிகள் விதிக்கப்பட்டன; ஆனுல், இவ்வரிகளால் இறக்குமதிகள் குறையவில்லை. வரிகள் மேலும் உயர்த்தப் பெறவேண்டும் என்ற குரல் உடனே கிளம்பிற்று. காப்பு முறை ஏற்படுவதைத் தவிர வேறு வழியில்லை என்ற நிலை உருவாயிற்று.

1816—1833 காலப் பகுதியில் நாட்டின் வடக்குப் பகுதிக்கும் தெற்குப் பகுதிக்குமிடையில் பொருளாதார நலன்களைப் பொறுத்து விரோதம் நிலவியது. தெற்குப் பகுதி வேளாண்மை மிகுந்த ஒரு பகுதி. அங்கே அடிமைகளை வைத்துப் பண்ணைகளை வளர்த்து வந்தனர். அங்கே திறமைமிகுந்த தொழிலாளர் அளிப்பு குறைவாயிருந்தது. பொறிவழிப் பண்டங்களை உற்பத்தி செய்வதற்கான சூழ்நிலைகளோ அல்லது வாய்ப்புக்களோ கிடையா. எனவே, தொழில்களைப் பாதுகாப்பதற்காகச் சுங்க வரிகளை விதித்தலுக்கு அங்கே ஆதரவு இருக்கவில்லை. மேலும், வரிகளை விதித்தால் தமது கச்சாப் பருத்தியை வாங்குவதில் பிரிட்டன் பதிலடி கொடுத்துவிடுமோ என்ற அச்சமும் தென்னகத்தினரிடம் இருந்து வந்தது. பாதுகாப்புக் கொள்கைக்குத்தென்னகத்தினரிடமிருந்த இந்த எதிர்ப்பின்காரணமாகவே, 1828 வரையில் வளர்ந்துவந்த காப்பு முறை இயக்கம் பிறகு தெம்பிழந்தது. 1818-ல் இரும்புக்குச் சற்றுக் கூடுதலான காப்பு வழங்கப்பட்டது 1824ஆம் வருடத் தேர்தலுக்குப் பின்னர், காப்புக் கொள்கையை ஆதரிக்கும் முறையில் சுங்க வரி விதிப்பில் சில திருத்தங்

களும், மாற்றங்களும் செய்யப்பட்டன. இரும்பு, கம்பளி வகைகள், ஈயம் முதலிய பண்டங்களுக்கும், மற்றப் பொறிவழிப் பண்டத் தயாரிப்பாளருக்கும் இன்னும் மிகுதியான காப்பளிக்கப்பட்டது. சணல் உற்பத்தியாளருக்கு 25 சத விகித காப்பு கிடைத்தது. ஒகியோ மற்றும் மத்திய மாநிலங்களின் கம்பளித் தயாரிப்பாளர்களும், பென்சில்வேனியாவின் இரும்பு உற்பத்தியாளர்களும், கென்டக்கியின் சணல் தயாரிப்பாளர்களும் இத்தகைய சுங்கவரிக் காப்பு முறையைப் பெரிதும் ஆதரித்தனர். ஆனால் வடக்குப் பகுதிக்காரர்கள் இதனை எதிர்த்தனர்.

**'அருவருப்பு மிகுந்த சுங்கவரிச் சட்டம்' :**

பிறகு, சுங்கவரிப் பிரச்சினை அரசியல் வட்டாரத்தில் பல விவாதங்களுக்கு வித்தூன்றியது. கூடுதலான காப்பு வேண்டும் என்று கோரி கம்பளித் தயாரிப்பாளர்கள் கிளர்ச்சி செய்தனர். இதன் விளைவாக 1828ஆம் ஆண்டில் ஒரு காப்புவரிச் சட்டம் இயற்றப்பட்டது. மிக அதிகமான வரிகளை விதித்த அச்சட்டம் 'அருவருப்பு மிகுந்த சுங்கவரி'ச் (Tariff cf Abominations) சட்டம் என வருணிக்கப்பட்டது. மிதமான சுங்க வரிகளை ஆதரித்து வந்த ஜாக்சன் கட்சியினர் அந்தக் கடுமையான சட்டத்தைக் கொணர விரும்பியதன் உள் நோக்கம், சுங்க வரிகளை ஆதரித்துவந்த ஆடம்ஸ் கட்சியினர் அச் சட்டத்தை ஏற்க மறுத்து, மக்களின் அவநம்பிக்கைக்குள்ளாகி, தமது பெயரைக் கெடுத்துக்கொள்வர் என்பதே. ஆனால் சற்றும் எதிர்பாராதவகையில் ஆடம்ஸ் கட்சியினர் அச்சட்டத்திற்கு எதிர்ப்புத் தெரிவிக்கவில்லை. உடனே அச்சட்டம் நிறைவேறிவிட்டது. இவ்வளவு கொடுமையான சட்டத்தையா ஆடம்ஸ் கட்சியினர் ஆதரித்து ஒட்டளிப்பர் என்று ஜாக்சன் கட்சியினர் எண்ணியிருந்தனர். சட்டம் நிறைவேறியது அவர்களுக்குப் பெரும் ஏமாற்றம். 'அருவருப்பு மிகுந்த சுங்கவரி'ச் சட்டம் நிறைவேறி விட்டதைக்கண்ட தெற்குப் பகுதியினர் கொதித்தெழுந்தனர். சட்டத்தின் விளைவாகத் தெற்கின் செல்வம் வடக்குக்குச் சென்றுவிடும் என்று அவர்கள் பயந்தனர். மேலும், கூடுதலான சுங்க வரிகள்மூலம் பெறப்படும் வருவாய்கள் வடக்குப் பகுதியில் உள்ள சாலை, மற்றும் கால்வாய் முன்னேற்றத்திற்குச் செலவழிக்கப்படும் என்ற நிலை அவர்களுக்கு வேதனையைக் கொடுத்தது. வடக்கின் அபிவிருத்திகளுக்குத் தாம் ஏன் பணம் கொடுக்கவேண்டும் என்ற வினா அவர்களிடையே எழுந்தது. ஏற்றுமதித் தொழிலைப் பிரதானமாக நம்பியிருந்த தென்னகத்திற்கு இச் சட்டம் பாதகமாக அமைந்தது. எனவே தெற்குப் பகுதியினர் இச் சட்டத்தை முழுமூச்சாக எதிர்த்தனர்.

**சுங்கவரிக் கைக்கோளில் உறுதிப்பாடின்மை:**

ஹென்றி கிளே (Henry Clay), ஜார்ஜ் மக்டஃபி (George McDuffie) முதலியோர் இச்சட்டத்திற்குத் திருத்தங்களைக் கொண்டு வந்தனர். இவர்களின் திருத்தங்கள் 1830-ல் நிராகரிக்கப்பட்டன. 1832-ல் காங்கிரஸ் வரிகளைக் குறைத்தது 1824-ல் எவ்வாறிருந்தனவோ அவ்வாறே அப்போது சுங்க வரிகள் இருந்தன. சுங்க வரிகள் அறவே நீக்கப்படுவதைத் தலையிடா வாணிபக் கொள்கையினர்கூட விரும்ப வில்லை. அரசுக்குத் தேவையான வருவாய் ஏதோ ஒரு வழியில் பெறப்படவேண்டும். அதுவும் அந்நிய இறக்குமதிகளின்மீது வரிகளை விதிப்பதன்மூலம் கிடைத்தால் நல்லதுதானே என்று அமெரிக்கர்கள் கருதினர். 1832-ல் சுங்க வரியில் செய்யப்பட்ட மாறுதல்கள் தென்னகத்தவருக்குத் திருப்தியளிக்கவில்லை. காப்புக் கொள்கை இன்னமும் சுங்க வரிகளில் இழையோடுவதாக அவர்களுக்குப் பட்டது. இதற்கிடையில் 1832ஆம் ஆண்டின் நவம்பர் மாதத்தில் தள்ளுபடி அவசரச் சட்டம் (Nullification Ordinance) ஒன்றினைத் தென் கரோலினு இயற்றியது. இச் சட்டத்தின்படி 1828ஆம் வருடச் சுங்க வரிச் சட்டமும், 1832-ல் திருத்தம் பெற்ற சட்டமும் செல்லுபடியாகாது என்றும், அது தென் கரோலினு மக்களைக் கட்டுப்படுத்தாது என்றும் அறிவிக்கப்பட்டது. ஃபெடரல் அதிகாரிகள் பலவந்தமாகச் சட்டங்களைத் திணிக்க முயன்றால், தான் யூனியனிலிருந்து பிரிந்துபோக நேரிடும் என்றும் தென் கரோலினு எச்சரிக்கை விடுத்தது. தென் கரோலினுவின் போக்கு நாட்டின் ஒற்றுமையைக் குலைக்கும் எனக் கருதிய ஜனுதிபதி ஜாக்சன், 'தள்ளுபடி அவசரச் சட்டத்திற்கு மறுப்புத் தெரிவிக்கும் பிரகடனம் ஒன்றை டிசம்பர் மாதம் வெளியிட்டார். சுங்கவரிச் சட்டங்களை அமல் செய்வதற்கும், நாட்டின் ஒற்றுமையைப் பாதுகாப்பதற்கும் தேவையானல் இராணுவம், மற்றும் கப்பற் படையைப் பயன்படுத்திக்கொள்ளும் அதிகாரம் தம்மிடம் உள்ளது என அவர் அறிவித்தார். நிலைமை முற்றுவதற்குள், ஹென்றி கிளே, ஜனுதிபதியும் தென் கரோலினுவும் ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒரு பொதுவான சட்டத்தை (Compromise Act) 1833-ல் இயற்றினர். இச் சட்டத்தின்கீழ், 1832-ல் 20 சத விகிதத்திற்குக் கூடுதலாயிருந்த வரிகளெல்லாம் குறைக்கப்பட்டன.

1833 முதல் 1860 வரை அமெரிக்கச் சுங்க வரிக் கைக்கோளில் அடிக்கடி மாறுதல்கள் ஏற்பட்டு வந்தன. 1837, 1857ஆம் ஆண்டுகளில் நிதி நெருக்கடிகள் தோன்றி, வாணிபத்தில் மந்த நிலைமை உருவாகியது. இம் மந்த கட்டங்களின்போது கூடுதலான சுங்க வரிகள் விதிக்கப்பட்டு, உள்நாட்டுத் தொழில்கள் பாதுகாக்கப் பெறவேண்டுமென்ற கொள்கைகள் எழுந்தன. இக் காலத்தில் அமெரிக்கத்

தொழில்கள் நன்கு வளர்ந்தன. பருத்தி மற்றும் கம்பளித் தொழில்கள் சிற்றிளந் தொழில்களாக இல்லாமல், நல்ல முதிர்ந்த தொழில்களாக மாறின. இருந்தபோதிலும் பொறிவழிப் பண்டத் தயாரிப்பாளர்கள் காப்புக் கொள்கையை ஆதரித்தனர். அவர்களது முக்கிய விண்ணப்பம்: குறைவான கூலிகளைப்பெற்று வேலைசெய்யத் தயாராயிருக்கும் வெளிநாட்டுத் தொழிலாளரின் போட்டியிலிருந்து அமெரிக்கத் தொழிலாளர் பாதுகாக்கப்பட வேண்டுமெனில், காப்புக் கொள்கை பின்பற்றப்படவேண்டும்; வரி வீதங்களை உயர்த்துவதன் மூலமே வெளிநாட்டுத் தொழிலாளர் போட்டியைத் தவிர்க்க முடியும்; உள்நாட்டுத் தொழிலாளர் கூலிகளை உயர் மட்டத்தில் வைத்திருக்க முடியும். சுங்க வரிகள் அடிக்கடி மாறுவதாயிருக்கக்கூடாது என்பது சுங்க வரிக் கைக்கோளின் ஓர் அடிப்படைத் தத்துவம். சுங்க வரி வீதங்கள் உயர்வாகவோ அல்லது தாழ்வாகவோ இருக்கலாம். ஆனால், ஆண்டுக்கு ஆண்டு மாறுபடுவது என்பது ஆபத்தை விளைவிக்கக்கூடியது. அமெரிக்கச் சுங்க வரிகள் உண்மையில் அடிக்கடி உயர்வதாகவும், தாழ்வதாகவுமிருந்தன. "அமெரிக்கச் சுங்க வரிகளின் ஓர் அம்சமாக உறுதிப்பாடின்மை இருந்தது" என்கிறார் நோல்ஸ் (Knowles). 1832, 1842ஆம் ஆண்டுகளில் சுங்க வரி வீதங்கள் உயர்வாக இருந்தன; 1846, 1857ஆம் ஆண்டுகளில் தாழ்வாகஇருந்தன.

### பாங்கு பரவலாக்கல் திட்டத்தின் விளைவு:

1833ஆம் ஆண்டின் சுங்க வரிச் சட்டத்திற்குப் பின்னர் நாடு தடையிலா வாணிபக் கொள்கையினை ஏற்றுக்கொள்ளப் போகிறது என்று பலர் எண்ணிக்கொண்டிருந்த நேரத்தில், 1837-ல் வாணிப நெருக்கடி ஒன்று திடீரென்று ஏற்பட்டு, நாட்டு வருவாய்த் திட்டம் நிலை தடுமாறிப்போயிற்று. பாங்குகளைப் பரவலாக்க (Dcentralisation) வேண்டும் என்ற ஜனாதிபதி ஜாக்சனின் கொள்கையாலேதான் இந்த நெருக்கடி நிலைமை உருவாயிற்று. 'பாங்கு பரவலாக்கல் திட்டம்' மூலமாக மாநில பாங்குகளின் எண்ணிக்கையும், முதலும், நோட்டுப் புழக்கமும் விரைவில் பெருகின. அதோடு, 1837-ல் ஃபெடரல் அரசிடமிருந்த உபரித் தொகையாகிய 28 000,000 டாலர்கள் மாநிலங்களுக்குக் கடனாக வழங்கப்பட்டன. புழக்கத்திலிருந்த பணத்தின் அளவு பெருகியது. விலைகள் உயர்ந்தன. உற்பத்தி அதிகரித்தது. நில ஊக வாணிபம் எல்லைமீறி வளர்ந்தது. இறுதியில் அமித உற்பத்தி (Over production) காரணமாகப் பருத்தி விலைகள் அடிமட்டத்திற்குச் சரிந்தன. அரசின் வருவாய்கள் குறைந்தன. ஆறு மாநில அரசுகள் திவாலாகிவிட்டன. அரசின் வருவாயைப் பெருக்கும் கருத்தில் 1842-ல் சுங்க வரிகள் உயர்த்தப்பெற்றன. பருத்தி, மற்றும் இரும்புப் பொருட்கள் சராசரியாக 33 சத வீகிதம் வரி

செலுத்தவேண்டியிருந்தது. பொறிவழிப் பண்டங்கள் இன்னும் சிறிது கூடுதலான வரிகளைச் செலுத்தின. வரி வீத உயர்வைத் தொடர்ந்து வாணிபத்தில் மீட்சி அரும்பியது. அந்நியப் பண்டங்களின்மீதான வரிகள் உயர்த்தப்பெற்றமையால் பருத்தி, இரும்பு முதலிய தொழில்களில் இலாபங்கள் பெருகி, செழிப்பு நிலை தோன்றியது. இச் செழிப்பு நிலை, பிறகு, மற்ற தொழில்களுக்கும் பரவியது. வாணிபம் நெருக்கடியிலிருந்து மீண்டது.

### வாக்கர் சுங்க வரிச் சட்டம் (Walker Tariff Act):

ஆனால், 1842-ன் சுங்க வரிகள் நெடுநாட்களுக்கு நீடிக்கவில்லை. 1844-ல் ஜனநாயக வாதிகள் ஆட்சிக்கு வந்தனர். ஜனாதிபதி போக் (Polk) பின்வருமாறு தமது கருத்துக்களைத் தெளிவுபடுத்தினார்: "வருவாய்களைத் தருவதற்குச் சுங்கவரிகள் இருப்பது நல்லதே. ஆனால், இறக்குமதிகளைக் குறைக்கும் முறையில் எந்த வரியும் அளவுக்கு மீறி உயர்த்தப்படக்கூடாது. உள்நாட்டு, வெளிநாட்டுப் பண்டங்களுக்கிடையில் பேதங் காட்டலாம். ஆனால் அன்றாடம் மக்களுக்குத் தேவைப்படும் பொறிவழிப் பண்டங்களின் அளிப்பை அது பாதிப்பதாயிருக்கக்கூடாது. "ஜனாதிபதியின் இக் கருத்துக்களின் அடிப்படையில் 1846-ல் வாக்கர் சுங்க வரிச் சட்டம் (Walker Tariff Act) இயற்றப்பட்டது. இச்சட்டம் இறக்குமதிப் பண்டங்களை A, B, C, D, என நான்கு வகுப்புக்களாகப் பிரித்தது. போகப் பொருட்கள் A வகுப்பைச் சார்ந்தவை; அவைமீது 100 சத விகிதம் சுங்க வரி விதிக்கப்பட்டது. வசதிப் பொருட்கள் B வகுப்பைச் சார்ந்தவை; அவைமீது 40 சத விகிதம் வரி விதிக்கப்பட்டது வர்த்தகப் பொருட்கள் மற்ற வகுப்புக்களைச் சார்ந்தவை; அவைமீது 5 முதல் 30 சத விகிதம் வரையில் வரி விதிக்கப்பட்டது. தனித்த (Specific) வரிகளுக்குப் பதிலாக பெறுமான விகித வரிகளை இச்சட்டம் புகுத்தியது. மேலும், வரிகள் செலுத்தப்படும் வரையில் பண்டங்களைக் கிடங்குகளில் பூட்டி வைக்கும் முறை இச்சட்டத்தின்மூலமே நடை முறைக்கு வந்தது. சுங்க வரிகள் பொதுவாக 1842-ல் இருந்ததைவிடத் தாழ்வான வீதங்களில் இருந்தன. வரி வீதக் குறைப்புக்களைத் தொடர்ந்து வாணிபம் தழைத்தது. தொழில் பெருகியது குறிப்பாக இரும்பு உற்பத்தித் தொழில் அமெரிக்காவில் ஒரு முக்கிய பேரளவுத் தொழிலாக உருவெடுத்தது.

### மோரில் சுங்க வரிச் சட்டம் (Morill Tariff Act):

பொறிவழிப் பொருள் உற்பத்தியாளர்கள் நல்ல இலாபங்களைப் பெற்றனர். காப்பு முறை வேண்டுமென்று அவர்கள் கேட்கவில்லை அதற்கான அவசியமும் எழவில்லை. ஆகவே, 1857 ஆம் ஆண்டிலும்

சுங்க வரி வீதங்கள் குறைக்கப்பட்டன. மேலும், வரியிலிருந்து விலக்குப்பெற்ற பண்டங்களின் பட்டியலும் நீண்டது. 1846ஆம் ஆண்டு முதல் 1857 வரையில் வாணிபம் செழித்திருந்தமையாலும், வரிகளினின்று பெறப்பட்ட வருமானம் பெருகியமையாலும் வரிக் குறைப்பு செய்வதில் அரசுக்கு எந்தவிதத் தயக்கமும் இருக்கவில்லை. ஆனால், சில நாட்களுக்குள் அதே ஆண்டில் வாணிப நெருக்கடி ஏற்பட்டுப் பொருளாதார நிலை பாதிக்கப்பட்டபோது மக்கள் அதிர்ச்சிக் குள்ளாயினர். 1857-ன் நெருக்கடிக்குச் சுங்க வரிக் குறைப்பே மூல காரணம் என அவர்கள் கருதினர். எனவே, 1861ஆம் ஆண்டு மோரில் சுங்க வரிச் சட்டம் (Morril Tariff Act) இயற்றப்பட்டது. இதன் விளைவாக 1846-ல் இருந்த நிலைமைக்கு வரி வீதங்கள் உயர்த்தப் பெற்றன. அரசின் நிதிப் பற்றுக்குறையை நீக்குவதே இச்சட்டத்தின் குறிக்கோள். ஆனால், இக் குறிக்கோள் நிறைவேறுவதற்குள் தென்னக மாநிலங்கள் யூனியனிலிருந்து பிரிந்துசெல்லும் நிலைமை உருவாகி, உள்நாட்டுப் போர் ஏற்பட்டு, அமெரிக்க சுங்க வரித் திட்டம் அடியோடு மாற்றி யமைக்கப்படவேண்டிய அவசியம் உண்டாகி விட்டது. மோரில் சுங்க வரிச் சட்டத்தின்படி பெறுமான விகித வரிகள் கைவிடப்பட்டன; தனித்த வரிகள் மீண்டும் புகுத்தப்பட்டன. வரி விதிப்புக்குள்ளாகும் பண்டங்களின் எண்ணிக்கை 1861—1865 காலப் பகுதியில் மிகவும் அதிகரித்தன. பாராளுமன்றத்தின் ஒவ்வொரு கூட்டத் தொடரின்போதும் இறக்குமதிமீதான வரிகள் உயர்த்தப்பட்டன. 'காண்கின்ற பொருள்மீதெல்லாம் கடுமையான வரிகளைப் போடும் பழக்கம்' நடைமுறைக்கு வந்தது. இரும்பு, எஃகு, காகிதம், தோல் முதலியவைமீது 1812-ல் தனித்த வரிகள் விதிக்கப்பட்டன. வருமான வரித் திட்டமும் அமல் செய்யப்பட்டது. வரி வீதங்கள் உயர்த்தப்பட்டதன் விளைவாக அரசின் வருவாய்கள் மிகுதியாயின. பொறிவழி உற்பத்தியாளர்களுக்கு நல்ல பாதுகாப்பு கிடைத்தது.

### 1864ஆம் ஆண்டின் சுங்க வரிச் சட்டம்:

1864-ல் கொண்டுவரப்பெற்ற ஒரு சுங்க வரிச் சட்டம் வரி வீதங்களை அளவுக்குமீறி உயர்த்தியது. உலகின் வேறு எந்தப் பகுதியிலும் அந்த அளவுக்கு அப்போது வரி வீதங்கள் உயர்த்தப்படவில்லை எனலாம். உள்நாட்டுப் போரினால் ஏற்பட்ட அதிகப்படியான செலவுகளைச் சமாளிப்பதற்காக அரசு சுங்க வரிகளை உயர்த்தியது. போர் முடிந்தவுடன் வரி வீதங்கள் குறைக்கப்பட்டன. நிதித் திட்டம் மாற்றியமைக்கப்பட்டது. உள்நாட்டுப் போரின்போது பல தொழில்கள் வளர்ச்சியடைந்தன. இவை போர் முடிந்தவுடன் பாதுகாப்புக் கேட்டன. உள்நாட்டுத் தொழில்களை வளர்ப்பதற்காக மீண்டும்

சுங்க வரிகளை உயர்த்தவேண்டியது அரசுக்கு அவசியமாயிற்று. 1867-ல் இயற்றப்பட்ட கம்பளிச் சட்டத்தின் (Wollens Act)கீழ், பொறிவழிக் கம்பளிப் பொருட்கள்மீதான வரிகள் 100 சத விகிதம் வரை உயர்த்தப்பட்டன. செம்பு (Copper) மீதான வரிகள் 1869-ல் உயர்த்தப்பட்டன. எஃகுத் தண்டவாளங்கள்மீது விதிக்கப்பட்டு வந்த வரிகள் 1870ஆம் ஆண்டில் அதிகப்படுத்தப்பட்டன. 1877-ல் இவைமீது 100 சத விகிதம் சுங்க வரி விதிக்கப்பட்டது. இதுதான் அமெரிக்க எஃகுத் தொழில் வளர்ச்சியின் ஆரம்பக் காலமாகும். சுங்க வரிக் கூடுதல் இதன் வளர்ச்சியை மிகவும் உற்சாகப்படுத்திற்று.

## மக்கின்லி சுங்க வரிச் சட்டம் (Mekinley Tariff Act):

1873-ல் அமெரிக்கப் பொருளாதாரத்தில் ஒரு நெருக்கடி நிலைமை தோன்றியது. கச்சாப் பொருட்களை உற்பத்தி செய்துவந்த எல்லா நாடுகளுக்கும் இந்த நெருக்கடி நிலைமை பொதுவானது. நெருக்கடி நிலைமை காரணமாக அமெரிக்க நாட்டு இறக்குமதிகள் கணிசமாகக் குறைந்தன. சுங்க வரிகளிடமிருந்து பெறப்பட்ட வருவாய்களும் குறைந்தன. 1875 முதல் 1883 வரையில் சுங்க வரித் திட்டத்தில் எந்த வித மாறுதலும் நிகழவில்லை. 1883-ல் காப்பு முறை மும்முரமாகப் பின்பற்றப்பட்டது. இதைத் தொடர்ந்து வரலாறு காணாத வகையில் தொழில் பெருகியது. அமெரிக்கப் பொறிவழிப் பண்டங்களுக்கு உலகில் பல புதிய அங்காடிகள் கிடைத்தன. நாட்டில் ட்ரஸ்ட் முறை செழித்து வளர்ந்தது. உலகின் மிக முக்கிய எஃகு உற்பத்தி நாடாக அமெரிக்கா உருவெடுத்தது. 1890-ல் குடியாசுக் கட்சியினர் மக்கின்லி சுங்க வரிச் சட்டத்தை (Mekinly Tariff Act) இயற்றினர். இச் சட்டத்தின்படி சராசரி சுங்க வரி 49·5 சத விகிதம் உயர்ந்தது. உயர் ரகக் கம்பளி, கண்ணாடிச் சாமான்கள், ஆடைகள், எஃகு, வெள்ளீயத் தகடுகள் முதலிய பண்டங்கள்மீது மிகுதியான வரிகள் விதிக்கப்பட்டன. அமெரிக்காவில் இறக்குமதியாகும் விவசாயப் பொருட்கள் மீதும் கூடுதலான வரிகள் போடப்பட்டன. ஆனால் சர்க்கரைமீது விதிக்கப்பட்ட வரி குறைக்கப்பட்டது. அதோடு, உள்நாட்டுச் சர்க்கரை உற்பத்தியாளருக்கு உற்பத்தியான சர்க்கரைக்கு ஒரு பவுண்டுக்கு இரு செண்டுகள் என்று அரசுக் கொடைகள் (Bounties) கிடைத்தன. 1879ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட வில்சன் சுங்க வரிச் சட்டத்தின் (Wilson Tariff Act) படி செம்பு, மரம், கம்பளி முதலிய பண்டங்களுக்கு விதித்த வரி நீங்கியது மற்ற பண்டங்கள்மீதான வரிகள் 39·9 சத விகிதம் குறைந்தன. இதனால் குறையும் வருவாயைச் சரிக்கட்டுவதற்கு, 4000 டாலர்களுக்குமேற்பட்ட ஆண்டு வருமானம் உடையவர்கள்மீது இரண்டு சத விகித வருமான வரி விதிக்கப்பட்டது. இச்சட்டத்தை நீதிமன்றம் அரசியலமைப்புக்கு முரண்பட்டது என்று 1895-ல் தீர்ப்பளித்தது.

**பெய்ன்-ஆல்ட்ரிஷ் சுங்க வரிச் சட்டம் (Payne-Aldrich Tariff Act):**

மற்றெல்லாச் சுங்க வரிச் சட்டங்களையும்விட 1897-ல் இயற்றப் பட்ட டிங்லி சுங்க வரிச் சட்டமே (Dingley Tariff Act) அமெரிக்காவில் நீண்ட காலம் (12 ஆண்டுகள்) அமலில் இருந்தது. இது சுங்க வரிகளைச் சராசரி 57 சத விகிதத்திற்கு உயர்த்தியது. தோல் பொருட்கள்மீது மீண்டும் வரி விதிக்கப்பட்டது. சுங்க வரிகள் வாழ்க்கைச் செலவை அதிகப்படுத்தின. ஆகையால், மக்கள் இவ் வரிகள்மீது ஓரளவிற்கு வெறுப்புக் காட்ட வாரம்பித்தனர். மேலும் டிரஸ்டுகளைச் சுங்க வரிகள் வளர்க்கின்றன என்கிற குற்றச்சாட்டும் எழுந்தது. மக்களைத் திருப்திசெய்வதற்குச் சுங்க வரித் திட்டத்தில் சில மாறுதல்களைச் செய்ய குடியரசுக் கட்சியினர் முயன்றனர். 1909-ல் கொண்டு வரப்பெற்ற பெய்ன்-ஆல்ட்ரிஷ் (Payne-Aldrich) சுங்க வரிச் சட்டம் தோல், பெட்ரோலியம் முதலிய பொருட்களுக்கு வரிவிதிப்பிலிருந்து விலக்களித்தது; சுங்க வரி வாரியம் (Tariff Board) ஒன்றை ஏற்படுத்தியது: மேலும், ஆண்டொன்றிற்கு 5000 டாலர்களுக்கதிகமான நிகர வருமானத்தைப் பெற்றுவரும் கம்பெனிகள்மீது 1 சத விகிதம் வரி விதித்தது. குடியரசுக் கட்சியினரிடமிருந்து மக்கள் பல பெரிய சாதனைகளை எதிர்பார்த்தனர்; சுங்க வரித் திட்டத்தில் பல அடிப்படை மாறுதல்கள் நிகழும் எனக் கனவு கண்டனர். எனவே 1909 ஆம் ஆண்டின் சட்டம் அவர்களை ஏமாற்றத்திலாழ்த்தியது. சட்டத்தின் பொருளாதார, சமூக விளைவுகள் எவ்வாறிருந்தன என்பது சரியாகப் புலப்படுமுன்னர், இச்சட்டத்தின் விளைவாகக் குடியரசுக் கட்சிக்குள் பிளவு ஏற்பட்டது. 1912-ல் நடைபெற்ற தேர்தலில், உட்ரோ வில்சன் தலைமையின்கீழ் ஜனநாயகக் கட்சியினர் வெற்றிவாகை சூடினர். சுங்கவரி யமைப்பில் மாறுதல்களைக் கொணர வில்சன் விரும்பினார். அதற்கான சட்டத்தை இயற்றவும் முனைந்தார். போட்டியின் அடிப்படையில் அமைந்த சுங்க வரிகளையே (Competition Tariff) இவரது கட்சியினர் ஆதரித்தனர். ஜனநாயகக் கட்சி அரசு 1913-ல் அண்டர்வுட்-சிம்மன்ஸ் சட்டத்தை (Underwood-Simmons Act) இயற்றியது. நூற்றுக்குமேற்பட்ட பண்டங்கள் வரி விதிப்பிலிருந்து விலக்களிக்கப்பட்டன. உணவு, உடை, கச்சாப் பொருட்கள் முதலிய அத்தியாவசியப் பொருட்கள் உட்பட 1000 பொருட்கள்மீதான வரிகள் குறைக்கப்பட்டன. இரசாயனப் பண்டங்கள்மீது கூடுதலான வரிகள் விதிக்கப்பட்டன. வரிகள் சராசரியாக 29 சதவிகிதம் குறைந்தன. வரிக் குறைப்புக்களால் ஏற்பட்ட இழப்பை ஈடுசெய்ய அரசு வருமான வரியை உயர்த்தியது. சுங்க வரிகளைக் குறைப்பதற்கு ஜனநாயகக் கட்சியினர் உண்மையிலேயே முயன்றனர் என்றாலும், வரிகள் என்னவோ காப்பு வரிகளுக்கு நிகரானவையாகவே இருந்தன. சுங்க வரி வாரிய நடவடிக்கைகள்

காங்கிரஸ் மன்றத்திற்குத் திருப்தியளிக்கவில்லை. எனவே 1912-ல் வாரியம் மூடப்பட்டது.

ஃபோர்ட்னி-மக்கும்பர் சுங்க வரிச் சட்டம் (Fordney-McCumber Tariff Act): முதல் உலகப் போருக்குப் பின்னர் 1921-ல் குடியரசுக் கட்சியினர் ஆட்சிக்கு வந்தனர். சுங்க வரிகளை மீண்டும் உயர்த்த வேண்டும் என்ற எண்ணம் அவர்களிடம் தலையெடுத்தது. 1922ஆம் வருடம் அவர்களால் இயற்றப்பட்ட ஃபோர்ட்னி-மக்கும்பர் சுங்க வரிச் சட்டம் (Fordney-McCumber Tariff Act), சுங்க வரிகளை மிக அதிகமாக உயர்த்தியது. புதிய வரிகளும் விதிக்கப்பட்டன. விவசாயமும் தொழிலும் நல்ல பாதுகாப்பினைப் பெற்றன. அமெரிக்காவிற்கும், மற்ற போட்டி நாடுகளுக்கும் இடையிலான உற்பத்திச் செலவு வேறுபாடுகளைச் சமப்படுத்துவதற்குரிய வகையில் வரி வீதங்களை 50 சத விகிதம் வரை குறைக்கவோ அல்லது உயர்த்தவோ ஜனாதிபதிக்கு அதிகாரம் உண்டு என்று இச்சட்டம் கூறியது. இவ்வதிகாரம் வரிகளை உயர்த்துவதற்கே பெரும்பாலும் ஆளப்பட்டது. ஃபோர்ட்னி-மக்கும்பர் சட்டம் உயர் இறக்குமதி வரிகளை விதித்திருந்த போதிலும், விலைகள் உயரவில்லை; மாறாகத் தாழ்ந்தன.

ஹாலி-ஸ்மூட் சுங்க வரிச் சட்டம்:

1930-ல் அமலுக்குவந்த ஹாலி-ஸ்மூட் சுங்க வரிச் சட்டம் (Howley-Smoot Tariff Act) வரிகளை மேலும் உயர்த்தியது. 890 பண்டங்கள்மீதான வரிகள் உயர்ந்தன. 30 பொருட்கள் புதிதாக வரி விதிப்புக்குள்ளாயின. 75 பண்டங்கள் வரி விதிப்பிலிருந்து விடுபட்டன. 235 பண்டங்களின்மீதான வரிகள் குறைக்கப்பட்டன. விவசாயப் பண்டங்கள்மீது விதிக்கப்பட்டிருந்த வரிகளின் சராசரி வீதம் 19·9 சத விகிதத்திலிருந்து 33·6 சத விகிதத்திற்கு உயர்ந்தது. உலோகங்களின்மீதான வரிகளின் சராசரி வீதம் 33 7 சத விகிதத்திலிருந்து 35 சத விகிதத்திற்கு உயர்ந்தது. கம்பளிப் பொருட்கள் செலுத்திவந்த வரிகளின் சராசரி வீதம் 49 5 சத விகிதத்திலிருந்து 59·8 சத விகிதத்திற்கு உயர்ந்தது. ஃபோர்ட்னி-மக்கும்பர் சட்டம், ஹாலி-ஸ்மூட் சட்டம் ஆகியவை காரணமாகப் பல பாதக விளைவுகள் ஏற்பட்டன. உள்நாட்டில் சர்வாதீன சக்திகள் வலுப்பெற்றன. அமெரிக்காவுக்குத் தரவேண்டிய கடன்களை அடைப்பதற்குப் பண்டங்களை அனுப்புவதில் ஐரோப்பிய நாடுகளுக்குப் பல சிரமங்கள் முளைத்தன. இதனால் வெளிநாடுகள் அமெரிக்கச் சுங்கவரிக் கொள்கையை வெறுத்தன. சில நாடுகள் பதிலடி கொடுக்கவும் தயாராயின. உதாரணமாக, ஃபிரான்ஸ், இங்கிலாந்து ஆகிய நாடுகள், அமெரிக்கப் பண்டங்கள் மீதான சுங்க வரிகளை 1927-ல் அதிகப்படுத்தின. இவற்

றைத் தொடர்ந்து வேறு பல நாடுகளும் அமெரிக்கப் பண்டங்களிடமிருந்து கூடுதலான வரிகளை வசூலிக்க வாரம்பித்தன. இதன் விளைவாக அமெரிக்க வர்த்தகம் குன்றியது.

*பரஸ்பர வாணிப ஒப்பந்தங்கள்:*

1932-ல் ஃபிராங்க்ளின் டி. ரூஸ்வெல்ட் (Franklin D. Roosevelt) ஜனாதிபதியாகப் பதவியேற்றதற்குப் பின்னர், சுங்க வரிகளைக் குறைத்து ஏற்றுமதிப் பொருட்களுக்கான அங்காடிகளை விரிவு செய்வதற்கான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. உள்துறைச் செயலாளராக இருந்த கார்டல் ஹல் என்பார் சுங்க வரிகளைக் குறைக்க ஏற்பாடுகளைச் செய்தார். பிற நாடுகளுடன் பரிமாற்ற வாணிப ஒப்பந்தங்களைச் செய்வதில் மிகுந்த அக்கறை காட்டினர். 1934ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட பரஸ்பர வாணிப ஒப்பந்தச் சட்டத்தின் (Reciprocal Trade Agreements Act) படி அமெரிக்க ஜனாதிபதி மூன்றாண்டு காலத்திற்கு காங்கிரஸ் மன்றத்தைக் கலந்து ஆலோசிக்காமலேயே சுங்க வரிகளை 50 சத விகிதம் வரை உயர்த்தவும், தாழ்த்தவும் அதிகாரம் பெற்றார். ஹாலி-ஸ்மூட் சட்டத்திற்கு இது ஒரு திருத்தமாக அமைந்தது. மேலும், நாட்டின் வர்த்தகத்தைப் பெருக்குவதற்காகவும், பொருளாதார மந்த நிலைமையைப் போக்குவதற்காகவும் சட்டத்தைத் தேவையான நேரத்தில் மாற்றிக்கொள்வதற்கான அதிகாரமும் ஜனாதிபதிக்கு வழங்கப்பட்டது. தேவையைப் பொறுத்து வர்த்தக ஒப்பந்தங்கள் அவ்வப்போழ்து புதுப்பிக்கப்பட்டு வந்தன. 1948-ல் ஐந்தாவது முறையாக வர்த்தக ஒப்பந்தம் ஓராண்டுக் காலத்திற்கு நீட்டிக்கப்பட்டது. 1934 முதல் 1948 வரை சுமார் 29 நாடுகளுடன் வர்த்தக ஒப்பந்தங்கள் செய்யப்பட்டன. பரஸ்பர வாணிப ஒப்பந்தங்களின்படி அமெரிக்காவும் மற்ற நாடுகளும் சுங்க வரிகளைக் குறைத்தன. சில பொருட்களைக் குறிப்பிட்ட அளவுகளில் ஏற்றுமதி, இறக்குமதி செய்வதற்குச் சம்மதித்தன. அத்துடன், மேலும் வரிகளை உயர்த்துவதில்லை என்றும், வரி விதிப்பில்லாப் பண்டப் பட்டியலிலிருந்து எதனையும் நீக்குவதில்லை என்றும் ஒப்புக்கொண்டன. இதனால், உலக நாடுகள் மேலும் சுங்க வரிகளை உயர்த்துவது தடை செய்யப்பட்டது. நாடுகளிடையே பரஸ்பர வாணிப உறவுகள் தோன்றின. ஒப்பந்தங்கள் மூலமாக அமெரிக்காவுக்கு நிறைந்த நன்மைகள் கிடைத்தன என்று நம்பப்படுகிறது. உதாரணமாக, 1934-35 முதல் 1938-39 வரையில் ஒப்பந்த நாடுகளுக்கு அமெரிக்கா செய்த ஏற்றுமதி 63 சத விகிதம் அதிகரித்தது; மற்ற நாடுகளுக்குச் செய்த ஏற்றுமதி 32 சத விகிதமே அதிகரித்தது. "வர்த்தக ஒப்பந்தங்களைச் செய்து கொள்ளாமலிருந்தால், நாடு, எந்த நிலையிலிருந்திருக்குமோ, அதைவிடச் சிறந்த நிலையை நாடு எய்துவதற்கு இவ் வொப்பந்தங்கள்

துணை நின்றன'' என்று கிரேஸ் பெக்கட் (Grace Becket) என்பார் கூறியது இங்கே நினைவுகூரத் தக்கது.

பரஸ்பர வாணிப ஒப்பந்தத் திட்டம், தலையிடா வாணிபக் கொள்கையினை ஆதரிக்கவில்லை. வாணிபத்தில் ஏற்படும் பரஸ்பர நலன்களைப் பேணுவதைவிட ஏற்றுமதிகளைப் பெருக்குவதில்தான் அத்திட்டம் ஆர்வம் காட்டியது. உள்நாட்டுப் பண்டங்களோடு போட்டியிடாதிருக்கும் வெளிநாட்டுப் பண்டங்களுக்கே சலுகைகள் காட்டப்பட்டன. எந்தெந்தப் பண்டங்கள் உள்நாட்டுத் தயாரிப்பாளரின் விற்பனைகளைப் பாதிப்பனவாயிருந்தனவோ அவைமீது வரிகள் விதிக்கப்பட்டன. சுருங்கக்கூறின், நாட்டுப் பொருளாதார நிலையைக் கருத்தில்கொண்டு பரஸ்பர வாணிப ஒப்பந்தத் திட்டம் செயற்படுத்தப்பட்டது.

1958-ல் சுங்க வரி விதிப்பில் சில மாறுதல்கள் செய்யப்பட்டன. பின்வரும் ஏதாவது ஒரு முறையில் வரிகள் குறைக்கப்படலாம் என அறிவிக்கப்பட்டது: (1) 1958ஆம் ஆண்டு ஜூலை முதல் தேதி நிலவிய சுங்க வரிகள், நான்காண்டு காலத்திற்கு ஆண்டுதோறும் 5 சத விகிதம் குறைக்கப்படலாம்; (2) பெறுமான விகித வரிகள் 8 சத விகிதத்திலிருந்து 6 சத விகிதத்திற்கு—அதாவது இரண்டு சதவிகிதம் —தாழ்த்தப்படலாம்; (3) சுங்க வரி வீதங்கள் 50 சத விகிதத்திற்கு உயர்வாயிருப்பின் அவற்றை 50% பெறுமான விகித வரிகளாக ஜனதிபதி குறைக்கலாம். ஆனல், இவ்வரிக் குறைப்புக்கள், பிற நாடுகள் வழங்கும் பரஸ்பர வாணிபச் சலுகைகளை அடிப்படையாகக் கொண்டே செய்யப்படவேண்டும். ஆக, ஒப்பந்த நாடுகளிடமிருந்து கிடைத்துவரும் வரிச் சலுகைகளைக் கவனத்திற்கு எடுத்துக்கொண்ட பிறகு தான் அமெரிக்க அரசு அந்தந்த நாடுகளுக்கு வரிச் சலுகைகளை வழங்க முன் வந்தது.

**'அபாய முனை' மற்றும் 'விலகல் வாசக' ஏற்பாடுகள்:**

வரிக் குறைப்புச் செய்வதற்கு ஜனதிபதியிடம் உள்ள அதிகாரம் அண்மைக் காலங்களில் இரு வரையறைகளுக்குட்பட்டது. அவை: (1) 'அபாய முனை' (Peril Point) ஏற்பாடு; (2) 'விலகல் வாசக' (Escape Clause) ஏற்பாடு. இறக்குமதிகளால் உள்நாட்டுத் தொழில்கள் பாதிக்கப்படாமலிருப்பதற்கு இவ்விரு ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

'அபாய முனை' ஏற்பாட்டின்படி, உள்நாட்டு உற்பத்தியாளர்களுக்குத் தீங்கு ஏற்படாத வகையில் ஒரு பண்டத்தின்மீதான சுங்க வரி எந்த அளவுக்குக் குறைக்கப்படமுடியும் என்பதற்கான அறிக்கை

யைச் சுங்க வரிக் குழு (Tariff Commission) ஜனாதிபதிக்குச் சமர்ப்பிக்கவேண்டும். இந்த நடைமுறை 1948-ல் அமலுக்கு வந்து, பிறகு 1949-ல் கைவிடப்பெற்றது. ஆனால் 1951-ல் மீண்டும் அமலுக்கு வந்தது. சுங்க வரிகள் உள்நாட்டுத் தொழில்களுக்கு ஆபத்து விளைவிப்பனவாயிருக்கின்றன என்று 'அபாய முனை' விசாரணை தெரிவித்தால் உடனே 'விலகல் வாசக' நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்று 1958ஆம் ஆண்டுத் திருத்தச் சட்டம் கூறியது.

'விலகல் வாசக' ஏற்பாட்டின்படி, இறக்குமதிகள் காரணமாக ஓர் உள்நாட்டுத் தொழில் ஆபத்துக்குள்ளாகிறது என்று சுங்க வரிக் குழு கருதினால் வரிச் சலுகைகள் நிறுத்தப்படலாம். 'உற்பத்தி, வேலை வாய்ப்பு, விலைகள், கூலிகள், இலாபங்கள், விற்பனைகள் ஆகியவை குறைந்தால் உள்நாட்டுத் தொழிலுக்கு ஆபத்து ஏற்படுகிறது என்பது பொருள். சுங்க வரிக்குழுவின் பரிந்துரைகளை ஜனாதிபதி பொதுவாக ஏற்றுக்கொள்ள வேண்டும். அவ்வாறு அவர் ஏற்றுக்கொள்ள மறுப்பின், காங்கிரஸ் அவரது முடிவை நிராகரித்து விடலாம். இதற்குக் காங்கிரசின் இரு சபைகளில் மூன்றில் இரு பங்குப் பெரும்பான்மை வேண்டும்.

நாட்டுத் தொழில்களைப் பாதுகாக்கும்பொருட்டு இறக்குமதிகளை உரிய அளவுகளில் குறைப்பதற்கான அதிகாரத்தை ஜனாதிபதி 1954-ல் பெற்றார். இவ் வதிகாரத்தைப் பயன்படுத்தி 1958-ல் ஜனாதிபதி ஈயம், துத்தநாகம் ஆகியவற்றின் இறக்குமதிகளில் பங்கு வீத முறைகளை (Quota) நடைமுறைப் படுத்தினார்.

பரஸ்பர வாணிப ஒப்பந்தச் சட்டமே அமெரிக்க நாட்டுச் சுங்க வரிக் கைகோளின் அடிப்படையாக இருக்கிறது என்றாலும், வரிக் குறைப்புக்களுக்கான வாய்ப்புக்கள் எதிர்காலத்தில் மிகவும் குறைவாகவே இருக்கும் என நம்பப்படுகிறது. ஏனென்றால், வரிக் குறைப்பைச் செய்வதற்குப் பல தடைகள் இருந்தன. அமெரிக்காவிடமிருந்து வரிச் சலுகைகள் கிடைக்கும் என்ற நம்பிக்கை உண்மையில் பல நாடுகளுக்குக் கிடையாது. அமெரிக்காவின் தற்போதைய சுங்க வரிகளை மனத்தில்கொண்டு அந்நாட்டிற்குப் பண்டங்களை ஏற்றுமதி செய்வதற்கான திட்டங்களைத் தீட்டும் அயல் நாட்டு உற்பத்தியாளர்களிடம் ஓர் அச்சம் உண்டு. அமெரிக்க நாட்டு அங்காடிகளில் வெற்றிகரமாகப் போட்டியிட்டால், அமெரிக்க அரசு 'விலகல் வாசக' அல்லது 'தேசீயப் பாதுகாபபு' நடவடிக்கைகளில் இறங்கக்கூடும் என்பதே அவ் வச்சம். அமெரிக்கச் சுங்க வரிகள் அதிகமாயிருப்பதைப்பற்றி அவர்கள் கவலைப்படவில்லை. சுங்க வரிச் சட்டங்களில் அடிக்கடி மாறுதல்கள் ஏற்படுவதைப்பற்றியே அவர்கள் கவலை கொள்கின்றனர்.

# 13. வாணிபப் பெருமந்தம்
## (Great Depression)

மந்தம் என்பது வாணிபச் சுழலின் (Trade cycle) ஒரு கட்டம். முதலாளித்துவப் பொருளாதாரங்கள் அவ்வப்போது மந்தத்திற்குட் படுவது இயற்கை. அமெரிக்காவில் பல நேரங்களில் மந்தங்கள் தோன்றி யிருக்கின்றன. 1819, 1837, 1857, 1873, 1884, 1893, 1903, 1907, 1913, 1920, 1929 ஆகிய ஆண்டுகளின்போது அமெரிக்காவில் மந்தங்கள் ஏற்பட்டன. பலவிதக் காரணங்களின் விளைவாக மந்தங் கள் ஏற்பட்டன. 'போக்குவரத்து வசதிகள் அளவுக்குமீறிப் பெருகிய மையாலும், நில விற்பனையில் யூக வாணிபம் தோன்றியமையாலும் அமெரிக்காவில் மந்தங்கள் ஏற்பட்டன' என்கிறார் ஃபால்க்னர். இக் கூற்றில் ஓரளவிற்கு உண்மை உண்டு. உதாரணமாக, தேவைக்கு மிகுதியாகக் கால்வாய் வளர்ச்சி அமைந்ததால் 1837-ல் மந்தம் உண்டாயிற்று. இருப்புப் பாதைகள் அளவுக்கு மீறிப் போடப்பட்ட தால் 1857, 1873, 1893ஆம் ஆண்டுகளில் மந்தம் தோன்றியது. மந்தம் ஏற்படுவதற்கு வேறு பல காரணங்களும் உண்டு என மற்றப் பொருளாதார அறிஞர்கள் கூறுகின்றனர். சிலர் பாங்குச் செலாவணி பெருகுவதால்தான் மந்தம் உண்டாகிறது என்கின்றனர். வேறு சிலர், இலாபமீட்டுவதற்காக முதலாளிகள் செய்யும் முயற்சியாலேயே மந்தம் உருவாகிறது என்கின்றனர். உளச்சார்பான காரணங்களால் மந்தம் விளைகிறது என்று கூறுவோரும் உளர்.

1929-ல் தோன்றிய மந்தம் ஒரு மாபெரும் மந்தமாகும். அமெ ரிக்க நாட்டு வரலாற்றில் இது ஒரு கடுமையான பொருளாதார வீழ்ச்சி. இதனால் அமெரிக்கப் பொருளாதாரம் மிகவும் பாதிக்கப்பட் டது. இப் பெரு மந்தத்திற்குப் பலர் பல காரணங்களைக் காட்டினர். மெய் சேமிப்பு (Real Saving) மிகவும் குறைவாயிருந்த நிலையில் பாங் குக் கடன் செலாவணியளிப்பை நம்பி, முதலீடு எல்லைமீறிப் பெருகி

யமையாலேயே மந்தம் உண்டாயிற்று என்றார் லயனல் ராபின்ஸ். 1920-க்குப் பின்னர் யூக வாணிபம் தீவிரமடைந்து வந்ததைக் கண்ணுற்ற வர்த்தகர்கள் முதல் அங்காடி விரைவில் முறிந்து வாணிபத்தில் நெருக்கடி நிலை தோன்றும் என்றஞ்சி தமது பண்ட இருப்புக்களையும் முதற் செலவீடுகளையும் குறைத்துக்கொண்டமையாலேயே மந்தம் ஏற்பட்டது என்றார் சம்மர் ஸ்லிட்டர் (Summer Slichter). ஆனால், ஷம்பீட்டரோ, 'புத்தாக்கங்கள் காரணமாகத் தோன்றிய போக்குவரத்து, மற்றும் விவசாயப் புரட்சிகளால் நெடு நாட்களுக்கு நிலைத்திருக்க முடியாமல் போனமையால் மந்தம் உருவாகியது' என்றார். பெரு மந்தத்திற்கான உண்மையான காரணங்கள் வருமாறு :

1920-க்குப் பின்னர், அமெரிக்கப் பொருளாதாரத்தில் பல புதிய கண்டு பிடிப்புக்கள் மலர்ந்தன. புதிய தொழில் நுட்ப முறைகள் புழக்கத்திற்கு வந்தன. புதிய இயக்க சக்திகள் நடை முறைக்கு வந்தன. இவற்றால் நாட்டின் உற்பத்தியளவு பெருகிற்று. 1920-29 காலப் பகுதியில் நாட்டின் மொத்த உற்பத்தி சுமார் 46 சத வீதம் அதிகரித்தது. நாட்டு வருமானம் 30 சத வீதம் அதிகரித்தது. எந்திரங்களின் உற்பத்தி நாளுக்குநாள் அதிகரித்து வந்தது. அதோடு, மோட்டார்கார்கள், தொலைபேசிக் கருவிகள், மின்விசைக் கருவிகள் முதலிய உறுதிப் பொருட்கள் பேரளவில் உற்பத்தியாயின. மின்சக்தி உபயோகம் அதிகரித்தது. இதனால் போக்குவரத்துத் துறையிலும், பொறிவழிப் பண்ட உற்பத்தித் தொழிலிலும் (Manufacturing Industries) செலவுகள் குறைந்தன. மக்களின் வாழ்க்கைத் தரங்கள் உயர்ந்தன. நாட்டின் வருமானம் உயர் நிலையிலிருந்தது. ஆக்கத் திறன் அதிகமாயிருந்தது. உற்பத்தி மிகுதியாயிருந்தது. வேலை வாய்ப்புக்கள் பரவாயில்லை. பொருளாதார வளர்ச்சி திருப்திகரமாயிருந்தது. தொழிலமைப்புத் திறன் கூடியிருந்தது. அமெரிக்கப் பொருள்களுக்கான அங்காடிகள் பெருகியவண்ணமிருந்தன. இச் சூழலில் மந்தம் எப்படி நுழைந்தது? 'அமெரிக்கப் பொருளாதாரம் செழித்தோங்கி வளர்ந்தபோதிலும், அதில் சில அடிப்படைக் குறைபாடுகள் இருந்தன' என்றார் ஃபால்க்னர். இவ் வடிப்படைக் குறைபாடுகள் யாவை என்பதை இனி ஆராய்வோம். ஏனென்றால் இக் குறைபாடுகள்தான் மந்தத்திற்குக் காரணங்கள்.

அங்காடிச் சுதந்திரத்திற்குத் தடைகள் ஏற்பட்டு, பொருளாதாரத்தில் குழப்பநிலை உண்டாகியது அமெரிக்கப் பொருளாதாரத்தின் முதற் குறைபாடு ஆகும். 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் பெருங் கம்பெனிகள் தொழிலில் பிரபலமாயின. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் 'ஆலிகாப்பலி' அமெரிக்க விவசாயம்

சுணங்கியது. விவசாயப் பண்ட விலைகள் மிகவும் தாழ்ந்தன. வருவாய் குறைந்தது.

செழிப்புற்றிருந்த சில தொழில்களில்கூட குறைபாடுகள் மலிந்திருந்தன. தொழிற் பெருக்கம் விளைவாக மக்களின் வருமானங்கள் அதிகரித்தமை உண்மையேயென்றாலும், வருமான அதிகரிப்பின் பெரும் பகுதியைத் தொழிலதிபர்களே இலாபமாக அனுபவித்துக்கொண்டனர். நாட்டின் ஆக்கம் அதிகரித்த அளவிற்குத் தொழிலாளர் கூலிகள் அதிகரிக்கவில்லை. இலாபம் உயர்ந்த வீதத்தில் கூலிகள் உயரவில்லை. தாம் பெற்ற இலாபங்களை மேலும் உற்பத்தியைப் பெருக்குவதற்குத்தான் தொழிலதிபர்கள் பயன்படுத்திக்கொண்டார்களே தவிர, கூலிகளை உயர்த்துவதில் ஆர்வம் காட்டவில்லை. தலா வீத உற்பத்தி ஆண்டுதோறும் 2.4 சதவீதம் அதிகரித்தது. ஆனால் சராசரி உண்மைக் கூலிகள் (Real wages) 1.4 சதவீதமே அதிகரித்தது. அலுவலகப் பணியாளரின் சம்பளங்கள் கூடிய அளவுக்குக்கூட தொழிலாளரின் கூலிகள் கூடவில்லை. 1922—29 காலப் பகுதியில் அலுவலகப் பணியாளர் சம்பளங்கள் 42 சதவீதம் அதிகரித்தன; ஆனால் தொழிலாளர் கூலிகள் 33 சதவீதமே அதிகரித்தன. இக் காலப் பகுதியில் இலாபங்கள் 76 சதவீதம் அதிகரித்தன. கூலிகள் உயராது போனமையால் மக்களின் வாங்குந் திறன் உயர முடியாமல் போயிற்று.

அமெரிக்கப் பொருளாதாரத்தில் காணப்பட்ட மற்றொரு குறைபாடு, மக்கள் தொகை அதிகரித்ததற்கேற்றவாறு வேலை வாய்ப்புக்கள் அதிகரிக்காது போனமை. ஏற்கனவே கூறியதைப் போன்று விவசாயம், சுரங்கம், இரயில்வே முதலிய துறைகளில் வேலைவாய்ப்புக்கள் குறைந்தன. உதாரணமாக, 1922—29 காலப் பகுதியில் 5 லட்சம் தொழிலாளர்களுக்கான வேலை வாய்ப்புக்கள் பொறிச்செய் தொழில், சுரங்கத்தொழில், போக்குவரத்துத்துறை ஆகியவற்றில் குறைந்தன. வேளாண்மையில் 25 லட்சம் தொழிலாளருக்கான வேலை வாய்ப்புக்கள் குறைந்தன. அதே நேரத்தில் மக்கள் தொகையும் பெருகி வந்தது. தொழில் நுட்ப முன்னேற்றப் பாதையில் பலவகையான எந்திரங்கள் நடைமுறைக்கு வந்தமையாலும், தொழிற் சீரமைப்பு பரவலாக அமல் செய்யப்பட்டமையாலும் வேலை வாய்ப்புக்கள் குறைந்தன.

பொருளாதாரத்தின் மற்றொரு குறைபாடு கடன்பாடு பெருகியமை. 1920-க்குப் பின்னர் தனியார் மற்றும் அரசுக் கடன்கள் மிகுதியாயின. குறுங்காலக் கடன்கள், நெடுங்காலக் கடன்கள், கிராமியக் கடன்கள், நகர்ப்புறக் கடன்கள் ஆகிய எல்லாமே அதி

கரித்தன. 1930-ல் பண்ணை அடைமானக் கடன்கள் (Farm mortgage debts) 9200 மில்லியன் டாலர்களுக்கும், நகர்ப்புற அடைமானக் கடன்கள் 26,000 மில்லியன் டாலர்களுக்கும் உயர்ந்திருந்தன. தனியார் கடன்கள் 200,000 மில்லியன் டாலர்களாயிருந்தன. மக்களில் பெரும்பாலோர் கடன்பட்டிருந்தனர். அரசின் கடன்களும் அதிகரித்திருந்தன. சாலைகள், பாலங்கள், அலுவலகங்கள், மருத்துவமனைகள் முதலியவற்றைக் கட்டுவதற்குத் தேவையான நிதிகளைத் திரட்ட அரசு கடன்களைப் பெற்றது. நாட்டின் கடன்பாட்டுப் பெருக்கத்தால் பொருளாதாரம் பலவீனமுற்றது; எந்த நேரத்திலும் நொறுங்கிப் போகும் நிலையில் அது இருந்தது.

1920ஆம் ஆண்டிற்குப் பின்னர் யூக வாணிபம் மிகுதியடைந்தது. தொழில் முன்னேற்றத்தைத் தொடர்ந்து நாட்டின் செல்வமும் மக்களின் மெய் வருமானமும் பெருகின. ஆலிகாப்பலி (Oligopoly) யின் ஆட்சி அதிகரித்தது. சில நிறுவனங்கள் அங்காடியினைத் தம் பிடிக்குள் வைத்துக்கொண்டு கட்டுப்பாடு செய்துவரும் நிலை உருவாகியது. தமக்குள் கலந்துபேசி உடன்படிக்கை ஏற்படுத்திக்கொண்டு விலைகளை நிர்ணயித்துக்கொண்டனர். இதனால் விலைகள் மாறாமலிருந்தன. அதாவது விலைகள் நெகிழ்ச்சியற்றிருந்தன. போட்டி நிலவும்போது மக்களின் வாங்குந் திறன் குறைந்தால் விலைகள் குறையும். ஆனால், ஆலிகாப்பலி நிலவும்போது விலைகள் அவ்வாறு குறையாமல் மாறாமலிருக்கும். 20ஆம் நூற்றாண்டின் முதற் கால் பகுதிக்குப் பின்னர் அமெரிக்கத் தொழிலின் சில பிரிவுகளில்—துறைகளில்—சுணக்கம் தலைகாட்டிய போது ஆலிகாப்பலி நிலவரம் காரணமாகப் பண்டங்களின் விலைகள் மாறாமலிருந்தன. பெருங் கம்பெனிகள் தமது பண்டங்களின் விலைகளைக் குறைப்பதற்கு உடன்படவில்லை. எனவே, பொருளாதாரத்தில் குழப்பம் மிகுந்து, வேலை வாய்ப்பின்மை பெருகி, நெருக்கடி தீவிரமடைந்தது.

அடுத்து, இரயில்வேத் தளவாடத் தயாரிப்புத் தொழில், பருத்தி ஆலைத் தொழில், நிலக்கரிச் சுரங்கத் தொழில் முதலியன சரியாக வளர்ச்சியுறவில்லை. மேலும் விவசாயத் தொழில் முதல் உலகப் போருக்குப் பின்னர் செழிப்புறவில்லை. வெளிநாட்டினர் அமெரிக்க விவசாயப் பொருள் உற்பத்தியாளருடன் போட்டியிட ஆரம்பித்தனர். பல ஐரோப்பிய நாடுகள் தன்னிறைவுக் கொள்கையைப் பின்பற்றின. இதனால் அமெரிக்க விவசாயப் பொருள் ஏற்றுமதி குறைந்தது. தவிரவும் 1922, 1930ஆம் ஆண்டுகளில் அரசு விதித்த சுங்க வரிகள் அமெரிக்க விவசாயப் பொருட்களின் ஏற்றுமதியை மிகவும் பாதித்தன. ஆகையால் தொழில் நிறுவனங்கள் கூடுதலான இலாபத்தைப் பெற்று வருவதைக் கண்ணுற்ற மக்கள் அந்த

இலாபத்தைப் பகிர்ந்துகொள்ளும் வேட்கையில் பங்குகளை மிகுதியாக வாங்கத் தலைப்பட்டனர். ஏற்கனவே யூக வாணிபர்களும், முதலீடு செய்வோரும் பங்குகளை வாங்கி வந்தனர். தற்போது பொது மக்களும் பங்கு வாங்கற்பாட்டில் ஆர்வம் கொண்டனர். இப்படிப் புதிதாக பங்குகளை வாங்க ஆரம்பித்தோர் எண்ணிக்கை 1 மில்லியனுக்கும் கூடுதலாயிருந்தது. இவர்களில் பெரும்பாலோர் முதலீடு செய்வதற்காகவே பங்குகளை வாங்கினார்களே தவிர, யூக வாணிபத்திற்காக அன்று. ஆனால், இலட்சக்கணக்கானோர் இவ்வாறு பங்குகளை வாங்கத் துடித்தமையால் பங்குகள் மற்றும் பத்திரங்களின் விலைகள் மிகுதியாயின. பங்குகள் மற்றும் பத்திரங்களுக்கான தேவை அடுத்தடுத்து உயர்ந்து வருவதைக்கண்ட தொழிலதிபர்கள் பத்திரங்களை நிறைய வெளியிட்டனர். 'அதிகப்படியான முதல் தேவைப்படும் போது, பொதுவாக வர்த்தகக் கம்பெனிகள் பங்குகளையும் பத்திரங்களையும் வெளியிடும். ஆனால், சோப்புக் கட்டிகளைத் தயாரித்து வெளியிடுவதைப் போன்று அப்போது புதிய பத்திரங்களை வெளியிட்டனர். இலாபம் பெறவேண்டும் என்பதே முக்கிய நோக்கம்.' (ஜார்ஜ் சோல்).

யூக வாணிபத்தில் இலாபங்களை எளிதாகப் பெற முடிந்ததால் பலர் இதில் அதிகமான ஊக்கம் காட்டினர். சிலர் தம் தொழிலைப் புறக்கணித்துவிட்டு யூக வாணிபத்தில் ஈடுபட்டனர். நாடெங்கும் எல்லோரும் பங்குகளைப்பற்றிப் பேச வாரம்பித்தனர். பங்குகளின் விலைகள் புத்தகத்தில் பதிவுசெய்யப்பட்டதைப்போல் மூன்றிலிருந்து 20 மடங்கு வரை உயர்ந்தன. உற்பத்திப் பெருக்கம் குறைந்துவிட்ட பிறகுகூடப் பங்கு மாற்று நிலையங்கள் பங்குகளைக் கூடுதலாக விற்றுக் கொண்டேயிருந்தன. 1929ஆம் ஆண்டின்போது ஒருசமயம் 37 நாட்களுக்குள் 5,000,000 பங்குகளுக்குமேல் விற்பனை செய்தன. யூக வாணிபம் எல்லைமீறிப் போனால்—பங்கு விற்பனை அளவுக்குமீறிச் சென்றால்—தீமை விளையும் என்பதைப்பற்றி யாரும் கவலைப்படவில்லை. காரணம், செழிப்புக் காலம் வரம்பின்றி நீடிக்கும் என்ற நன்னம்பிக்கையை (Optimism) பெரும்பாலானோர் வளர்த்துக் கொண்டிருந்தனர். அரசு, இது தொடர்பாக நடவடிக்கை எடுக்கு முன்னர் நிலைமை கட்டுமீறிப் போய்விட்டிருந்தது. 1929-ல் ஃபெடரல் ரிசர்வ் சபை பாங்குகளுக்கு யூக வாணிபத்திற்குக் கடன் கொடுக்கக் கூடாது என எச்சரிக்கை விடுத்தது. அதோடு கழிவு வீதத்தையும் உயர்த்தியது. ஆனால், இது நிலைமையைக் கட்டுப்படுத்தவில்லை. ஏனென்றால், வாணிப பாங்குகள் வர்த்தகக் கம்பெனிகளிடமிருந்து ஏராளமான அளவில் நிதிகளை வாங்க முடிந்தமையால், வழக்கம் போல் அவை யூக வாணிபத்திற்குக் கடன் வசதிகளையளித்துவந்தன. வட்டி வீதங்கள் 20 சத வீதத்திற்கு உயர்ந்தன. தீவிரமான நெருக்

கடி தோன்றும்வரை யூக வாணிபத்திற்கு நிதிப் பற்றுக்குறை சிரமமே ஏற்படவில்லை. 1929ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 29 ஆம் நாள் நெருக்கடி உச்ச கட்டத்தை அடைந்தது. பங்குகளின் விலைகள் திடீரென்று சரிந்தன. இலட்சக்கணக்கானோர் பேரதிர்ச்சிக்குள்ளாயினர். இழப்புக்களால் நிலைதடுமாறிப் போயினர். இப்படிப்பட்ட பேரடியினை அவர்கள் எதிர்பார்க்கவே இல்லை. எளிய வழியில் பணத்தைச் சம்பாதிக்க நினைத்தோர் இன்னலுக்கிரையாயினர். பெருமந்தம் பொருளாதாரத்தைச் சூழ்ந்தது.

1929-ல் தொடங்கிய இப் பெருமந்தம் 1933ஆம் ஆண்டு வரை நீடித்தது. உச்சத்தில் இருந்துவந்த பங்கு விலைகள் அடிமட்டத்திற்கு வீழ்ந்தன. "டோவ்—ஜோன்ஸ் (Dow-Jones) குறியீட்டெண்படி, 1929ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்திலிருந்து 1933ஆம் ஆண்டு ஜனவரி மாதத்திற்குள், 30 கம்பெனிகளின் பங்குகளின் சராசரி மதிப்பு 364·9 டாலர்களிலிருந்து 28·0 டாலர்களுக்குக் குறைந்தது. 20 பொது வசதிக் கம்பெனிகளின் (Public Utility Companies) பங்குகள் ஒவ்வொன்றின் மதிப்பும் 141·9 டாலர்களிலிருந்து 28·0 டாலர்களுக்குக் குறைந்தது. 20 இரயில்வே நிறுவனங்களின் பங்குகள் ஒவ்வொன்றின் மதிப்பும் 180·1 டாலர்களிலிருந்து 28·1 டாலர்களுக்குக் குறைந்தது.' (ஃபால்க்னர்). பாங்குகளின் பங்குகளுக்கும் இதே கதிதான் நேர்ந்தது. 1929-ல் பெற்றிருந்த மதிப்பில் 5/6 பாகத்தை அவை இழந்தன. மந்தத்தின் போக்கில் மற்ற பண்டங்களின் விலைகளும் தாழ்ந்தன. வேலை வாய்ப்பின்மை பெருகியது. வருமானங்கள் குறைந்தன. 1926-ஐ அடிப்படை ஆண்டாகக் (Base Year) கொண்டு பார்க்கின்றபோது 1929-ல் 95·3 ஆக இருந்த மொத்த விலைக் குறியீட்டெண். 1933-ல் 65·9-க்குச் சரிந்தது. அமெரிக்காவில் 1930-ல் வேலையில்லாமல் அவதியுற்றோரின் எண்ணிக்கை 4·6 மில்லியன் ஆகும். இது 1933-ல் 13 மில்லியனுக்குத் தாவியது. வேலை வாய்ப்பின்மை அதிகரித்து வந்ததோடல்லாமல் தொழிலாளரின் சம்பளங்களும் குறைந்தன. 1929-ல் 100·5 ஆக இருந்த சம்பளப் பட்டியல் குறியீட்டெண் 1933-ல் 44-க்குக் குறைந்தது.

மக்களின் வருமானங்கள் குறைந்ததன் விளைவாக அவர் தம் வாங்குந் திறனும் குறைந்தது. விற்பனைகள் தடைப்பட்டன. உற்பத்தி குறைந்தது; வாணிபம் சுருங்கியது. 1932-ல் தொழில் உற்பத்தி வழக்கமான அளவுக்கு 47 சதவீதம் குறைவாயிருந்தது. விவசாயப் பண்ட உற்பத்தி அவ்வளவாகப் பாதிக்கப்படவில்லையென்றாலும் விவசாயிகளின் வருமானம் குறையவே செய்தது. 1929-லிருந்து 1932-க்குள் விவசாயப் பொருள்களின் விலைகள் 33 சதவீதம் குறைந்தன. இதனால் விவசாயிகளின் மொத்த வருமானம் 57 சதவீதம்

குறைந்தது. இது தொழில் உற்பத்தியை மேலும் குறைத்தது. இந்தப் பெரு மந்தத்தால் அயல் நாட்டு வாணிபம் பெரிதும் பாதிக்கப்பட்டது எனலாம். இறக்குமதிகள், ஏற்றுமதிகள் ஆகிய இரண்டுமே குறைந்தன. 1929-ல் ஏற்றுமதிகள், இறக்குமதிகள் ஆகியவற்றின் மதிப்பு முறையே 5241 மில்லியன் டாலர்கள், 4399 மில்லியன் டாலர்கள் ஆகும். ஆனால் 1933-ல் இவற்றின் மதிப்பு முறையே 1611 மில்லியன் டாலர்கள், 1323 மில்லியன் டாலர்கள் ஆகக் குறைந்தன. அமெரிக்க நாட்டுப் பாங்குத் திட்டத்தை மந்தம் அடியோடு அசைத்தது. 1931-ல், 2294 பாங்குகளும், 1932-ல் 1456 பாங்குகளும் திவாலாயின. இப்படி நாட்டுப் பொருளாதாரத்தின் எல்லாக் கூறுகளையும் இந்த மந்தம் பேரளவில் பாதித்ததால் '1790-க்குப் பின்னர் உண்டாகிய 20 மந்தங்களுக்குள் இந்த மந்தமே கடுமையானது' என்றார் அயர்ஸ் (Ayers). இம்மந்தம் இவ்வாறு கடுமையாயிருந்ததற்குப் பலர் பலவிதக் காரணங்களைக் கூறினர். விலைகள் பொருத்தமற்ற அளவுகளில் இறங்கியமையும், பாங்குச் செலாவணித் திட்டத்தில் அடுத்தடுத்து நெருக்கடிகள் தோன்றியமையும் காரணமாகவே மந்தம் கடுமையாயிருந்தது என்றார் அயர்ஸ். நாட்டு வருமானத்திற்குப் பொருத்தமற்ற அளவில் தனியார் மற்றும் அரசுக் கடன்பாடு அதிகரித்தமையைக் காரணமாகக் காட்டினர் சி. ஏ. பியர்டு, ஜி. எச். ஈ. ஸ்மித் ஆகியோர். மந்தத்திற்கு முந்திய காலப் பகுதியில் உறுதிப் பொருள் உற்பத்திக்காக நிறைய நிதிகளை முதலீடு செய்தமையே மந்தம் தீவிரமாயிருந்ததற்குக் காரணம் என்றார் ஜே. பி. க்ளார்க் (J. B. Clark).

மந்தம் தீவிரமாயிருந்தமைக்கு இவையேயல்லாமல் வேறு பல காரணங்களும் இருந்தன. அவை வருமாறு: உலகப் பொருளாதார நிலவரங்கள் மந்தமாயிருந்தமை; அமெரிக்க விவசாயிக்கு உலகத்தின் மற்ற பாகங்களிலிருந்து போட்டி எழுந்தமை; விலைகள் நெகிழ்ச்சியற்றுப் போனமை; அமெரிக்கப் பண்டங்களுக்கு வெளி நாடுகளில் அங்காடிகள் குறைந்ததினால் முதலீட்டு வாய்ப்புக்கள் மறைந்தமை ஆகியவை.

பங்குமாற்று நிலையத்தில் உண்டான நெருக்கடிக்குப் பின்னர் குடியரசுத் தலைவர் ஹூவர் தனது வெள்ளை மாளிகையில் பல மாநாடுகளைக் கூட்டி தொழிலதிபர்கள், இரயில்வே கம்பெனித் தலைவர்கள், தொழிலாளர் தலைவர்கள், கட்டுமானம் மற்றும் பொதுவசதித் துறை முக்கியஸ்தர்கள், நிலக்கிழார்கள் ஆகியோருடன் பேச்சுவார்த்தை நடத்தினார். தொழிலை நிலைப்படுத்தவேண்டும் என்பது அவர் விருப்பம். தொழில் நடவடிக்கையையும் கூலிகளையும் இயல்பான அளவில் இருந்து வருவதற்கு ஆவன செய்யுமாறு அவர்களைக்

கேட்டுக்கொண்டார். உற்பத்தியைப் பெருக்கி நிலைமையைச் சீர்ப் படுத்த முன் வரவேண்டும் என்று அவர்களையும் காங்கிரஸ் மன்றத் தையும் வற்புறுத்தினார். குடியரசுத் தலைவரின் கோரிக்கைக்கிணங்கி காங்கிரஸ் மன்றமும் உடனே பொதுப்பணித் திட்டங்களுக்குக் கூடுத லான நிதிகளை ஒதுக்கிற்று. வரிக் குறைப்பு, மந்தத்தைக் கட்டுப் படுத்தும் என்ற கருத்தில் வருமான வரி வீதங்களைக் குறைக்குமாறு குடியரசுத் தலைவர் காங்கிரஸ் மன்றத்தைக் கேட்டுக்கொண்டார். அதற்கும் அம்மன்றம் இசைந்தது. மந்தத்தைப் போக்குவதில் அது பேரார்வம் காட்டியது.

மந்தம் தோன்றுவதற்குச் சில மாதங்களுக்கு முன்பேயே விவ சாய விற்பனைச் சட்டம் (Agricultural Marketing Act) இயற்றப் பட்டு, அச்சட்டப்படி ஃபெடரல் பண்ணைச் சபைக் கூட்டுறவுக் கழகங் களுக்கு 500 மில்லியன் டாலர்களைக் கடனுகைக் கொடுத்து, விவசாயப் பண்டங்களைச் சிறந்த முறையில் விற்பனை செய்வதற்கு ஏற்பாடு செய்தது. கோதுமை விலையையும் பருத்தி விலையையும் நிலைப்படுத்துவ தற்குரிய தானியக் கார்ப்பரேஷன்களையும் இச்சபை ஏற்படுத்தியது. இவற்றின் விலைகளைத் தாழ்வடையாமலிருக்கச் செய்ய இக் கார்ப்ப ரேஷன்கள் பாடுபட்டன. அரசும் இதற்கென பல லட்சம் டாலர்களைச் செலவிட்டது. இக்கார்ப்பரேஷன்கள் அங்காடியில் கோதுமையை யும் பருத்தியையும் உயர் விலைகளில் வாங்கி, அவற்றின் விலைகளை இறங்காமலிருக்கச் செய்ய முயன்றன. ஆனால் இது நெடு நாட் களுக்கு நீடிக்கவில்லை. நிலைமையும் உடனே சீர்ப்படவில்லை. 1933-ல் ரூஸ்வெல்ட் ஒரு சட்டமியற்றி ஃபெடரல் பண்ணைச் சபையைக் கலைத்துவிட்டார்.

மந்தத்தைக் கட்டுப்படுத்துவதற்கு அரசு மேற்கொண்ட நடவடிக் கைகளில், புனரமைப்பு நிதிக்கார்ப்பரேஷனை (Reconstruction Finance Corporation) ஏற்படுத்தியது முக்கியமாகும். 1932-ல் சுமார் 500 மில்லி யன் டாலர் மூலதனத்துடன் இக்கார்ப்பரேஷன் ஆரம்பிக்கப்பட்டது. தனது மூலதனத்தைப்போல் மூன்று மடங்குத் தொகையை இக் கார்ப்பரேஷன் கடனுகப் பெற்றுக்கொள்ளலாம். உரிய அடைமானப் பத்திரங்களைப் பெற்றுக்கொண்டு பாங்குகள், டிரஸ்டுகள், கட்டு மானத் தொழில்கள், இன்சூரன்ஸ் கம்பெனிகள், விவசாயப் பண்ணை கள் இரயில்வே கம்பெனிகள் ஆகியவற்றிற்கு இது கடன் வழங்க லாம். முதல் ஆண்டில் இக்கார்ப்பரேஷன் 3000 மில்லியன் டாலர் களைக் கடனுகை வழங்கிற்று. நெருக்கடியைச் சமாளிக்க முடியாம லிருந்த பல பாங்குகளும், தொழில் நிறுவனங்களும், இன்சூரன்ஸ் கம்பெனிகளும் கார்ப்பரேஷன் நீட்டிய உதவிக்கரத்தைத் துணையா கக்கொண்டு அழிவினின்று தம்மைக் காப்பாற்றிக்கொண்டன. இக்

கார்ப்பரேஷன் ஏற்பட்டிருக்கவில்லையென்றால் பல வர்த்தகக் கம்பெனிகள், பல தொழில் நிறுவனங்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்துபோயிருக்கும். மந்த காலத்தில் தொழில்களுக்குப் புத்துயிர் வழங்கும் நோக்கத்தில் அரசு மேலும் இரு சட்டங்களை இயற்றியது. முதலாவது சட்டப்படி ஃபெடரல் நிலப் பாங்குகளின் மூலதனம் அதிகப்படுத்தப்பட்டது. இரண்டாவது சட்டப்படி எட்டுக்குக் குறையாமல் பன்னிரண்டுக்கு மிகாமல் வீட்டுக் கடன் பாங்குகளை ஏற்படுத்துவதற்கு வழிசெய்யப்பட்டது. புனரமைப்பு நிதிக் கார்ப்பரேஷனும், வீட்டுக் கடன் பாங்குகளும் அவசரக் கடன் உதவியளிப்பதற்காக ஏற்படுத்தப் பெற்றவையாகும். இவற்றின் பணிகளால் பண்டங்களின் விலைகள் சற்று உயரும் என எதிர்பார்க்கப்பட்டது. அந்த எதிர்பார்ப்பு ஓரளவிற்கு வீணாகவில்லை. ஆனால், இவற்றின் பணிகளால் மட்டும் மந்தத்தைக் கட்டுப்படுத்திவிட முடியாது என்பதைப் பலர் சிலநாள் கழித்துணர்ந்தனர். இதன் விளைவே 'புதுக் கொள்கை' (New Deal) யின் வருகை.

# 14. புதுக் கொள்கை
## (The New Deal)

**புதுக் கொள்கையின் துவக்கம் :**

1933ஆம் ஆண்டு மார்ச் மாதம் 4ஆம் நாள் அமெரிக்க நாட்டுக் குடியரசுத் தலைவராக ரூஸ்வெல்ட் பதவியேற்றபோது அமெரிக்கப் பொருளாதாரம் நலிவுற்றுக் கிடந்தது. ஏமாற்றமும் இன்னலும் மக்களைச் சூழ்ந்து நின்றன. பண்டங்களும் முதற் பொருள்களும் அளவுக்கு மீறி, தயாரிக்கப்பட்டுக் கிடந்தன. சுழல் வகை, மற்றும் தொழில் நுட்ப வகை வேலையின்மைப் பிரச்சினை, தொழிலாளர்களை அலைக்கழித்துக் கொண்டிருந்தது; நாட்டு வருமானத்தில் அவர்களுக்குக் கிடைக்கவேண்டிய பங்கு கிடைத்திடவில்லை. சர்வாதீன நடவடிக்கைகள் தொழிலை ஆக்ரமித்துக்கொண்டிருந்தன. விவசாயம், வீட்டு வசதி முதலியவை கேடுற்று, பொருளாதாரத்தின் கரும் புள்ளிகளாகக் காட்சியளித்து வந்தன. சுங்கச் சுவர்கள் மற்றும் அயல் நாட்டுச் செலாவணிச் சிக்கல்கள் காரணமாகப் பன்னாட்டு அங்காடிகளில் பண்டங்களை விற்பதில் சிரமங்கள் தலையெடுத்தன. இறுதியாக, செலாவணி மற்றும் பாங்கு கட்டமைப்பு சீர்குலைந்து கிடந்தது 1932-ல் சுமார் 1400 பாங்குகள் திவாலாகியிருந்தன; 1933-ல் 4004 பாங்குகள் கவிழ்ந்தன. இதனால் அமெரிக்க ஐக்கிய நாட்டுப் பாங்கு அமைப்பு தடம் புரண்டது. நாட்டின் மொத்த ஆக்கம் (Gross National Product) குறையத் துவங்கிற்று. 1929-ல் 103800 மில்லியன் டாலராகவிருந்த நாட்டின் மொத்த ஆக்கம், 1933-ல் 55800 மில்லியன் டாலராகக் குறைந்தது. ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் 31 சதவிகிதம் குறைந்துபோயின. 1929-ல் இவற்றின் மொத்த மதிப்பு முறையே 5241 மில்லியன் டாலர், 4399 மில்லியன் டாலர் ஆகும்; ஆனால் 1933ஆம் ஆண்டு இவை முறையே 1611 மில்லியன் டாலர், 1323 மில்லியன் டாலர் எனக் குறைந்தன. விவசாயப்

பண்டங்களின் மொத்த விலைக் குறியீட்டெண் 104·9 லிருந்து 48·2க்குச் சரிந்து கிடந்தது.

நாட்டு நிலைமையை நன்குணர்ந்த ரூஸ்வெல்ட் தீவிரமாகச் செயல்பட ஆரம்பித்தார். காங்கிரஸ் மன்றத்தை உடனே கூட்டினர். கடன் வசூல்செய்வது நாடெங்கணும் நிறுத்தி வைக்கப்படுகிறது என்றும், செலாவணிக்குப் பதிலாகத் தங்கம் முன்புபோல் தரப்படுவதற்கில்லை என்றும், தங்கத்தை வெளிநாடுகளுக்கு ஏற்றுமதி செய்வது தடை செய்யப்படுகிறது என்றும் 1933ஆம் ஆண்டு மார்ச் மாதம் 6ஆம் நாள் ரூஸ்வெல்ட் ஆணையிட்டார். பிறகு மார்ச் மாதம் 9ஆம் நாள் கூடிய காங்கிரஸ் மன்றம் ஓர் அவசர பாங்குச் சட்டத்தை (Emergency Banking Act) இயற்றி குடியரசுத் தலைவரின் ஆணையை அங்கீகரித்தது. மேலும், கடன் திட்டம், செலாவணி முறை, தங்கம், வெள்ளி, அயல்நாட்டுச் செலாவணி முதலியவற்றைக் குடியரசுத் தலைவர் கட்டுப்பாடு செய்யலாம் என்றும் கூறிற்று. இச்சட்டத்தின்படி கருவூலச் செயலாளர் (Secretary of the Treasury) நாட்டில் உள்ள தங்கத்தையும், தங்கப் பத்திரங்களையும் கைப்பற்றலாம். நெருக்கடியைச் சந்திக்க முடியாத பாங்குகளைக் காப்பாற்றவும், அவற்றைத் திருத்தியமைக்கவும் பாதுகாப்பாளர்களை நியமிக்கும் அதிகாரம் கம்ப்ட்ரோலருக்கு (Comptroller) வழங்கப்பட்டது. ஃபெடரல் ரிசர்வ் திட்டத்தின் (Federal Reserve System) உறுப்பினர்களான தேசிய மற்றும் மாநில பாங்குகள் ஃபெடரல் ரிசர்வ் திட்டத்தின் அனுமதியுடன்தான் மீண்டும் செயல்பட முடியும். கடன் வழங்குவதை ஊக்குவிக்கும் வகையில், ஃபெடரல் ரிசர்வ் பாங்குகளுக்கு மிகுதியான அளவில் தாள் நாணயத்தை வெளியிடும் அதிகாரம் அளிக்கப்பட்டது. நாட்டுப் பொருளாதாரத்தைச் சீர்ப்படுத்திடும் நோக்கத்தில் 73வது காங்கிரஸ் மன்றச் சிறப்புக் கூட்டத்தில் மேலும் பல முக்கிய சட்டங்கள் இயற்றப்பட்டன. இச்சட்டங்களில் இடம் பெற்றிருந்த கொள்கைகளைத்தான் நாம் புதுக் கொள்கை என வழங்குகிறோம்.

## புதுக் கொள்கையின் நோக்கங்கள்

புதுக் கொள்கையின் முதல் நோக்கம் கொடிய மந்தத்திலிருந்து (Depression) நாட்டை விடுவித்தல். இரண்டாவது நோக்கம் நாட்டுப் பொருளாதார வீழ்ச்சிக்குக் காரணமாயிருந்த பொருளாதாரக் குறைபாடுகளை அறவே நீக்குதல். மூன்றாவது நோக்கம் பல வீனமாயுள்ள தொழிலாளர் துறை, வேளாண்மைத் துறை முதலியவற்றை வலுப்படுத்துதல். அதோடு நிதித் துறையையும், தொழில் துறையையும் ஃபெடரல் அரசின் கட்டுப்பாட்டுக்கு உட்

படுத்துதல். ரூஸ்வெல்ட் கூறினார்: 'நமது பொருளாதார அமைப்பில் சமநிலை ஏற்படுத்த முயலுகிறோம். வேளாண்மைக்கும் தொழிலுக்குமிடையே சமநிலை-கூலி சம்பாத்தியக்காரர், வேலையளிப்போர், நுகர்வோர் ஆகியோருக்குமிடையே சமநிலை உருவாகுதல் வேண்டும். நமது உள்நாட்டு அங்காடிகள் செல்வம் கொழிப்பனவாய், விசாலமானவையாய் அமைதல் வேண்டும். நமது ஏற்றுமதிகளும் இறக்குமதிகளும் பெருகிட வேண்டும்.'

இந் நோக்கங்களை அடைவதற்கு விரிவான அளவில் திட்டமிடுவது அவசியமாயிற்று. இதனால் அரசின் கண்காணிப்பு, கட்டுப்பாடு' நடவடிக்கை முதலியவை அதிகரித்தன. இவ்வாறு அரசின் அதிகாரங்கள் அதிகரித்தன என்றாலும், முதலாளித்துவ அமைப்பின் அடிப்படை அம்சங்கள் இதனால் பாதிக்கப்படவில்லை. உற்பத்தி சாதனங்கள் தனியார் இடமே இருந்துவந்தன. இலாப நோக்குடன் உற்பத்தி செய்வது தொடர்ந்து நடை முறையில் இருந்து வந்தது. உண்மையில் முதலாளித்துவத்தைக் காப்பாற்றவே புதுக் கொள்கை முயன்றது எனலாம். துவக்கக் கட்டத்தில் தனிப்பட்ட உற்பத்தியாளருடைய ஒத்துழைப்பைக்கொண்டே பொருளாதார மீட்சியைத் துவக்க அரசு முயன்றது. இக்கட்டத்தில், 'விலைகளை உயர்த்துவதற்கு அரசினர் ஏற்பாடுகளைச் செய்தனர். விலைகள் உயர்ந்தால் இலாபங்களும், கூலிகளும் உயரும். வருமானம் மிகுதியடைவதால் மக்கள் கூடுதலாகப் பொருள்களை வாங்குவர். பொருளாதார மீட்சிக்கான ஒரு தூண்டுதலை இது வழங்கும்.' பாசில் ராஷ் (Basil Rauch). பிந்திய கட்டத்தில் நிலையான சீர்திருத்தங்களைச் செய்திட அரசு முயன்றது. சமுதாயத்தில் பின்தங்கிய நிலையில் உள்ளோரின் நலனை மேம்படுத்தவும், அவர்களுக்குப் பொருளாதாரப் பாதுகாப்பினை வழங்கிடவும் அரசு முயன்றது. அரசின் இத்தகைய நடவடிக்கைகளால் பொருளாதார அமைப்பில் நாட்டு மக்களது நம்பிக்கை மீண்டும் வளர்ச்சியுற்றுப் பொருளாதார மீட்சி மலர்ந்தது.

*செலாவணி மற்றும் கடன் முறையில் சீர்திருத்தங்கள்:*

புதுக் கொள்கையின் ஒரு முக்கிய அம்சம் செலாவணியையும் கடன் முறையையும் சீர்ப்படுத்தும் திட்டமாகும். இத்திட்டம் மூன்று குறிக்கோள்களைக் கொண்டிருந்தது. (1) நாட்டில் பணவீக்கத்தைத் தோற்றுவித்தல்; (2) பாங்கு முறையைச் சீர்ப்படுத்துதல்; (3) பண்டங்களை விற்பனை செய்துவரும் நிறுவனங்களை மாற்றியமைத்தல்.

பணவீக்கம் நாட்டில் ஏற்பட வேண்டுமென நாட்டு மக்கள் விரும்பினர். மக்கள் தொகையின் பெரும் பகுதியினர் கடன்பட்

-டிருந்தனர். இவர்கள் கடன் வாங்கியபொழுது டாலரின் மதிப்பு குறைந்திருந்தது. ஆனால் மந்த காலத்தில் டாலரின் மதிப்பு உயர்ந்து விட்டது. ஆகையால் இவரது கடன் சுமை மிகுதியடைந்து பல தொல்லைகளுக்குள்ளாயினர். டாலருடைய மதிப்பைக் குறைக்கா விடில் சமுதாயத்தின் பலதரப்பட்ட வகுப்பினரிடையே சம நிலையினை நிலவச் செய்தல் இயலாது. எனவே பணவீக்கம் ஏற்படுத்தப் பெற வேண்டும் என்ற விருப்பம் மக்களிடையே பரவலாகக் காணப் பட்டது. மேலும் பொருளாதார வீழ்ச்சியைத் தடுத்து நிறுத்துவதற் கும் பணவீக்கம் ஓரளவுக்கு உதவிசெய்ய முடியும் என்றும் நம்பப் பட்டது. இக் கருத்துக்களை அரசு ஏற்று 1933ஆம் ஆண்டு, மார்ச் மாதம் 9ஆம் நாள் ஓர் அவசர பாங்குச்சட்டத்தை இயற்றி, இன்னும் சற்றுக் கூடுதலான கடன் வசதிகளை மக்களுக்கு வழங்கிட ஏற்பாடு செய்தது. பொன்னையும் பொன் பத்திரங்களையும் பதுக்குவது, பொன்னை வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்வது முதலியவை இச் சட்டத்தின்கீழ் தடை செய்யப்பட்டன. மே மாதம் இயற்றப்பட்ட பண்ணை நிவாரணம் மற்றும் பணவீக்கச் சட்டம் (Farm Relief and Inflation Act) விவசாயிகளுக்கு உதவி வழங்குவதற்காகவும், பண வீக்கத்தைத் தோற்றுவிப்பதற்காகவும் கொண்டு வரப்பட்ட ஒரு முக்கிய சட்டமாகும். இதனை முதல் வேளாண்மை ஒழுங்குபடுத்துச் சட்டம் (First Agricultural Adjustment Act) எனவும் அழைப்பர்.

இச் சட்டத்தின்படி (1) அமெரிக்கக் குடியரசுத் தலைவர் ஃபெட ரல் ரிசர்வ் பாங்குகளை 3,000,000,000 டாலர்கள் வரை மக்களுக்குக் கடன் வசதி வழங்கும்படி உத்தரவிடலாம்; (2) 3,000,000,000 டாலர் களுக்குச் சமமான செலாவணித் தாள்களை அரசு வெளியிடலாம்; பொதுக் கடன் மற்றும் தனிப்பட்டோர் கடன்களைத் திருப்பிக் கொடுப்பதற்கு இவை ஆளப்படலாம்; (3) பொன் டாலரைக் குடியர சுத் தலைவர் 50 சதவிகிதம் வரை மதிப்புக் குறைப்புச் செய்யலாம்; (4) அயல் நாடுகள் தரவேண்டிய போர்க் கடன்களுக்காக வெள்ளி உலோகத்தை 200 மில்லியன் டாலர்கள் வரை அமெரிக்கா ஏற்றுக் கொள்ளலாம்; (5) குடியரசுத் தலைவர் தன் விருப்பம்போல் பொன் னுக்கும் வெள்ளிக்குமிடையே ஒரு விகிதத்தை ஏற்படுத்தி, எல்லை யின்றி வெள்ளி நாணயங்களை வெளியிடலாம். அதாவது அவர் விருப்பம்போல் பணவீக்கத்தை ஏற்படுத்தலாம்.

இவ்விரு சட்டங்கள் வாயிலாக நாட்டுப் பொருளாதாரத்தில் பணவீக்க நிலைமைகள் ஓரளவிற்குத் தோன்றலாயின. 1933ஆம் ஆண்டின் வசந்தத்திலும், கோடையிலும் பண்டங்களின் விலைகள் உயர வாரம்பித்தன. எனவே செலாவணித் துறையில் மேலும் மாறுதல்களைச் செய்வதை அரசு நிறுத்தி வைத்தது. ஆனால் இவ்

யுதிர் பருவத்தில் பண்டங்களின் விலைகள் மீண்டும் கீழ்நோக்கிச் சரிந்தன. இதனைத் தொடர்ந்து பணவீக்கம் வேண்டும் என்ற கோரிக்கைகள் எழுந்தன. நாட்டு வர்த்தகத்தில் பததில் ஒன்பது பங்குக்கு பாங்கு கடன் செலாவணியையே (Bank Credit) மக்கள் பயன்படுத்தி வந்தமையால், அரசின் பணவீக்கக் கொள்கை எதிர்பார்த்த பலனைத் தரவில்லை. எனவே பாங்குச் செலாவணியை அதிகப்படுத்தி பணவீக்கத்தை உருவாக்கும் முயற்சிகளில் அரசு இறங்கிற்று. அவசரப் பாங்கு சட்டத்தின்கீழ் புனரமைப்பு நிதிக் கார்ப்பரேஷனின் அதிகாரங்கள் விரிவுசெய்யப்பட்டன. இவ் வதிகாரங்களைப் பயன்படுத்தி தொழில் நிறுவனங்களுக்குக் கடன் உதவியளிக்கும் பணி மேற்கொள்ளப்பட்டது. 1934ஆம் ஆண்டில் தொழில் கடனுதவிச் சட்டம் இயற்றப்பட்டது. இதன்படி தொழில் நிறுவனங்களுக்குப் புனரமைப்பு நிதி கார்ப்பரேஷன் சுமார் 580,000,000 டாலர்கள் வரை நேர்முகக் கடன்களாக வழங்கலாம். வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதற்கும் இச்சட்டம் வழிவகுத்தது.

பாங்குமுறையில் இருந்துவந்த குறைபாடுகளைக் களைவதற்காக குடியரசுக் கட்சியினர் 1933, 1935ஆம் ஆண்டுகளில் சட்டங்களை இயற்றினர். ஃபெடரல் ரிசர்வ் அமைப்பைச் சார்ந்த பாங்குகள் மற்ற நிறுவனங்களின் பங்குகளை வாங்கும் பழக்கத்தை 1933ஆம் ஆண்டின் சட்டம் தடைசெய்தது. இச்சட்டப்படி ஃபெடரல் டெபாசிட் இன்சூரன்ஸ் திட்டம் ஆரம்பிக்கப்பட்டது. இத்திட்டம் டெபாசிட்டர்களுடைய நலனைப் பாதுகாத்தது. 1933ஆம் ஆண்டுச் சட்டம், ஃபெடரல் ரிசர்வ் பாங்குகள் பங்கு மாற்று நிலையங்களுக்கு யூக வாணிபத்திற்காக வழங்கும் தொகையைக் குறைத்தது: தேசீய பாங்குகளின் அதிகாரங்களை விரிவுசெய்தது; தேசீய பாங்குகள் வெளிநாட்டுப் பத்திரங்களை வாங்கக்கூடாது என்றும், தனிப்பட்ட பாங்குகள் உறுதிமொழி கூறும் தொழிலையும் பத்திரங்கள் விற்கும் தொழிலையும் மேற்கொள்ளக்கூடாது என்றும் கூறியது. தொழில் பாங்குகளும், சேமிப்புப் பாங்குகளும் நாட்டு பாங்கு அமைப்பில் சேர்வதற்கு இச்சட்டம் வழிவகுத்தது. இச்சட்டம் இயற்றிய பிறகு பாங்குகள் மற்ற தொழில்களை நடத்தும் பழக்கம் நிறுத்தப்பட்டு, பாங்குத் தொழிலை மட்டுமே கவனிக்க வாரம்பித்தன. '1913-ல் ஃபெடரல் ரிசர்வ் அமைப்பு தோன்றியதுமுதல் பாங்கு முறையில் இருந்து வந்த பல அடிப்படைக் குறைபாடுகளை இச்சட்டம் களைந்தெறிந்தது' ஃபால்க்னர்.

1935ஆம் ஆண்டின் பாங்குச் சட்டப்படி செலாவணியும் பாங்குச் செலாவணியும் அரசின் கட்டுப்பாட்டின்கீழ் வந்தன. இச்சட்டத்தின் கீழ்க் கொணரப்பட்ட மற்ற மாறுதல்களாவன : டெபாசிட் இன்சூ

ரன்ஸ் கார்ப்பரேஷன் பாங்குகளை மேற்பார்வையிடும் அதிகாரத்தைப் பெற்றன. ஃபெடரல் ரிசர்வ் சபையிலிருந்து கருவூலச் செயலரும் கம்ப்ட்ரோலரும் நீக்கப்பட்டு அச்சபையின் உறுப்பினர் எண்ணிக்கை குறைந்தது; இதனால் அரசியல் கட்சிகளின் தலையீடு மறைந்து, ஃபெடரல் ரிசர்வ் சபையால் சுதந்தரமாகச் செயல்பட முடிந்தது. ஏற்கனவே 1933 ஆம் ஆண்டுச் சட்டப்படி நிறுவப்பட்டிருந்த வெளி அங்காடிக் குழு (Open Market Committee)வின் அதிகாரங்கள் விரிவுசெய்யப்பட்டன. முன்பைவிடக் கூடுதலான தொகையை பாங்குகள் தற்போது கடனாக வழங்கலாம். சிறந்த அடைமானங்களை ஏற்றுக்கொண்டு ஃபெடரல் ரிசர்வ் பாங்குகள் ரிசர்வ் அமைப்பைச் சார்ந்த பாங்குகளுக்குக் கடன் வசதிகளை அளிக்கலாம். ரிசர்வ் அமைப்பைச் சார்ந்த பாங்குகள் நில உடைமைகளை அடைமானமாகக்கொண்டு பெருவாரியான கடன்களை மக்களுக்கு வழங்கலாம். சொத்தில் 60 சத விகிதத்திற்குச் சமமான தொகையினை பாங்குகள் கடனாகத் தரலாம்.

நாட்டுப் பொருளாதாரத்தில் பணவீக்கத்தைத் தோற்றுவிக்கும் முயற்சிக்கு, இச்சட்டங்களால் கொணரப்பட்ட மாறுதல்கள் பேருதவி புரிந்தன.

புதுக் கொள்கையின் வேளாண்மைத் திட்டங்கள்:

விவசாயிகளின் வாங்குந் திறனை உயர்த்தி, போருக்கு முன்னர் அவரது நிலை எவ்வாறிருந்ததோ அந்நிலையை மீண்டும் உருவாக்க வேண்டும் என்பது புதுக் கொள்கையின் பிரதான நோக்கம் ஆகும். பணவீக்கத்தை ஏற்படுத்தி, தேவைக்கு ஏற்றாற்போல் உற்பத்தியை இருக்கச் செய்து வேளாண்மைப் பொருட்களுக்குப் பொருத்தமான விலைகளைக் கிடைத்திடச் செய்வதற்கான நடவடிக்கைகளை அரசு மேற்கொண்டது. அதோடு, விவசாயிகளின் கடன் சுமைகளைக் குறைப்பதற்கும், ஏழை உழவர்களுக்குக் கடன் வசதிகளை வழங்குவதற்கும் உரிய ஏற்பாடுகளை அரசு செய்தது. நிலங்களின் வளத்தைப் பாதுகாக்கவும், அவற்றைச் சீர்ப்படுத்துவதற்கும் திட்டங்கள் வகுக்கப்பட்டன. 1933ஆம் ஆண்டு மே மாதம் இயற்றப்பட்ட பண்ணை நிவாரணம், மற்றும் பணவீக்கச் சட்டம் (முதல் வேளாண்மை ஒழுங்குபடுத்துச் சட்டம்) விவசாய சீர்திருத்தப் பணியினைத் துவக்கி வைத்தது. விவசாயிகள் உபரியாக உற்பத்தி செய்வதைக் குறைப்பதற்கும், அவரது வருமானத்தை உயர்த்துவதற்கும் இச்சட்டம் மூன்று வழிகளை வகுத்தது : (1) பருத்தி சாகுபடி செய்வோர் சாகுபடி நிலத்தில் 30 சத விகிதத்தைச் சாகுபடியிலிருந்து விலக்கிவிட்டு, அதற்குப் பதிலாக ஃபெடரல் பண்ணைச் சபையினரிடமிருந்து 30 சத விகித நிலத்தில் விளையக்கூடிய பருத்தியை வாங்கிக்கொள்ளலாம்; விலைகள்

உயர்ந்தால் இப்படி வாங்கிய பருத்தியை இவர்கள் விற்பனை செய்து கொள்ளலாம்; (2) சாகுபடியிலிருந்து தற்காலிகமாக விலக்கி வைக்கப்பட்டிருக்கும் நிலங்களுக்கு அரசு உதவிப் பணம் வழங்கும்; (3) வீணான செலவுகளை நீக்குவதற்காக அங்காடி உடன்படிக்கைகளும், அறிவியல் ரீதியான விற்பனை முறைகளும் ஏற்படுத்தப் பெறும்.

பருத்தி உற்பத்தியைக் கட்டுப்படுத்த முயன்ற அரசு, அடுத்து கோதுமை, புகையிலை, பருப்புகள், ரை, பார்லி, சணல், தானியங்கள், இறைச்சி, பீட்கிழங்கு, கரும்பு முதலியவற்றின் உற்பத்தியையும் கட்டுப்படுத்த முயன்றது. இதில் ஓரளவுக்கு வெற்றியும் கிட்டியது. பிற நாடுகளுடன் உடன்படிக்கைகளைச் செய்து, வர்த்தகச் சலுகைகளை வழங்க அயல் நாட்டு வாணிபத்தை அரசு கணிசமாகப் பெருக்கிற்று. உடன்படிக்கை செய்துகொண்ட நாடுகள் அமெரிக்காவுக்கு வர்த்தகச் சலுகைகளை வழங்கின. ஆனால் உற்பத்தியைக் குறைக்க வேண்டும் என்ற அரசின் கொள்கைக்கு எதிர்ப்புக்கள் கிளம்பின. இலட்சக்கணக்கான மக்கள் பட்டினியால் அவதியுறும் நிலையில் உணவு உற்பத்தியைக் குறைப்பது தவறான கொள்கை என எடுத்துக் கூறப் பட்டது. விவசாயிகளும் ஆரம்ப காலத்தில் அரசின் கொள்கைக்குப் பூரணமான ஒத்துழைப்பைத் தரவில்லை. சாகுபடி நிலப் பரப்பைக் குறைப்பதாகச் செய்துகொண்ட ஒப்பந்தத்தை விவசாயிகள் மீறினர்; கட்டுப்பாடுகளுக்குட்படாத பண்டங்களை மிகுதியாக உற்பத்தி செய்தனர். இத்தருணத்தில் உணவுப் பண்டங்களின் விலைகள் உயர்ந்தன; விவசாயிகளின் வருமானம் பழைய நிலைக்கு உயர்ந்தது. 1934-ல் விவசாயிகளின் வாங்குந் திறன் போருக்குமுன் இருந்ததில் சராசரி 73 சத விகிதமாக உயர்ந்தது; 1933-ல் அவர்களது வாங்குந் திறன் போருக்குமுன் இருந்ததில் 55 சதவிகிதமே இருந்தது. இவ்வாறாக, விவசாயிகளின் பொருளாதார நிலைமைசீர்ப்படுவதற்குப் புதுக்கொள்கையின் வேளாண்மைத் திட்டம் பெரிதும் உதவிற்று. நிலைமை மாறுபடுவதற்குப் பண்ணை நிவாரணம் மற்றும் பணவீக்கச் சட்டம் உதவியது என்றாலும், 1936ஆம் ஆண்டு ஜனவரித் திங்கள் அமெரிக்கத் தலைமை நீதிமன்றம் இச்சட்டத்தை அரசியலமைப்புடன் முரண்பாடு கொண்டது என நிராகரித்துவிட்டது. இச்சட்டம், சட்ட விரோதமான முறையில் மாநிலங்களின் உரிமைகளைப் பறித்திருக்கிறது எனவும், தவறான முறையில் வரிகள் விதிக்கும் அதிகாரத்தை அரசுக்கு அளித்திருக்கிறது எனவும் தலைமை நீதிமன்றம் கூறிற்று.

எனவே, வேறொரு முறையில் வேளாண்மைத் தொழிலைப் பாதுகாக்கும் முயற்சியில் அரசு ஈடுபடவேண்டியதாயிற்று. 1934-ல் ஏற்பட்ட கொடிய வறட்சியும், 1935-ல் அடித்த புழுதிப் புயலும் நிலங்

களைப் பாழாக்கின. நில அழிவினால் விளையக்கூடிய இழப்புக்களைத் தடுக்கும் நோக்கத்தில், அரசு 1935ஆம் ஆண்டு நில அரிப்பு அல்லது மண் அரிமானச் சட்டத்தை (Soil Erosion Act) இயற்றியது. வேளாண்மைச் செயலகத்தில் ஒரு மண் பாதுகாப்புத் துறை (Soil Conservation Service) ஏற்படுத்தப்பெற்றது. நில அரிமானங்களைப் பரிசீலித்து, நிலங்களைப் பாதுகாத்து வருவது இத் துறையின் பணி. 1936ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட மண் பாதுகாப்பு மற்றும் உள்நாட்டு ஒதுக்கீட்டுச் சட்டம் (Soil Conservation and Domestic Allotment Act) ஆனது, மண்வளம், நதிகள், துறைமுகங்கள் முதலியவற்றைப் பாதுகாப்பதற்கென 5,000,000,000 டாலர்களை ஒதுக்கியது.

இச்சட்டம் ஒரு தற்காலிக ஏற்பாடாகவே அமைந்திருந்தது. 1938ஆம் ஆண்டில் ரூஸ்வெல்ட் மீண்டும் குடியரசுத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டபோது, புதிய தலைமை நீதிமன்றம் அவரது கொள்கைகளுக்குப் பச்சைக் கொடி காட்டியதால், அவ்வாண்டில் இரண்டாவது விவசாயச் சீரமைப்புச் சட்டம் (Second AAA) இயற்றப்பட்டது. வேளாண்மைப் பண்டங்களுக்குப் பொருத்தமான விலைகளைக் கிடைக்கச் செய்வது இச் சட்டத்தின் ஒரு முக்கிய நோக்கம். பண்டத்திற்கான பொருத்தமான விலையையும், உற்பத்தியளவையும் அரசு நிர்ணயித்தது. பண்டத்தின் விலை இப் பொருத்தமான விலையை விடக் குறைந்தால், இவ்விரு விலைகளுக்குமுள்ள வித்தியாசத்தை அரசு விவசாயிகளுக்குக் கொடுத்தது. அரசு நிர்ணயித்த அளவிற்குக் குறைவாகப் பண்டத்தின் உற்பத்தி இருக்குமானால் விற்பனை உடன்படிக்கைகள் ஏற்படுத்தப்பெறும். ஒப்பந்த அளவிற்குமேல் விற்பனை செய்வோர் அபராதம் கட்ட நேரிடும். புதுக் கொள்கையின் வேளாண்மைத் திட்டத்தின் மற்றொரு முக்கிய நோக்கம் மக்களுடைய கடன் சுமைகளைக் குறைப்பது. விவசாயிகளுக்குக் கடன் வழங்கும் பல நிலையங்களைக் குடியரசுத் தலைவர் ஒருமுகப்படுத்தினார்; அதோடு, எளிய முறையில் கடன் வசதிகளை வழங்க அடைமான முறையைச் சீர்ப்படுத்தினார். இது தொடர்பாக 1934-ல் காங்கிரஸ் மூன்று சட்டங்களை இயற்றியது. (1) பண்ணை நிவாரண புலர்நிதிச் சட்டம் (Farm Mortgage Refinancing Act). இச் சட்டத்தின்கீழ் ஃபெடரல் பண்ணை அடைமானக் கார்ப்பரேஷன் நிறுவப்பட்டது. (2) பண்ணை அடைமான மீட்புரிமைச் சட்டம் (Farm Mortgage Foreclosure Act). இதன்படி நிலப்பாங்கு ஆணையர் விவசாயிகளுக்கு அடைமானச் சொத்துக்களை மீட்கக் கடன் வசதிகளை வழங்கலாம். (3) ஃப்ரேசியர்-லெம்கி திவால் மீட்புச் சட்டம் (Frazier-Lemke Bankrupty Act). திவாலாகும் விவசாயிகளுக்கு இச்சட்டம் உதவியளித்தது. ஒரு விவசாயி தன் சொத்தை இழந்தபின் அதன் மதிப்பை

நியாயமான முறையில் மதிப்பீடு செய்யும்படி அரசைக் கேட்டுக் கொள்ளலாம்; ஆறாண்டுகளுக்குள் இந்தத் தொகையையும், ஒரு சத விகித வட்டியையும் கொடுத்து, மீண்டும் தன் சொத்துக்களை விவசாயி பெற்றுக்கொள்ளலாம். திவாலாகிப்போன விவசாயிகளுக்கு ஒரு வரப்பிரசாதமாக இருந்த இந்தச் சட்டத்தை அரசியலமைப்பின் ஐந்தாம் திருத்தத்திற்கு முரணானது என்று கூறி, தலைமை நீதிமன்றம் 1936-ல் ரத்துசெய்தது. எனினும் இழந்த சொத்துக்களை மூன்றாண்டுகளுக்குள் மீட்டுக்கொள்ளலாம் எனக் கூறிய மற்றொரு சட்டத்திற்குத் தலைமை நீதிமன்றம் மறுப்புத் தெரிவிக்கவில்லை. இச் சட்டத்தின் வழியே வேளாண்மை அடைமானச் சொத்துக்கள் நல்ல பாதுகாப்பைப் பெற்றன.

இத்தகைய உதவிகளைச் செய்ததோடு அல்லாது, டென்னசி பள்ளத்தாக்குத் திட்டங்கள்போன்ற வெள்ளக் கட்டுப்பாட்டுப் பணிகளை விரிவுசெய்து, மாநிலங்களைக் கடந்துசெல்லும் சாலைகளை அமைப்பதற்குக் கூடுதலான தொகைகளை ஒதுக்கி, கிராமப்புறப் பகுதிகளுக்கு மின்சார இணைப்புக்களை வழங்க மிகுதியான தொகைகளை அளித்து விவசாயிகளுக்குப் புதுக் கொள்கை எல்லா வகை நன்மைகளையும் செய்து கொடுத்தது.

**புதுக்கொள்கையின் தொழில் திட்டம் :**

தொழிலுக்கு நியாயமான இலாபமும், தொழிலாளருக்கு வாழ்க்கைக்கூலி (Living Wage) யும் கிடைப்பதற்கு ஏற்பாடு செய்து, நேர்மையான வர்த்தகத்தையும் உழைப்பையும் கெடுக்கக்கூடிய பழக்க வழக்கங்களை அப்புறப்படுத்துவது புதுக்கொள்கையின் தொழில் திட்ட நோக்கமாகும். 1933ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட தேசியத் தொழில் மீட்புச்சட்டம் (National Industrial Recovery Act) ஆனது தொழில் துறையில் புதுக் கொள்கையினை ஆரம்பித்து வைத்தது. வாணிபத்தை நெறிப் படுத்தல், அமித உற்பத்தியைத் தடுத்தல், கூலிகளை அதிகப்படுத்தல், வேலை நேரங்களைக் குறைத்தல், விலைகளை உயர்த்தல் முதலியவை மூலம் மீட்சியை வளர்ப்பதற்கு இச் சட்டம் முயன்றது. உற்பத்தி நிறுவனங்களிடையே ஆரோக்கியமான போட்டி நிலைமை உருவாவதற்கு உதவிடக்கூடிய விதிமுறைகளை இயற்றிச் செயல்படுத்தும் அதிகாரம் குடியரசுத்தலைவருக்கு அளிக்கப்பட்டது. அரசு, தொழில் நிறுவனங்கள், தொழிலாளர், நுகர்வோர் முதலியோர் இணைந்து கலந்து பேசி இவ்விதி முறைகளைத் தொகுப்பர். உற்பத்தி நிறுவனங்கள் தாமாகவே இவற்றைக் கடைப்பிடிக்கத் தவறினால், அரசே இவற்றை நடைமுறைப்படுத்தும். வரையற்ற போட்டியினை உருவாக்க முயன்ற டிரஸ்ட் (Trust) எதிர்ப்புச்

சட்டங்களால் தொழிலில் தொல்லைகள்தான் முளைத்தன; எனவே தற்காலிகமாவது தொழில் நிறுவனங்கள் அரசின் கண்காணிப்பில் பொறுப்போடும் ஒற்றுமையோடும் செயல்படவேண்டும் என்று தேசியத் தொழில் மீட்புச்சட்டம் வலியுறுத்தியது.

தேசியத் தொழில் மீட்சித் திட்டத்தைச் செயற்படுத்துவதற்கு ஒரு தேசிய மீட்சி நிர்வாகத்துறை ஏற்படுத்தப்பெற்றது. இத்துறையினர், தொழிலதிபர்களையும் தொழிலாளரையும் கலந்துஆலோசித்து தொழில் விதிமுறைகளை (Codes) வகுத்தனர். இவற்றை அமல் செய்வதற்கு முன், 1933ஆம் ஆண்டு ஜூலைத் திங்கள் அரசு ஒரு தற்காலிகத் திட்டத்தை நடைமுறைக்குக் கொண்டுவந்து தொழிலாளரின் வேலை நேரத்தையும் கூலிகளையும் வரையறுத்தது. இத்திட்டத்தின்படி குழந்தைகளை நிறுவனங்கள் வேலைக்கு எடுத்துக்கொள்ளக் கூடாது; அலுவலர், தொழிலாளர் வேலை நேரங்கள் வாரம் ஒன்றிற்கு முறையே 40 மணி நேரம், 35 மணி நேரம் ஆக இருக்கவேண்டும்; தொழிலாளருக்கு ஒரு மணி நேர உழைப்புக்கு 40 சென்ட்டுகளும், மற்றவர்களுக்கு வாரம் ஒன்றிற்கு 12 முதல் 15 டாலர்களும் கூலியாக வழங்கப்படவேண்டும். இந்தத் திட்டம் நல்ல பலனைத் தந்ததால் ஒவ்வொரு தொழிலுக்கும் இத்தகைய விதிமுறைகள் வகுக்கப்படவேண்டுமென்று பொதுமக்கள் விரும்பினர். வாஷிங்டன் நகரில் கூடிய தொழிலதிபர், தொழிலாளர், வணிகர் பிரதிநிதிகள் பேரவை ஒன்று, 576 அடிப்படை விதிமுறைகளையும் 189 துணை விதிமுறைகளையும் வகுத்தது. இவற்றைப் பெரும்பாலான நிறுவனங்களும் தொழிலாளர்களும் மனமுவந்து ஏற்றுக்கொண்டனர்.

இவ்வாறு தொழில் விதிமுறைகளை வகுத்து, அளவுக்கு மீறிய போட்டியைக் கட்டுப்படுத்தவும், தொழில் நிறுவனங்களிடையே ஒற்றுமையை வளர்க்கவும், தொழிலதிபர் தொழிலாளர் நலன்களைப் பாதுகாக்கவும் தேசியத் தொழில் மீட்சிச் சட்டம் முயன்றது. என்றாலும், அச்சட்டத்தைப் பலர் குறை கூறினர். பண்டங்களைத் துய்ப்போரின் நலன்களைப் புறக்கணித்தது என்றும், விதிமுறைகளை மீறுவோரின் நடவடிக்கைகளைக் கட்டுப்படுத்தவில்லை என்றும், பெரிய நிறுவனங்களுக்கே சலுகைகளை அளித்தது என்றும் இச்சட்டத்தின் மீது குறைகள் கூறப்பட்டன. தேசிய மீட்சி நிர்வாகத்துறையின் செயல்களால் நாட்டுப் பொருளாதார மீட்சி தடைப்பட்டது எனவும் கூறப்பட்டது. 'இக்கூற்று உண்மையானதா என்று திட்டவட்டமாகக்கூற முடியாது. ஆனால், அரசின் கொள்கையால் தொழிலாளர்கள் நன்மையே பெற்றனர்; டிரஸ்ட் எதிர்ப்புச் சட்டங்களிலிருந்து தொழில் தற்காலிகமாக விடுதலை பெற்றது; பொருளாதார நிலைமை பொதுவாக முன்னேறவே செய்தது. நுகர்வோர் நலன்கள் மட்டுமே பாதிக்கப்பட்

டன.' ஃபால்க்னர். தேசியத் தொழில் மீட்சிச்சட்டத்தின் நன்மை தீமைகளைப்பற்றிய விவாதம் மக்களிடையே நடந்துகொண்டிருந்த நிலையில், 1935ஆம் ஆண்டு மே மாதம் விசாரிக்கப்பட்ட ஒரு வழக்கில் அமெரிக்கத் தலைமை நீதிமன்றம், தேசியத்தொழில் மீட்சிச்சட்டத்தின் கீழ் தொழில் விதிமுறைகளை வகுப்பது சட்டவிரோதமானது எனத் தீர்ப்பளித்தது. இதன் விளைவாகத் தேசிய மீட்சி நிர்வாகத் துறை முறிந்து போயிற்று.

புதுக் கொள்கையின் துவக்கத்தில் டிரஸ்ட் எதிர்ப்புச்சட்டங்களை அமலுக்குக் கொண்டு வராமல், தடையற்ற போட்டியைக் கட்டுப் படுத்தும் முயற்சியில் ஈடுபட்டது. இதே கருத்தில்தான் மற்றச் சட்டங்களும் இயற்றப்பட்டன. உதாரணமாக, 1936ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட ராபின்சன்—பாட்மன் சட்டம் (Robinson-Patman Act), ஒன்றோடொன்று உறவு கொண்டிருந்த தொடர் விற்பனை நிலையங்களை (Chain Stores)க் கட்டுப்படுத்தியதோடு, விலை பேதங்காட்டுதலையும் (Price discrimination) சில்லரை விற்பனையில் நிகழக்கூடிய விலைக் குறைப்புப் பிரச்சினையையும் தடுத்தது. அவ்வாறே 1937இல் இயற்றப்பட்ட மில்லர்—டைடிங்ஸ் சட்டம் (Miller-Tidings Act) மாநிலங்களுக்கிடையேயான வர்த்தகத்தில், உற்பத்தியாளர்—சில்லரை விற்பனையாளர் உடன்படிக்கைகள் மூலம் பண்டங்களின் விலைகளை நிர்ணயப்பதற்குரிய ஏற்பாட்டினைச் செய்து, அளவிற்குமீறிய விலைப் போட்டியினை (Price Competition)த் தவிர்த்தது. 1938இல் அரசு, சர்வாதீனத்தைப்பற்றிய தமது கருத்தை மாற்றிக்கொண்டது. புதுக் கொள்கையால் சர்வாதீனங்கள் வளர்ந்திருக்கின்றன என்று தற்காலிகப் பொருளாதாரக்குழு தெரிவித்ததைத் தொடர்ந்து, அரசு சர்வாதீனங்களைக் கட்டுப்படுத்த முயன்றது. எனினும் இதில் அரசுக்குப் போதுமான வெற்றி கிடைத்திடவில்லை.

ரூஸ்வெல்ட் நிர்வாகத்தில் இயற்றப்பட்ட மிக முக்கியமான சட்டங்களில் ஒன்று மஸ்கில் ஷோல்ஸ்—டெனசி பள்ளத்தாக்கு வளர்ச்சிச் சட்டம் (Muscle Shoals—Tennessee Valley Development Act) ஆகும். இது 1933ஆம் ஆண்டு மே மாதம் இயற்றப்பட்டது. இச்சட்டப்படி டெனசி பள்ளத்தாக்கு நிர்வாகத்துறை (Tennessee Vally Authority) ஏற்படுத்தப்பெற்றது. நாட்டுப் பாதுகாப்பைப் பேணவும், டெனசி நதியில் போக்குவரத்து வசதிகளைப் பெருக்கவும், டெனசி மற்றும் மிசிசிப்பி நதிகளின் வெள்ளத்தைக் கட்டுப்படுத்தவும் டெனசி பள்ளத்தாக்கு நிர்வாகத்துறையானது அலபாமாவில் உள்ள மஸ்கில ஷோல்ஸ் என்ற இடத்தில் அரசுக்குச் சொந்தமாயிருந்த சொத்துக்களைத் தாமே ஏற்று நிர்வகிக்கவாரம்பித்தது. நில உடைமைகளைப் பெறவும், அணைகளையும் மின் உற்பத்தி நிலை

யங்களையும் நிர்மாணிக்கவும், காடுகளை வளர்க்கவும், மண் அரிப்புக் களைத்தடுத்து நிலத்தின் வளத்தைப் பாதுகாக்கவும், உரம் மற்றும் வெடிகுண்டுகளைத் தயாரிக்கத் தேவைப்படும் நைட்ரஜனை உற்பத்தி செய்வதற்கும் உரிய எல்லாவகை அதிகாரங்களையும் டெனசி பள்ளத் தாக்கு நிர்வாகத்துறை தன்னகத்தே கொண்டிருந்தது. இப்பணிகள் அனைத்தையும் பத்தே ஆண்டுகளுக்குள் டி. பி ஏ. செய்து முடித்து விட்டது. இது புதுக்கொள்கையின் ஒரு வியத்தகு சாதனையாகும். டெனசி பள்ளத்தாக்கு வளர்ச்சித் திட்டத்தால் வேளாண்மை, தொழில், பொது வசதி முதலிய எல்லாமே வளர்ச்சி யுடைந்தன.

### புதுக்கொள்கையும் போக்கு வரத்துத் துறையும் :

மந்த நிலைமையால் கடுமையாகப் பாதிக்கப்பட்டிருந்தவற்றில் போக்குவரத்துத் துறையும் ஒன்றாகும். அதனைச் சீர்ப்படுத்தும் முதல் முயற்சியாக 1933இல் இரயில்பாதை அவசரச்சட்டம் (Railroad Emergency Act) இயற்றப்பட்டது. ஒரு ஃபெடரல் இரயில் பாதை இணைப்பாளரை (Coordinator) நியமிப்பதற்கு இச்சட்டம் ஏற்பாடு செய்தது. வீணான செலவுகளைத் தவிர்ப்பதற்கும், நிதி அமைப்பினைச் சீர்ப்படுத்துவதற்கும், மக்களது நலன்களைக் கருத்தில் கொண்டு இரயில்வே கட்டணங்களைக் குறைப்பதற்கும் உரிய வழிமுறைகளை இரயில்பாதை பிரதிநிதிக் குழுக்களின் உதவியுடன் வகுப்பது இரயில் பாதை இணைப்பாளரின் பணிகள். இணைப்பாளராகப் பொறுப்பேற்ற ஜோசப் பி. ஈஸ்ட்மேன், தமது உதவியாளரின் ஒத்துழைப்புடன் இரயில் பாதையமைப்பு நிர்வாகம் பற்றி பரிசீலனைகளைச் செய்து அதனை முன்னேற்றுவதற்கான பல பரிந்துரைகளை வழங்கினார். சில பரிந்துரைகளை இரயில்பாதை நிறுவனங்கள் ஏற்றுக் கொண்டன. இணைப்பாளரின் அலுவலகம் 1936இல் மூடப்பட்டது.

மாநிலங்களுக்கிடையேயான வணிகத்தில் ஈடுபட்டிருந்த மோட்டார் வாகனங்களைக் கட்டுப்படுத்தும் வகையில் ஒரு ஃபெடரல் சட்டம் இயற்றப்படவேண்டும் என A. ஈஸ்ட்மேன் பரிந்துரைத்ததற்கு இணங்க, 1935இல் மோட்டார் வண்டிச்சட்டம் இயற்றப்பட்டது. இச்சட்டப்படி, மோட்டார் போக்குவரத்துத் தொழிலைக் கட்டுப் பாடு செய்யும் அதிகாரம் மாநிலங்களின் வணிகக்குழுவிற்குத் (Inter State Commerce Commission) தரப்பட்டது. நியாயமான கட்டணங்களையும், எல்லா நிறுவனங்களுக்கும் பொதுவாயிருக்கக் கூடிய கணக்குவைப்பு முறை ஒன்றையும் நடைமுறைக்குக் கொண்டு வரும் பொறுப்பும், தொழிலாளர் வேலை நேரங்கள், பாதுகாப்பு முதலியவைபற்றி நிர்ணயிக்கும் பணியும் இக்குழுவைச்சார்ந்தது. மோட்டார்வண்டி நிறுவனங்கள் சலுகைகளை வழங்குவதும், பேதங் காட்டுதலும் சட்ட விரோதமானவை.

மந்த நிலைமையால் விமானப் போக்குவரத்துத்துறை பாதிக்கப்பட்டிருக்கவில்லை. உண்மையில் அது வளர்ச்சிப்பாதையில் காலூன்றி விட்டது எனலாம். எனவே அரசின் முன்னே இருந்த பிரச்சினை விமானப் போக்குவரத்தைப் பாதுகாப்பது எப்படி என்பதன்று. மாறாக அதைக் கட்டுப்படுத்துவது எங்ஙனம் என்பதே. அஞ்சல்களை அனுப்புவதற்காக விமானப்போக்குவரத்து அமைப்பு செய்து கொண்ட ஒப்பந்தங்களில் பல ஊழல்கள் உருவெடுத்தமையால் 1934இல் ரூஸ்வெல்ட் இவ்வொப்பந்தங்களை எல்லாம் ரத்து செய்தார். இதைத் தொடர்ந்து அமெரிக்க ராணுவமே அஞ்சல்களை அனுப்பிவைக்கும் பொறுப்பினை ஏற்றுக்கொண்டது. அடுத்து இயற்றப்பட்ட விமான அஞ்சல் சட்டப்படி, அஞ்சல்களை அனுப்பும் பணி தனியார் நிறுவனங்களுக்குத் தரப்பட்டது. இந் நிறுவனங்களை அரசும், மாநிலங்களின் வணிகக்குழுவும், வணிகத்துறைச் செயலரும், தலைமை அஞ்சல் அதிகாரியும் மேற்பார்வை இடலாம். காலப்போக்கில் இம்மேற்பார்வை திருப்திகரமாக இல்லாது போனதால் சிவில் போக்குவரத்து நிர்வாகத்துறையினரை மேற்பார்வையிடுமாறு காங்கிரஸ் பணித்தது. அதோடு, விமானப் பாதுகாப்புக்குழு ஒன்றையும் நியமித்து, விபத்துக்கள் ஏற்பட்டால் அவற்றை விசாரணை செய்யும் பொறுப்பினை அதனிடம் ஒப்படைத்தது. இவ்விரு அமைப்புக்களின் செயல் திறத்தால் விமானப் போக்குவரத்துத் துறை செம்மையாகச் செயல்படவாரம்பித்தது; விமானப் பயணத்தில் உள்ள ஆபத்துக்களும் குறையலாயின.

வர்த்தகக் கப்பற்படையைச் சீர்ப்படுத்தவேண்டும் என்ற எண்ணம் அரசுக்கு 1936இல் உண்டாயிற்று. இக்கப்பல்கள் அடிக்கடி விபத்துக்களுக்குள்ளாகி வந்தமையால் அவற்றை நன்கு கண்காணித்து வருவது அவசியமாயிற்று. இத்தொழிலில் பல தொழிலாளர் பிரச்சினைகள் தலையெடுத்திருந்தன; தொழிலும் இழப்புக்களுக்குள்ளாகும் நிலைதோன்றலாயிற்று. இத்தொழிலைப் பாதுகாக்கவும், தொழிலாளர் பிரச்சினைகளைத் தீர்த்துவைக்கவும் அரசு சட்டங்களை இயற்ற வேண்டியதாயிற்று. 1937ஆம் ஆண்டில் கப்பற்படை விசாரணைக்குழு வெளியிட்ட அறிக்கை வர்த்தகக் கப்பற்படையின் நிலையைப் படம் பிடித்துக்காட்டிற்று. அறிக்கை கூறியதாவது; 1927 முதல் 1937வரை அமெரிக்கர்கள் 9 மில்லியன் டன் எடையுள்ள கப்பல்களைக் கட்டியிருந்தனர் என்றாலும், இவற்றில் 5 சதவிகித அளவே அமெரிக்காவில் பதிவு செய்யப்பட்டிருந்தன. உலக நாடுகளின் கப்பற்படை எடைகளை ஒப்பிட்டால் இரண்டாவது இடத்தை அமெரிக்கா பெற்றிருக்கிறது என்பது உண்மையே. ஆனால் கலங்கள் செல்லும் வேகத்தை ஒப்பிட்டால் அமெரிக்கா நான்காவது இடத்தில்தான் நிற்கிறது.

மேலும் அமெரிக்கக் கப்பல்களில் பல பழையனவாயிருக்கின்றன. மீதியிருப்பனவும் 1942இல் மோசமான நிலைக்கு வரக்கூடியவை.

பிரச்சினையைத் தீர்ப்பதற்கு அரசு 1936-ல் வணிகக்கப்பல் சட்டத்தை (Merchant Marine Act) இயற்றியது. 1922ஆம் ஆண்டுச் சட்டப்படி நடைமுறையில் இருந்து வந்த கடன் வழங்கும் திட்டம் புதிய சட்டப்படி கைவிடப்பட்டது; அமெரிக்க வர்த்தகக் கப்பற் படை கார்ப்பரேஷன் கலைக்கப்பட்டது. அமெரிக்கக் கப்பல்துறைக் குழு நிறுவப்பட்டது. இக்குழு வர்த்தகக்கப்பற் படையைப் பார்வையிட்டுப் பழுதான கப்பல்களைப் புதுப்பிக்க ஏற்பாடு செய்யவேண்டும்; தொழிலாளர் கூலி, வேலை வாய்ப்பு முதலியவைகளைப் பரிசீலனை செய்து வரவேண்டும்; அதோடு, கப்பல்களைக் கட்டுவதற்குக் கடன் உதவிகோரிவரும் மனுக்களைப் பரிசீலனை செய்து உதவி வழங்குவதற்கான வழிமுறைகளையும், நிபந்தனைகளையும் வகுக்கவேண்டும். தொழிலாளரின் கூலிகள், வேலை நேரங்கள், பற்றி நிர்ணயிக்கும் பொறுப்பும் இக்குழுவிடம் விடப்பட்டது. தொழிலாளரின் பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு ஒரு கப்பற்படைத் தொழிலாளர் சபையும் இச்சட்டப்படி நிறுவப்பட்டது. இச்சட்டத்தினால் வர்த்தகக் கப்பற் படை நிலைமை ஓரளவுக்குச் சீர்ப்பட்டது.

**வேலையின்மைப் பிரச்சினைக்கும், இதர பிரச்சினைகளுக்கும் தீர்வு :**

பொருளாதார மந்தத்தால் நாட்டில் வேலையின்மைப் பிரச்னை தீவிரமடைந்திருந்தது. மக்களது வருமானங்கள் குறைந்து கொண்டேயிருந்தன. விபத்துக்களைத் தடுப்பதற்குத் தொழிற்சாலைகளில் போதிய ஏற்பாடுகள் செய்யப்படாதிருந்தமையால் தொழிற்சாலைகளில் அடிக்கடி விபத்துக்கள் நிகழலாயின. வேலை நேரங்களும் வேலைச் சூழ்நிலைகளும் தொழிலாளரின் ஆக்கத்திறனைப் பாதிப்பவையாயிருந்தன. இத்தகைய பிரச்சினைகளைத் தீர்ப்பதற்கு ரூஸ்வெல்ட் மும்முனைக் கொள்கையை வகுத்தார் : (1) வேலையின்மைப் பிரச்சினைக்குத் தீர்வு காணல்; (2) வேலையின்மை இன்சூரன்ஸ், முதியோர் இன்சூரன்ஸ் முதலியவை மூலம் கூலி சம்பாத்தியக்காரர்களுக்குப் பொருளாதாரப் பாதுகாப்பை (Economic Security) வழங்குதல்; (3) தொழிலாளர் அமைப்பை வலிவுபடுத்தல்.

வேலையின்மைப் பிரச்சினையைத் தீர்ப்பதற்கு ரூஸ்வெல்ட் துரிதமாகச் செயல்பட்டார். வேலையற்றிருந்த இளைஞர்கள் காடுகளைப் புதுப்பித்தல், வெள்ளக் கட்டுப்பாடு போன்ற சமூகப் பணித்திட்டங்களில் வேலைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டனர். முதல் ஆண்டில் சுமார் 300000 நபர்களுக்கு இவ்வகையில் வேலை கிடைத்தது. இத்திட்டங்களில் பங்கேற்றோர் சிவில் பாதுகாப்பு அணியினர் (Civilian

Conservation Corps) என அழைக்கப்பட்டனர். இவ்வணி 1942 வரை இருந்தது.

அரசால் இயற்றப்பட்ட அவசர நிவாரண உதவிச்சட்டத்தின்படி (Emergency Relief Act) ஒரு ஃபெடரல் அவசர நிவாரண உதவி நிர்வாகத்துறை நிறுவப்பட்டது. நிவாரண உதவிக்கென மாநிலங்களுக்கு 500,000,000 டாலர்களைப் புனரமைப்பு நிதிக் கார்ப்பரேஷன் வழங்க வேண்டும் என இச்சட்டம் கூறியது. அடுத்து, தேசியத் தொழில் மீட்சிச்சட்டம் ஒரு பொதுப்பணி நிர்வாகத்துறையை (Public Works Administration) ஏற்படுத்தி, அதன் செலவுகளுக்கென 3,300,000,000 டாலர்களை ஒதுக்கியது. வேலை வாய்ப்புக்களை விரிவு செய்யும் நோக்கத்தில் இப்பொதுப்பணி நிர்வாகத்துறை 7,000,000,000 டாலர்களைச் செலவு செய்தது. எனினும் பிரம்மாண்டமாக வளர்ந்து கிடந்த வேலையில்லாப் பிரச்சினையை இதனுல் ஓரளவுக்குத்தான் தீர்க்கமுடிந்தது; பல்லாயிரக்கணக்கானோர் வேலையின்றித் தவித்திடும் நிலைமை இன்னும் நீடிக்கவே செய்தது. எனவே 1935 ஆம் ஆண்டு காங்கிரஸ் மேலும் பொதுப்பணித் திட்டங்களுக்கென மிகுதியான தொகையை ஒதுக்கியது; இதன் வழியே இரண்டாவது பொதுப்பணி வேலைத்திட்டம் ஆரம்பமாயிற்று. பொதுப்பணித் திட்டங்கள் அனைத்தையும் ஒருங்கிணைப்பதற்கென பணிமுன்னேற்ற நிர்வாகத்துறை நிறுவப்பட்டது; இது பிறகு பணித்திட்டங்கள் நிர்வாகத்துறை (Works Projects Administration) என அழைக்கப்படலாயிற்று. இத்துறை பல திட்டங்களைச் செயல்படுத்தியது. இரண்டாவது உலகப்போரின்போது பொருளாதார நடவடிக்கை சுறுசுறுப்படைந்தபோது வேலையின்மைப் பிரச்சினை ஒழிந்தது; அதுவரை பணித்திட்டங்களின் நிர்வாகத்துறை ஓயாது செயல்பட்டது 1935 முதல் 1942 வரை இந்நிர்வாகத்துறை 10,500,000,000 டாலர்களைத் தண்ணீராகச் செலவிட்டது; இதைத்தவிர 2,700,000,000 டாலர்களை மாநில அரசுகளுக்கு உதவியாக வாரி வழங்கியது. நிர்வாகத்துறைத் திட்டங்களால் சுமார் 25000,000 பேர்கள் நன்மை பெற்றனர்; 122000 பொதுக்கட்டிடங்கள் எழும்பின; 664000 மைல்கள் நீளமுள்ள சாலைகள் உருவாயின, 77000 பாலங்கள் கட்டப்பட்டன; 285 விமானத்தளங்கள் நிர்மாணிக்கப்பட்டன. 24000 மைல்கள் நீளமுள்ள வடிகால்கள் தோற்றுவிக்கப்பட்டன. இவையே அல்லாமல், அனேக பூங்காக்களையும், விளையாட்டுத் திடல்களையும், நீர்த்தேக்கங்களையும் நிர்வாகத்துறை அமைத்துக் கொடுத்தது. இவற்றுல் சமூகத்தின் பலதரப்பட்ட பிரிவினர் வேலை வாய்ப்புக்களைப் பெற்றனர். பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் கல்வி பயின்றிடும் வாய்ப்புக்களை இளைஞர்கள் பெற்றனர். வேலையின்மைப் பிரச்சினை

யால் அவதியுற்றோருக்கு உதவியளிப்பதோடு மட்டும் புதுக்கொள்கை திருப்தி அடைந்துவிடவில்லை. நாட்டுக் குடிமகன் ஒவ்வொருவனுக்கும் பிழைக்கும் வாய்ப்பை உண்டாக்கிக் கொடுக்கும் பணியில்தான் அது பேரார்வம் காட்டியது.

அடுத்து, தொழிலாளர்களுக்குப் பாதுகாப்பு வழங்க ரூஸ்வெல்ட் மேற்கொண்ட நடவடிக்கைகளை இங்கே நாம் குறிப்பிடவேண்டும். தொழிலாளருக்குப் பாதுகாப்பை ஏற்படுத்தும் நோக்கத்தில் அரசு சில முக்கிய சட்டங்களை இயற்றியது. *1933*ஆம் ஆண்டில் நிறைவேற்றப்பட்ட தேசிய வேலைவாய்ப்புப் பணிச்சட்டப்படி (National Employment Service Act) வேலை வாய்ப்புத்தகவல் நிலையங்கள் (Employment Exchanges) நிறுவப்பட்டன. இரயில்பாதை ஓய்வு நிலை சட்டத்தின் கீழ் (*1935*), ஃபெடரல் அரசானது இரயில் பாதைத் தொழிலாளருக்கு ஓய்வு ஊதியம் தரும் பொறுப்பினைத் தாமே எடுத்துக்கொண்டது. *1936*இல் இயற்றப்பட்ட வால்ஷ்—ஹீலி அரசு ஒப்பந்தச் சட்டப்படி (Walsh-Healey Government Contracts Act), அரசுத்துறைகளுக்குப் பொருட்களை அளிப்பதாக ஒப்பந்தம் செய்து கொள்வோர், தமது ஊழியர்களுக்கு மற்ற நிறுவனங்கள் தரும் கூலிக்குக் குறையாத ஊதியத்தைத் தர வேண்டும்; தொழிலாளர் வேலை நேரங்கள் ஒரு நாளைக்கு *8* மணி எனவும், வாரத்திற்கு *40* மணி எனவும் இருத்தல்வேண்டும்; *16* வயதுக்குட்பட்ட ஆண்களும், *18* வயதுக்குட்பட்ட பெண்களும் வேலைக்கு எடுத்துக்கொள்ளப்படக் கூடாது. கூலிகளையும் வேலை நேரங்களையும் ஒழுங்குபடுத்துவதற்கென *1938*இல் கூலி மற்றும் வேலை நேரச்சட்டம் (Wages and Hours Act) இயற்றப்பட்டது. குறைந்த பட்சக் கூலியையும் உயர்ந்த பட்ச வேலை நேரத்தையும் நிர்ணயிப்பதற்கு இச்சட்டம் வழி வகுத்தது. இச்சட்டத்தின் ஒரு முக்கிய அம்சம் சிறுவர்களுக்குப் பாதுகாப்பு வழங்கியது. *14* முதல் *16* வயதுக்குட்பட்ட சிறுவர்கள் பொறிசெய் தொழில் அல்லாத தொழில்களில் வேலைக்கு எடுத்துக்கொள்ளப்படலாம் என்றும், ஆனால் சுரங்கத் தொழில்களில் வேலைக்கு எடுத்துக் கொள்ளப்படக்கூடாது என்றும் இச்சட்டம் கூறியது.

*1935*இல் அரசு சமூகப்பாதுகாப்புச் சட்டத்தை (Social Security Act) இயற்றி, வேலை வாய்ப்பின்மை இன்சூரன்ஸ் திட்டத்தையும், (Unemployment Insurance) முதியோர் உதவித்தொகைத் (old age pension) திட்டத்தையும் நன்கு வளர்ப்பதற்கு வழிவகுத்தது. இச்சட்டம் *1939*இல் திருத்தப்பட்டது. வேலையின்மை இன்சூரன்ஸ் திட்டம் திருப்திகரமாக முன்னேறவில்லை; விஸ்கான்சின் மாநிலம் மட்டுமே இத்திட்டத்தில் அக்கறை காட்டியது. ஆனால் முதியோர் உதவித் தொகைத்திட்டம் நன்கு வளர்ச்சியடைந்தது எனலாம். ஏற்

களவே இத்திட்டம் 29 மாநிலங்களில் அமலிலிருந்து வந்தது. என்றாலும், சமூகப் பாதுகாப்புச்சட்டத்தின் மூலம்தான் இது நாடு முழுவதற்கும் பரவியது. இச்சட்டப்படி 65 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு அரசின் உதவி தேவையானால், அரசு அவர்களுக்கு உதவித் தொகைகளை வழங்கலாம்; இதற்கான செலவில் பாதிப்பகுதியை மத்திய அரசும், மீதிப் பகுதியை மாநில அரசுகளும் ஏற்றுக்கொள்ள வேண்டும். தொழிலாளரின் எதிர்கால நலனைப் பேணுவதற்கென இச்சட்டம் பங்களிப்பு முதியோர் இன்சூரன்ஸ் திட்டத்தை (Contributory old-age Insurance Scheme) 1937 முதல் அமலுக்குக் கொண்டு வர ஏற்பாடு செய்தது; இத்திட்டத்தின்கீழ் தொழிலாளர்கள் தமது கூலியின் ஒரு பகுதியை வரியாகச் செலுத்தி வர வேண்டும். வேலையளிப்போர் தமது வருமானத்தில் 1937-லிருந்து ஒரு சதவிகிதத்தையும், அதற்குப் பின் மூன்றாண்டுகளுக்கொருமுறை மிகுதியான விகிதத்தையும் செலுத்திவர வேண்டும்; 1949-க்குள் இது 3 சதவிகிதமாக உயரவேண்டும். வேலையளிப்போர், தொழிலாளர் இவ்வாறு வழங்கிடும் தொகையைக் கொண்டு பங்களிப்பு முதியோர் இன்சூரன்ஸ் திட்டம் செயல்படும் என அறிவிக்கப்பட்டது. இத்திட்டப்படி மாதந்தோறும் 10 டாலர் முதல் 85 டாலர் வரை ஓய்வு ஊதியம் பெறுவர் என எதிர்பார்க்கப்பட்டது. 6 முறை திருத்தம் பெற்ற இத்திட்டம் பல்லாயிரக் கணக்கானோருக்கு நல்வாழ்வை அளித்தது. முதன்முதலில் வணிகம் தொழில் ஆகியவற்றில் ஈடுபட்டிருந்தோருக்கு உதவி வழங்கத் தொடங்கி, பிறகு படிப்படியாக எல்லாவகைத் தொழிலாளருக்கும் உதவி வழங்கும் நிலைக்கு இத்திட்டம் உயர்ந்தது. முதியோர் இன்சூரன்ஸ் திட்டத்தைத்தவிர, மாநிலங்களின் வேலையின்மை இன்சூரன்ஸ் திட்டங்களையும் சமூகப் பாதுகாப்புச் சட்டம் ஆதரித்தது. இத்திட்டங்களாலும் பலர் பயனடைந்தனர்.

புதுக்கொள்கையின் மூன்றாவது நோக்கம் தொழிலாளர் இயக்கத்திற்குப் புத்துயிர் அளித்தல் 1920-லிருந்து தொழிலாளர் இயக்கம் சரிந்து கொண்டிருந்தது; தொழிலாளர் சங்கங்களின் உறுப்பினர் எண்ணிக்கை குறைந்து கொண்டிருந்தது; அவற்றின் மதிப்பும் குறைந்து கொண்டிருந்தது. வேலையளிப்போர் தொழிலாளர் உறவினைச் செம்மைப்படுத்துவதில் தேசிய மீட்சிச் சட்டம் மிகவும் குறியாயிருந்தது அதன் 7 (a) பிரிவு தொழிலாளர் இயக்கத்தினை வளர்ப்பதற்குரிய வழிமுறைகளை வகுத்தது. இயக்கத்தை அமைப்பதற்கும் தமது பிரதிநிதிகள் மூலம் கூட்டு பேரங்களை ஒற்றுமையாகச் செய்வதற்கும் தொழிலாளருக்கு உரிமை வேண்டும்; வேலையளிப்போரும் அவரது பதிலாளிகளும் இவ்வுரிமையைப் பறிக்கவோ அல்லது தடுக்கவோ முயலக்கூடாது. இக்கருத்தை தேசிய மீட்சிச்சட்டம் தெளிவு

படுத்தியது. தொழிலாளர் உரிமைகளோடு தொடர்புடைய விதி முறைகளை (Codes) வேலையளிப்போர் பின்பற்றி நடத்தல்வேண்டும். இப்படியெல்லாம் உரிமை முழக்கமிட்ட தேசிய மீட்சிச்சட்டத்தினால் தமக்குப் பலவித நன்மைகள் விளையும்—தமது இயக்கம் புதிய வலிவைப் பெறும் என்று தொழிலாளர்கள் எதிர்பார்த்தனர் என்றாலும், அவரது எண்ணங்கள் நிறைவேறவில்லை. ஏனென்றால் தொழிலாளருக்குச் சாதகமான சட்டங்களுக்கும், தொழிலாளர் இயக்கத்திற்கும் தொழிலதிபர்களிடமிருந்து கடுமையான எதிர்ப்புக்கள் எழுந்தன. அரசால் தமது சட்டத்தை வெற்றிகாமாகச் செயல்படுத்த முடியவில்லை. தொழில் விதிமுறைகளை வேலையளிப்போர் பலர் துணிந்து மீறினர். எனவே அமெரிக்கத் தலைமை நீதிமன்றம் 1935இல் தேசிய மீட்சிச்சட்டத்தை அரசியலமைப்புக்கு முரணானது என தீர்ப்புக் கூறு முன்பே அச்சட்டம் பயனற்றுவிட்டது.

அமெரிக்கத் தலைமை நீதிமன்றம் தேசியத் தொழில் மீட்சிச் சட்டத்தின் பல பிரிவுகளை ரத்து செய்தது என்றாலும், சட்டத்தின் தொழிலாளர்கள் பற்றிய பிரிவுகளை ரத்து செய்யவில்லை. இவற்றை 1935இல் இயற்றிய தேசியத் தொழிலாளர் நல் உறவுகள் சட்டத்தின் (National Labour Relations Act) அரசு சேர்த்துவிட்டது. இப்புதிய சட்டம் தொழிலாளரின் பேர சக்தியை வளர்த்துத் தொழில் தகராறுகளைக் குறைத்திட முயன்றது. தொழிலாளரின் கூட்டு பேர உரிமையை வேலையளிப்போர் தடுக்கவோ அல்லது ஒடுக்கவோ முயலக்கூடாது என்றும், தொழிலாளர் இயக்கத்தில் அவர்கள் குறுக்கிடக் கூடாது என்றும் இச்சட்டம் தெளிவு படுத்தியது. சட்டத்தைச் செயற்படுத்துவதற்கென ஒரு நிலையான தேசியத்தொழிலாளர் நல் உறவுச் சபை (National Labour Relation Board) உருவாக்கப்பட்டது. இச் சட்டம் தொழிலாளர் அமைப்பை நன்கு உற்சாகப்படுத்தியதோடு கூட்டு பேரங்களைக் கட்டாயமாகப் புகுத்தியது. இச்சட்டம் நீதிமன்றம் முன்னே நிற்குமா என்ற ஐயப்பாடு எழுந்தநிலையில், 1937ஆம் ஆண்டு ஏப்ரல் திங்கள் 12ஆம் நாள் தலைமை நீதிமன்றம் வழங்கிய 5 தீர்ப்புக்கள் இச்சட்டத்திற்குச் சாதகமாக இருந்தன. இத்தீர்ப்புக்குப் பிறகுதான் சட்டத்தை அரசு வெற்றிகரமாக அமலுக்குக் கொண்டுவர முடிந்தது.

தேசியத் தொழில் மீட்சிச் சட்டமும், தேசியத் தொழிலாளர் நல் உறவுகள் சட்டமும் தொழிலாளர் அமைப்புக்களுக்கு ஒரு நல்ல தூண்டுதலைக் கொடுத்தன. தொழிலாளரும் இவ்வாய்ப்பினை நன்கு பயன்படுத்துக் கொண்டு இயக்கத்தைப் பலப்படுத்திக் கொண்டனர் என்பது இங்கே குறிப்பிடத்தக்கது. புதுக்கொள்கை துவங்கிய முதல் மூன்றாண்டுகளில் தொழிலாளர் அமைப்பின் உறுப்பினர் அளவு

முன்பு இருந்ததை விட 1·5 மில்லியன் மிகுதியாயிருந்தது. இது அடுத்தடுத்து உயர்ந்து கொண்டே போயிற்று. தொழிலாளர் சங்கங்களின் (Unions) சராசரி உறுப்பினர் அளவு 1933இல் 2,973,000 ஆகவும், 1936இல் 4,700,000 ஆகவும், 1939இல் 8,200,999 ஆகவும், 1943இல் 13,500,000 ஆகவும், 1947இல் 15,400,000 ஆகவும் இருந்தது.

பல்வேறு முறைகளில் மந்த நிலைமையை எதிர்த்துப் போராட அரசு மேற்கொண்ட முதல் முயற்சியாக புதுக்கொள்கை அமெரிக்காவில் இருந்தது எனலாம். மற்ற நாடுகள் பின்பற்றிய முறைகளை விட அமெரிக்கா பின்பற்றிய முறைகள்தான் சிறந்தவை என பல பொருளாதார அறிஞர்கள் கருதுகின்றனர். எல்லாவகைப் பொருளாதாரக் கருவிகளையும் ஆண்டு, பொருளாதார மந்தத்தின் கோரப் பிடியிலிருந்து நாட்டை விடுவிக்க முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டது புதுக்கொள்கை அரசின் நடவடிக்கைகளை அதிகப்படுத்தியது; மக்களுடைய சமூகப் பொருளாதார வாழ்க்கையில் அரசைத் தலையிட வைத்தது. தலையிடாக் கொள்கையைக் கைவிடும் சூழ்நிலையை அரசுக்கு உருவாக்கியது. அமெரிக்க ஐக்கிய நாட்டுப் பொருளாதார வரலாற்றில் முக்கியமான நிகழ்ச்சிகள் இவை.

# 15. இரண்டாவது உலகப் போரின் விளைவுகள்

## (The Effects of the Second World War)

1939-ல் மூண்ட இரண்டாவது உலகப் போர் அமெரிக்கப் பொருளாதாரத்தின் எல்லாக் கூறுகளையும் பாதித்தது. இதற்கு அமெரிக்கா செலவிட்ட தொகை 360,000 மில்லியன் டாலர்கள். முதல் உலகப் போருக்கு ஆன செலவைவிட இது சுமார் 12 மடங்கு அதிகம். ரஷ்யா, இங்கிலாந்து ஆகிய இரு நாடுகளுக்கான செலவினைவிட இது மிகுதி. போரினால் அமெரிக்கப் பொருளாதாரத்தில் பல மாறுதல்கள் நிகழ்ந்தன. அமைதிக்காலஉற்பத்திமுறையைப் போர்க்காலஉற்பத்தி முறையாக மாற்றியமைக்க வேண்டியிருந்தது. 15 மில்லியன் ஆட்களுக்கும் அதிகமாயிருந்த இராணுவப் படையைப் பேணிக் காக்க வேண்டியிருந்தது. ஐந்து கண்டங்களுக்கும் எண்ணற்ற தீவுகளுக்கும் ஆட்கள் மற்றும் சாதனங்களை அனுப்பி வைக்க வேண்டியிருந்தது. உள்நாட்டு மக்களுக்கும் நேச நாடுகளுக்கும் தேவையான பண்டங்களை உடனுக்குடன் அளிக்கும் நிலையில் உற்பத்தித் திட்டத்தை வைத்திருக்க வேண்டியிருந்தது. அதோடு லத்தீன் அமெரிக்காவுடனும், நடுநிலை நாடுகளுடனும் தொடர்ந்து வாணிப உறவுகளைக் காத்து வருவதும் அவசியமாயிருந்தது. போர்க்கோலம் பூண்ட அமெரிக்க ஐக்கிய நாட்டின் தொழில் அமைப்பு எந்த அளவுக்கு விரைவாக, திறமையாக, பொருத்தமாக மாறிக்கொள்ள முடியும் என்பதைப் பொறுத்துத்தான் நாசிகளுடன் எழுந்த பெரு மோதலின் இறுதி முடிவு இருந்தது. அமெரிக்காவின் பிரும்மாண்டமான பொருளாதாரத்திற்கு இரண்டாவது உலகப் போர் ஒரு சவாலாக அமைந்தது.

போருக்கான ஆயத்தங்களைச் செய்வதில் தனது நேச நாடுகளைவிட அமெரிக்காவிற்குச் சில சாதகச் சூழ்நிலைகள் இருந்தன. எதிரி விமானப்படைத் தாக்குதல் அதற்கு இருக்கவில்லை. எனவே, இரவு

களில் மின்சக்தி யளிப்பை நிறுத்திவைக்கும் கட்டாயம் அமெரிக்கா விற்கு இருக்கவில்லை. தொழிற்சாலைகளில் உற்பத்தி நடவடிக்கைகள் எவ்வித இடையூறுகளுமின்றித் தொடர்ந்து நீடித்துவந்தன. உணவுக் கட்டுப்பாட்டுப் பிரச்சினைகளும் அந் நாட்டிற்கு எழவில்லை. தவிரவும் அமெரிக்கா ஏற்கனவே பகுதியளவான போராயத்தங்களைச் செய் திருந்தது. உதாரணமாக, 1938-ல் அமெரிக்கா தற்காப்புத் திட்டங் களை மும்முரமாகச் செயற்படுத்தியிருந்தது. 1940ஆம் ஆண்டின் தேர்வுப் பணிச் சட்டப்படி (Selective Service Act) இராணுவத்திற்கு முதன்முறையாகப் பலர் கட்டாயமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருந்த னர். அடுத்து லெண்ட்-லீஸ் சட்டம் (Lend-lease சட்டம்) 1941ஆம் ஆண்டு மார்ச் மாதம் 11ஆம் தேதி அமலில் வந்தபோது, அமெரிக்கப் பொருளாதாரம் போர்க் காலத்திய பொருளாதாரமாக மாறியது. டன்கர்க் என்ற இடத்திலிருந்து நேசநாடுகளின் படைகள் புறங்காண நேர்ந்த பின்னரும், ஃபிரான்சு போரில் வீழ்ச்சியடைந்த பின்னரும் அமெரிக்கப் போராயத்தங்கள் மும்முரமடைந்தன. நாட்டின் பாது காப்புப் பணிகளுக்கென காங்கிரஸ் 1940-ல் 17,692,000,000 டாலர் களையும் 1941-ல் 50,000.000,000 டாலர்களையும் ஒதுக்கியது. அட் லாண்டிக் கடலிலும், பசிஃபிக் கடலிலும் கப்பற் படையை வைத் திருப்பதற்கான ஏற்பாடு 1940-ல் செய்யப்பட்டது. போராயத்தத் திற்குத் தேவையான நிதிகளைப் பெருக்கும் குறிக்கோளில் ஃபெடரல் வரி வீதங்கள் 1941-ல் மிகுதியாக உயர்த்தப்பட்டன.

1941ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 7ஆம் தேதி ஜப்பானியர்கள் பெர்ல் துறைமுகத்தை (Pearl Harbour)த் தாக்கியதற்குப் பின்னரே அமெரிக்கப் போர்க்கோலம் தீவிரமடைந்தது. மேன்மேலும் ஆட் கள் இராணுவத்திற்கும் தொழிற்சாலைகளுக்கும் எடுக்கப்பட்டனர். பொறிவழிப் பண்ட உற்பத்தக் குறியீட்டெண் 1941-ல் 168-க்கு உயர்ந்தது. 1938-ல் இருந்த பொறிவழிப் பண்டக் குறியீட்டெண்ணை விட இது இரு மடங்கு அதிகம். நாட்டின் மொத்த ஆக்கம் 32 சத வீதம் அதிகரித்து 125,300 மில்லியன் டாலர்களாக உயர்ந்துநின்றது. என்றாலும், பெர்ல் துறைமுகத் தாக்குதலுக்குமுன்னர் அமெரிக்கா போதிய அளவில் எச்சரிக்கையாக இல்லாதிருந்தமையாலும், இரண் டாவது உலகப் போரில் அமெரிக்கா அவ்வளவு விரைவாக இறங் காது என்ற எண்ணம் ஓரளவிற்கு நிலவி வந்தமையாலும் சில துறைகளில் பற்றாக் குறைகள் தென்பட வாரம்பித்தன. மோட்டார் கார் உற்பத்தித் தொழில் இராணுவ உற்பத்தி முறைக்கு மாறிக் கொள்ள முடியவில்லை. எஃகு உற்பத்தியில் 16 மில்லியன் டன்களே அதிகப்படுத்த முடிந்தது. எந்திரக் கருவி உற்பத்தி குறைவாயிருந் தது. மருந்துகளைக்கூட அதிகமாகத் தயாரிக்க முடியவில்லை. தாமி

ரம், அலுமினியம், ரப்பர், குரோமியம் ஆகியவற்றின் இருப்புக்கள் போதவில்லை. நிதிசார் ஆபத்துக்களை அரசு ஏற்றுக்கொள்வதற்கான உத்தரவாதங்கள் கொடுக்கப்படாவிட்டால் தம்மால் உற்பத்தியளவுகளை அதிகப்படுத்துவதற்கில்லை என பல முக்கிய உற்பத்தியாளர்கள் அறிவித்தனர். இவ் வுத்தரவாதங்கள் கிடைத்த பிறகே இவர்கள் உற்பத்தியை அதிகப்படுத்துவதில் ஆர்வம் காட்டினர்.

போரில் அமெரிக்கா ஈடுபட்டவுடனும், சர்வதேச நெருக்கடியில் அமெரிக்காவின் நிலை என்ன என்பது தெரிந்தவுடனும் போராயத்த நிலையில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டது. 1942 ஆம் ஆண்டில் 60,000 விமானங்களும், 45,000 பீரங்கிகளும் தயாரிக்கப்பட வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். போராயத்த முயற்சிகளை ஒருங்கிணைத்துச் செயல்பட வைப்பதற்கென, போராயத்த அலுவலகம் (Office of War Mobilisation) ஒன்று 1943ஆம் ஆண்டு மே மாதம் ஏற்படுத்தப்பெற்றது. போர்ப் பொருள் உற்பத்தி வாரியம் (War Production Board), எண்ணை நிர்வாகத் துறை (Oil Administration), பொருளாதார நிலைப்பேறாக்க அலுவலகம் (Offiee of Economic Stabilisation), போர்த் தொழிலாளர் வாரியம், உணவு நிர்வாகத் துறை ஆகியவற்றின் நடவடிக்கைகளை மேற்பார்வை இடுவது போராயத்த அலுவலகத்தின் பணி.

ஜெர்மனி, நெதர்லாந்தின்மீது படையெடுத்த பின்னர் அமெரிக்கக் குடியரசுத் தலைவர் அவசர நிர்வாக அலுவலகம் (Office of the Emergency Management) என்றொரு அமைப்பினை ஏற்படுத்தினர். இதனிடம் உற்பத்தி நிர்வாக அலுவலகமும் (Office of the Production Management), விலை நிர்வாக அலுவலகமும் (Office of the Price Administration) இருந்தன. உற்பத்தி நிர்வாக அலுவலகமானது பண்ட உற்பத்தி, முன்னுரிமைகள் (Priorities), வாங்கற்பாடுகள், சாதனங்கள், தொழிலாளர் பிரச்சினைகள் ஆகியவற்றோடு தொடர்புடைய விவகாரங்களைக் கவனித்துக்கொண்டது. விலை நிர்வாக அலுவலகம், விலைகளைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தைப் பெற்றிருந்தது. 1941-ல் உற்பத்தி நிர்வாக அலுவலகத்தின் அதிகாரங்கள் அதிகப்படுத்தப்பட்டன. என்றாலும் இதன் பணிகள் விரைவாக நடைபெறவில்லையாதலால், நாட்டுப் பாதுகாப்பைப் பேணிடுவதற்கென அளிப்பு, முன்னுரிமை மற்றும் பங்கீட்டு வாரியத்தை (Supply, Priorities and Allocations Board) ஏற்படுத்தினர். இது ஒரு முக்கிய அம்மபபாகப் பணியாற்றியது. பேர்ல் துறைமுகத் தாக்குதலுக்குப் பின்னர் இவ்வாரியத்தின் அதிகாரங்கள் கூடுதலாயின. உற்பத்தி பற்றிய விவகாரங்கள் அனைத்தும் இதனிடம் விடப்பட்டன.

இரண்டாவது போர் நிகழ்ந்த காலத்தில் அமெரிக்கா மேற்கொண்ட நடவடிக்கைகளைப்பற்றி இனி தனித்தனியே ஆராய்வோம்.

*இராணுவத்தைப் பலப்படுத்தல் :*

ஐரோப்பாவில் போர் தொடங்கியவுடன் அமெரிக்கா மேற்கொண்ட முதல் வேலை இராணுவத்தைப் பலப்படுத்த முயன்றது. 18 முதல் 45 வயது வரையிலான ஆடவரும் பெண்டிரும் முதலில் பதிவு செய்யப்பட்டு, பிறகு இராணுவத்திற்கு எடுத்துக்கொள்ளப்பட்டனர். சுமார் 15,000,000 ஆடவரும் பெண்டிரும் நாட்டுப் பாதுகாப்புப் பணியில் ஈடுபடுத்தப் பெற்றனர். இவர்களில் சுமார் 10 மில்லியன் பேர்கள் இராணுவத்திலும், 4 மில்லியன் பேர்கள் கப்பற் படையிலும் இருந்தனர். இலட்சக்கணக்கான பாதுகாப்புப் படையினருக்கு ஊண், உடை, இருக்கை ஆகியவற்றைக் கொடுத்தலும், அவர்களை உரிய இடங்களுக்கு உடனுக்குடன் அனுப்பிவைத்தலும், தேவையான பயிற்சிகளை அவ்வப்போது வழங்கலும் சாதாரணச் செயலாக இருக்கவில்லை.

போர்க்களங்கள் உலகின் பல பாகங்களில் இருந்தன. இவற்றில் பல எதிரிகளின் எல்லைகளில் அமைந்திருந்தன. இவ்விடங்களுக்குப் படைவீரர்களை அனுப்பிவைப்பதோடு பணி முடிந்துவிடவில்லை. அவர்களுக்குத் தேவையான பொருள்களையும் அடிக்கடி அனுப்பிக்கொண்டிருப்பது பெரிதும் அவசியமாயிருந்தது. முகாம்கள், சாலைகள், துறைமுகங்கள், விமானத் தளங்கள் ஆகியவற்றைப் பலஇடங்களில் நிர்மாணிப்பதற்குத் தேவையான பல்வேறு பொருள்கள் மற்றும் சாதனங்கள், தரைப்படை, கப்பற்படை வீரர்களை நோய் நொடிகளிலிருந்து காப்பாற்றுவதற்கு அத்தியாவசியமான மருத்துவர்கள், மற்றும் மருந்து வசதிகள் முதலியவற்றை அனுப்பி வைப்பது ஓர் அசாதாரணச் செயலாயிருந்தது. ஏழு கடல்கள்மீது சீறிப் பாயும் கப்பற்படை ஒன்றை எழுப்புவதிலும், இயங்க வைப்பதிலும் அமெரிக்கர்களுக்கு உண்மையிலேயே பல சிரமங்கள் இருந்தன.

*போர்த் தளவாட உற்பத்தி:*

இதுவரை நுகர்ச்சிப் பொருள்களையும், முதற் கருவிப் பொருள்களையும் தயாரித்துவந்த பல்லாயிரக்கணக்கான தொழிற்சாலைகள் தற்போது போர்த் தளவாடங்களை உற்பத்திசெய்யத் தொடங்கின. மோட்டார் வண்டிகளைத் தயாரித்துவந்த தொழிற்சாலைகள் ஆகாய விமானங்களையும், டாங்குகள் மற்றும் ஜீப்புகளையும் தயாரிக்கலாயின. எந்திரங்களின் உற்பத்தி நான்கு மடங்காகவும், ஆகாய

விமானங்கள், கப்பல்கள் முதலியவற்றின் உற்பத்தி 7 மடங்காகவும் அதிகரித்தன. போர்த் தளவாட உற்பத்திக்கு ஒதுக்கப்பட்ட பணம் அதிகப்படுத்தப்பட்டது. '1939-ல் இந்த நாடு தனது வருமானத்தில் 2 சதவீதத்தைப் போருக்காகவும், 70 சத வீதத்தைப் பொதுமக்கள் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகவும், மீதி 28 சதவீதத்தை அரசுச் செலவுக்காகவும் செலவிட்டது. ஆனால் 1944-ல் நாட்டு வருமானத்தில் 40 சதவீதத்தைப் போருக்காகச் செலவிட்டது'. என ஜே. ஏ. க்ருக் (J. A. Krug) என்பார் தெரிவித்தார். தனக்குத் தேவையான தளவாடங்களே அல்லாது, பிரிட்டனுக்கும் ரஷ்யாவுக்கும் தேவையான தளவாடங்களையும் அமெரிக்கா ஓரளவிற்குத் தயாரிக்க வேண்டியிருந்தது. போர்க்காலத்தில் ஆயிரக்கணக்கான விமானங்களையும், 100,000 ட்ரக்குகளையும், ஜீப்புகளையும், 6 மில்லியன் டன் எடையுள்ள எஃகுப் பொருள்களையும், ஒரு பில்லியன் டாலர் மதிப்புள்ள போர்க் கருவிகளையும் பிரிட்டனுக்கு அமெரிக்கா அனுப்பியது. 40,000 ட்ரக்குகளையும், 50,000 ஜீப்புகளையும், 700 டாங்குகளையும் ரஷியாவிற்கு அனுப்பி வைத்தது. 1940 முதல் 1945 வரையிலான 5 ஆண்டுகளில் அமெரிக்கா போர்த் தளவாட உற்பத்திக்கென செலவிட்ட தொகை 186,000 மில்லியன் டாலர்கள் ஆகும்.

1941ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் அமெரிக்காவிடம் 1157 விமானங்களும், கிட்டத்தட்ட அதே அளவு டாங்குகளுமே இருந்தன. ஆனால், 1945க்குள் 86,000 டாங்குகளையும், 17,400,000 சுழல் துப்பாக்கிகளையும், 297,000 விமானங்களையும், ஆயிரக்கணக்கான போர்க் கப்பல்கள் மற்றும் சரக்குக் கப்பல்களையும் அது தயாரித்துத் தம் வசம் வைத்துக்கொண்டது. இக்காலப் பகுதியில் லெண்ட்-லீஸ் திட்டப்படி சுமார் 49,000,000,000 டாலர் மதிப்புள்ள பொருள்களையும் அமெரிக்கா மற்ற நாடுகளுக்கு அனுப்பி வைத்தது. ஒரு குறுகிய காலப் பகுதிக்குள் விமானத் தயாரிப்புத் தொழில் நாட்டின் மிகப் பெருந் தொழிலாகத் திகழ்ந்தது இங்கே குறிப்பிடத்தக்கது. அதில் 15 மில்லியன் தொழிலாளர்கள் வேலையிலிருந்தனர். அமெரிக்காவும் பிரிட்டனும் விமான உற்பத்தியைப் பெருக்கியது, போரில் வெற்றி பெறுவதற்குப் பேருதவி புரிந்தது எனலாம். விமானப் படையைப் போல் கப்பல் தயாரிப்பிலும் அமெரிக்கா சாதனைகளை நிகழ்த்தியது. ஜெர்மானிய நீர்மூழ்கிக் கப்பல்கள் 1941-க்குள் பல அமெரிக்கக் கப்பல்களை அழித்துவிட்டன. ஆனால், அமெரிக்கா இதனால் துவண்டு விடவில்லை. 1941-ல் 3 மில்லியன் எடையுள்ள வர்த்தகக் கப்பல்களையும், 1943-ல் 9 மில்லியன் எடையுள்ள வர்த்தகக் கப்பல்களையும் கட்டி முடித்து, நேச நாடுகளுடன் இணைந்து, ஜெர்மானிய நீர் மூழ்கிக்கப்பல்களை எதிர்த்துப் போராடி வெற்றி பெற்றது. தொழில் நுட்பம்

வளர்ந்ததன் விளைவாகப் பெரிய பெரிய கப்பல்களை மிகவும் குறைந்த காலத்தில் தயாரிக்கும் ஆற்றல் அமெரிக்காவிடம் இருந்தது.

**பொதுமக்களுக்குத் தேவையான பண்டங்களைத் தயாரித்தல் :**

போர்த் தளவாடங்களை உற்பத்தி செய்ய முயன்றதோடு, பொது மக்களுக்குத் தேவையான பண்டங்களைத் தயாரிப்பதிலும் அரசு ஆர் வம் காட்டியது. எனவே, பண்டப் பற்றுக்குறைகள மிகுதியாயிருக்க வில்லை. 1939ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்திலிருந்து 1941ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்திற்குள் தொழிலுற்பத்தி இரு மடங்கு அதிகரித்தது. உற்பததியன் கணிசமான பகுதி ஏற்றுமதி செய்யப்பட்டதால் நாட் டின் ஏற்றுமதிகள் அதிகரித்தன 1939-ல் அமெரிக்காவின் ஏற்றுமதி கள் மதிப்பு 3,117,000,000 டாலர்கள். இது, 1941-ல் 5,147,000,00) டாலர்களாக உயர்ந்தது. போர்க்காலத்தில் தொழிலாளரின் வே வாய்ப்புகள் அதிகரிததமையாலும், தொழிலாளர் ஊதியங்க உயர்ந்தமையாலும், நுகர்ச்சிப் பண்டங்களுக்கான தேவை மிகுதி யடைந்தது. உற்பததிப பெருக்கத்திற்கு இதுவும் ஒரு காரணமாக அமைநதது. நிலக்கரி, எண்ணெய் முதலிய எரி பொருள்களின் உற்பத் திக குறியீட்டெண் (1935—39=100); 1944-ல் 145ஆக உயர்ந்தது. உறுதிப் பொருள்களின் குறியீட்டெண் 1943-ல் 360 ஆக உயர்ந்தது. 1939-ல் இது மிகவும் குறைவே. தொழிலுற்பத்திக் குறியீட்டெண் 1943-ல் 239 ஆக உயர்ந்தது. கனிப்பொருள் உற்பதிக் குறியீட் டெண் 1942-ல 148-க்கு உயர்ந்தது. 1943-க்குள் எல்லா உற்பத்தித் துறைகளும் தேவைக்கு வேண்டிய அளவு உற்பத்தியைப் பெருக்கி விட்டன.

தொழில் உற்பத்தியைப்போல் விவசாய உற்பத்தியும் நன்கு பெருகிற்று. 194ஆம் ஆண்டில் விவசாய உற்பத்தி 1939-ல் இருந் ததை விட 36சதவீதம் மிகுதியாயிருந்தது. புதுக்கொள்கை காலததில் விவசாயிகளுக்குப் பண உதவிகள் கிடைத்ததன் காரணமாகவும், நிலத்தின் வளததைப் பாதுகாப்பதற்கும், பண்ணைகளை மின் மயமாக் குவதற்கும் மிகுதியான முக்கியத்துவம் கொடுக்கப்பட்டதன் காரண மாகவும் விவசாயத்தில் செழிப்பு நிலை தோன்றியது. விளைச்சல் அமோகமாயிருந்ததோடல்லாது முட்டை, பால் ஆகியவையும் அபரி மிதமாய்க் கிடைத்தன. பண்ணைத் தொழிலாளரின் ஆக்கப்பாடு (Productivity) 25 சதவீதமும், அவர் வருமானங்கள் இரு மடங்கும் அதிகரித்தன. என்றாலும், லெண்ட்-லீஸ் திட்டப்படி உணவுப்பண் டங்களும் வேறு சில பொருள்களும் மற்ற நாடுகளுக்குப் போர்க் காலத்தில் ஏற்றுமதியான போது, உணவுப்பொருள் நுகர்ச்சியைக் குறைக்க வேண்டியது சற்று அவசியமாயிற்று. பங்கீட்டு முறையும்

விலைக்கட்டுப்பாடும் நடைமுறைக்கு வந்தன. ஆனால், இவற்றால் எந்தவிதக் குழப்பமோ அல்லது துன்பமோ மக்களுக்குப் பெருமளவில் ஏற்படாதவாறு அரசு பார்த்துக் கொண்டது.

*பங்கீடும் (Rationing) விலைக்கட்டுப்பாடும்:*

இரண்டாவது உலகப்போர் சமயத்தில் பண்டங்களின் விலைகள் 33 சதவீதம் உயர்ந்தன. விலைக்குறியீட்டெண் 133 ஆக உயர்ந்தது (1939 = 100). முதல் உலகப்போர்க் காலத்தில் விலைகளைக் கட்டுப்பாடு செய்யாததால் போரின் செலவுகள் மிகுதியடைந்தன; மக்களின் வாழ்க்கைத்தரம் குறைந்தது. இவை இரண்டாவது உலகப்போரின் போதும் நிகழக்கூடாது என விரும்பிய அமெரிக்க அரசு விலைக்கட்டுப்பாட்டிற்கும் பங்கீட்டுமுறைக்கும் முக்கியத்துவம் வழங்கிற்று. இதற்கென 1940-ல் தேசியப் பாதுகாப்பு ஆலோசனைக் குழு (National Defense Advisory Commission) வின் மேற்பார்வையின்கீழ் விலைநிலை பேருக்கத்துறையை (Division of Price Stabilisation) ஏற்படுத்தியது. போர் மும்முரமடைந்து பிரச்சினைகள் தீவிரமடைந்தபோது, 1941ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் விலை நிலைபேருக்கத்துறை, விலை நிர்வாக அலுவலகம் (Office of the Price Administration) என மாற்றியமைக்கப்பட்டது.

போர் தொடங்கிய பின்னர், காங்கிரஸ் 1942ஆம் ஆண்டு ஜனவரி மாதம் அவசர விலைக்கட்டுப்பாட்டுச் சட்டத்தை இயற்றி, விலைகள் மற்றும் வாரங்களைக் கட்டுப்பாடு செய்யும் அதிகாரத்தை விலை நிர்வாக அலுவலகத்திற்கு வழங்கியது. இவ்வலுவலகம் கட்டுப்பாடுகளை மீறுவோருக்குத் தண்டனையையும் தரலாம். முன்பைவிட இப்போது பண்டங்களும் பணிகளும் மிகுதியாகத் தயாராயின. ஆனால், மக்களின் வருமானங்கள் பெருகி விட்டமையால் அவர்களுடைய வாங்குந்திறன் அதிகரித்துத் தேவையும் உயர்ந்தது. உதாரணமாக, 1942-ல் மக்களின் வருமானங்கள் 117 பில்லியன் டாலர்கள். இதில் 31 மில்லியன் டாலர்கள் வரிகள், சேமிப்பு, கடன் ஆகியவற்றிற்குச் சென்றன. 86 பில்லியன் டாலர்கள் நுகர்ச்சிக்கெனச் செலவிடுவதற்கு ஒதுக்கப்பட்டது. ஆனால், அவ்வாண்டில் உற்பத்தியான பண்டங்கள் மற்றும் பணிகளின் மதிப்பு 67 பில்லியன் டாலர்களே. எனவே, 17 பில்லியன் டாலர் மதிப்புக்கு ஈடான பணவீக்கப் பிளவு (Inflationary gap) உண்டாகியது. இதை அப்படியே விட்டு விட்டால் பண்டங்களின் விலைகள் மேல் நோக்கித் தாவும். ஆகையால், வரிகளை உயர்த்தல், பத்திரங்களை விற்றல், பண்டங்களைத் தவணை முறையில் வாங்குவதைத் தடை செய்தல், பங்கீட்டையும் விலைக் கட்டுப்பாட்டையும் நடைமுறைப் படுத்தல் ஆகியவை மூலம் அரசு இந்தப் பண வீக்கப் பிளவை நீக்குவதற்கு முயன்றது.

1942ஆம் ஆண்டு ஜனவரி மாதம் விலை நிர்வாக அலுவலகத்தின் பங்கீட்டுத் திட்டங்கள் அமலுக்கு வரத் தொடங்கின. முதலில் டயர்கள் பங்கீட்டு முறைக்கு உட்பட்டன. 1942ஆம் ஆண்டின் மே மாதத்தில் விலை நிர்வாக அலுவலகம் பெட்ரோலைக் கிழக்குக் கடற்கரைப் பிரதேசத்திலும், அதன் பின்னர் நாடு முழுவதும் பங்கீடு செய்தது. அவ்வாறே எரியெண்ணெயும் முதலில் கிழக்குப் பிரதேசத்திலும் பின்னர் நாடு முழுவதிலும் பங்கீடு செய்யப்பட்டது. அடுத்து, சர்க்கரை மற்றும் காபி அளிப்பில் பற்றாக்குறைகள் எழவே, அவையும் பங்கீடு செய்யப்படலாயின. மக்கள் பங்கீட்டு வில்லைப்புத்தகங் (Stamp Books) களைக் கொண்டுதான், சர்க்கரையையும் காபியையும் வாங்க முடியும்.

லெண்ட்-லீஸ் நாடுகளும், இராணுவமும் உணவுப் பண்டங்களை நிறைய வாங்கி வந்தமையால், இவை பொதுமக்களுக்குச் சரியாகக் கிடைக்கவில்லை. ஆகவே இவற்றையும் பங்கீட்டுமுறையில் விநியோகிப்பது அவசியமாயிற்று. 1943ஆம் ஆண்டு பெப்ரவரி மாதம் நுகர்வோர்கள் பதிவு செய்யப்பட்டனர். அதே ஆண்டின் மார்ச் மாதத்தில் புள்ளி முறையை (Point System) அடிப்படையாகக் கொண்ட பங்கீட்டு முறைப்படி, புட்டிகளிலும் டின்களிலும் பக்குவம் செய்து போடப்பட்ட உணவுப் பண்டங்கள் விநியோகம் செய்யப்பட்டன. ஏப்ரல் மாதத்திலிருந்து இறைச்சியும் இந்த முறையில் விநியோகம் செய்யப்பட்டது. புள்ளி முறைப்படி, மக்கள் பல புள்ளிகளைக் கொண்ட கூப்பன்களைப் பயன்படுத்திப் பண்டங்களை வாங்கினர். விலை நிர்வாக அலுவலகம் ஒவ்வொரு பண்டத்திற்கும் கொடுக்கும் புள்ளி மதிப்பைக் கொண்டு, எவ்வளவு பண்டங்கள் வாங்கப்பட முடியும் என்பது நிர்ணயிக்கப்படும். 1943ஆம் ஆண்டிற்குள் உணவுப் பண்டங்களில் சுமார் 95 சதவீதம் பங்கீட்டுக் குட்பட்டன. பொருள்களும் சிறந்த முறையில் விநியோகிக்கப்பட்டன. ஆனால் பங்கீட்டு முறையால் பற்றாக்குறையைப் போக்க முடியவில்லை.

பாதுகாப்புப் பகுதிகளில் வாரங்களைக் கட்டுப்பாடு செய்தல், வாழ்க்கைச் செலவைப் பாதிக்கக் கூடிய எல்லாவகைப் பண்டங்களின் விலைகளுக்கும் உச்ச வரம்பை ஏற்படுத்துதல் ஆகிய பணிகளும் விலை நிர்வாக அலுவலகத்திற்கு விடப்பட்டன. 1943ஆம் ஆண்டின் ஜூன் மாதத்திற்குள் பெரும்பாலான பாதுகாப்புப் பகுதிகளில் வாரம் கட்டுப்பாடு செய்யப்பட்டது என்பதும், இது விலை நிர்வாக அலுவலகத்தின் ஒரு குறிப்பிடத்தகுந்த சாதனை என்பதும் இங்கே நினைவு கூரத்தக்கது. அடுத்து, பண்டங்களின் விலைகளைக் கட்டுப்படுத்துவதற்கு இவ்வலுவலகம் முயன்றது. சமுதாய, பிராந்திய, தேசிய அடிப்படையில் விலைகளை நிர்ணயிப்பதற்கு அது முயன்றது. ஆனால் ஒரு சிறு

பான்மையினர் கட்டுப்பாடுகளை மீறினர். இதனால் பெட்ரோல், இறைச்சி முதலியவற்றின் விற்பனைகளில் 'கருப்பு அங்காடி'த் தொல்லை மிகுந்தது. இதனை விலை நிர்வாக அலுவலகத்தால் வெற்றிகரமாக ஒழிக்க முடியவில்லை என்றாலும், இவ்வலுவலகம் போர்க் காலத்தில் சிறப்பாகப் பணியாற்றியது என்பதை எல்லோரும் உணர்ந்தனர். 'சிரமங்களுக்கு மத்தியில் விலைநிர்வாக அலுவலகம் சிறப்பாகப் பணிபுரிந்தது. போர்ச் செலவுகளைக் குறைத்ததின் மூலம் வரி செலுத்துவோருக்குப் பில்லியன் கணக்கான டாலர்களைச் சேமித்துக் கொடுத்ததோடன்றி, குழப்பத்தையும் இன்னலையும் தடுக்கவும் உதவியது. பங்கீடும் விலைக்கட்டுப்பாடும் கொண்டுவரப் படாதிருந்தால் குழப்பமும் இன்னலும் உருவாகியிருக்கும் என்பது உறுதி.''

### தொழிலாளர் பிரச்சினைகள் :

தொழிலாளரைப் பொறுத்தவரையில் அரசுக்கு மூன்று முக்கிய பிரச்சினைகள் இருந்தன : (1) போருக்கு வேண்டிய பண்டங்களைத் தயாரிக்கும் தொழில்களுக்கு அனுபவமுள்ள தொழிலாளரைத் திரட்டுதல் ; (2) தொழிலாளர் பிரச்சினைகளையும், தொழிற் பூசல்களையும் நன்கு தீர்த்து வைக்கக்கூடிய ஒரு நல்ல கைக்கோளை நிறுவிச் செயல்படுத்துதல்; (3) அரசின் விலைக்கட்டுப்பாட்டுக் கொள்கையோடு உடன்பாடான ஒரு கூலிக் கைக்கோளை ஏற்படுத்தல். இம்மூன்று பிரச்சினைகளிலும் அரசு மிகவும் சாதுரியமாகவே நடந்து கொண்டது எனலாம். முதல் பிரச்சினையை அரசு வெற்றிகரமாகச் சந்தித்தது. அதில் பெரிய சங்கடங்கள் எதுவுமிருக்கவில்லை. தவிரவும், தொழிலாளர்களும் கடுமையாக உழைக்கவும், நீண்ட நேரம் பணிபுரியவும் இசைந்தனர். 1940-லிருந்து 1945-க்குள் தொழிலாளர் எண்ணிக்கை 54 மில்லியனிலிருந்து 64 மில்லியனுக்கு உயர்ந்தது. 1939ஆம் ஆண்டில் வேலை வாய்ப்பின்றி யிருந்துவந்த 9 மில்லியன் தொழிலாளர் அனைவரும் தற்போது வேலை வாய்ப்புக்களைப் பெற்றனர். பெண்களும் கூடுதலாக வேலைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டனர். தொழிற்சாலைகள், சுரங்கங்கள் ஆகியவற்றில் வேலை நேரங்கள் அதிகப்படுத்தப் பெற்றன. அதே நேரத்தில் தொழிலாளியின் ஆக்கத்திறனை அதிகப்படுத்தவும் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன. இவற்றின் விளைவாக நாட்டின் மொத்த உற்பத்தியும் தொழிலாளரின் ஆக்கத்திறனும் அதிகரித்தன. தொழிலாளருக்குப் பயிற்சி வழங்கும் நிலையங்கள் ஆங்காங்கு ஏற்பட்டன. எல்லாமே திருப்திகரமாக அமைந்திருந்த நிலையில் பாதுகாப்புப் பகுதிகளில் மட்டும் வீட்டு வசதிகள் போதாமல் இருந்தமையாலும், அங்கே பலர் மிகவும் நெருக்கமாக வாழவேண்டி யிருந்தமையாலும், பல நோய்கள் பெருகி மக்களைத் துன்புறுத்தின.

அரசின் கொள்கைகளை ஏற்றுத் தொழிலாளர்கள் நல்ல ஒத்துழைப்பை நல்கி வந்தனர். வேலை நிறுத்தம் செய்வதில்லை என வாக்குறுதி கொடுத்தனர். என்றாலும், சில தனிப்பட்ட தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்வதைத் தடுக்க முடியவில்லை. 1942 முதல் 1945 வரை நிகழ்ந்த வேலை நிறுத்தங்களால் 35 மில்லியன் மணி நேர வேலையை நாடு இழக்க நேரிட்டது. ஆனால், மொத்த வேலை நேரத்தில் இது மிகவும் குறைவான சதவீதமாயிருந்ததனால் இதை யாரும் பெரிதாகப் பொருட்படுத்தவில்லை. போர்க் காலத்தில் கூலிகளைக் கட்டுப்பாடு செய்வதைப் பொதுவாகத் தொழிலாளர்கள் விரும்பவில்லை. விலைகளைக் கட்டுப்பாடு செய்யும்போது கூலிகளையும் கட்டுப்பாடு செய்யவேண்டும் என்ற கொள்கை அடிப்படையில் அரசு 1942-ல் கூலிகளைக் கட்டுப்படுத்த முயன்றதைத் தொழிலாளர்கள் அவ்வளவாக விரும்பவில்லை. எனவே, கூலிகளை ஓரளவிற்கு அதிகப்படுத்த அரசு ஒப்புக்கொண்டது. அதற்குப் பின்னரும் கூலிகளை உயர்த்தவேண்டும் என்ற கோரிக்கைகள் 1943, 1944ஆம் ஆண்டுகளில் தீவிரமடைந்து, வேலை நிறுத்தங்கள் மிகுதியடையலாம் என்ற நிலை உருவாகியபோது, காங்கிரஸ் போர்க்காலத் தொழிலாளர் பூசல் சட்டத்தை (War Labour Disputes Act) 1943-ல் இயற்றி, போர்க் கால உற்பத்தியைத் தடையின்றி இயங்கிட வைக்க முயன்றது. இச் சட்டப்படி போருக்குத் தேவையான பொருட்களைத் தயாரிக்கும் தொழில்களைக் குடியரசுத் தலைவரே எடுத்துக்கொண்டு நிர்வாகம் செய்யலாம்; வேலை நிறுத்தம் செய்யுமாறு தூண்டுபவர்கள்மீது நடவடிக்கை எடுக்கலாம். இச்சட்டத்தால் உடனடியாக எந்தவிதப் பலனும் விளையவில்லை. உண்மையில் 1943ஆம் ஆண்டைவிட 1944-ல் தான் மிகுதியான வேலை நிறுத்தங்கள் நிகழ்ந்தன.

### போருக்குப்பின் உண்டான மாறுதல்கள் :

போருக்குப் பின்னர், அமெரிக்கா உலகத்தின் மேற்குப்பகுதியின் ஒரு வலிவுமிகுந்த நாடாக உருமாறிற்று. உலகத்திலேயே செல்வ மிகுந்த நாடாகவும் திகழ்ந்தது. போர் முடிந்ததற்குப்பின் ஏற்பட்ட பொருளாதாரப் புனரமைப்பில் பெருத்த சங்கடங்கள் ஏதும் இருக்கவில்லை. போர்க்களத்திலிருந்து திரும்பி வந்தோர் உடனுக்குடன் வேலை வாய்ப்புக்களைப் பெற்றனர். அமைதிக் காலத் தேவைகளைப் பூர்த்திசெய்வதற்குரிய மாறுதல்கள் தொழில்களில்செய்யப்பெற்றன. போர்ப் பிற்கால மந்தமோ அல்லது தாங்கமுடியாத பணவீக்கமோ ஏற்பட்டிடவில்லை. நாட்டின் மொத்த ஆக்கம், நாட்டு வருமானம், தொழிலாளர் ஆக்கப்பாடு—இவை அத்தனையும் தொடர்ந்து அதிகரித்து வந்தன. 1940 முதல் 1950 வரை அமெரிக்க மக்கள் தொகை மிகவும் அதிகமாக வளர்ந்தது. அமெரிக்க வரலாற்றில் இப்படிப்

பட்ட மக்கள் தொகை வளர்ச்சி முற்றிலும் கேள்விப்படாதது எனப் பலர் கருதினர். வாழ்க்கைச் செலவுகள் உயர்ந்தன என்றாலும் கூலிகளும், சம்பளங்களும் கூடவே உயர்ந்தன. ஆதலால் மக்கள் பாதிக்கப்படவில்லை. விவசாயப் பண்டங்களின் விலைகள் நியாயமான மட்டங்களில் இருந்தன. தவிரவும் வெளி நாட்டுத் தேவையும் உள் நாட்டுத் தேவையும் மிகுதியாயிருந்தது. எனவே அமெரிக்க விவசாயம் செழிப்பு நிலையிலிருந்தது. அரசின் உதவிகள் அதற்கு மிகுதியாகக் கிடைத்து வந்தன.

இரண்டாவது உகைப் போருக்குப்பின் ஏற்பட்ட மாறுதல்களை இனி சற்று விரிவாகக் காண்போம்.

பழைய இயல்பான நிலைக்குப் பொருளாதாரத்தைக் கொண்டு வரும் முயற்சி துரிதமாகவும் வெற்றிகரமாகவும் நடைபெற்றது. கட்டுப்பாடு உடனே கைவிடப்பட்டது. துரதிருஷ்டவசமாக இதைத் தொடர்ந்து பணவீக்கம் தலையெடுத்தது. 'பணவீக்கம் ஏற்பட்டதன் உடனடி விளைவுகள் தொழிலாளர் அமைதியின்மையும், முதல் உலகப் போருக்குப் பின்னர் உருவாகிய வேலை நிறுத்தமும் ஆகும், (ஃபால்க்னர்). தொழிற் பூசல்கள் வளர்வதைக் கண்ணுற்ற அரசு, அவற்றைத் தடுப்பதற்கான சில சட்டங்களை இயற்றியது. இவை தொழிலாளர் நலன்களைப் பாதிப்பனவாயிருந்தன. ஆகையால் தொழிலாளர்கள் அரசுமீது அதிருப்தி கொண்டனர். இதன் விளைவாகப் பொருளாதாரம் முழுவதும் நிச்சயமின்மையும் பொறுமையின்மையும் தென்படலாயிற்று. 1946-ல் நடந்த தேர்தலில் வெற்றிபெற்ற காங்கிரஸ் உறுப்பினர்களில் பெரும்பான்மையோர் குடியரசுத் தலைவர் கட்சியைச் சார்ந்தவர்களாக இல்லை. எனவே அரசு, காங்கிரசின் ஒத்துழைப்பைப் பெற முடியவில்லை. இதனால் அமைதிக் காலத்திற்கு—குறிப்பாகப் போர்ப் பிற்கால ஆண்டுகளுக்குத் தேவையான-சீரமைப்புத் திட்டங்களை அரசால் நடைமுறைக்குக் கொண்டுவர முடியவில்லை. மேலும், புதிய காங்கிரஸ் மன்றம் தொழிலாளருக்கு எதிரான சட்டங்களை இயற்றியது. ஆகவே, அமெரிக்கத் தொழிலாளர்கள் அரசுக் கொள்கையை வெறுத்து வன்முறைகளில் ஈடுபட்டனர்.

1946-ல் மட்டும் 5000 தொழிற் பூசல்கள் தோன்றின. இவற்றில் 45,00,000 தொழிலாளர்கள் பங்கு கொண்டனர். நிலக்கரிச் சுரங்கத் தொழில், எஃகு உற்பத்தித் தொழில், மோட்டார்கார் தொழிற்சாலைகள் ஆகியவை இத்தொழிற் பூசல்களால் பாதிக்கப்பட்டன. நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் வேலை நிறுத்தம் தீவிரமடையவே இச் சுரங்கங்களை அரசே ஏற்று நிர்வகிக்கலாயிற்று. கூலி உயர்வுகளைப் பெறுவதில் தொழிலாளர்கள் வெற்றிபெற்றனர் என்றாலும்,

தொழிலாளர்கள் அடிக்கடி வேலை நிறுத்தம் செய்து வருவதைக் கண்ட பொதுமக்கள் அவர்கள்மீது வெறுப்புக் கொண்டனர். 1947-ல் இயற்றப்பட்ட டாஃப்ட்-ஹார்ட்லி சட்டம் (Taft-Hartley Act) தொழிலாளர்களின் நேர்மையற்ற முறைகளைக் கண்டித்தது. கட்டாயப்படுத்தி உறுப்பினர்களைச் சங்கத்தில் சேர்ப்பது, சங்கத்தில் இல்லை என்பதற்காக ஒருவருக்குப் பேதம் காட்டுவது, கூட்டு பேரம் செய்ய மறுப்பது, பணியாற்றாமலே முதலாளிகளிடம் கூலி கேட்பது முதலியவை நேர்மையற்ற முறைகள் என இச்சட்டம் கூறியது. வேலை நிறுத்தம் செய்யப் போவதாக 60 நாட்களுக்கு முன்பே சங்கங்கள் முதலாளிகளுக்கு முன்னறிவிப்புக் கொடுக்கவேண்டும். முன்னறிவிப்புத் தராமல் வேலை நிறுத்தம் செய்யும் சங்கங்கள் முதலாளிகளுடன் பேரம் செய்யவோ அல்லது ஒப்பந்தம் செய்துகொள்ளவோ முடியாது. முன்னறிவிப்பு கொடுத்ததிலிருந்து 30 நாட்களுக்குள் தொழிலாளர்கள் முதலாளிகளுடன் ஒப்பந்தம் செய்துகொள்ளலாம். அப்படி ஒப்பந்தம் ஏற்படவில்லையென்றால் பூசலைப்பற்றி ஃபெடரல் அரசின் மத்தியஸ்தக் குழுவினரிடமோ அல்லது மாநிலஅரசு மத்தியஸ்தக் குழுவினரிடமோ தெரிவிக்கவேண்டும். புதிய சட்டத்தை அமல் செய்யும் பொறுப்பு தேசியத் தொழிலாளர் நல்லுறவுச் சபையிடம் (National Labour Relations Board) ஒப்படைக்கப்பட்டது. இச் சட்டத்தில் சில முக்கிய குறைகள் இருந்தமையால் குடியரசுத் தலைவர் ட்ரூமன் இதனை ஏற்க மறுத்தார். ஆனால், காங்கிரஸ் மன்றம் இதை மீண்டும் இயற்றியது. நூற்றாண்டுகளாகத் தொழிலாளர்கள் போராடியடைந்த வெற்றி வீணாயிற்று என்றும், தொழிலாளர்களை இச்சட்டம் அடிமைகளாக்கிவிடும் என்றும் தொழிலாளர் தரப்பில் வாதாடப்பட்டது. ஆனால் சட்டத்தை ஆதரித்தோர், சட்டம் முதலாளிகளின் பேர சக்தியை மிகுதியாக்கித் தொழிலாளி—முதலாளி உறவில் சம நிலையைத் தோற்றுவிக்கும் என எடுத்துரைத்தனர்.

இரண்டாவது உலகப் போர் சமயத்தில் தொழிலாளர் சங்கங்கள் நன்கு வளர்ந்தன. போர் முடிந்த நிலையில் அமெரிக்கத் தொழிலாளர் ஃபெடரேஷனிடம் (American Federation of Labour) 6 மில்லியன் உறுப்பினர்கள் இருந்தனர். மற்ற தொழிலாளர் அமைப்புக்களிடமும் இதேபோல் இலட்சக்கணக்கான உறுப்பினர்கள் இருந்தார்கள். போருக்குப்பின்னரும் தொழிலாளர்கள் வளர்ந்தனர். இதற்குக் காரணங்கள் நாட்டில் செழிப்பு வளர்ந்தமையும், கூடுதலான அளவில் தொழிலாளர்கள் தேவைப்பட்டமையும் ஆகும்.

போருக்குப்பின் தொழிலாளர்கள் வெளி நாட்டினரின் குடியிறக்கம் (Immigration) பற்றிய கருத்துக்களை மாற்றிக்கொள்ளவில்லை. 1924-ல் ஏற்படுத்தப்பட்டிருந்த கோட்டா முறையை, 1952-ல் இயற்

றப்பட்ட மக்காரன்-வால்டர் சட்டம் (McCaren-Walter Act) நீடித்தது. ஆண்டுதோறும் 154,657 பேர்களுக்குமேல் அமெரிக்க நாட்டில் குடியேற முடியாது. 1948 முதல் ஐரோப்பாவிலிருந்து குடிபெயர்ந்து வருவோருக்குக் குடியிருக்க அனுமதி கிடைத்தது. 1952-க்குப் பின்னர், ஆசியா மற்றும் பசிபிக் பிராந்திய மக்கள் குடியிறக்கத்திற்கு அனுமதி பெற்றனர்.

தொழில் துறையைப் பொறுத்தவரையில் மறு சீரமைப்புக்கள் மிகவும் விரைவாக நடந்தேறின. 1947-க்குள் போர்க்காலப் பொருளாதாரத்தை அரசு பழையபடி மாற்றியமைத்தது. போர்க் காலத்தில் பல பண்டங்கள் மக்களுக்குப் போதிய அளவில் கிடைக்காதிருந்ததை அறிந்திருந்த அரசு, போர் முடிந்தவுடன் அப்பண்டங்களை மக்களின் தேவைகளுக்கேற்றவாறு உற்பத்தி செய்வதற்கான நடவடிக்கைகளை மேற்கொண்டது. போர்க்காலப் பொருளாதாரத்தை மாற்றி யமைத்ததன்மூலம் ஏற்பட்ட வேலை வாய்ப்பின்மை யளவு மிகவும் குறைவே. போருக்குப்பின் உண்மையில் வேலை வாய்ப்புக்கள் நன்கு அதிகரித்தன. ஏனென்றால், போருக்குப் பின்னரும் வாணிபத்தில் செழிப்பு நிலை தொடர்ந்து நீடித்தது; நுகர்வோர்கள் பண்டங்கள் மற்றும் பணிகள்மீது கூடுதலான தொகைகளைச் செலவிட்டனர்; புதிய கட்டுமானம் மற்றும் எந்திரங்கள்மீது தொழிலதிபர்கள் நிறையச் செலவிட்டனர். இவை காரணமாக, வேலையிலிருந்தோர் எண்ணிக்கை 54 மில்லியனிலிருந்து (1945) 61 மில்லியனுக்கு 1952-ல் உயர்ந்தது. நுகர்வோர் செலவீட்டுத் தொகை அதிகரிப்பால் உற்சாகமுற்ற உற்பத்தி நடவடிக்கைகள், மென்மேலும் அதிகரித்துக் கொண்டே போயின. போர்க்காலத்தில் கிடைக்காத பல புதிய பண்டங்கள் மக்களுக்குத் தற்போது கிடைத்தன. உற்பத்திப் பெருக்கத்தையடுத்து நாட்டின் ஏற்றுமதிகள் கூடுதலாயின. போருக்குப் பின்பு அமெரிக்கா ஆண்டு ஒன்றிற்கு 20,000 மில்லியன் மதிப்புள்ள பொருள்களை ஏற்றுமதி செய்தது.

போர் முடிவுற்ற பின்னர், பொதுவாக ஒவ்வொரு நாட்டிலும் பற்றாக் குறையும் பணவீக்கமும் ஏற்படுவது இயற்கை. இதற்கு அமெரிக்காவும் விலக்கன்று. இரண்டாவது உலகப் போரின்போது மக்களின் தேவை அதிகரித்த அளவில் பண்ட உற்பத்தி அதிகரிக்கவில்லை. ஆகையால் பல பொருள்களைப் பொறுத்தவரையில் மக்கள் பற்றாக்குறையை அனுபவித்தனர். ஆனால், போர் நின்றதற்குப் பின்னர், அமெரிக்க அரசு போர்த் தளவாட உற்பத்தியை நிறுத்திவிட்டு, பொதுமக்களுக்குத் தேவையான பண்டங்களைத் தயாரிக்க முயன்றதால் இரண்டாண்டுகளுக்குள் பண்டப் பற்றாக் குறை ஓரளவிற்கு நீங்கியது. என்றாலும், வீடுகள் மோட்டார்கார்கள் முதலியவற்றில்

தொடர்ந்து பற்றாக்குறை நீடிக்கவே செய்தது. வீடுகளைக் கட்டுவதற்கு வேண்டிய சாதனங்களும் தொழிலாளர்களும் கிடைக்கவில்லை. மேலும் கட்டுமானச் செலவுகளும் மிகுதியாயிருந்தன. இதனால் கட்டிடத் தொழில் மந்தமாயிருந்தது. கட்டிடத் தொழிலை ஊக்குவிப்பதற்காகக் காங்கிரஸ் 1946-ல் 400 மில்லியன் டாலர்களை ஒதுக்கி உதவிக் கொடைகளை வழங்குவதற்கு ஏற்பாடு செய்தது. அதோடு, மக்களுக்கு வீடு கட்டிக்கொள்வதற்குத் தாராளமாகக் கடன் வசதிகளை வழங்கவும் ஏற்பாடு செய்தது. போரிலிருந்து திரும்பிய வீரர்களுக்கு இவ்வுதவிகள் எளிதில் கிடைத்தன; இவ்வுதவிகள் நல்ல பலனை ஈந்தன. 1950 ஆம் ஆண்டிற்குள் 4·8 மில்லியன் புதிய வீடுகள் கட்டப்பெற்றன. அவ்வாண்டிற்குள் பல பண்டங்களின் பற்றாக்குறைகள் மறைந்தன. அத்தியாவசியப் பொருட்களின் பற்றாக்குறையைப் போக்கியவுடன் அரசு கிராமப் புறங்களுக்கு மின் இணைப்புக்களை வழங்குவதில் ஆர்வம் காட்டியது. டெலிவிஷன் போன்ற புதிய பொருள்கள் பல இலட்சக்கணக்கான மக்களின் வீடுகளை அலங்கரிக்கலாயின.

பற்றாக்குறைப் பிரச்சினை மறைந்தது. என்றாலும், பணவீக்கப் பிரச்சினை நெடுங்காலத்திற்கு நீடித்தது. ஆனால், முதல் உலகப் போர்க் காலத்தில் இருந்த அளவிற்குப் பணவீக்கம் இரண்டாவது உலகப் போர்க் காலத்தில் தீவிரமாயிருக்கவில்லை. இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர் கட்டுப்பாடுகளை அரசு அகற்றியபோது விலைகள் உயர வாரம்பித்தன. 1945-ல் விலைக் குறியீட்டெண் 128.6 ஆக இருந்தது. இது 1952-ல் 189.7-க்கு உயர்ந்தது. 1952-க்குப் பிறகும் பணவீக்கச் சூழ்நிலைகள் நாட்டில் தொடர்ந்து இருந்து வந்தன. பணவீக்கம் தோன்றியதற்கு முக்கிய காரணங்கள் அரசு கட்டுப்பாடுகளைக் கைவிட்டதும், மக்களின் வாங்குந் திறன் அதிகரித்ததும் ஆகும். போர்க் காலத்தில் அரசு பின்பற்றிய நிதிக் கொள்கையும் ஓரளவிற்குக் காரணமாயிருந்தது. 1946-க்குப் பின்னர் பல மாறுதல்கள் நிகழ்ந்தன. 1950ஆம் ஆண்டின் பாதுகாப்புப் பொருள் உற்பத்திச் சட்டப்படி (Defence Production Act) விலை, கூலி, கடன் வழங்கல் முதலியவற்றைக் கட்டுப்பாடு செய்யும் அதிகாரம் குடியரசுத் தலைவருக்குக் கொடுக்கப்பட்டது. விரும்பினால் பங்கீட்டு முறையையும் குடியரசுத் தலைவர் நடைமுறைப் படுத்தலாம். 1952-ல் மொத்த அங்காடி பரிவர்த்தனைகளில் 76 சதவீதம் கட்டுப்பாடுகளுக் குள்ளிருந்தது. ஆனால், 1953-ல் ஐசநோவர் (Eisenower) பதவிக்கு வந்ததும் ஃபெடரல் விலைக் கட்டுப்பாடுகள் அனைத்தும் கைவிடப்பெற்றன. இதன் காரணமாக விலைகள் மீண்டும் உயர்ந்தன.

# 16. சமூகப் பாதுகாப்புத் திட்டம்
## (Social Security Programme)

இன்றைக்கிருக்கும் தொழிற் சமுதாய மக்கள் பொறிவழித் தொழில், சுரங்கத்தொழில், வாணிபம், வர்த்தக வகை, விவசாயம் முதலியவற்றில் ஈடுபட்டுள்ளனர். ஒரு மனிதன் வேலை வாய்ப்பைப் பெற முடியவில்லை என்றால், நோய் வாய்ப்பட்டிருந்தால் அல்லது முதுமை எய்தி வேலை செய்யும் சக்தியை இழந்திருந்தால் அவனால் சம்பாதிக்க முடிவதில்லை; தமது தேவைகளைப் பூர்த்தி செய்து கொள்ள முடிவதில்லை. அதாவது, அவனுக்குப் பொருளாதாரப் பாதுகாப்பு (Economic Security) என்பது கிடையாது. இவ்வாறு பொருளாதாரப் பாதுகாப்பு இல்லாது போவதனால் மக்களுக்கு ஏற்படக்கூடிய இடர்ப்பாடுகளை நீக்குவதற்காகக் கொண்டுவரப் பெற்றதுதான் சமூகப் பாதுகாப்புத் திட்டம். இத்திட்டத்தில் சமூக இன்சூரன்சும் (Social Insurance), பொது உதவித் (Public Assistance) திட்டங்களும் இடம் பெறுகின்றன. நோய், இயலா நிலை (Disability), முதுமை, வேலை வாய்ப்பின்மை முதலிய சில குறிப்பிட்ட இடர்ப்பாடுகளுக்குட்பட்டுச் சம்பாத்தியங்களை இழக்கும் தொழிலாளர்களுக்கு உதவி வழங்குந்திட்டம் சமூக இன்சூரன்ஸ் திட்டமாகும். இத்திட்டத்தின் கீழ் தொழிலாளர்களுக்குத் தரப்படும் உதவியானது, தொழிலாளர்கள் வேலையிலிருந்த கால அளவு, பெற்று வந்த ஊதியங்கள், இடர்ப்பாட்டின் இயல்பு ஆகியவற்றைப் பொறுத்தமையும். தொழிலாளர், வேலையளிப்போர், அரசினர் ஆகியோரின் பங்களிப்புக்களைக் கொண்ட நிதியிலிருந்து இவ்வுதவிகள் வழங்கப்படுகின்றன; பங்களிப்புக்களைக் கொடுத்துவரும் தொழிலாளர் மட்டுமே உதவி பெறும் தகுதியுடையோராவார். பொது உதவித்திட்டம் என்பது சமூக இன்சூரன்ஸ் திட்டத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டது ஆகும். உண்மையிலேயே தம்மைப் பராமரித்துக் கொள்ள முடியாத நிலையிலிருந்துவரும் மக்களுக்கு, பொது வருவாயிலிருந்து பெறப்படும் நிதியைக் கொண்டு உதவி வழங்குந்திட்டம் பொது உதவித்திட்டமாகும்.

இத்திட்டத்தின் கீழ் உதவி பெற விரும்புவோர் பங்களிப்புக்களைத் தர வேண்டியதில்லை; குறைந்த பட்ச வாழ்க்கைத் தரத்துக்குரிய வசதிகள் இல்லை என்பதை நிரூபித்தாலே போதுமானது. ஆனால், சம்பளத்திலிருந்த காலத்தில் இவர்கள் வரிகளைத் தவறாது செலுத்தி வந்திருக்க வேண்டும் என்பது முக்கியம். உதவி கோருவோரின் பொருளாதார நிலைமைகளுக்கு ஏற்றவாறும், கால நிலைகளுக்கேற்ற வாறும் உதவித் தொகையளவு மாறுபடும். அமெரிக்க ஐக்கிய நாட்டில் சமூகப் பாதுகாப்புத் திட்டமும், அரசு உதவித்திட்டமும் தற்போது நடைமுறையிலிருந்து வருகின்றன. இவற்றின் வரலாறும் இயல்புகளும் பற்றிய விளக்கம் இனி தொடர்கிறது.

**தொடக்கங்கள் :**

1930 ஆம் ஆண்டில் ஏற்பட்ட வாணிபப் பெருமந்தத்திற்குப் (Great Depression) பிறகுதான், சமூக இன்சூரன்ஸ் திட்டம் வேண்டும் என்ற கோரிக்கைகள் அமெரிக்க ஐக்கிய நாட்டில் எழுந்தன. பெருமந்தத்தின்போது நாட்டின் பெரும்பாலான மக்கள் தீவிரமாகப் பாதிக்கப் பட்டனர். அவர்களிடமிருந்த சேமிப்புக்களும் சொத்துக்களும் மிக விரைவில் கரைந்து போய், ஏழ்மையின் விளிம்பில் இடர்ப்பாடுகளுக் குட்பட்டபோதுதான், பொருளாதாரப் பாதுகாப்பின்மையால் உண்டாகும் அவதிகளைப்பற்றிச் சிந்தித்துப்பார்த்து சமூக இன்சூரன்ஸ் திட்டத்திற்கு ஆதரவளிக்க முன் வந்தனர். பெருமந்தத்திற்கு முன்னர், சமூக இன்சூரன்ஸ் திட்டத்தில் பொதுமக்கள் ஈடுபாடு காட்டவில்லை என்றாலும், சிறுவர்களை வேலைக்கு எடுத்துக் கொள்ளுதல், மகளிரை இரவு நேரங்களில் பணிபுரியத் தூண்டுதல் முதலியவற்றைக் கட்டுப்பாடு செய்வதற்கும் களைந்தெறிவதற்கும் உரிய வகையில் சட்டங்களை ஏற்படுத்த அரசு தயங்கிடவில்லை என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. இன்னல்கள் சூழும் தொழிலாளருக்கும் இன்ன பிற மக்களுக்கும் அரசு உதவிகளை வழங்க வேண்டும் என்பதை அரசியல் கட்சிகளும் வலியுறுத்தி வந்தன. உதாரணமாக, தியோடர் ரூஸ்வெல்ட் அவர்களின் முற்போக்குக் கட்சி (Progressive Party) யானது, 1913 ஆம் ஆண்டில் முதியோர்களுக்கு உதவித் தொகைகள் வழங்கப்படவேண்டும் என்று கேட்டுக்கொண்டது. நாட்டின் பல்வேறு பகுதிகளில் உள்ள வயோதிகர்கள் அடைந்துவரும் துன்பங்களைப் பற்றி உணர்ந்த பல மாநில அரசுகள் 1930 ஆம் ஆண்டு வாக்கில், முதியோர் உதவித் தொகைகளை வழங்குதல் தொடர்பாகப் பல சட்டங்களை இயற்றின. ஃபெடரல் தொழிலாளருக்கு இழப்பீட்டுக் (Compensation) தொகைகளை வழங்குவதற்குரிய ஏற்பாட்டைச் செய்யும் முதல் சட்டம் 1908 இல் இயற்றப்பட்டது.

இருபதாம் நூற்றுண்டின் தொடக்கம் முதல் சமூக இன்சூரன்ஸ் ஏற்பாடுகள் அமெரிக்காவில் ஓரளவுக்கு அதிகரித்தன எனலாம். முதியோர், விழி இழந்தோர், விதவைகள் ஆகியோருக்கு உதவி வழங்கும் முயற்சிகளில் பல மாநில அரசுகள் இறங்கின. விழி இழந்த நபர்களுக்கு உதவி வழங்கும் திட்டத்தை 1903இல் இல்லினய் முதன் முதலாகத் தொடங்கி வைத்தது. விதவைகளுக்கு உதவிகளை வழங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்வதற்குரிய சட்டம் ஒன்றை மிசௌரி (Missouri) 1911இல் இயற்றியது. முதுமைக்கால உதவித் தொகைகளை வழங்குவதற்கு அலாஸ்கா 1912இல் ஒரு சட்டம் இயற்றியது; ஆனல், அச்சட்டத்தை அரசியலமைப்புக்கு முரணனது என நீதிமன்றம் பிறகு நிராகரித்து விட்டது. முதியோர் உதவித் தொகை வழங்குதல் தொடர்பாக உறுதியான சட்டத்தை இயற்றிய பெருமை மொண்டான (Montana) வைச்சாரும்; 1923இல் அது இயற்றிய சட்டம் நீதிமன்றங்களில் நிலைத்து நின்றது.

நாட்டின் குடிமக்களாக நெடுங்காலம் இருந்து வருபவர்களாகவும், உதவிசெய்வதற்கு யாரும் இல்லாத நிலையிலிருப்பவர்களாகவும் உள்ள வயோதிக ஏழை மக்களுக்கு உதவி வழங்குவதை அனுமதிக்கும் சட்டங்களை 1923 முதல் 1931 வரை 18 மாநிலங்கள் நிறைவேற்றின. இவற்றில் பாதிக்கு மேற்பட்ட சட்டங்கள் உதவி வழங்குவதற்கு அனுமதிதான் வழங்கினவே ஒழிய, உதவி வழங்குமாறு மாநில அரசுகளை வற்புறுத்தவில்லை. எனவே, 1934ஆம் ஆண்டின் இறுதியில் சுமார் 28 மாநிலங்கள் இத்தகைய முதியோர் உதவிச்சட்டங்களை இயற்றியிருந்தன என்றலும், 10 மாநிலங்கள் மட்டுமே ஏழை வயோதிகர்களுக்கு உதவி வழங்குவதற்கான ஏற்பாடுகளைச் செய்திருந்தன; ஒவ்வொருவருக்கும் 69 சென்ட் முதல் 26 டாலர்கள் வரை மாதந்தோறும் வழங்கப்பட்டது. தந்தையின் மறைவு, இயலா நிலை முதலியவற்றலும், தந்தையால் கைவிடப்பெற்றமையாலும் துன்பப்படும் சிறு குழந்தைகளுக்கு உதவி வழங்குவதற்கான சட்டங்கள் 1930ஆம் ஆண்டின் வாணிபப் பெருமந்ததிற்கு முன்னர் சில மாநிலங்களில் இயற்றப்பட்டன. இவை அன்னையர் உதவிச்சம்பளச் சட்டங்கள் (Mother's Pension Laws) எனப்பட்டன.

### சமூகப் பாதுகாப்புச் சட்டம், 1935:

அரசு, மற்றும் தனியார் முயற்சிகளால் ஏற்பட்டிருந்த சமூகப் பாதுகாப்பு வசதிகள் மிகவும் குறைவானவை என்ற உண்மை 1929ஆம் ஆண்டின் பொருளாதார நடவடிக்கைச் சுணக்கத்தின் (Contraction) போதுநன்கு தெரியவந்தது. தொழிற்சாலை உற்பத்தியும், வாணிபமும் கடுமையாகப் பாதிக்கப்பட்டன. பாண்டுகள்,

பத்திரங்கள் முதலியவற்றின் மதிப்புக்கள் மிகவும் குறைந்தன. வேலையின்மைப் பிரச்சினை விசுவரூபமெடுத்து, 1932இல் 12 மில்லியன் தொழிலாளர் வேலை வாய்ப்பின்றித் தவிக்க நேரிட்டது. பெரிய பெரிய உத்தியோகங்களில் இருந்தவர்கள் கூட, தெரு ஓரங்களில் நின்று ஆப்பிள் பழங்களை விற்கும் நிலைக்குத் தள்ளப்பட்டனர். பல இடங்களில் பட்டினி ஊர்வலங்கள் நடந்தன. எங்கு நோக்கினும் வறுமை படமெடுத்தாடியது. மாநில, தல (Local) அரசுகளால் நிலைமையைச் சமாளிக்கமுடியவில்லை. மலையெனத்திரண்டு நின்ற நிவாரணப்பணிச் சுமையை அவைகளால் தாங்க முடியாத நிலையில், நிவாரணம் மற்றும் சமூகப் பாதுகாப்புச் செலவுகளுக்கென ஃபெடரல் அரசு நிதி உதவிகளை வழங்க வேண்டுமெனக் கேட்டுக்கொண்டன. ஃபெடரல் அரசும் இவ்வேண்டுகோளுக்குச் செவிசாய்த்து, 1932இல் ஓர் அவசர நிவாரண உதவிச்சட்டத்தை இயற்றி, மாநில அரசுக்கு நிதி உதவிகளைக் கொடுத்து, மக்களுக்கு நேர்முக நிவாரண உதவிகள் கிடைப்பதற்கு வழி வகுத்தது. நாட்டில் நிலவிய நெருக்கடி நிலைமையைச் சந்திப்பதற்கு வேறு பல சட்டங்களையும் காங்கிரஸ் மன்றம் 1933இல் அடுத்தடுத்து நிறைவேற்றி வைத்தது. 1935ஆம் ஆண்டுவரை நீடித்திருந்த ஃபெடரல் நெருக்கடி நிவாரண நிர்வாகத்துறை (Federal Emergency Relief Administration) 3 பில்லியன் டாலர்களுக்கும் கூடுதலான தொகையை மாநிலங்களுக்கு மானியமாக அளித்தது. வேலைசெய்ய முடியாதவர்களுக்கு நிதி உதவிகளும், வேலை செய்யும் சக்தியுள்ளோருக்கு வேலைவாய்ப்புக்களும் கொடுக்கப்பட்டன.

நெருக்கடி நிவாரணத்திற்குச் சட்டமியற்றியதைவிட, மக்களுக்குப் பொருளாதாரப் பாதுகாப்பை வழங்குவதற்கு 1935இல் சமூகப் பாதுகாப்புச் சட்டத்தை (Social Security Act) இயற்றியதுதான் அரசின் போற்றத் தகுந்த சாதனையாகும். குடிமக்களின் பொருளாதாரப் பாதுகாப்பை மேம்படுத்துவதற்கு மாநில அரசுக்கு ஃபெடரல் அரசு நிதி உதவிகளை வழங்கி வருதல் அத்தியாவசியம் என்பதை கோடிட்டுக் காண்பித்த இச் சட்டம் இயற்றப்பட்ட வேளையில் அரசின் சமூகப் பாதுகாப்புத் திட்டங்களுக்கு மிகுந்த எதிர்ப்புக்கள் உண்டாயின. கூட்டுபேரம் (Collective Bargaining) மூலம் எல்லாவகைச் சமூகப் பாதுகாப்பு வசதிகளையும் தங்களால் பெற்றுக்கொள்ள முடியும் என்றும், எனவே, அரசின் தலையீடு இதில் தேவை இல்லை என்றும் தொழிலாளர்கள் வாதிட்டனர். 1935இல் பிரதிநிதிகள் சபை மற்றும் செனட் கமிட்டிகள் முன்னால் சாட்சியம் அளித்த தொழிலதிபர்கள், வேலை வாய்ப்பின்மை இன்சூரன்ஸ் (Unemployment Insurance) அமல் செய்யப்பெற்றால் யாரும் வேலை செய்ய முன்வரமாட்டார்கள் எனக் கூறினர். மேலும் அவர்கள் கூறியதாவது : முதியோர் இன்

சூரன்ஸ் (Old Age Insurance) திட்டம் நடைமுறைக்கு வந்தால் எவரும் சேமிக்கப்போவதில்லை; இத்திட்டம் மக்களின் ஒழுக்கத்தைக் குலைக்கும்; நிதிகளை விரயமாக்கும்; குடியரசு அமைப்பைப் பூண்டோடு அழிக்கும்.

தனி நபர் முயற்சிகளால் வறுமையை அகற்றுதல் முடியாது என்பதை உணர்ந்த காங்கிரஸ் மன்றம், எதிர்ப்புக்கள் மத்தியில் சமூகப் பாதுகாப்புச் சட்டங்களை நிறைவேற்றியது. 'ஒழுங்குற அமையப் பெற்ற ஒரு சமூக இன்சூரன்ஸ் திட்டதனை ஏற்படுத்த வேண்டும்' என்பது இச்சட்டத்தின் குறிக்கோள். வேலையிலிருந்து ஓய்வு பெறுவோருக்கு முதியோர் ஓய்வுச் சம்பளத்தைத் (Old Age Pension) தருவதற்கும், குடும்பதிற்குச் சம்பாதித்துப் போட்டு வருபவனின் மறைவினால் ஏற்படும் ஊதிய இழப்பிலிருந்து அவனது குடும்பத்தினரைக் காப்பாற்றுவதற்கும் வழி செய்யும் ஃபெடரல் அரசு இன்சூரன்ஸ் திட்டம் 1935ஆம் ஆண்டின் சட்டத்தினால் கொண்டுவரப் பெற்ற திட்டங்களில் ஒன்றாகும். வேலை வாய்ப்பின்மை காரணமாக விளையும் தற்காலிக ஊதிய இழப்பிலிருந்து உழைப்பாளர்களைப் பாதுகாப்பதற்கும் இச்சட்டம் ஏற்பாடு செய்தது. இச் சட்டமானது, ஒரு வரி ஈடு செய் உபாயத்தின் மூலமாக ஃபெடரல் திட்டங்களின் பாணியில் மாநில அரசுகளும் வேலை வாய்ப்பின்மை இன்சூரன்ஸ் சட்டங்களை இயற்றிச் செயல்படுத்தும் சூழ்நிலையை உருவாக்கிக் கொடுத்தது. வேலை வாய்ப்பின்மை இன்சூரன்ஸ் திட்டங்களை நடைமுறைக்குக் கொண்டு வருவதற்காக மாநில அரசுகளுக்குப் பண உதவி வழங்குவதற்கும் இச்சட்டம் ஆவன செய்தது. இச்சட்டத்தினால் கொணரப்பெற்ற வருமான—பராமரிப்புத் திட்டங்கள் (Income-Maintenance Programmes) ஃபெடரல் மற்றும் மாநில அரசுகள் பங்கேற்கும் திட்டங்களாகும். முதியோர், குருடர், ஆதரவற்ற குழந்தைகள், உழைக்கும் சக்தியற்றோர் ஆகியோருக்கு உதவி வழங்கும் ஏற்பாடுகள் இத்திட்டங்களில் இடம் பெற்றன.

### முதியோர், எஞ்சியிருப்போர், இயலா நிலையினர் இன்சூரன்சுத் திட்டம்:

முதியோர் இன்சூரன்சுத் திட்டம் (Old age insurance Programme) 1935-ல் ஏற்படுத்தப் பெற்றது. 60 அல்லது அதற்குமேற்பட்ட வயதில் வேலையிலிருந்து ஓய்வுபெறும் தொழிலாளருக்கு ஓய்வுச் சம்பளங்களைத் தருவதற்கு இத்திட்டம் வழிவகுத்தது. ஓய்வு பெறுவதற்கு முன்னரே இறந்துவிடும் தொழிலாளர்களின் குடும்பங்களுக்கு உதவித் தொகைகளாக கொடுப்பதற்கும் இத்திட்டத்தின்கீழ் ஏற்பாடு செய்யப்பட்டது. ஓய்வுபெறுவதற்கு முன்னால் போதிய ஆண்டு

கள் வேலையிலிருக்க முடியாது. போனவர்களுக்குக்கூட, இத்திட்டத்தின்கீழ் உதவிசெய்வதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டன. நாடு முழுவதற்கும் பொதுவானதாயிருந்த இத்திட்டத்தை அமல் செய்யும் பொறுப்பு ஃபெடரல் அரசைச் சார்ந்தது. அமெரிக்காவில் தொழிலாளர்கள் அடிக்கடி இடம்விட்டு இடம் மாறிக்கொண்டிருந்ததனால் உழைப்பின் பெயர்ச்சி (Mobility of Labour) மிகுதியாயிருந்தது; எனவே, மாநில அளவில இத்தகைய திட்டங்களை அமல் செய்வதில் சிரமங்கள் எழக்கூடும் என்பதனால், ஃபெடரல் அரசே அந்தப் பொறுப்பை ஏற்றுக்கொண்டது. மேலும், பங்களிப்பு அடிப்படையில் இரயில்வே தொழிலாளர்களுக்கு முதுமை மற்றும் இயலா நிலை உதவித் தொகைகளை வழங்குவதற்கான ஃபெடரல் சட்டமொன்று 1934ஆம் ஆண்டிலேயே இயற்றப்பட்டிருந்தது. ஆகவே, இதைப்போன்ற திட்டங்களை ஃபெடரல் அரசே ஏற்று நடத்தவேண்டும் என்று எல்லோரும் விரும்பினர்.

1935ஆம் ஆண்டின் சமூகப் பாதுகாப்புச் சட்டப்படி, வணிகம் மற்றும் தொழில் நிறுவனங்களின் தொழிலாளர்கள் மட்டுமே முதியோர் இன்சூரன்சு திட்டத்தில் இடம் பெற்றனர்: மற்ற நிறுவனங்களின் தொழிலாளர்களும், சொந்தத் தொழில்களில் ஈடுபட்டிருந்தோரும், வீடுகளில் பணிபுரிந்து வந்தோரும் இத்திட்டத்தினால் பயனடையவில்லை. ஆக, தொழிலாளர் தொகுதியின் ஒரு பெரும் பகுதி இத்திட்டத்திற்குப் புறம்பாயிருந்தது என்பது இங்கே குறிப்பிடத் தகுந்தது. வேலையளிப்போர், தொழிலாளர் கொடுக்கும் பங்களிப்புகளைக் (Contributions) கொண்ட நிதியிலிருந்து தொழிலாளர்களுக்கு ஓய்வுச் சம்பளங்கள் தரப்பட்டன. தொழிலாளியின் கூலி அல்லது சம்பளத்தில் ஒரு சத விகிதத் தொகையை ஒவ்வொரு தொழிலாளியும், ஒவ்வொரு வேலையளிப்போனும் பங்களிப்பு அல்லது வரியாக அரசுக்குச் செலுத்திவர வேண்டும். பிறகு, இறுதியில் இவர்களிடமிருந்து தொழிலாளியின் சம்பளத்தில் மூன்று சத விகித வரியாக வசூலிக்கப்படும். இவ்வரி அல்லது பங்களிப்பு மூலம் பெறப்படும் நிதி, திட்டத்தைச் செயற்படுத்த உதவியது. பங்களிப்புகள் முதன்முதலாக 1937-ல் வசூலிக்கப்பட்டது.

தொழிலாளர்கள் தமக்குரிய பங்கை அல்லது வரியைச் செலுத்தி வந்தனர் என்றாலும், வேலையளிப்போர் பலர் அவ்வாறு தமது வரிகளை ஒழுங்காகச் செலுத்தி வரவில்லை. மேலும் அவ்வரிச் சுமையைத் தொழிலாளர்களிடம் தள்ளிவிட முயன்றனர். இதன் காரணமாக, இத்திட்டம் பலரால் கடுமையாக விமரிசனம் செய்யப்பட்டது. ஆனால், தொழிலாளர்கள் தமக்குரிய பங்குகளைச் செலுத்தி வந்ததினால், இத்திட்டத்தில் ஆழ்ந்த ஊக்கம் காட்டி, திட்டத்தை நன்கு

வலிவுபடுத்தினர் என்பதை நாம் மறந்துவிடக்கூடாது. பொருளாதார ரீதியில் இத்திட்டத்தில் சில பலவீனங்கள் இருந்தன என்றாலும், அரசியல் ரீதியில் இது ஒரு வெற்றிகரமான திட்டமாகவே அமைந்தது. இத்திட்டத்தின்கீழ் 1912 ஆம் ஆண்டு முதல் தொழிலாளர்கள் ஓய்வுச் சம்பளங்களைப் பெறலாயினர்.

1939-ல் முதியோர் இன்சூரன்சுத் திட்டத்தில் சில மாறுதல்கள் செய்யப்பெற்றன. ஓய்வு பெறும் தொழிலாளருக்கேயன்றி, அவரைச் சார்ந்திருப்போருக்கும், இறந்துவிடும் தொழிலாளர் குடும்பங்களில் எஞ்சியிருப்போருக்கும் 1940 ஆம் ஆண்டு முதல் உதவித் தொகைகளை வழங்குவதற்கு ஆவன செய்யப்பட்டது. ஆனால், விதவைகளையும், 18 வயதிற்குட்பட்ட குழந்தைகளையும் தவிர, மற்ற சார்பாளர்கள், எஞ்சியிருப்போர் ஆகியோர் 65 வயதை அடைந்திருந்தால்தான் அவர்களுக்கு உதவித் தொகைகள் அளிக்கப்பட முடியும். சில குறிப்பிட்ட சூழ்நிலைகளில் பணம் மொத்தமாகத் திருப்பிக் கொடுக்கப்படலாம் என்ற பழைய ஏற்பாடு கைவிடப்பெற்றது. உடனடியாக மாதச் செலுத்தல்களை வழங்க முடியவில்லையென்ற நிலையின்போது வேண்டுமானால் ஒரு சிறு தொகை மரணச் செலுத்தலாகத் (Death Payment) தொழிலாளருக்குக் கொடுக்கப்படலாம் என்று அப்போது கூறப்பட்டது உதவி வழங்குதல் தொடர்பாக இத்தகைய மாறுதல்கள் செய்யப்பட்டன என்றாலும், திட்டத்தில் இடம்பெற்ற தொழிலாளர் அளவில் எந்தவித மாறுதலும் நிகழவில்லை; வழக்கம்போல் வணிகம் மற்றும் தொழில் நிறுவனங்களின் தொழிலாளர் மட்டுமே திட்டத்தில் இடம் பெற்று வந்தனர்.

1950 ஆம் ஆண்டில் சமுதாயப் பாதுகாப்புச் சட்டத்தில் கணிசமான மாறுதல்கள் செய்யப்பெற்றன. வேளாண்மை அல்லாத துறைகளில் சொந்தத் தொழில் செய்துவருவோரும், பண்ணை மற்றும் வீடுகளில் தொடர்ந்து பணிபுரிந்து வரும் தொழிலாளரும், ஓய்வு நிலைத் திட்டத்தில், (Ratirement System) இடம்பெறா மத்திய, மாநில அரசு ஊழியரும், அப்போது முதியோர்—எஞ்சியிருப்போர் இன்சூரன்சுத் (Old Age and Survivors Insurance) திட்டத்தில் சேர்த்துக்கொள்ளப்பட்டனர். தொழிலாளியின் சம்பளத்தில் $1\frac{1}{2}$ சதவிகிதத்தை வேலையளிப்போர் தொழிலாளர் வரியாகச் செலுத்திவர வேண்டும் என்று கூறப்பட்டது. வாழ்க்கைச் செலவுகளும் கூலிகளும் உயர்ந்திருந்தமை காரணமாக உதவித் தொகைகளும் உயர்த்தப்பட்டன. அடுத்து, ஓய்வுச் சம்பளத் தகுதி நிபந்தனைகள் தளர்த்தப் பெற்றன.

1954, 1956, 1958, 1960 ஆம் ஆண்டுகளில் மேலும் சில மாறுதல்களை அரசு கொண்டு வந்தது. முதியோர்-எஞ்சியிருப்போர் இன்சூ

ரன்சுத் திட்டத்தில் இன்னும் பல்வேறுவகைத் தொழிலாளர்கள் சேர்த்துக்கொள்ளப் பெற்றனர். 1959-ல் சுமார் 90 சத விகிதத் தொழிலாளர்கள் இத்திட்டத்தில் சேர்த்துக்கொள்ளப் பெற்றிருந் தனர். இலாப நோக்கமற்ற அமைப்புக்களின் தொழிலாளர்கள், வேறு நலத் திட்டங்களால் பயனடையும் நிலையிலிருந்த ஃபெடரல் சிவிலியன் தொழிலாளர்கள், இரயில்வே தொழிலாளர்கள், சொந்த மாகத் தொழில் புரிந்துவந்த டாக்டர்கள், ஆகியோர் மட்டுமே இத் திட்டத்திற்குப் புறத்தே யிருந்தனர். சமூகப் பாதுகாப்புப் பங் களிப்புக்களும், உதவித் தொகைகளும் மீண்டும் உயர்த்தப்பட்டன.

1956-ல் கொண்டு வரப்பெற்ற ஒரு முக்கிய மாறுதல், இயலா நிலைக்குள்ளாகும் தொழிலாளர்களுக்கு உதவி வழங்குவதற்கு ஏற் பாடு செய்ததமையாகும். இயலாநிலைத் தொழிலாளர்கள் (Disabled Workers) 50 முதல் 65 வயது வரையிலானவர்களாயிருந்து, இன்சூர் செய்துகொண்டிருப்பின், அவர்களுக்கு மாதந்தோறும் இயலாநிலை உதவித் தொகைகள் அளிக்கப்படும். தொழிலாளியின் உடல் மற்றும் மூளை சம்பந்தப்பட்ட நோய் காரணமாக மரணம் ஏற்படும் என்று எதிர்பார்க்கப்பட்டாலோ அல்லது நீண்ட காலத்திற்குப் படுக்கையி லிருக்க நேரிட்டு வேலைசெய்ய முடியாதிருந்தாலோ அது இயலாநிலை ஆகும். இயலா நிலை உண்டாகி ஆறு மாதங்கள் கழிந்தபிறகு உதவித் தொகை வழங்கல் தொடங்கும். 1960ஆம் ஆண்டில் செய்யப்பெற்ற திருத்தத்தின்படி 50 வயதையடையாத இயலாநிலைத் தொழிலாள ரும் இயலாநிலை உதவித் தொகையைப் பெறும் தகுதி பெற்றனர்.

### புதிய திட்டத்தின் அம்சங்கள்:

முதியோர், எஞ்சியிருப்போர், இயலா நிலையினர் இன்சூரன்சு திட்டத்தில் 1960ஆம் ஆண்டுவரை பலவித மாறுதல்கள் செய்யப் பட்டன. மாறுதல்களுக்குப்பின் 1960 முதல் செயற்படுத்தப்பட்டு வரும் புதிய திட்டத்தின் முக்கிய அம்சங்கள் கீழே சுருக்கித் தரப்படு கின்றன.

இன்சூர் செய்துகொண்டவர்களின் பொருளாதார நிலைமை எவ்வாறிருப்பினும், அவர்களனைவருக்கும் நிதி உதவிகள் தரப்படு கின்றன. உதவியாக எவ்வளவு தொகை அளிக்கப்படும் என்பது இன்சூர் செய்துகொண்ட தொழிலாளியின் கூலியைப் பொறுத்தது. ஆனால், அதிக பட்சமாகவும், குறைந்த பட்சமாகவும் தரப்படக் கூடிய தொகைகள் நிர்ணயிக்கப்பட்டுள்ளன. பங்களிப்பாளனின் குடும்பத் தேவைகளைக் கணக்கிற்கு எடுத்துக்கொண்டு உதவித் தொகையளவை நிர்ணயிக்கின்ற நேரங்களும் உண்டு. ஒரு தொழி

லாளியின் மனைவி 62 வயதைக் கடந்திருந்தாலும், அவளது குழந்தைகள் 18 வயதுக்குட்பட்டவர்களாயிருந்தாலும், அவருக்குச் சற்று கூடுதலான நிதி உதவிகள் வழங்கப்படும். திட்டத்தின்கீழ் பின்வரும் மூவகை உதவித் தொகைகள் வழங்கப்படுகின்றன.

1. ஓய்வுபெறுவோர் அல்லது முதியோர் உதவித் தொகைகள்: இன்சூரன்ஸ் செய்துகொண்ட தொழிலாளர்கள் வேலையிலிருந்து ஓய்வுபெறுகின்றபோது இவற்றைப் பெறுகின்றனர். பொதுவாக, 65 வயதையடைந்து ஓய்வுபெறும் தொழிலாளர்கள் முதியோர் உதவித் தொகைகளைப் பெறுகின்றனர் என்றாலும், 72 வயதுவரை வேலையிலிருந்துவிட்டு, பிறகு ஓய்வுபெறுவோருக்கும் இவ் வுதவிகள் வழங்கப்படுகின்றன. ஓய்வுபெறும் தொழிலாளர்கள் விருப்பப்பட்டால், 62 வயது முதற்கொண்டேகூட முதியோர் உதவித் தொகைகளைப் பெற மனுச் செய்துகொண்டு மாதந்தோறும் உதவிகளைப் பெற்று வரலாம். ஆனால் 62 வயது முதற்கொண்டு தரப்படும் நிதி உதவிகள் 65 வயதின்போது தரப்படும் நிதி உதவிகளைவிடக் குறைவாயிருக்கும். ஆண்டு ஒன்றுக்கு 1200 டாலர்களுக்குக் கூடுதலான தொகையைச் சம்பாத்தியமாகக் கொண்டிராதவர்கள் ஓய்வு நிலை (Retirement)யிலிருப்போர் எனக் கருதப்படுவர்.

2. எஞ்சியிருப்போர் உதவித் தொகைகள்: மரணத்திற்குள்ளாகும் ஒரு தொழிலாளிக்கு மரணச் செலுத்தல் என்ற பெயரால் ஒரு சிறு தொகை உதவியாகத் தரப்படுகின்றது. மரணமடையும் தொழிலாளியின் சார்பாளர்கள் இன்சூரன்ஸ் திட்டத்தில் சேர்ந்திருப்பரேல், அவர்களுக்கு மாதந்தோறும் எஞ்சியிருப்போர் உதவித் தொகைகள் கொடுத்து வரப்படும். 62 வயதை எய்திய விதவைகள், 18 வயதுக்குட்பட்ட குழந்தைகளையுடைய விதவைகள் (இவர்களுக்கு வயது நிபந்தனைகள் கிடையா), இறந்துபோன தொழிலாளியின் பெற்றோர் முதலியோர், எஞ்சியிருப்போர் உதவித் தொகைகளைப் பெற்றிடும் தகுதியுடையோராவர்.

3. இயலாநிலை உதவித் தொகைகள் (Disablement Benefits): 65 வயதுக்குக் குறைந்த இயலாநிலை நபர்கள் இயலாநிலை உதவித் தொகைகளை மாதந்தோறும் பெறுகின்றனர். முற்றிலும் பாதிக்கப்பட்டு உழைக்க முடியாத நிலையிலிருப்போர் இத்திட்டத்தின்கீழ் பலனடைகின்றனர். இவர்களுக்கு மறுவாழ்வு தருவதற்குப் பயிற்சி மற்றும் மறுவாழ்வு நிலையங்களில் பலவகையான முயற்சிகளும் எடுக்கப்பட்டு வருகின்றன.

முதியோர், எஞ்சியிருப்போர், இயலா நிலையினர் இன்சூரன்சுத் திட்டம் ஒரு தற்சார்புத் திட்டமாகும். அதற்கு ஃபெடரல் அரசின்

பொது மானிய உதவிகள் கிடையா. வேலையளிப்போர், தொழிலாளர், சொந்தத் தொழில்புரிவோர் ஆகியோரின் பங்களிப்புக் களைக்கொண்டே இத்திட்டம் செயற்படுத்தப்படுகிறது. தொழிலாளியின் கூலியில் 3 சத விகிதத்தை வேலையளிப்போர், தொழிலாளர் பங்களிப்பாகக் கொடுத்துவர வேண்டும்; சொந்தத் தொழில் புரிவோர் தமது சம்பாத்தியங்களில் 4½ சத விகிதத்தைப் பங்களிப்பாகத் தர வேண்டும். பங்களிப்பு வீதங்கள் தனியார் இன்சூரன்சு கம்பெனிகளில் வசூலிக்கப்படும் தொகைகளைவிடக் குறைவானவையே எனலாம்.

தொடக்கத்தில் சமூகப் பாதுகாப்புச் சபை (Social Security Board) யால் நிர்வகிக்கப்பட்டுவந்த இந்தத் திட்டம், தற்போது, முதியோர், எஞ்சியிருப்போர், இயலா நிலையினர் இன்சூரன்சு கழகத்தால் (Bureau of Old age, Survivors and Disability Insurance) நிர்வகிக்கப்பட்டு வருகிறது. இக்கழகம் அரசின் கல்வி மட்டும் சுகாதாரத் துறையில் இருக்கிறது. உதவித் தொகைகளை வழங்குவதற்குத் தேவையான நிதி போக, மீதமிருக்கும் பணம் முதலீடு செய்யப்படுகிறது. திட்டத்தின் நிதி நிலைமைகளைப்பற்றிய தகவல்களைக்கொண்ட ஆண்டறிக்கையைக் கருவூலச் செயலாளர் (Secretary of Treasury), உழைப்புத்துறைச் செயலாளர் கல்வி மற்றும் சுகாதாரத் துறைச் செயலாளர் ஆகியோர் அடங்கிய டிரஸ்ட் சபை (Board of Trustees) ஒன்று காங்கிரஸ் மன்றத்திற்கு அனுப்பி வைக்கவேண்டும். நிதியளவு மிகவும் உயர்வாகவோ அல்லது மிகவும் தாழ்வாகவோ இருப்பின், அது தொடர்பாக உரிய பரிந்துரைகளையும் டிரஸ்ட் சபை அனுப்பி வைக்கலாம்.

முதியோர், எஞ்சியிருப்போர், இயலா நிலையினர் இன்சூரன்சத் திட்டம், அமெரிக்க நாட்டின் ஒரு மாபெரும் சமூக இன்சூரன்சுத் திட்டமாகும். முதியோருக்கும் எஞ்சியிருப்போருக்கும் வாழ்வளிக்கும் திட்டம் என்று இதனை வேலையளிப்போரும் தொழிலாளரும் புகழ்கின்றனர். இதன் நிர்வாகச் செலவுகள் மிகவும் குறைவாகவே இருக்கின்றன; உதாரணமாக, 1957-ல் செய்யப்பட்ட நிர்வாகச் செலவுகள் அவ்வாண்டில் தரப்பட்ட மொத்த உதவித் தொகைகளில் 2 சதவிகிதமாக மட்டுமே இருந்தன. மேலும், இத்திட்டத்தில் அரசியல் கலப்பு கிடையாது. முதியோர், எஞ்சியிருப்போர், இயலா நிலையினர் இன்சூரன்சு கழகத்தின் நடவடிக்கைகளை ஆராய்ந்தறிய 1958 ஆம் ஆண்டு ஜூன் மாதம் நியமிக்கப்பட்ட ஒரு குழு 'சமூகம் சிறப்போடும் வலிவோடும் தமது பணியினை ஆற்றி வருகிறது' என்றும், 'கழக அதிகாரிகள் தமது கடமைகளைத் திறமையுடன் செய்து வருகின்றனர்' என்றும் அறிவித்தது. ஆனால், கழகத்தால் தரப்படும்

உதவித் தொகைகள் தொழிலாளரின் பராமரிப்புக்குப் போதவில்லை என்ற குற்றச்சாட்டு அடிக்கடி எழும்பியது. ஒவ்வொரு ஓய்வு பெற்ற தொழிலாளியும் 1960 ஆம் ஆண்டில் மாதம் ஒன்றுக்குச் சராசரியாக 73 டாலர்களைப் பெற்று வந்தனர். வாழ்க்கைச் செலவுகள் வளர்ந்து வரும் சூழ்நிலைகளில் இத்தகைய தொகை போதாது. ஆதலால், உதவித் தொகைகளைப் பெற்றவர்களில் சிலர் பொது உதவித் (Public Assistance) திட்டங்களின் உதவிகளை நாடினர். வேறு பலர் வேறு உத்தியோகங்களை நாடிப் போயினர். 'முதியோர் ஓய்வுச் சம்பளங்களைப் பெற்று வந்தவர்களில் ஐந்தில் ஒரு பங்கினர் ஓய்வுச் சம்பளம் போதவில்லை என்று ஓய்வு நிலையிலேயே வேறு வேலைகளில் சம்பளத்திற் சுமர்ந்தனர். முதியோர் ஓய்வுச் சம்பளங்களை அதிகப்படுத்துவதற்கு காங்கிரஸ் மன்றம் முயற்சிகளை எடுத்துக்கொண்டது என்ருலும், தொழிலாளரின் கூலிகள் அதிகரித்த அளவிற்கு ஓய்வுச் சம்பளங்கள் அதிகரிக்கவில்லை.

### வேலை வாய்ப்பின்மை இழப்பீட்டுத் (Unemployment Compensation) திட்டம்:

வேலை வாய்ப்பின்மையால் ஒரு தனி நபர் அல்லது குடும்பத்தின் பொருளாதாரப் பாதுகாப்புக்கு இடையூறு ஏற்படுகிறது. எனவே அதற்கான ஒரு இழப்பீடும் உதவியும் மிகவும் தேவைப்படுகிறது. பொருளாதார நடவடிக்கைச் சுணக்குதல், தொழில் நிறுவனங்கள் முறிந்துபோதல், கம்பெனிகள் இணைக்கப்பெறுதல், உற்பத்தியில் பருவகால மாறுதல்கள் உண்டாகுதல், 'புத்தமைப்புக்கள், (Innovations) உருவாகுதல், பண்டங்களுக்கான தேவை குறைந்துபோதல் முதலியவை காரணமாக, பொதுவாக வேலையின்மைப் பிரச்சினை தோன்றுகிறது பொருளாதார நடவடிக்கைகள் உச்ச கட்டத்திலிருந்தபோதுகூட அமெரிக்க நாட்டில் வேலை வாய்ப்பின்மை தலை யெடுத்திருக்கிறது. 1940, 1950 முதலிய ஆண்டுகளில் 2 மில்லியன் முதல் 3 மில்லியன் மக்கள் வரை அமெரிக்காவில் வேலை வாய்ப்பின்றி யிருந்தனர். பொருளாதார நிலை நன்ருக இருந்த 1909ஆம் ஆண்டில் கூட 3 8 மில்லியன் மக்கள் வேலை வாய்ப்பின்றித் தவிக்க நேரிட்டது. அறியாமையைப்போன்று வேலை வாய்ப்பின்மையும் ஒரு சமூக அவமானமாகும். அமைதியின்மையும் வேறு பல இடர்ப்பாடுகளும் அதன்மூலம் சமுதாயத்தில் உண்டாகக்கூடும். எனவேதான் அப் பிரச்சினையைத் தீர்ப்பதற்குப் பல்வேறு வகையான முயற்சிகள் மேற் கொள்ளப்படுகின்றன. இம் முயற்சிகளில் குறிப்பிடத் தகுந்தது வேலை வாய்ப்பின்மை இழப்பீட்டுத் திட்டம். இது தற்காலிகமாக வேலை வாய்ப்பின்றியிருந்து வருவோர்களுக்கு உதவியளிக்கும் திட்டமாகும். நீண்ட நாட்களுக்கு ஒரு வேலையிலிருந்துவிட்டு, பிறகு

வேலை வாய்ப்பின்றியிருக்க நேரிடும் தொழிலாளர்களுக்கு இத் திட்டத்தின்கீழ் (சில குறிப்பிட்ட காலத்திற்கு) உதவித் தொகைகள் அளிக்கப்படுகின்றன.

வேலைவாய்ப்பின்மை இழப்பீட்டுத் திட்டத்தை ஏற்படுத்துவதற்கான நடவடிக்கைகள் அமெரிக்க நாட்டில் இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் எடுத்துக்கொள்ளப்பெற்றன. 1916-ல் மாசசூசெட்ஸ் (Massachusetts) சட்டமன்றத்தில் வேலைவாய்ப்பின்மை இழப்பீடு மசோதா ஒன்று கொண்டுவரப் பெற்றது. ஆனால் அது நிறைவேற்றப்படவில்லை. அதே ஆண்டில் காங்கிரஸ் மன்றத்தில் ஒரு தேசிய வேலை வாய்ப்பின்மை இன்சூரன்சுத் திட்டத்தை வரைவதற்கு ஒரு கமிட்டி நியமிக்கப்படவேண்டும் என்ற தீர்மானம் கொண்டுவரப் பெற்றது. 1921-ல் விஸ்கான்சின் சட்டமன்றத்திலும் ஒரு மசோதா கொண்டுவரப்பெற்றுத் தோல்வியடைந்தது; ஆனால், 1931ஆம் ஆண்டு வரை அதே விஸ்கான்சின் சட்டமன்றத்தில் ஒவ்வோர் ஆண்டும் அந்த மசோதா கொண்டு வரப்பட்டுக் கொண்டே யிருந்தது. விஸ்கான்சின் சட்டமன்ற உறுப்பினர்களின் முயற்சி உண்மையிலேயே போற்றத் தகுந்தது. விஸ்கான்சின் மாநில சட்ட மன்றத்தைத் தொடர்ந்து, கனெக்டிகட் (Connecticut), மாசசூசெட்ஸ், மின்னசோட்டா (Minnesota), நியூயார்க் முதலிய மாநிலச் சட்டமன்றங்களிலும் வேலைவாய்ப்பின்மை இழப்பீடு மசோதா கொண்டுவரப் பெற்றது. ஆனால், திட்டம் பெரும்பாலும் செயற்படுத்தப்படாமலே யிருந்தது. 1929ஆம் ஆண்டிற்குப் பிறகு அமெரிக்க மாநிலச் சட்டமன்றங்களில் அடிக்கடி மசோதாக்கள் கொண்டுவரப்பெற்றன. விஸ்கான்சின் மாநில சட்டமன்றம் ஒன்றுதான் இது தொடர்பாக ஒரு சட்டத்தை இயற்றிப் பெருமை தேடிக்கொண்டது. வேலைவாய்ப்பின்மை இழப்பீடு மசோதா பல மாநிலச் சட்டமன்றங்களில் தோல்வியுற்றதற்குக் காரணம், அத் திட்டம் செயற்படுத்தப் பெற்றால் வேலையளிப்போரின் செலவுகள் கூடுதலாகும் என்று பெரும்பாலான மாநில அரசுகள் அச்சப்பட்டதேயாகும்.

வாணிப மந்த நிலைமை நாடு முழுவதும் பரந்து கிடந்த ஒரு சூழ்நிலையில் விஸ்கான்சின் மாநிலம் மட்டும் வேலைவாய்ப்பின்மை இழப்பீட்டுச்சட்டத்தை இயற்றியது பிரச்சினையைத் தீர்ப்பதற்குப் போதுமானதாக இருக்கவில்லை. எனவே, ஃபெடரல் அரசு 1935ஆம் ஆண்டில் சமூகப் பாதுகாப்புச் சட்டத்தை இயற்றியது. இச்சட்டத்தின் 9ஆம் பிரிவில் அமெரிக்க நாட்டிற்குத் தேவையான வேலை வாய்ப்பின்மை இன்சூரன்ஸ் திட்டத்திற்கான அடிப்படை அம்சங்கள் விவரிக்கப்பட்டிருந்தன. மத்திய அரசு சட்டமியற்றியதைத் தொடர்ந்து மாநில அரசுகள் அடுத்தடுத்துச் சட்டங்களை இயற்றின. 1937ஆம்

ஆண்டிற்குள் 48 மாநிலங்கள் வேலை வாய்ப்பின்மை இன்சூரன்ஸ் சட்டங்களை இயற்றிவிட்டன. 1939இல் எல்லா மாநிலங்களிலும் வேலை வாய்ப்பின்மை இழப்பீட்டு வசதிகள் ஏற்படுத்தப் பெற்றிருந்தன.

வேலை வாய்ப்பின்மை இழப்பீடு பெறுவதற்கான தகுதிகள், உதவியளவு, உதவிக்காலம் முதலியவற்றை மாநில அரசுகள் நிர்ணயிக்கின்றன. தகுதிகளையுடைய எல்லாத் தொழிலாளர்களுக்கும் உதவித் தொகைகள் நிச்சயம் வழங்கப்படும் என்றாலும், உதவித்தொகையளவும், காலமும் வரையறுக்கப்பட்டிருக்கின்றன. எனவே, வேலை வாய்ப்பின்றியிருந்து வருவோருக்கு இது ஒரு தற்காலிக உதவிதானே தவிர, நிரந்தரமான உதவியன்று; மேலும் உதவியும் சுமாராகத் தானிருக்குமே தவிர கூலிகளுக்குச் சமமான அளவில் அன்று. தமது வாழ்க்கைச் செலவுகளுக்கு முற்றிலும் சமமான தொகைகளைத் தொழிலாளர்கள் உதவித் தொகைகளாகப் பெற்றுவிட முடியாது. வேலை வாய்ப்பின்மை இழப்பீட்டு உதவிகளை வழங்குவதற்குத் தேவையான நிதிகள், வேலையளிப்போர் மீது விதிக்கப்படும் சம்பளப்பட்டியல் வரிகள் (Pay Roll taxes) மூலம் திரட்டப்படுகின்றன. தமது குற்றங்குறை காரணமாக அல்லாது, வேறு காரணங்களால் வேலை வாய்ப்பை இழந்து நிற்பவர்களுக்கும், பொருத்தமான வேலைகள் கிடைப்பின் உடனே வேலைக்குப்போகும் மனநிலையில் உள்ளவர்களுக்கும் வேலை வாய்ப்பின்மை இழப்பீட்டு உதவிகள் தரப்படுகின்றன.

ஹவாய் மாநிலத்தையும், கொலம்பியா மாவட்டத்தையும் தவிர, மற்றெல்லா மாநிலங்களிலும் விவசாயத்தொழிலாளர்களுக்கு வேலை வாய்ப்பின்மை இழப்பீட்டு உதவிகள் கிடையா. தனியார் இல்லங்கள், மத்திய, மாநில அரசுகள், இலாப நோக்கமற்ற அமைப்புக்கள், சொந்தத் தொழில் ஆகியவற்றில் பணிபுரிவோர் வேலைவாய்ப்பின்மை இழப்பீட்டு உதவிகளைப் பெற மாட்டார்கள் என ஃபெடரல் சட்டம் கூறுகிறது. ஆனால், அலாஸ்கா, கொலராடோ, ஹவாய் முதலிய மாநிலங்களில் தனியார் இல்லத் தொழிலாளர்களுக்கும், கனெக்டிகட் (Connecticut), ஹவாய், இடாஹோ (Idaho), நியூயார்க், ரோட் ஐலந்து (Rhode Island), விஸ்கான்சின் ஆகிய மாநிலங்களில் மாநில அரசு ஊழியர்களுக்கும் இவ்வுதவிகள் வழங்கப்படுகின்றன. அமெரிக்க நாட்டில் உள்ள ஒவ்வொரு ஐந்து தொழிலாளர்களிலும், மூவர் இந்த வேலைவாய்ப்பின்மை இழப்பீட்டு உதவிகளைப் பெற்றுவருகின்றனர். தொழிலாளரின் வார சம்பாத்தியங்களில் 50 சதவிகிதம் உதவியாகத் தரப்பட வேண்டும் என்று சட்டம் அறிவிக்கிறது. ஆனால் பெரும்பாலான மாநிலங்களில் இதற்குக் குறைவான தொகையே உதவியாக வழங்கப்படுகிறது. வாரம் ஒன்றிற்குத் தற்போது தொழிலாளருக்குத் தரப்படும் குறைந்த பட்ச உதவித் தொகைகள்

3 டாலர்கள் முதல் 17 டாலர்கள் வரையிலும், உயர்ந்தபட்ச உதவித் தொகைகள் 26 டாலர்கள் முதல் 55 டாலர்கள் வரையிலும் இருக்கின்றன. உதவித் தொகைகள் வழங்கப்படக் கூடிய காலப் பகுதி 18 முதல் 39 வாரங்கள் வரையிலும் ஆகும். ஆனால் 26 வாரங்களுக்கு மேல் இவ்வுதவிகள் வழங்கப்படக் கூடாது என்று பெரும்பாலான மாநில சட்டங்கள் கூறுகின்றன. 1960ஆம் ஆண்டு மார்ச் மாதம் சுமார் 2மில்லியன் தொழிலாளர்கள் வேலைவாய்ப்பின்மை நிவாரண உதவிகளைப் பெற்றனர்; இவர்கள் வாரம் ஒன்றிற்குப் பெற்றசராசரி உதவி 32 டாலர்கள் ஆகும். உதவியளவு மாநிலத்திற்கு மாநிலம் வேறுபட்டிருந்தது. உதாரணமாக, வட கரோலினாவில் 20 டாலர்களாகவும், ஓஹியோ (Ohio)வில் 41 டாலர்களாகவும் இருந்தது. பெரும்பாலான மாநிலங்களில் தொழிலாளர் சம்பாத்தியங்களில் பாதியளவு குறைவாகவே உதவித் தொகைகள் இருந்தன. வேலை வாய்ப்பின்மைக் குள்ளாகிய தொழிலாளர்களுக்கு உதவிகளைத் தரும்போது, அவர்களைச் சார்ந்திருப்போரின் எண்ணிக்கையையும் சில மாநிலங்கள் கணக்கிற்கு எடுத்துக்கொள்கின்றன.

பொது உதவித் (Public Assitance) திட்டம் :

குறைந்தபட்ச வாழ்க்கைத் தரத்திற்குப் போதுமான வசதிகளற்ற நிலையிலுள்ளவர்களுக்கு உதவி வழங்குந் திட்டம் பொது உதவித் திட்டம் ஆகும். சமூக இன்சூரன்ஸ் திட்டத்தின் கீழ் உதவி பெற முடியாது போகும் ஏழை எளியவர்களுக்கு உடனடியாக உதவி தருவது அவசியம் என்பதனை 1935ஆம் ஆண்டின் சமூகப் பாதுகாப்புச் சட்டத்தின் பொது உதவித்திட்டப் பிரிவு நன்கு விவரித்தது. நாட்டின் சமூகப் பாதுகாப்புக்குத் தேவையான அடித்தளத்தைச் சமூக இன்சூரன்சுத் திட்டம் அமைத்துக் கொடுக்க வேண்டும். இதர காரியங்களைப் பொது உதவித் திட்டம் கவனித்துக் கொள்ள வேண்டும். இது காங்கிரஸ் மன்றத்தின் கருத்து. இக்கருத்தை யொட்டித்தான் இத்திட்டமும் தீட்டப்பெற்றது. பின்வரும் குறிப்பிட்ட மூன்று முக்கிய பொதுஉதவித் திட்டங்களுக்கென ஃபெடரல் அரசு மாநில அரசுகளுக்கு நிதி உதவிகள் தரவேண்டுமென சமூகப் பாதுகாப்புச் சட்டம் முதலில் கேட்டுக் கொண்டது. அவை முதியோர் உதவித்திட்டம், விழியிழந்தோர் உதவி வழங்குந் திட்டம், மற்றும் சார்புக் குழந்தைகளுக்கு உதவி (Aid to Dependent Children) வழங்குந்திட்டம் ஆகும். 1950 ஆம் ஆண்டில் இயலா நிலையினருக்கு (Disabled) உதவி வழங்குந்திட்டமும் இவற்றோடு சேர்த்துக்கொள்ளப் பெற்றது. இந்நான்கு முறைகளில் மக்களுக்கு உதவி வழங்கும் மாநில அரசுத் திட்டங்கள் மத்திய அரசின் ஒப்புதலைப் பெற்ற பிறகே அவைகளுக்கான மானிய உதவிகளை மத்தியஅரசு வழங்கும்.

இத்திட்டங்களுக்கென மானிய அரசுகள் தருகின்ற பணச்செலுத்தல்களையும், ஏற்றுக்கொள்கின்ற செலவுகளையும் அடிப்படையாகக் கொண்டு மத்திய அரசு ஒவ்வொரு மாநிலத்திற்கும் மானியங்களை வழங்குகின்றது. வயோதிகர்களுக்கு மாதம் ஒன்றிற்குச் சராசரியாக 67.63 டாலர்களும், சார்புக் குழந்தைகளுக்குச் சராசரியாக 29.26 டாலர்களும், விழியிழந்தவர்களுக்குச் சராசரியாக 72 35டாலர்களும், இயலா நிலையினருக்குச் சராசரியாக 65 33 டாலர்களும் 1960 ஆம் ஆண்டில் வழங்கப்பட்டன. இத்திட்டங்களின் கீழ் உதவி பெற்றவர்களில் பாதிப்பேர் 65 வயதைக் கடந்த முதியோராவர்: மூன்றில் ஒரு பங்கினர் சார்புப் பாலகர் ஆவர்; மீதிப்பேர் விழியிழந்தோர் மற்றும் இயலா நிலையினராவர்.

இந்நான்கு திட்டங்களுக்காகவும் ஃபெடரல் அரசு மாநில அரசுகளுக்கு 1958-59ஆம் நிதி ஆண்டில் வழங்கிய மாநில உதவிகள் 1966 மில்லியன் டாலர்கள் ஆகும். இதில் 58 சதவிகிதம் முதியோர் உதவித் தொகை வழங்குவதற்கும், 32 சதவிகிதம் சார்புப் பாலகர்களுக்கு வாழ்வு தருவதற்கும், 8 சதவிகிதம் இயலா நிலையனருக்கு மறுவாழ்வளிப்பதற்கும், 2 சதவிகிதம் விழி இழந்தோருக்கு உதவி கொடுப்பதற்கும் செலவிடப்பட்டது. இத்திட்டங்களுக்கென மாநில அரசுகளால் 1959ஆம் ஆண்டில் செலவிடப்பட்ட தொகை சுமார் 3 பில்லியன் டாலர்கள் ஆகும். இவ்வளவு பெரிய தொகை பொது உதவிக்கென செலவிடப்பட்டு வருவதற்கு முக்கிய காரணம், சமூக இன்சூரன்சுத் திட்டங்கள் நாட்டில் போதிய அளவிற்கு விரைவாகச் செயற்படுத்தப் பெறுமையேயாகும்.

**இதர வருமானப் பராமரிப்புத் (Income maintenance) திட்டங்கள் :**

நாட்டு மக்களுக்குப் பொருளாதாரப் பாதுகாப்பு இல்லாது போவதன் காரணமாக உண்டாகும் இடையூறுகளைக் களைந்தெறிவதற்கு அமெரிக்காவில் ஏற்படுத்தப்பெற்றிருக்கும் மற்ற வருமானப் பராமரிப்புத் திட்டங்கள் கீழே விவரிக்கப்படுகின்றன :

**இரயில்வே தொழிலாளர் ஓய்வுகாலச் சம்பளத் திட்டம் :**

1930ஆம் ஆண்டில் வாணிப மந்தம் நாட்டைச் சூழ்ந்து நின்றபோது, இரயில்வே துறையில் தனியார் ஓய்வுகால ஊதியத் திட்டங்கள் முறிவடைந்த நிலையில், இரயில்வே தொழிலாளருக்கு ஓய்வுகாலச் சம்பளம் கொடுக்கப்பட வேண்டியதன் அவசியம் உணரப்பட்டது. இரயில்வே தொழிலாளருக்கு ஓய்வு காலச் சம்பளம் வழங்குந்திட்டம் 1934இல் ஆரம்பமாகியது. சமூகப் பாதுகாப்புச் சட்டம் இயற்றப்படுவதற்கு முன்பேயே ஏற்படுத்தப்பட்டுவிட்ட ஒரு பிரத்தியேகச்

சமூக இன்சூரன்சுத் திட்டம் இது. முதுமை, மரணம், வேலை வாய்ப்பின்மை, நோய், இயலா நிலை, மகப்பேறு (Maternity) முதலியவை காரணமாகக் கூலிகளை இழக்கும் இரயில்வே தொழிலாளருக்கு இத்திட்டத்தின்கீழ் உதவி வழங்கப்படுகிறது. இரயில்வே துறையிலும், அத்துறையோடு தொடர்புடைய நிறுவனங்களிலும் பத்தாண்டுகளுக்கு மேலாகப் பணிபுரிந்திருப்பவர்களுக்கு இத்திட்டம் உதவிதருகிறது. பத்தாண்டுகளுக்குக் குறைவாகப் பணிபுரிந்திருப்பவர்கள் முதலியோர், ஏஞ்சியிருப்போர் மற்றும் இயலா நிலையினர் இன்சூரன்சுத் திட்டத்தின் உதவியை நாடவேண்டும்.

இத்திட்டத்திற்குத் தேவைப்படும் பணம் வேலையளிப்போர் மீதும், தொழிலாளர் மீதும் விதிக்கப்படும் வரிகள் மூலம் திரட்டப் படுகின்றது. திட்டத்தைச் செயற்படுத்தும் பணிகள் இரயில்வே தொழிலாளர் ஓய்வுகாலச் சம்பளச்சபை (Rail Road Reitrement Board)யைச் சார்ந்தவை. இச்சபையின் செயற்குழு மூன்று உறுப்பினர்களைக் கொண்டது. ஒருவர் தொழிலாளர் பிரதிநிதி: மற்றொருவர் வேலையளிப்போர் பிரதிநிதி; மூன்றுமவர் பொதுமக்கள் பிரதிநிதி. இம்மூன்று உறுப்பினர்களும் குடியரசுத்தலைவரால் நியமிக்கப்படுவர்.

### இராணுவ வீரர் உதவித்திட்டம் :

இத்திட்டத்தின் கீழ் மூவகை உதவிகள் வழங்கப்படுகின்றன: (1) பணிச்சார்பு உதவிகள்; (2) மறுவாழ்வு உதவிகள்; (3) பணிச் சார்பற்ற உதவிகள். இவைபற்றி இனி சற்று விரிவாகக் கூறுவோம்.

(1) பணிச்சார்பு உதவிகள் : இராணுவத்தில் பணிபுரியும் போது அங்கஹீனமுற்று இயலா நிலைக்குள்ளாகும் போர் வீரர்களுக்கும், அவர்களைச் சார்ந்திருப்போருக்கும் இவை அளிக்கப்படுகின்றன. இவற்றில் முக்கியமானவை : (a) இயலா நிலையின் இயல்பைப் பொறுத்து மாதந்தோறும் ஒரு குறிப்பிட்ட தொகையை இழப்பீடாகக் கொடுத்தல்; (b) இறந்துபோன போர்வீரர்களின் குழந்தைகளின் கல்விச் செலவுகளை அரசு ஏற்றுக் கொள்ளுதல்; (c) ஊன்றுகட்டை, காலுறைப்பட்டைகள் (Braces), சக்கர நாற்காலி முதலியவையின்றி நடமாடமுடியாத நிலையிலுள்ளவர்களுக்குப் பிரத்தியேகக் குடியிருப்பு வசதிகளைச் செய்து கொடுத்தல்; (d) மரணமடைந்த வீரர்களின் சொந்தக்காரர் அல்லது உரிமையாளருக்கு இழப்பீடு வழங்குதல்; (e) இயலா நிலைக்குள்ளான வீரர்களுக்கு மருத்துவ வசதிகள் அளித்தல்; (f) மரணமடைந்த வீரர்களின் மனைவிகளுக்கு வேலைவாய்ப்புக்களைத் தேடிக்கொடுத்தல்.

(2) மறு வாழ்வு உதவிகள் : இவற்றில் வருமானப் பராமரிப்பு ஏற்பாடுகள் பல இடம் பெறுகின்றன. முக்கிய மறுவாழ்வு உதவிகள் வருமாறு : (a) குறிப்பிட்ட சில காலப்பகுதிகளுக்குக் கல்விச் செலவுகளை அரசு ஏற்றுக் கொள்ளுதல்; (b) தொழில் இயந்திரங்கள் மற்றும் வீடுகள் வாங்க, கட்ட, பழுதுபார்க்கத்தேவைப்படும் கடன்களுக்கு உத்தரவாதமளித்தல்; (c) பண்ணைக் கடன்கள், பொது நிலங்கள் ஆகியவற்றை இராணுவத்தினருக்குச் சற்று தாராளமாக வழங்குதல்; (d) வேலை வாய்ப்பின்மை இழப்பீட்டு வசதிகளை அளித்தல்.

(3) பணிச்சார்பற்ற உதவிகள் : ஆயுள் இன்சூரன்சுத் திட்டங்கள், ஈமச்சடங்கு உதவி நிதிகள், ஓய்வு காலச் சம்பள வசதிகள் முதலியவை இவற்றில் இடம்பெறுகின்றன. ஏழ்மையிலுள்ள பழைய இராணுவ வீரர் அனைவருக்கும் இவ்வுதவிகள் வழங்கப்படுகின்றன.

இம்மூவகை உதவிகளை ஃபெடரல் அரசு செய்து கொடுக்கிறது. மாநில அரசுகளும் தமது பங்கிற்கு வேறுபல உதவிகளைப் பழைய இராணுவ வீரர்களுக்குக் கொடுத்து வருகின்றன. பழைய இராணுவ வீரர்கள் சமூக இன்சூரன்சு, பொது உதவித்திட்டம் ஆகியவற்றின் கீழ் உதவிகளைப் பெற்று வந்தாலும் கூட, அவர்களுக்கு மேலே விவரிக்கப்பட்ட உதவிகள் மத்திய, மாநில அரசுகளால் கொடுக்கப்பட்டேயாக வேண்டும் உயிரைப் பணயம் வைத்து நாட்டிற்காகப் போராடித் தியாகத்தழும்புகளை ஏற்கும் வீரர்களுக்கு நன்றி தெரிவிக்கும் முறையில் இச்சிறப்பான சலுகை வழங்கப்படுகிறது.

## தற்காலிக இயலாநிலை இன்சூரன்சுத் திட்டங்கள்:

இரயில்வே தொழிலாளருக்குத் தற்காலிக இயலாநிலை இன்சூரன்சுத் திட்டம் (Temporary Disability Insurance Programme) உருவாவதற்கு இரயில்வே தொழிலாளர் ஓய்வு காலச் சம்பளச் சட்டம் (1934) காரணமாக அமைந்தது. இதைத் தொடர்ந்து கலிஃபோர்னியா, நியூ ஜெர்சி (New Jersey), நியூயார்க், ரோட் ஐலந்து ஆகிய நான்கு மாநிலங்கள் தற்காலிக இயலாநிலை இன்சூரன்சு திட்டங்களை ஏற்படுத்தின. நியூயார்க் மாநிலத்தில் இத்திட்டம் வேலைவாய்ப்பின்மை இன்சூரன்சுத் திட்டத்திலிருந்து வேறுபட்டதாகும்; திட்டத்தைச் செயற்படுத்தும் பொறுப்பு தொழிலாளர் இழப்பீட்டுச் சபைக் (Workmen's Compensation Board)குக் கொடுக்கப்பட்டுள்ளது. மற்ற மூன்று மாநிலங்களில் வேலைவாய்ப்பின்மை இன்சூரன்சு அமைப்பே இத்திட்டத்தையும் கவனித்து வருகின்றது; வேலைவாய்ப்பின்மை இன்சூரன்சுத் திட்டத்தின்கீழ் பயன் பெறும் தொழிலாளர்கள் இயலாநிலை இன்சூரன்சுத் திட்டத்தின்கீழும் பயன் பெற்று வருகின்றனர்.

தற்காலிக இயலாநிலை இன்சூரன்சுத் திட்டங்கள் பல தொழிலாளர்களுக்கு வாழ்வளித்து வருகின்றன. இத்திட்டங்களின்கீழ் 26 வாரங்களுக்கு இயலாநிலை உதவித் தொகைகள் தொழிலாளருக்கு வழங்கப்படுகின்றன. உதவித் தொகையளவு மாநிலத்திற்கு மாநிலம் மாறுபடுகிறது. கலிஃபோர்னியா மாநில அரசு இவ் வுதவித் தொகையோடுகூட தொழிலாளரின் மருத்துவ வசதிக்கென ஒரு சிறு தொகையையும் அளித்து வருகிறது. ரோடுஐலந்தில் பெண்களுக்கு மகப்பேறு உதவித் தொகையும் வழங்கப்படுகிறது.

**தொழிலாளர் இழப்பீட்டுத் (Workmen's Compensation) திட்டம்:**

வேலையிலிருக்கின்றபோது தொழிலாளருக்கு ஏற்படக்கூடிய ஆபத்துக்கள், இடையூறுகள், நோய் முதலியவற்றிலிருந்து அவர்களைக் காப்பாற்ற முயலும் திட்டம் தொழிலாளர் இழப்பீட்டுத் திட்டம். இது அமெரிக்காவின் தொன்மைமிகுந்த ஒரு திட்டமாகும். குடியரசுத் தலைவர் தியோடர் ரூஸ்வெல்ட் கேட்டுக்கொண்டதின் பேரில் ஃபெடரல் அரசு ஊழியர்களுக்கு இழப்பீடு வழங்குவதற்கு ஏற்பாடு செய்யும் சட்டத்தை முதன்முதலாக 1908-ல் காங்கிரஸ் மன்றம் இயற்றியது. இதைத் தொடர்ந்து பல மாநிலச் சட்டமன்றங்களும் தொழிலாளர் இழப்பீட்டுச் சட்டங்களை இயற்றின. 1948ஆம் ஆண்டிற்குள் எல்லா மாநிலங்களிலும் தொழிலாளர் இழப்பீட்டுத் திட்டங்கள் நடைமுறைக்கு வந்துவிட்டன எனலாம். அரசு ஊழியர்களுக்கான திட்டங்களுக்கு மட்டுமே அரசு மானிய உதவிகள் உண்டு; மற்ற ஊழியர்களுக்கான திட்டங்களுக்கு அரசு மானிய உதவிகள் கிடையா.

தொழிலாளர் இழப்பீட்டு திட்டத்தின்கீழ் தொழிலாளர்களுக்கு மருத்துவ உதவிகள், மறுவாழ்வு வசதிகள், பண உதவிகள் ஆகியவை வழங்கப்படுகின்றன. இவ் வுதவிகளைத் தருவதன் நோக்கம் வேலையிலிருக்கின்றபோது, நோய், இயலாநிலை, அங்கஹீனம் போன்ற ஆபத்துக்களுக்குள்ளாகும் தொழிலாளருக்கு ஒரு நியாயமான வாழ்க்கைத்தரத்தை உருவாக்கிக் கொடுத்தல் ஆகும். தொழிலாளி இறந்துவிட்டால் இவ்வுதவிகள் அவரது சார்பாளர்களுக்குத் தரப்படும். அமெரிக்க மாநிலங்களில் பாதி மாநிலங்களில் மட்டுமே கட்டாயத் தொழிலாளர் இழப்பீட்டுத் திட்டம் (Compulsory Workmen's Compensation) அமலில் இருந்து வருகிறது.

# 17. ஃபெடரல் அரசிறைக் கைக்கோள்

## (Federal Fiscal Policy)

ஃபெடரல் அரசின் தற்போதைய செலவீட்டுத் தொகை 1790-ல் இருந்ததைவிட 10000 மடங்கும், 1890-ல் இருந்ததைவிட 200 மடங்கும் மிகுதியாகும். 1812 ஆம் ஆண்டுப் போர், உள்நாட்டுப் போர், முதல் உலகப் போர், இரண்டாவது உலகப்போர் ஆகியவை நிகழ்ந்த போது அமெரிக்க ஃபெடரல் அரசின் செலவீடு மிக அதிகமாயிருந்தது. அமைதி நிலவும் காலங்களில் ஃபெடரல் அரசின் செலவீடு மிதமாகவே இருந்து வந்திருக்கிறது. 1789 முதல் 1860 வரையிலான ஃபெடரல் செலவீட்டில் ஆறில் ஐந்து பங்கு இராணுவம் தியாகிகள் உதவித் தொகை, வட்டி, அஞ்சல் துறை நிதிப் பற்றாக்குறை, செவ்விந்தியர் விவகாரங்கள் ஆகியவற்றிற்காகச் செலவிடப்பட்டது. சுமார் 5 சதவிகிதத் தொகையானது கடற்கரை விளக்கம், நதிப் போக்குவரத்து, கப்பல் துறைமுக முன்னேற்றம் ஆகியவற்றிற்காகச் செலவிடப்பட்டது. இருபதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில், போக்குவரத்துமீதான அரசின் செலவீடு சற்று அதிகரித்தது. மொத்தச் செலவீட்டில் இது 10 சதவீதமாயிருந்தது. விவசாயத்தின்மீது 7 சதவீதத் தொகை செலவிடப்பட்டது. புதிதாக ஆரம்பிக்கப்பட்ட வர்த்தகம் மற்றும் தொழிலாளர் துறைக் (Department of Commerce and Labour) கென 7 சதவீதத் தொகை செலவிடப்பட்டது.

முதல் உலகப் போருக்கு முன்னர் வரை ஃபெடரல் அரசின் செலவீடு மிகவும் குறைவாகவே இருந்தது. இதற்குக் காரணங்கள் வருமாறு:

(1) ஃபெடரல் திட்டம் பெரும்பாலான செலவுகளை மாநில அரசும், ஸ்தல ஸ்தாபனங்களும் ஏற்றுக்கொண்டன. 1860-க்கு முன்னர், சாலைகள், கால்வாய்கள், இரயில் பாதைகள் ஆகியவற்றின் வளர்ச்சியை மாநில அரசுகளே கவனித்துக் கொண்டன.

(2) ஃபெடரல் அரசின் அதிகாரப் பிரிவினை: ஃபெடரல் அரசின் நடவடிக்கைகளைப் பெருக்குவதற்கு அமெரிக்க அரசியலமைப்பு பல தடைகளை விதித்துள்ளது என்று குடியரசுத் தலைவர்கள் கருதினர். மாநில அரசு தொடர்பு கொண்ட துறைகளில் ஃபெடரல் அரசின் தலையீடு இருக்கக்கூடாது என்று கருதினர். எனவே ஃபெடரல் அரசின் பொதுச் செலவீட்டைக் குறைத்துக் கொண்டனர்.

(3) ஃபெடரல் அரசுத் திட்ட இயல்பு: ஃபெடரல் அரசு நிறைவேற்றும் பல திட்டங்கள் செலவு குறைந்தவை. ஃபெடரல் ரிசர்வ் திட்டங்கள், டிரஸ்ட் எதிர்ப்பு, மற்றும் ஃபெடரல் வாணிபக் கமிஷன், இரயில்வே கட்டுப்பாடு முதலியவற்றிற்கு மிகக் குறைவான செலவுகளே ஆயின. சில திட்டங்களிலிருந்து ஃபெடரல் அரசுக்கு வருவாய் கூடக் கிடைத்தது.

(4) விவசாயிகள் மற்றும் தொழிலாளர் கோரிக்கைகள்: விவசாயிகளும் தொழிலாளர்களும் ஃபெடரல் அரசு செலவுசெய்ய வேண்டும் என்று எதிர்பார்க்கவில்லை. பணத் திட்டச் சீர்திருத்தங்கள், டிரஸ்ட் எதிர்ப்பு நடவடிக்கைகள், சுங்கவரிக் குறைப்பு வழிமுறைகள் ஆகியவைமீது ஃபெடரல் அரசு கவனம் செலுத்தினால் போதுமென்று விவசாயிகள் கருதினர். கூட்டு பேரம் (Collective Bargaining) மூலம் தொழிலாளர்கள் தமது பிரச்சினைகளுக்குப் பரிகாரம் தேட முயன்றனரே தவிர, அரசின் குறுக்கீடு மூலம் அன்று. இதனால் ஃபெடரல் அரசின் நடவடிக்கைகள் மிதமாயிருந்தன. எனவே செலவீடும் குறைவாயிருந்தது.

முதல் உலகப் போருக்குப் பின்னர் ஃபெடரல் அரசின் செலவீட்டில் சிறிது வளர்ச்சி ஏற்பட்டது. இது ஒரு சீரான வளர்ச்சி. வளர்ச்சிக்கு ஒரு முக்கிய காரணம் அமெரிக்க ஐக்கிய நாட்டின் பிரதேச வளர்ச்சி (Territorial expansion). மக்கள் தொகைப் பெருக்கம் விளைவாகப் பல புதிய பிரதேசங்களில் மக்கள் வாழத் தொடங்கினர். எல்லைப்புறங்களைச் செவ்விந்தியர் தாக்குதலிலிருந்து பாதுகாப்பதற்காக இராணுவத்தைப் பலப்படுத்தும் அவசியம் ஏற்பட்டது. இதற்காகச் செலவிடுவதும் அத்தியாவசியமாயிற்று. பிரதேச வளர்ச்சியைத் தொடர்ந்து செவ்விந்தியர் விவகாரங்கள், அஞ்சல் துறை, போக்குவரத்து வசதிகள் முதலியவைமீதான செலவீடு அதிகரித்தது. முதல் உலகப் போருக்குப் பின்னர் போர்வீரர்களுக்கு உதவி வழங்குதல் தொடர்பாக அரசின் செலவீடு அதிகரித்தது.

இருபதாம் நூற்றாண்டில்தான்—அதிலும் குறிப்பாக 1930-க்குப் பிறகுதான் அமெரிக்க அரசின் செலவீட்டில் குறிப்பிடத் தகுந்த

வளர்ச்சி உண்டாயிற்று. இதற்குப் பல காரணங்கள் உண்டு. ஃபெடரல் அரசு நடவடிக்கையின் பருமனும் பரடபெல்லையும் விரிவடைந்தன. முன்னர் மாநில அரசுகளுக்கும் ஸ்தல ஸ்தாபனங்களுக்கும் இருந்துவந்த பொறுப்புக்கள் ஃபெடரல் அரசுக்கு மாறின. ஃபெடரல் அரசின் வருவாய்கள் பல வழிகளில் அதிகரித்தன. தனிப்பட்டோர் மற்றும் கம்பெனி வருமானங்கள்மீது புதிய வரிகள் போடப்பட்டன. இதனால் அரசின் செலவீட்டுச் சக்தி பெருகியது. அரசின் உதவியை எதிர்பார்க்காமலிருந்துவந்த விவசாயிகள் 1930-க்குப் பிறகு சுரண்டல்காரர்களை ஒழிப்பதற்கான செயல்களையும் செலவீடுகளைச் செய்யவேண்டும் என்று அரசை வற்புறுத்தலாயினர். ஃபெடரல் அரசின் நடவடிக்கைகளைப் பெருக்குவதிலும், அதன் வழியே மக்களுக்குரிய உதவிகளை நல்குவதிலும் தியாடர் ருஸ்வெல்ட், உட்ரோ வில்சன் போன்ற குடியரசுத் தலைவர்கள் பேரார்வம் காட்டினர். 1930 ஆம் ஆண்டின் வாணிபப் பெருமந்தம், (Great Depression), ஃபெடரல் நடவடிக்கையும் செலவீடும் அதிகரிப்பதற்கு ஒரு முக்கிய காரணமாயிற்று. பொருளாதார வீழ்ச்சியிலிருந்து நாட்டை விடுவிப்பதற்கு அரசு பல திட்டங்களைச் செயற்படுத்தியது. புனரமைப்பு நிதிக் கார்ப்பரேஷன் (Reconstruction Finance Corporation) முதலான பல அமைப்புக்களை நிறுவுவதற்கும், விலை உயர்த்தும் திட்டம், உதவிக் கொடை வழங்குந் திட்டம், சமூகப் பாதுகாப்புத் (Social Security) திட்டம் ஆகியவற்றைச் செயற்படுத்தவும் ஒப்புக்கொண்டு, அமெரிக்க ஃபெடரல் அரசு அவைகளுக்காகப் பல மில்லியன் டாலர்களைச் செலவிட்டது. பணத்துறை, மற்றும் பாங்குப் புனரமைப்பு, தேசீய தொழிலாளர் நல்உறவுச் சட்டம் (National Labour Relations Act), தேசீயத் தொழில் மீட்சிச் சட்டம் ஆகியவை ஃபெடரல் அரசின் செயல் வரம்பை மிகவும் விரிவுசெய்தன. மேலும், உலக அமைதியைக் காப்பதற்கும், உள்நாட்டு வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்கும், இராணுவத்தை வலிவுபடுத்துவதற்கும் ஃபெடரல் அரசு நிறையச் செலவுசெய்ய வேண்டியிருந்தமையாலும், பொதுச் செலவீடு அதிகரித்தது. 1903-ல் ஃபெடரல் அரசு செலவிட்ட தொகை 0 6 பில்லியன் டாலர்களே. ஆனால், 1949-ல் அது செலவிட்ட தொகை 36 2 பில்லியன் டாலர்கள் ஆகும். ஃபெடரல் அரசின் நடவடிக்கைகள் எந்த அளவில் அதிகரித்திருந்தன என்பதை இது தெளிவிக்கிறது.

வருவாய்க் கட்டமைப்புப் (Revenue Structure) போக்கு:

ஃபெடரல் வருவாய்க் கட்டமைப்பிலும் பல மாறுதல்கள் நிகழ்ந்தன. பத்தொன்பதாம் நூற்றாண்டின் தொடக்கத்தில் சுங்கம் (Tariff) மட்டுமே முக்கிய வருவாய் மூலம். ஆய வரிகளுக்கு (Excise

taxes) அவ்வளவாக ஆதரவிருக்கவில்லை. தாமஸ் ஜெபர்சன் (Thomas Jefferson) குடியரசுத் தலைவராயிருந்தபோது மற்றெல்லா உள்நாட்டு வரிகளையும் கைவிட்டு, சுங்கத்தை மட்டுமே பிரதான வருவாய் இனமாக வைத்துக்கொண்டார். காரணம் சுங்க வரிகளைப் பொறுத்த வரையில் சில முக்கிய நன்மைகள் இருந்தன. சுங்கவரிகள் நுகர்வோர்களை நேரடியாகப் பாதிப்பதில்லை. பாதுகாப்புக் கைக்கோளுக்கு (Protectionist Policy) அவை துணை நிற்கின்றன; பொருளாதாரத்தின் சில பகுதிகளில்—குறிப்பாகப் பணம் புழங்கும் பகுதிகளில்—மட்டுமே அவை வசூலிக்கப்படுகின்றன. ஆனாலும், சுங்க வரிகளிடம் சில குறைபாடுகளும் இருக்கின்றன. போர்க் காலங்களில் இவை குறைவான வருவாயைத் தருகின்றன. வாணிபத்தைப் பாதிக்கின்றன. பொருளாதார ஏற்ற இறக்கங்களைப் (Economic fluctuation) பொறுத்து இவற்றின் வருவாயளவு மாறுகிறது. உதாரணமாக, வாணிபச் சுணக்கத்தின்போது இறக்குமதிகள் குறையும் நிலையில் சுங்க வழி வருவாய் குறைகிறது.

உள்நாட்டுப் போர் (Civil War) நிகழ்ந்தபோது ஆய வரிகள் மீண்டும் நடைமுறைக்கு வந்தன. போர் முடிவின்போது பல ஆய வரிகள் கைவிடப்பட்டன என்றாலும், புகையிலை மற்றும் மதுபானப் பொருள்கள்மீதான வரிகள் நீடித்தன. மிகுதியான வருவாயை ஈந்தன. உள்நாட்டுப் போரின்போதுதான் முதன் முதலாக ஃபெடரல் வருமான வரி (Federal Income-tax) விதிக்கப்பட்டது. பிறகு, அது 1872-ல் நீக்கப்பட்டது.

உள்நாட்டுப் போருக்குப் பின்னர் மறைமுக வரித் திட்டம் பிரபலமடைந்தது. சேமிப்பு மற்றும் முதலீட்டுக்கு மறைமுக வரித் திட்டம் சாதகமாயிருந்தது. எனவே, அரசு இதனை விரும்பி நடைமுறைப்படுத்தியது. பொருளாதாரத்தில் ஏற்ற இறக்கங்கள் நிகழ்ந்தபோதுகூட ஆய வரிகள் நிலையான வருமானத்தை அளித்து வந்தன.

முதல் உலகப் போருக்குப் பின்னர் ஃபெடரல் அரசின் வருவாய்க் கட்டமைப்பில் புரட்சிகரமான மாறுதல்கள் உண்டாயின. அரசியலமைப்பு திருத்தப்பெற்று, தனியாள் வருமான வரி (Personal Income-tax) அறிமுகப்படுத்தப்பட்டது (1913). கம்பெனிகளின் இலாபங்கள் மீதும் வரிவிதிக்கப்பட்டது. போர் நெருக்கடி காரணமாக வரி வீதங்கள் உயர்த்தப்பட்டன. தொடக்கத்தில் தனியாள் வருமான வரியைப் பெரும்பாலான பொதுமக்கள் செலுத்தவேண்டியிருந்தது. பின்னர், அவ் வரித் திட்டத்தில் அரசு சில மாறுதல்களைச் செய்து, செல்வந்தர்கள் மட்டும் செலுத்தும் ஒரு வரியாக மாற்றியமைத்தது.

வாணிபப் பெரு மந்தத்தின் போது வரிவீதங்கள் மிகவும் கூடுத லாக்கப்பட்டன. நிகழ்கால அரசிறைப் பழக்கத்திற்கு இது முற்றி லும் வேறுபட்டது. பொதுமக்களுக்கு நன்மை பயக்கக்கூடிய பல திட்டங்கள் மீது ஃபெடரல் அரசு பணத்தை வாரியிறைத்தது என்று லும், அவற்றிடமிருந்து பெறப்படும் நன்மைகளை வரி வீத உயர்வுகள் பாதித்தன. மந்த காலத்தில் ஃபெடரல் வருவாய்க் கட்டமைப்பில் ஏற்பட்ட ஒரு முக்கிய நிகழ்ச்சி சமூகப் பாதுகாப்புத் திட்டத்தின்கீழ் கூலிகள் மற்றும் சம்பளப் பட்டியல் வரிகள் (Wages and Pay roll taxes) விதிக்கப்பட்டது. சிறிது காலத்தில் இவற்றின் வருவாய் ஃபெடரல் வருவாயில் 10 சத விதமாய் உயர்ந்தது.

அண்மைக் காலங்களில் தனியாள் மற்றும் கம்பெனி வருமான வரிகள் முக்கிய வருவாயினங்களாக மாறியிருக்கின்றன. மொத்த வருவாயில் ஐந்தில் இரு பங்கு தனியாள் வருமான வரியிலிருந்தும், நான்கில் ஒரு பங்கு கம்பெனி வருமான வரியிலிருந்தும் பெறப்படு கிறது. ஆய வரிகளிலிருந்து கிடைக்கும் தொகை மொத்த வருவா யில் ஆறில் ஒரு பங்காகும். இப்படி மறைமுக வரித் திட்டத்தின் முக்கியத்துவம் குறைந்து, நேர்முக வரித் திட்டத்தின் முக்கியத்துவம் பெருகியிருப்பதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன. ஒரு முக்கிய காரணம், கம்பெனிகள் பிரும்மாண்டமாக வளர்ந்தமை. மற்றொரு காரணம் பொதுமக்கள் ஒத்துழைப்பு. இன்னும் ஒரு காரணம் பண வருமானங்களைத் தரும் வேலைகளில் மிகுதியான தொழிலாளர்கள் ஈடுபட்டிருத்தல்.

தற்போதைய வரிகள் பெரும்பாலும் செல்வந்தர்களால் செலுத் தப்படுகின்றன. எனவே, சேமிப்புக்கும் முதலீட்டுக்கும் உரிய மூல தனத்தை இவ் வரித் திட்டம் குறைத்துவிடுகிறது எனக் கூறுவோரும் உளர். பொருளாதார ஏற்ற இறக்கங்களுக்கேற்ப மாறிக்கொள்ளும் நெகிழ்ச்சித்தன்மை ஃபெடரல் வரித் திட்டத்தில் இருக்கிறது. இது ஒரு சிறப்பு அம்சம். பத்தொன்பதாம் நூற்றாண்டில் இவ் வம்சம் காணப்படவில்லை.

### அரசிறைக் கைக்கோளின் பொதுப் போக்கு :

அரசின் வருவாய் மற்றும் செலவுக்கும், நாட்டுப் பண வருமா னத்துக்கும் உள்ள தொடர்பைப்பற்றி நிகழ்கால வருமான ஆராய்ச்சி வலியுறுத்துகிறது. ஆகவே எந்த ஒரு நாட்டின் அர சிறைக் கைக்கோளைப்பற்றியும் நாம் ஆராயும்போது, அந் நாட்டில் ஏற்பட்டிருக்கின்ற போர், மந்தம் ஆகியவற்றையும் நாம் கவனத் திற்கு எடுத்துக்கொள்ள வேண்டும். போர்க்காலத்தில் அரசிறைக் கைக்கோளால் பணவீக்கச் சூழ்நிலைகள் ஏற்படலாம். மந்த காலத்

களில் செலவைப் பெருக்குவது அரசுக்கு அவசியமாகிறது. இதன் அடிப்படையில் அமெரிக்க ஃபெடரல் அரசிறைக் கைக்கோளைச் சற்று ஆராய்ந்து பார்ப்போம்.

**போர்க் காலத்தில் அரசிறைக் கொள்கை :**

பத்தொன்பதாம் நூற்றாண்டிலிருந்து இருபதாம் நூற்றாண்டின் முற்பாதி வரையிலான காலப் பகுதியில் சுமார் நான்கு போர்களை அமெரிக்கா சந்தித்தது. அவையாவன: 1812ஆம் ஆண்டுப் போர் (1812-1815), உள்நாட்டுப் போர் (1862-1865), முதல் உலகப் போர் (1917-1919), இரண்டாவது உலகப் போர் (1942-1945). இப் போர் களின்போது ஃபெடரல் அரசின் சராசரி வருவாய் மற்றும் செலவீடு கள் பின்வருமாறு அமைந்திருந்தன.

| காலப் பகுதி | சராசரி வருவாய் | சராசரிச் செலவீடு |
|---|---|---|
| 1812 முதல் 1815 வரை ... | $ 14 000,000 | $ 30 000 000 |
| 1862 முதல் 1865 வரை ... | $ 223,000,000 | $ 727,000,000 |
| 1917 முதல் 1919 வரை ... | $ 3200,000 000 | $ 11,000 000 000 |
| 1942 முதல் 1945 வரை ... | $ 35 000,000 000 | $ 77,000 000 000 |

போர்க் காலங்களில் நிதிப் பற்றுக்குறைகள் (Deficits) மிகுதியா யிருந்திருக்கின்றன என்பதை மேற்காணும் பட்டியல் தெளிவுபடுத்து கிறது. ஒவ்வொரு போரின்போதும் விலைகள் மேன்மேலும் உயர்ந் தன என்பது இங்கே குறிப்பிடத்தக்கது. நிதிப் பற்றுக்குறைகளைப் போக்குவதற்கு அரசு பெரும்பாலும் கடன்களை வாங்கியது. 1812ஆம் ஆண்டின் போர் சமயத்தில அமெரிக்க ஃபெடரல் அரசு வட்டியீனும் கருவூலத் தாள்களை (Treasury notes) வெளியிட்டது. செலாவணியைப்போல் இவை புழக்கத்திலிருந்தன. உள்நாட்டுப் போரின்போது முதன் முதலாகத் தாள் செலாவணியை (Paper Currency) ஃபெடரல் அரசு நடைமுறைக்குக் கொண்டு வந்தது. சுமார் அரை மில்லியன் டாலர் தாள் செலாவணி வெளியிடப் பட்டது. இதன்மூலம் நிதிப் பற்றுக்குறை ஓரளவிற்குச் சமாளிக்கப் பட்டது.

கருவூலம் நேரடியாகவே செலாவணியை வெளியிடும் பழக்கம் ஃபெடரல் ரிசர்வ் திட்டம் ஏற்பட்ட பிறகு நிறுத்தப்பட்டது. முதல் உலகப் போரின்போது ஃபெடரல் பத்திரங்கள் விற்கப்பட்டன. பத்தி ரங்களின் விற்பனைக்கு ஃபெடரல் ரிசர்வ் கடன் செலாவணிப் (Credit) பெருக்கம் உதவிசெய்தது. பாங்குகள் ஃபெடரல் பத்திரங்களை

நிறைய வாங்கின. பொதுமக்களும் இவற்றை அதிகமாக வாங்கினர். அதற்கான பண வசதிகளைப் பாங்குகள் கொடுத்துதவின. இரண்டாவது உலகப் போரின்போது ஃபெடரல் அரசே வெளி அங்காடியில் பத்திரங்களைப் பேரளவில் வாங்கியது. பாங்குகள் இன்னும் சற்றுக் கூடுதலான அளவில் பத்திரங்களை வாங்கிக்கொண்டன. போர்க் காலக் கடன் வாங்கல் பொதுவாகப் பணவீக்கச் சூழ்நிலைகளை உருவாக்கியது. வரி வீதங்களை உயர்த்தினால் பண வீக்கத்தைக் கட்டுப்படுத்தலாம் என்பது இரண்டாவது உலகப் போரின்போது தான் உணரப்பட்டது.

### அரசிறைக் கைக்கோளும் பொருளாதார ஏற்ற இறக்கங்களும் :

பதினெட்டாம் நூற்றாண்டின் இறுதியிலிருந்து இருபதாம் நூற்றாண்டின் முற்பாதி வரையிலான காலப் பகுதியில அமெரிக்க நாட்டு உற்பத்தி, வேலை வாய்ப்பு, விலைகள், வருமானங்கள் ஆகியவற்றில் நிலைப்பாடு (Stability) இருக்கவில்லை. பத்தொன்பதாம நூற்றாண்டின் முற்பகுதியில் பண்ணைப் பொருள்களின் விலைகள் அடிக்கடி மாறிக்கொண்டிருந்தன. இதனால் பண்ணைகளில் அடிக்கடி பல பிரச்சினைகள் உண்டாயின. இவை பிறகு மற்ற தொழில்களுககும் பரவின. பொருளாதாரத்தில் ஏற்ற இறககங்கள் தோனறியதற்கு முக்கிய காரணங்கள் வருமாறு : அமெரிக்கப் பண்டங்களுக்கான வெளிநாட்டுத தேவையின் மாறுதல், நாட்டினுள் வெளிநாட்டு மூல தனம் வந்தமை, பாங்குத் திட்டததின் குறைபாடுகள், நிலை முதற் பொருட்களில் முதலீடு அடிக்கடி குறைநதமை, பெருகியமை ஆகியவை. வாணிபச் சுழலின் உச்ச நிலைகளின் (Peaks) போது ஃபெடரல் அரசின் வருவாய் உபரியாயிருந்தது; மந்தங்களின்போது பற்றுக் குறை நிலவியது. பற்றுக்குறையைச் சநதிப்பதற்கு அரசு பெரும் பாலும் பாங்குகளிடமிருந்து கடன்களைப்பெற்றது அல்லது செலாவணியை மிகுதியாக வெளியிட்டது. பண அளிப்புப் பெருகியமை பல நேரங்களில் மந்தத்தைக் கட்டுப்படுத்துவதற்குத் துணை நின்றது.

மந்தங்களையும் நெருக்கடிகளையும் போக்குவதற்கு அரசு உள்நாட்டுப போருக்குமுன்னர் வரை பொதுக்கடனை (Public Debt) யும் ரொக்க இருப்பையும் பயன்படுத்தி வநதது. உள்நாட்டுப் போருக்குப் பின்னரும் இதே முறையில மந்தங்களைச் சந்திப்பதற்கு அரசு முயன்று வநதது. ஆனல், ஃபெடரல் ரிசர்வ் திட்டம் ஏற்பட்ட பிறகு, மந்தத்தைச் சந்திக்கும் முறையில மாறுதல ஏற்பட்டது. வாணிபப் பெரு மநதததின்போது புதுக் கொள்கை (New Deal) வழியே பிறந்த விவசாயப் பண்ட விலை உயர்த்துத் திட்டம், தேசியத் தொழில்

மீட்புச் சட்டம், தேசியத் தொழிலாளர் நல்உறவுச் சட்டம், சமூகப் பாதுகாப்புத் திட்டம், பணம் மற்றும் பாங்குத்துறை சீர்திருத்தங்கள் ஆகியவை மந்தத்தை நிறுத்தி செழிப்பு நிலையைத் தோற்றுவித்தன. புதுக் கொள்கை காலத்தில் பற்றாக்குறை நிதியாக்கத்தையும் (Deficit financing) அரசு பேரளவில் கையாண்டது. புதுக் கொள்கை கடைப்பிடிக்கப்பட்டபோதுதான் அரசிறைக் கொள்கையில் பல மாறுதல்கள் தோன்றின.

1932-ல் வாணிபத்தில் மந்தம் உண்டாகி, சோதனைகள் ஏற்பட்ட நேரத்தில் நுகர்வோர் வருமானங்கள் சுருங்கி அவர்தம் செலவீடுகள் பெரிதும் குறைந்தன. தேவை இறக்கத்தைத் தொடர்ந்து முதலீடு குறைந்தது. மந்தத்தை நீக்குவதற்கு அரசு பல வழிகளை மேற்கொண்டது. ஃபெடரல் செலவீடுகள் அதிகப்படுத்தப்பட்டன. குறிப்பாகக் கட்டுமானம் (Construction) மீதான செலவீடு மிகவும் அதிகப்படுத்தப்பட்டது. செலவீடுகள் அதிகரித்துக்கொண்டேயிருந்ததன் விளைவாக 1932, 1933ஆம் ஆண்டுகளில் அரசு வருவாயில் பேரளவு பற்றாக்குறைகள் உருவாயின. பற்றாக்குறைகளைக் கண்டு அச்சமுற்ற அரசு உடனே செலவீடுகளைக் குறைப்பதற்கும், வரி வருவாய்களைப் பெருக்குவதற்கும் உரிய நடவடிக்கைகளை மேற்கொண்டது. 1932-ல் வருமான வரி, ஆய வரிகள் ஆகியவற்றின் வீதங்கள் உயர்த்தப்பெற்றன. பின்னர், ஹூவர் (Hoover) ஆட்சி முடிவுற்று, ரூஸ்வெல்ட் (Roosevelt) ஆட்சி மலர்ந்து, புதுக் கொள்கை நடைமுறைப்படுத்தப்பட்டபோது, ஃபெடரல் அரசு நடவடிக்கைகளில் பல தரப்பட்ட அடிப்படை மாறுதல்கள் செய்யப்பட்டன.

இப் புதுக் கொள்கையைப் பொறுத்தவரையில் நாம் இரு முக்கிய விஷயங்களை நினைவுபடுத்திக்கொள்ள வேண்டும். (1) புதுக்கொள்கையால் நாடு மந்தத்திலிருந்து விடுபட முடியவில்லை; (2) புதுக் கொள்கை பற்றாக்குறை நிதியாக்கத்தைப் பேரளவில் ஆளவில்லை. ஃபெடரல் செலவீடுகள் அதிகரித்தன என்பது உண்மையே. ஆனால், அவைகளுக்கேற்றவாறு வரிகளும் உயர்த்தப்பட்டன. 1933 முதல் 1937 வரை வரி வீதங்கள் உயர்ந்துகொண்டேயிருந்தன. பற்றாக்குறைகளைக் குறைப்பதில் ரூஸ்வெல்ட் குறியாயிருந்தார். மந்தத்தைச் செலவீட்டுப் பற்றாக்குறைப் பிரச்சினையாக எடுத்துக்கொள்ளாது, விலை இறக்கப் பிரச்சினையாக அவர் எடுத்துக்கொண்டார். எனவே, பண்டங்களின் விலைகளை உயர்த்துவதற்கான நடவடிக்கையில் ஆர்வம் காட்டினார். இதனால்தான் இவர் மீட்சித் திட்டங்களால்—தொழில் மீட்புச் சட்டம், விவசாயச் சீரமைப்புச் சட்டம், டாலர் மறு மதிப்பீடு (Revaluation) ஆகியவற்றால்—நாட்டு மக்க

ளின் மொத்த வருமானத்தையோ அல்லது பொருளாதாரத்தின் வாங்குந் திறனையோ அதிகப்படுத்த முடியாமல் போயிற்று.

1937-ல் குடியரசுத் தலைவர் யோசனைப்படி அரசுச் செலவீடுகள் குறைக்கப்பட்டன. உடனே பற்றாக்குறையும் மறைந்தது. ஆனால், அடுத்து ஒரு மந்தம் உண்டாவதற்கு இது ஓரளவிற்குக் காரண மாயிற்று எனலாம். ஆகவே 1939 ல் அரசுச் செலவீடுகளைச் சற்று விரிவு செய்வதற்குக் குடியரசுத் தலைவர் ஒப்புக்கொண்டு, 'செலவு மற்றும் கடன் வழங்கு திட்டம்' (Spend-lend Programme) ஒன்றனை அமல் செய்தார். இதன் விளைவாக அரசுச் செலவீடுகள் கூடுத லாயின. சொக்கப் பற்றாக்குறையும் உண்டாயிற்று. மந்தத்தைக் கட்டுப்படுத்துவதில் புதுக் கொள்கைக்குத் திருப்திகரமான வெற்றி கிட்டவில்லை. மந்தத்தை அதனால் அறவே அகற்ற முடியவில்லை. காரணம்? புதுக்கொள்கை காலத்தில் நுகர்ச்சி (Consumption) மிக மிக மெதுவாகவே உயர்ந்தது. ஃபெடரல் செலவீடுகளால் நுகர் வோர் வருமானம் அதிகரிப்பதை வரி வீத உயர்வுகள் கெடுத்துவிட் டன. அவர்தம் வருமானம் உயர்ந்திருந்தால், நுகர்ச்சி அதிகரித்து வாணிப முதலீடு பெருகியிருக்கும். மீட்சியும் அருமையிருக்கும். புதுக் கொள்கையின்போது பல விஷயங்கள் தெளிவாயின. மந்தத் தின் பிடியில் நாடு உள்ளபோது அரசு செயலற்றிருக்கக்கூடாது. மொத்தச் செலவீட்டைப் பெருக்க அது நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். ஆனால், அதே நேரத்தில் உற்பத்தி விலைகள் முதலிய வற்றின் அளவுக்குமீறிக் குறுக்கிடச் செய்யும் போக்குகளைத் தவிர்க்க வேண்டும். பாங்கு மற்றும் நிதியமைப்புத் திட்டங்களில் மாறுதல் களைச் செய்வதன்மூலமும் மந்தத்தைப் போக்குவதற்கு முயற்சிகள் மேற்கொள்ளப்படலாம்.

**சமீப காலப் பிரச்சினைகள்:**

1940-க்குப் பிறகு, அதிலும் குறிப்பாக 1946ஆம் ஆண்டின் வேலை வாய்ப்புச்சட்டம் இயற்றப்பட்டதற்குப் பின்னர் ஃபெடரல் அரசிறை கைக்கோளில் நல்ல மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. இம் மாறு தல்களினால்தான் உற்பத்தியும் வேலை வாய்ப்பும் தொடர்ந்து நல்ல நிலையில் இருந்துவர முடிந்தது. மந்தங்களும் கட்டுக்குள் அடங்கி இருந்து வரலாயின. 1948, 1953ஆம் ஆண்டுகளில் மந்தம் அமெரிக்க வாணிபத்தைத் தாக்க முடன்றபோது அரசு வரிகளைக் குறைத்தது: பற்றாக்குறைகளை ஏற்றுக்கொண்டது. இதனால் மந்தம் கட்டுண்டது.

பண வீக்கத்தைக் (inflation) கட்டுப்படுத்துவதற்கு அரசிறைக் கைக்கோளிடம் உள்ள சக்தி குறைவு என்பதாக அண்மைக்கால அனு

பவம் தெரிவிக்கிறது. அரசின் பண எதிர்ப்பு நடவடிக்கைகள் பொதுவாக மக்களின் கையிருப்புக்களைக் குறைக்கின்றன. ஆதலால் இவற்றை மக்கள் எப்போதும் வெறுப்பர். மேலும் பண வீக்கம், தேவை, ஏற்றத்தாலன்றி உற்பத்திச் செலவு அதிகரிப்பாலும் உண்டாகலாம். ஆகவே. தேவையைக் கட்டுப்படுத்துவது ஒன்றன் மூலமாக மட்டும் பண வீக்கத்தை நீக்கிவிட முடியாது. தவிரவும், வேலை வாய்ப்பின்மை, உற்பத்தி யிழப்பு ஆகியவற்றைப் பெருகாதிருக்கச் செய்யும் முறையில் தேவையைக் கட்டுப்படுத்துவதில் அனேக சிரமங்களிருக்கின்றன. நியாயமான காரணங்களை முன்னிட்டு ஃபெடரல் அரசுச் செலவீடுகள் அதிகரித்துக்கொண்டிருப்பதைக் குறைத்து, அதன் வழியே பண வீக்கத்தைக் கட்டுப்படுத்துவது அவ்வளவு எளிதான செயலன்று.

*அரசிறைக் கைக்கோளும் பொருளாதார வளர்ச்சியும்:*

அரசிறைக் கைக்கோளுக்கும், பொருளாதார வளர்ச்சிக்குமிடையில் பல விஷயங்களைப் பொறுத்து தொடர்புகளிருக்கின்றன. ஆராய்ச்சி, முதல் திரட்சி (Capital formation), நலவாழ்வு மற்றும் கல்வித் திட்டங்கள் போன்றவற்றோடு தொடர்புடைய அரசுச் செயல்கள் பொருளாதார வளர்ச்சிக்குத் துணை புரிகின்றன. பொருளாதார நிலைப்பாடு (Stabiltty), வருமான உயர்வு. தேவை ஏற்றம், வேலை வாய்ப்புப் பெருக்கம் ஆகியவற்றினை உருவாக்கக்கூடிய அரசிறைக் கைக்கோள்மூலம் வர்த்தக நிறுவனங்களின் முதலீடும் புத்தாக்கங்களும் (Innovations) அதிகரிக்கின்றன. இத்தகைய கைக்கோளால் வாணிப முழுவதும் ஊக்கம் வளர்ந்து, தொழில் பெருகி, பொருளாதார வளர்ச்சி வேரூன்றுகிறது.

மூலதனம் கிடைப்பதற்கும் அரசிறைக் கொள்கை உதவமுடியும். முதலீட்டுக்குத் தேவையான பணத்தைக் கிடைக்கச் செய்வதற்குரிய வகையில் வரிக் கட்டமைப்பும், பொதுக்கடன் கைக்கோளும் (Public Debt Policy) மாற்றியமைக்கப்படலாம். 19ஆம் நூற்றாண்டில் சுங்கமும் ஆய வரியும் முக்கியமாயிருந்தபோது அமெரிக்க மக்களின் நுகர்ச்சியளவு பாதிக்கப்பட்டது. பின்னர் தனியாள் வருமான வரியும் கம்பெனி வருமான வரியும் நடைமுறைக்கு வந்தபோது சேமிப்பும், முதலீடும் பாதிக்கப்பட்டன. இதனால் சின்னஞ்சிறு நிறுவனங்கள் எல்லாம் சிரமத்திற்குள்ளாயின. இவ்வாறாக, வரித் திட்ட மாறுதல்கள் முதலீட்டளவை மாற்றியமைக்கின்றன.

முதலீட்டளவைக் குறைக்கவும் பெருக்கவும் பொதுக் கடன் திட்டமும் ஆளப்படலாம். போர் அல்லது மந்த காலங்களில் அரசு கடன்களைத் திரட்டும்போது முடங்கிக் கிடக்கும் பணமும், புதிதாக

வெளியிடப்படும் பணமும் உபயோகத்திற்கு வருகின்றன. எனவே, தனியார் மூலதனத் திரட்சியிலிருந்து வரும் பணம் முதலீட்டுக்குத் தவிர, வேறு உபயோகங்களுக்குச் செல்வதில்லை. வாணிபம் செழிப் படையும்போது அரசு கடன்களைத் திருப்பிக் கொடுக்கிறது. இதனால் முதலீடு செய்வதற்கான மூலதனத்தின் அளவு பெருக்கமடைகிறது. செழிப்பு நிலையின்போது மூலதனம் நிறையத் தேவைப்படும் என்பது இங்கே நினைவுகூரத் தக்கது. முதலீட்டுப் பெருக்கம் வழியே தொழில் வளர்ச்சி வலுவடைகிறது. 1947-52 காலப் பகுதியில் ஃபெடரல் அரசு சுமார் 30 பில்லியன் டாலர் கடன்களைத் திருப்பிக் கொடுத்தது. இத் தொகையின் பெரும் பகுதி வாணிப பாங்குகள் மற்றும் இன்சூரன்ஸ் கம்பெனிகள் மூலம் மூலதன அங்காடியை அடைந்தன.

கட்டாயச் சேமிப்பினை (Forced Saving) உருவாக்குவதற்கும் வருவாய் மற்றும் பொதுக்கடன் கைக்கோள்கள் ஆளப்படலாம். கட்டாயச் சேமிப்பால் நுகர்ச்சியிலிருந்து நிதிகள் முதலீட்டுக்குத் திருப்பி விடப்படுகின்றன. 19ஆம் நூற்றாண்டில் ஃபெடரல் அரசு பின்பற்றிய வருவாய் பொதுக்கடன் கைக்கோள் கட்டாயச் சேமிப்பு வளர்வதற்கு உதவிற்று.

*அண்மைக்கால அரசிறைக் கைக்கோள்:*

பண்டங்கள் மற்றும் பணிகள்மீதான மொத்தச் செலவீட்டை மாற்றியமைப்பதன்மூலம் ஃபெடரல் செலவீடுகளால், வரிகளால் நாட்டின் மொத்த வேலை வாய்ப்பையும் உற்பத்தியையும் மாற்றி யமைக்க முடியும். ஃபெடரல் அரசு நேரடியாக வாங்கும் பண்டங் கள், பணிகளின் அளவு மொத்தத் தேவையில் ஒரு கணிசமான பகுதியாயிருக்கிறது. தவிரவும் ஃபெடரல் அரசு 'மாற்றுச் செலுத்து களை' (Transfer payments)யும் மக்களில் பலருக்கு வழங்குகிறது. உதாரணம்: சமூகப் பாதுகாப்பு, வேலைவாய்ப்பின்மை இன்சூரன்ஸ் உதவிகள், போர்வீரர் மறுவாழ்வு உதவி, ஓய்வுகால ஊதியம் முதலி யவை. பண்டங்கள், பணிகளை அரசு நேரடியாக வாங்குவதனாலும், மாற்றுச் செலுத்துகளை வழங்குவதனாலும், தனியார் வருமானங்கள் கூடுதலாகி நுகர்ச்சி அதிகரித்து முதலீடு பெருகுகிறது. அதேபோது ஃபெடரல் வரிகள் தனியார் மற்றும் கம்பெனிகளால் செலவிடப்படக் கூடிய வருமானப் பகுதிகளைக் குறைத்து, தனியார் செலவீட்டளவைக் குறைக்கின்றன.

வரி வீதங்கள் மாறாதிருக்கும்போது ஃபெடரல் செலவீடுகள் அதிகரித்தால் நாட்டின் நுகர்ச்சிச் செலவீடு கூடுதலாகி, பொருளா

தாரத்தில் பெருக்கச் சூழ்நிலைகள் உருவாகின்றன. தேவை உயர்வதைக் காணும் உற்பத்தியாளர்கள் உற்பத்தியைப் பெருக்குகின்றனர். நிறையுடை வேலை வாய்ப்பு (Full employment) நிலவும்போது ஃபெடரல் செலவீடுகள் கூடுமானால் விலைகள் உயரும். ஆனால் குறைவான வேலை வாய்ப்பு நிலையின்போது ஃபெடரல் செலவீடுகள் கூடினால் தேவை மட்டுமே உயர்கிறது. இது உற்பத்தியாளர்களின் நடவடிக்கைகளுக்குச் சிறந்த உற்சாகத்தை யளிக்கிறது. உதாரணமாக, 1961-ல் தனியார் மற்றும் அரசுத் தேவை மிகுதியடைந்த போது உற்பத்தி மிகவும் பெருகிற்று.

மந்தம் மற்றும் பண வீக்கத்திற்கெதிரான பாதுகாப்பு வழிமுறைகள் ஃபெடரல் அரசினுடைய திட்டத்தினுள் இடம் பெற்றுள்ளன. பெரும்பாலான வரிகள் தனியார் வருமானங்கள் விற்பனைகள் ஆகியவை மீதானவை. ஆகவே, பொருளாதார நடவடிக்கைக்கு ஏற்றவாறு வரி வருவாய்கள் தாமாகவே உயர்கின்றன, தாழ்கின்றன. தவிரவும், வேலை வாய்ப்பின்மை உதவிகள் போன்ற ஃபெடரல் அரசுச் செலவீடுகள் நாட்டுப் பொருளாதார நிலைக்கேற்றவாறு குறைகின்றன, பெருகுகின்றன. ஆகவே, பொருளாதார ஏற்ற இறக்கங்களுக்கேற்ப ஃபெடரல் அரசுச் செலவீடுகளி மற்றும் வருவாய்களில் கணிசமான ஏற்ற இறக்கங்கள் நிகழ்கின்றன.

இப்படி, தாமே இயங்கிக்கொள்கின்ற உட்புணைவுள்ள நிலைபேறுக்கக் கருவிகள் (Built-in-Stabilisers) சுழல் ஏற்ற இறக்கங்களின் கடுமையைக் குறைக்கின்றன. பொருளாதார நடவடிக்கையின் மந்தத்திற்குக் காரணமான சக்திகள் பலவீனமாயிருந்தால் உட்புணைவுள்ள நிலைபேறுக்கக் கருவிகளால் மீட்சி எளிதில் தோன்றிவிடும். ஆனால், இச்சக்திகள் வலிவுமிக்கவையாயிருப்பின் உட்புணைவுள்ள நிலை பேறுக்கக் கருவிகளால் எதையும் சாதிக்க முடியாமற் போகிறது. இந்த நோக்கில் இவற்றை மட்டுமே நம்பியிராமல், வரி வீதங்களில் மாறுதல் செய்தல், செலவீட்டுத் திட்டங்களை மாற்றுதல் ஆகியவற்றையும் பின்பற்ற வேண்டும். அப்போதுதான் நிலைபேறுக்கம் ஏற்படும். இதற்கு அரசினைக் கைக்கோள் நெகிழ்ச்சித் தன்மையைப் (Flexibility) பெற்றிருத்தல் வேண்டும். அதாவது, பொருளாதார நிலைபேறுக்கம் உண்டாவதற்கு அரசு உடனுக்குடன்—தேவைப்படும் போது—வரி வீதங்களையோ அல்லது செலவீட்டுத் திட்டங்களையோ மாற்றியமைக்கும் நிலையில் இருத்தல் வேண்டும். மந்தத்தைக் கண்டுணர்ந்தவுடனேயே அதைத் தடுத்து நிறுத்துவதற்கு அரசு முயல வேண்டும்: இல்லையென்றால் மீட்சி எழும் என்ற நம்பிக்கை உற்பத்தியாளர்களிடமோ அல்லது பொது மக்களிடமோ இல்லாது போய்

விடும். அதோடு மந்தமும் தீவிரமடையும். அவ்வாறே பணவீக்கச் சூழ்நிலைகளை உடனுக்குடன் கட்டுப்படுத்தவில்லையென்றால் யூக வாணிபம் எல்லை மீறிப்போய் உள்நாட்டுப் பொருளாதாரம் சிதைவுற்று அயல்நாட்டுச் செலுத்து நிலையும் பாதிக்கப்படும். அரசிறை நடவடிக்கையை விரைவாக மேற்கொண்டால்தான் பொருளாதாரத்தை அமிதமாகத் தூண்டல் அல்லது அளவுக்கு மீறிக் குறைத்தல் வழியே பிறக்கும் தீமைகளைக் கட்டுப்படுத்த முடியும்.

1958-க்குப் பின்னர், உட்புணைவுள்ள நிலைபேறுக்கக் கருவிகள், வரவு செலவுத் திட்ட மாறுதல் ஆகியவைமூலம் பொருளாதார நடவடிக்கையை மாற்றியமைப்பதற்கு ஃபெடரல் அரசு முயன்றது. 1960-ல் அரசிறைத் திட்டம் மிகவும் மிதமாயிருந்தது; அரசுச் செலவினங்கள் கடுமையாகக் குறைக்கப்பட்டன. 1961-ல் நாட்டில் மந்தம் தீவிரமடைந்தபோது ஃபெடரல் அரசு அரசிறை அதிகாரங்களைப் பயன்படுத்தி, பொருளாதார மீட்சியினைக் கொணரப் பாடுபட்டது. ஃபெடரல் கொள் முதல் திட்டம் தீவிரப்படுத்தப்பெற்றது. வரித் திருப்பிக் கொடுக்கல்கள் (tax refunds) துரிதப்படுத்தப்பட்டன. மாற்றுச் செலுத்தல் திட்டத்தில் மாறுதல்கள் செய்யப்பட்டன. போர் வீரர் ஆயுள் இன்சூரன்ஸ் இலாப ஈவுகள் (Dividends) பல மாதங்களுக்கு முன்னதாகவே (சுமார் 150 மில்லியன் டாலர்கள்) பகிர்ந்தளிக்கப்பட்டன. 1961ஆம் ஆண்டின் ஆகஸ்ட் மாதத்தில் சமூகப் பாதுகாப்பு உதவிகள் மிகவும் விரிவு செய்யப்பட்டன; வேலைவாய்ப்பின்றி இருந்துவரும் நபர்களைச் சார்ந்திருக்கும் குழந்தைகளும் புதிதாக உதவிகளைப் பெற்றனர். தனிப்பட்ட தேசிய நோக்கங்களுக்காகவும் ஃபெடரல் செலவீடுகள் அதிகப்படுத்தப் பெற்றன. நகர்ச் சீரமைப்பு, பிராந்திய வளர்ச்சி, சாலைப் போக்குவரத்து முன்னேற்றம் ஆகியவற்றிற்காக ஃபெடரல் அரசு மாநிலங்களுக்கு நிறைய பண உதவிகளை நல்கியது. விவசாயிகளுக்கு நேரடியாகப் பண உதவிகள் கிடைத்தன. இச் செலவுகளின் விளைவாக அரசின் வருவாயில் பற்றுக்குறை ஏற்பட்டது. பின்னர், பொருளாதாரம் மந்தத்தைவிட்டு வெளியேறிய நிலையில் 1961-க்குப் பின்னர் பற்றுக்குறை மெல்லக் குறைந்தது. வரவு செலவுத் திட்டத்தைப் பொருளாதார நிலை பேறுக்கம் எய்துவதற்கு வெற்றிகளாகப் பயன்படுத்த முடியும் என்ற உண்மை, 1960-க்குப் பின்னர்தான் தெளிவாக உணரப்பட்டது. நாட்டு மக்களின் வருமானத்தை உயர்த்தும் குறிக்கோளில் ஃபெடரல் அரசு 1962-ல் சுமார் 98 பில்லியன் டாலர்களைச் செலவிட்டது.

ஆக்கத்திறனை அதிகப்படுத்தும் செலவீடுகளில் தற்போது அமெரிக்க அரசிறைக் கைக்கோள் ஆர்வம் காட்டுகிறது. ஆக்கத்

திறனுளது தொழிலாளர் வளர்ச்சி, தொழில் நுட்ப அறிவு முன்னேற்றம், தொழில் நிர்வாக மேம்பாடு, மூலதனத் திரட்சி, புதிய சாதனக் கண்டுபிடிப்பு, கல்வி வளர்ச்சி ஆகியவற்றைச் சார்ந்திருக்கிறது. இவைமீதான செலவீடுகளை அரசு அதிகப்படுத்தத் தயாராயிருக்கிறது. ஆக்கத்திறன் கூடுவதனுல் பொருளாதார வளர்ச்சி மிகுதியாகும் என்று நம்பப்படுகிறது. நிலைபேறுக்கம் எய்துவதற்கும் அரசிறைக் கைக்கோளை அரசு பயன்படுத்தி வருகிறது. வருமானத்தையும் வேலை வாய்ப்பையும் நிலையாயிருந்துவரச் செய்யும் முறையில் தனியார் பொருளாதாரத்தில் சேமிப்பும் முதலீடும் அமைவதில்லை. எனவே, வருமானத்தை நிலைப்படுத்துவதற்கான முறையில் செலவீடுகளை அமைத்து வருகிறது.

# 18. அமெரிக்க அரசின் விவசாயக் கைக்கோள்

## (The Agricultural Policy of the Government of U.S.A.)

அமெரிக்கப் பண்ணைகளின் எண்ணிக்கையும், பண்ணைத் தொழிலாளர் எண்ணிக்கையும் தற்போது குறைந்து வருகிறது. 1929 ஆம் ஆண்டில் அமெரிக்க மக்களில் 25 சத விதத்தினர் பண்ணைகளை நம்பியிருந்தனர்; பண்ணையில் ஈடுபட்டிருந்த தொழிலாளர் எண்ணிக்கை அப்போது அமெரிக்க மொத்தத் தொழிலாளர் தொகையில் 20 சத விதமாயிருந்தது. ஆனால், தற்போது அமெரிக்க மக்கள் தொகையில் 12½ சத விதத்தினரே பண்ணைகளை நம்பியிருக்கின்றனர். பண்ணைத் தொழிலாளர் எண்ணிக்கை, மொத்தத் தொழிலாளர் எண்ணிக்கையில் 10 சத விதமாக மட்டுமே இருக்கிறது. நாட்டு வருமானத்திலும் அமெரிக்க விவசாயத் தொழிலின் முக்கியத்துவம் குறைந்து வருகிறது. நாட்டு வருமானத்தில் இருபதில் ஒரு பங்குதான் விவசாயத்திலிருந்து பெறப்படுகிறது. என்றாலும், வேளாண்மை பற்றிய அரசுத் திட்டங்கள் அண்மைக் காலங்களில் அதிகரித்துள்ளன. விவசாயிகளின் பொருளாதார விவகாரங்களில் ஃபெடரல் அரசு பல நேரங்களில் நேரடியாகக் குறுக்கிடுகிறது. எனவே, அரசின் விவசாயக் கைக்கோள் (Policy) பற்றி பல விவாதங்கள் எழுந்துள்ளன. அரசின் விவசாயக் கைக்கோளைப்பற்றிச் சற்று விரிவாக ஆராய்வதற்கு முன்னால், அமெரிக்க வேளாண்மைத் தொழிலின் சில அடிப்படைப் பொருளாதார இயல்புகளை நோக்குவோம்.

அங்காடிக் கட்டமைப்பு :

மற்ற தொழில்களில் உற்பத்தியாகும் பண்டங்களுக்குள்ள அங்காடிகளில் தூய போட்டி (Pure Competition) யின் அம்சங்கள் கிடையா. பண்டங்கள் வெவ்வேறானவை; ஓரினத்தைச் சார்ந்தவை யல்ல. அடையாளப் பெயர்கள் (Board names), வர்த்தகக் குறிகள் (Trade marks), விளம்பரம் ஆகியவை மூலமாக உற்பத்தியாளர்கள் நுகர்வோர்களின் கவனத்தைத் தம் பக்கம் இழுக்க முயல்கின்றனர். எஃகு முதலான முக்கியப் பண்டங்களைப் பொறுத்தவரையில் விலைப் போட்டியை (Pricc Competition) விட விலை நிர்ணயத் தலைமையே (Price leadership) பிரதான அம்சமாயிருக்கிறது. இப்படிப்பட்ட அங்காடிச் சூழ்நிலைகளில், ஒரு குறிப்பிட்ட பண்டத்திற்கான தேவை குறைந்தால், அப் பண்டத்தின் உற்பத்தியாளர்கள் உற்பத்தியின் அளவைக் குறைத்து விலையை மாறுமலிருக்கச் செய்ய முயல் கின்றனர்.

விவசாயப் பண்ட அங்காடிச் சூழ்நிலைகள் இவற்றிற்கு முற்றிலும் மாறுபட்டவை. நிறைவுப் போட்டியை (Perfect Competition) ஒத்த சூழ்நிலைகள் விவசாய அங்காடியில் காணப்படுகின்றன. அங்காடி நிலவரங்களால் விலைகள் நிர்ணயிக்கப்படுகின்றன. விவசா யப் பண்டங்கள் தரத்திலும், இனத்திலும் வேறுபடலாம் ஆனல், ஒரு குறிப்பிட்ட தரத்தில் உள்ள விவசாயப் பண்டங்கள் ஓரினத் தன்மையைப் பெற்றிருக்கின்றன. அடையாளப் பெயர், வாத்தகக் குறிகள், விளம்பரம் ஆகியவை மூலமாக ஒரு விவசாயி தனது கோதுமையை மற்றொரு விவசாயின் கோதுமையிலிருந்து வேறு படுத்திக் காட்ட முடியாது. எந்த ஒரு தனிப்பட்ட உற்பத்தியாள னும், உற்பத்தியளவை மாற்றியமைப்பதன்மூலம், விலையை மாற்ற முடியாது. மற்ற தொழில்களில் பொதுவாகக் காணப் படக்கூடிய முழுச் சர்வாதீனம் (Oligopoly), விலை நிர்ணயத் தலைமை முதலியவை விவசாய அங்காடிகளில் காணப்படவில்லை. ஒரு விவசா யப் பண்டத்தின் தேவை குறையும்போது, அப் பண்டத்தின் விலை குறைகிறது விலையை மாறுமலிருக்கச் செய்ய எந்த ஓர் உற்பத்தி யாளனும் உற்பத்தியைக் குறைக்க முயல்வதில்லை. எனவே, அரசின் குறுக்கீடற்ற நிலையில் விவசாயப் பண்டத் தேவையில் ஏற்ற இறக் கங்கள் தோன்றினல், விலைகள்தான் பாதிக்கப்படுகின்றனவே தவிர, உற்பத்தி யளவன்று.

தேவையின் இயல்பு:

அமெரிக்க விவசாயப் பண்டத் தேவையில் இருகூறுகள் உள்ளன. அந்நிய நாட்டுத் தேவை, உள்நாட்டுத் தேவை இவையிரண்டிலும்

வெவ்வேறு அளவான ஏற்ற இறக்கங்கள் உண்டாகின்றன. முதல் உலகப் போருக்கு முன்பு இருந்ததைவிட, வெளிநாட்டுத் தேவை தற்போது குறைவாயிருக்கிறது. பெரும்பாலான ஐரோப்பிய நாடுகள் தமது விவசாய உற்பத்தியைப் பெருக்கிக்கொண்டு அமெரிக்காவிடமிருந்து பெற்றுவரும் இறக்குமதிகளைக் குறைத்துக்கொண்டன. ஆனால், குறைவாயிருக்கிறது என்பதற்காக வெளிநாட்டுத் தேவையை நாம் அறவே புறக்கணித்துவிட முடியாது.

உள்நாட்டுத் தேவை அண்மைக் காலங்களில் அதிகரித்துள்ளது. மக்கள் தொகை வளர்ச்சி, வருமான உயர்வு, உணவுப் பழக்க மாறுதல் ஆகியவை காரணமாக, விவசாயப் பண்டங்களுக்கான உள்நாட்டுத் தேவை பெருகியுள்ளது. என்றாலும், இவற்றில் மக்கள் தொகை வளர்ச்சியே முக்கியமானது. மக்கள் தொகையைவிட விவசாய உற்பத்தி மிகுதியாகப் பெருகினால் விவசாயப் பண்டங்களின் விலைகள் மிகுதியாகக் குறைகின்றன.

**அளிப்பின் இயல்பு ;**

ஒரு தனிப்பட்ட விவசாயியின் உற்பத்தி, மொத்த விவசாய உற்பத்தியின் ஒரு மிகச் சிறிய பகுதியாக இருக்கிறது. எனவே, தனது உற்பத்தியளவை மாற்றுவதன்மூலம், பண்டத்தின் விலையை அவனால் மாற்ற முடியாது. அளிப்பு, தேவைக்கு மிகுதியாயிருக்கும்போது உற்பத்தியைக் குறைத்து விலையை மாறாமலிருக்கச் செய்யும் நிலையில் அவன் இல்லை. விலைகள் குறையும்போது மற்ற தொழில்களில் உற்பத்தி குறையும். ஆனால், விவசாயத் தொழிலில் நிலைமை வேறு. விவசாயப் பண்டங்களின் விலைகள் தாழ்கின்றபோது, விவசாய உற்பத்தி குறைவதில்லை. சில நேரங்களில் உற்பத்தி அதிகரிக்கக்கூடச் செய்கிறது.

நிறைவுப் போட்டிச் சூழ்நிலையில் உற்பத்திச் சாதனங்கள் தொழில்விட்டு தொழில் பெயர்ந்து செல்லும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஆனால் அமெரிக்க ஐக்கிய நாட்டில் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும் பொருளாதாரச் சாதனங்கள் இப்படிப் பெயர்ந்து செல்லும் நிலையில் இல்லை. அங்கேயுள்ள பெரும்பாலான விவசாயிகளுக்கு விவசாயம் ஒரு தொழிலாக மட்டும் இருக்கவில்லை. வாழும் வழியாகவுமிருக்கிறது. எனவே, விலைகள் குறைவாயிருக்கின்றன என்பதற்காகவோ அல்லது வருமானங்கள் குறைவாயிருக்கின்றன என்பதற்காகவோ அவர்கள் தமது பாரம்பரைத் தொழிலை விட்டகலத் தயாராயில்லை. நிலைமை சீர்படும் என்ற நம்பிக்கை அவர்களுக்கு எப்போதும் உண்டு. மேலும், பண்ணை வாழ்க்கையில் அவர்களுக்கு ஒருவகைப் பொருளாதாரப் பாதுகாப்பு (Economic Security) இருக்கிறது. பண்

வருமானம் குறைவாயிருக்கக்கூடும் என்றாலும், அவர்களுக்கு உண்ண உணவும், இருக்க இடமும் இருக்கிறது. ஆகவே, மற்ற தொழில்களுக்குச் செல்ல அவர்கள் எளிதில் இசைவதில்லை. பண்ணை நிலங்கள் கட்டடங்கள், கருவிகள் வேறு எந்தப் பண்டங்களைத் தயாரிப்பதற்கும் பயன்பட முடியாது. உதாரணமாக, பால் பண்ணைத் திட்டத்திற்குப் பயன்படும் கட்டடங்களும் கருவிகளும், புகையிலை உற்பத்திக்குப் பயன்படா. கோதுமை உற்பத்திக்குப் பொருத்தமாயிருக்கும் நிலம், பழத் தோட்டங்களை வைப்பதற்குப் பொருத்தமாயிராது.

பண்ணை வாழ்க்கையைவிட்டு நகரங்களுக்குச் சென்று வேறு வேலையைத் தேடிக் கண்டுபிடிப்பதில் பல சிரமங்கள் இருக்கின்றன. விவசாயத்தில் மட்டுமே விவசாயிகளுக்குப் பயிற்சியும் அனுபவமும் உண்டு. வேறு தொழில்களில் அவர்களுக்குப் பயிற்சி கிடையாது. எனவே, அவர்களுக்கு வேலைகளைத் தர யாரும் முன் வருவதில்லை. அத்தோடுகூட, வேறு தொழில்களில் வேலை வாய்ப்பின்மைப் பிரச்சினை மிகுதியாயிருப்பின் நிலைமை மேலும் மோசமாகும். விவசாயிகள் வேறு தொழில்களுக்குச் செல்வது என்பது, அத்தொழில்களில் உள்ள வேலை வாய்ப்பளவைப் பொறுத்தது எனலாம்.

விலைகள் குறைவாயிருக்கும்போதுகூட உற்பத்தி யளவைப் பெருக்குவது விவசாயிகளுக்கு நன்மை பயக்கிறது. புதிய எந்திரங்கள், புதிய விதைகள், புதிய உரங்கள் நடை முறைக்கு வரும்போது விவசாயிகள் விவசாயப் பண்ட விலைகளைப்பற்றிக் கவலைப்படாது உற்பத்தியை அதிகப்படுத்தவே செய்கின்றனர். தமது பண்டத்தின் விலை உயர்வாயிருந்தாலும் சரி, அல்லது தாழ்வாயிருந்தாலும் சரி உற்பததியளவு உயர்ந்த பட்சமாயிருக்க வேண்டும். உற்பத்திச் செலவு குறைந்த பட்சமாயிருக்கவேண்டும் என்பதில்தான் ஒரு தனிப் பட்ட விவசாயி குறியாயிருக்கிறான்.

விவசாயப் பண்டங்களின் விலைகள் நிர்ணயமாவதற்குப் பல மாதங்களுக்குமுன்பே, அவற்றை உற்பத்தி செய்வதற்கான முயற்சிகள் மேற்கொள்ளப்பட்டு விடுவதனால், விலைகளுக்கேற்றவாறு உற்பத்தியைக் குறைக்கவோ அல்லது கூட்டவோ விவசாயியினால் முடிவதில்லை. இத்தகைய காரணங்களை முன்னிட்டு விவசாயப் பண்டங்களின் அளிப்பு நெகிழ்ச்சியற்றதாக (inelastic) இருக்கிறது.

அரசின் குறுக்கீடு (Government Intervention) :

இப்படிப்பட்ட சூழ்நிலையில், விவசாயப் பண்டங்களின் விலைகளை மாறாமலிருக்கச் செய்யவும், அவற்றை விவசாயிகளுக்கு ஏற்றதாயிருக்கச் செய்யவும் அரசு விழைந்தால், அது எந்தெந்த நடவடிக்கை

களில் ஈடுபடக்கூடும்? உற்பத்தியையோ அல்லது விற்பனையையோ அல்லது இவை யிரண்டையுமோ அது கட்டுப்படுத்தலாம். உற்பத்தியைக் குறைக்கும் நோக்கத்தில் அமெரிக்க அரசு பல நேரங்களில் ஒவ்வொரு தானியத்திற்கும் விடப்பட்ட நிலப் பகுதியின் அளவைக் குறைக்க முற்பட்டிருக்கிறது. இது ஒரு சாதனைக் கட்டுப்பாடு ஆகும். ஆனால், இதனால் எதிர்பார்த்த நன்மைகள் கிட்டவில்லை. ஒரு தானியத்திலிருந்து விடுவிக்கப்பட்ட நிலப் பகுதி மற்றொரு தானியத்திற்குப் பயன்படுத்தப்பட்டு விடும். எனவே மொத்த உற்பத்தி குறையாது. மேலும் விடுவிக்கப்பெற்ற நிலங்கள் வளம் குறைந்தவை; விடுவிக்கப் படா நிலம் வளம் மிகுந்தவை. இவற்றின் விளைச்சல் அனேக வேளைகளில் அதிகப்படுத்தப்பட்டன. எனவே தலைவீத ஏக்கர் உற்பத்தி அதிகரித்து, மொத்த உற்பத்தி கூடுதலாகியது. உபரி உற்பத்தியை இருப்புச் செய்வதற்குத் தனியார் மற்றும் அரசு தானியக்கிடங்குகளை ஏற்படுத்துவதும், அதிகப்படுத்துவதும் அவசியமாயிற்று. பல்வேறு பண்ணைப் பொருள்களின் உபரி உற்பத்தியைக் கையகப்படுத்துவதற்கும் கட்டுப்படுத்துவதற்கும் ஃபெடரல் அரசு அதிகாரம் பெற்றிருக்கிறது.

விவசாயப் பண்டங்களின் விற்பனையை அரசு கட்டுப்படுத்துவதற்கு எதிர்ப்புக்கள் இருக்கின்றன. இதனை நடைமுறைப்படுத்துவதில பல சிரமங்களும் உள்ளன. விற்பனையைக் கட்டுபபடுத்துவதென்றால், அது நாடு முழுவதும் செய்யப்படவேண்டும். அத்தோடு கூட, உற்பத்தியைக் கட்டுப்படுத்துவதற்கும் முயற்சிகளை எடுக்க வேண்டும். விவசாயிகள் எந்த அளவில் வேண்டுமானாலும் உற்பத்தி செய்யலாம் என்ற நிலையில், விற்பனை ஒப்பந்தங்களில் ஒப்புக் கொள்ளப்பட்ட உற்பத்தியளவுக்கு மட்டும் விலை உத்தரவாதமளித்தால், விவசாயிகள் உற்பத்தியைக் குறைக்க மாட்டார்கள். மிகுதியாக உற்பத்திசெய்து, ஒரு பகுதியை விற்பனை ஒப்பந்தத்தின்படி ஒரு குறிப்பிட்ட விலையிலும், மீதியை எந்த ஒரு விலையிலும விற்பர். உபரி உற்பத்தி நிலை நிச்சயம் எழும். அப்போது விலைகள் மேலும் தாழலாம். உபரிகளை அங்காடிகளிலிருந்து பிரித்தெடுத்து, சிறிது காலத்திற்குக்கிடங்குகளில இருப்புச்செய்தால நிலைமை ஓரளவிற்குச சீர்படலாம். சரி, இருப்புச் செய்த உபரிகளை பிறகு என்ன செய்வது? தானிய நெருக்கடி அல்லது பஞ்சம் அல்லது போர் ஏற்பட்டால் தானே இவ் வுபரிகளைக் கிடங்குகளிலிருந்து விடுதலை செய்யலாம். மற்ற நேரங்களில இவற்றை அங்காடிக்கனுப்பினால் அங்காடியில் தெவிட்டல் நிலை (Glut) தோன்றுமல்லவா? இவற்றைப் பின்னணியாகக்கொண்டு அமெரிக்க அரசின் வேளாண்மைக் கைக்கோளை ஆராய்வோம்.

*அரசின் கைக்கோள், 1910—1920:*

முதல் உலகப் போர் துவங்குமுன்னர் அமெரிக்க விவசாயத்தில் ஒரு பொற்காலம் தோன்றியது. பண்ணைப் பண்டங்களின் விலைகள் விவசாயிகளுக்குத் திருப்திகரமாயிருந்தன. உள்நாட்டுப் போருக்கு முன்னர் இருந்ததைவிட விவசாயிகள் சிறந்த நிலையில் இருந்தனர். விவசாயப் பண்டங்களுக்கான உள்நாட்டுத் தேவையே அல்லாது, வெளிநாட்டுத் தேவையும் அதிகரித்தவண்ணமிருந்தது. முதல் உலகப் போர் நடந்த நிலையில் அமெரிக்கா ஒரு கடன் மிகுந்த நாடாயிருந்தது. வட்டி மற்றும் இலாப ஈவுகளை (Dividends) மற்ற நாடுகளுக்குக் கூடுதலாக அது கொடுக்க வேண்டியிருந்தது. இக்கடன்களுக்காக அமெரிக்கா நிறைய உணவுப் பண்டங்களை ஏற்றுமதி செய்தது. மேலும், நேச நாடுகளின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கும் உணவுப் பண்டங்களை ஏற்றுமதி செய்யவேண்டியிருந்தது. எனவே, உற்பத்தியை அதிகப்படுத்துமாறு அமெரிக்க அரசு விவசாயிகளைக் கேட்டுக்கொண்டது. விலைகள் உயர்வாயிருந்ததினால், விவசாயிகளும் உற்பத்தியைப் பெருக்கினர். 1913-ல் 52 மில்லியன் ஏக்கரில் கோதுமை பயிரிடப்பட்டது. இது, 1919-ல் 73 மில்லியன் ஏக்கரில் பயிரிடப்பட்டது. பண்ணைக் கால் நடைகளின் எண்ணிக்கை 28 சதவீதம் அதிகரித்தது. பெரும்பாலான விவசாயிகள் கடன் வசதிகளைப் பயன்படுத்தி உற்பத்தியைப் பெருக்கினர். நில உடைமையை ஒருங்கிணைப்பு (Consolidation) செய்யவும், நிலங்களை மேன்மேலும் வாங்கவும் பலர் முயன்றனர். இதனால் நிலத்தின் விலைகள் உயர்ந்தன.

முதல் உலகப் போருக்குப் பின்னர் அமெரிக்கா கடன் வழங்கு நாடாக மாறிற்று. கடன்களை அடைப்பதற்காக விவசாயப் பண்டங்களை ஏற்றுமதி செய்யவேண்டிய அவசியம் இருக்கவில்லை. அமெரிக்க அரசு கடன் கொடுத்துவந்த வரையில் மேற்கு ஐரோப்பிய நாடுகள் அமெரிக்காவிடமிருந்து விவசாயப் பொருள்களை இறக்குமதி செய்து வந்தன. ஆனால், இக் கடன்கள் 1920-ல் நிறுத்தப்பட்டன. இதைத் தொடர்ந்து மேற்கு ஐரோப்பிய நாடுகள் விவசாயப் பண்ட இறக்குமதிகளைக் குறைத்துக்கொண்டு, தமது விவசாய உற்பத்தியைப் பெருக்குவதற்கு முயல வாரம்பித்தன. இதனால் அமெரிக்க விவசாயப் பண்டங்களுக்கான வெளி நாட்டுத் தேவை குறைந்தது. தவிரவும், காப்புச் சுங்கவரிக் கைக்கோளை (Protectionist tariff Policy) அரசு தீவிரமாகப் பின்பற்றியதாலும் வெளி நாட்டுத் தேவை மிகவும் குறைந்தது இறக்குமதி வரிகள் மிகுதியாக இருந்தமையால், வெளி நாடுகள் அமெரிக்காவுடன் வாணிபத் தொடர்புகொள்வதில் சிரமங்கள் எழுந்தன.

அரசின் கைக்கோள், 1920—30:

1914 முதல் 1919 வரையில் விவசாயப் பண்டங்களின் விலைகள் அதிகரித்துக்கொண்டிருந்தன. ஆனால், 1920-ல் இவை தாழ்ந்தன. 1920ஆம் ஆண்டின் மே மாதத்தில் விவசாயப் பண்டங்களின் விலைக் குறியீட்டெண் 236 ஆகும். (1910-1914 காலப் பகுதியில் விவசாயப் பண்டங்கள் விலைகளின் சராசரி 100 ஆக இருந்தது. )1921ஆம் ஆண்டின் ஜூன் மாதத்தில் இது 112 ஆகத் தாழ்ந்தது. மற்ற பண்டங்களின் விலைகளும் குறையவே செய்தன. ஆனால் விவசாயப் பண்டங்களின் விலைகள் மிகுதியாகக் குறைந்தன. விவசாயப் பொருள்களின் விலைகள் குறைந்தமையால், விவசாயிகளின் வருமானங்களும், அவர்களின் சொத்துகளின் மதிப்பும் குறைந்தன. அந் நேரத்தில் அவர்களின் கடன்களும் வரிச்சுமைகளும் அதிகரித்தன. விவசாயிகள் பெரிதும் அவதியுற்றனர்.

1929-ல் விவசாயிகள் நிலைமையில் சற்று முன்னேற்றம் காணப்பட்டது என்றாலும், நிலைமை முற்றிலும் சீர்ப்படவில்லை. பண்டங்களைச் சிறந்த முறையில் விற்பனைசெய்ய விவசாயிகளுக்கு உதவியளிக்கும் நோக்கத்தில், 1929ஆம் ஆண்டின் விவசாய விற்பனைச் சட்டம் (Agricultural Marketing Act of 1929) இயற்றப்பட்டது. இச் சட்டத்தின்மூலம் விவசாயப் பண்ட விலைகள் நிலைபேறுக்கம் (Stabilisation) எய்தும் என்றும், விவசாயம், ஏனைய தொழில்களுக்கு இணையாக அமையும் என்றும் எதிர்பார்க்கப்பட்டது. இச் சட்டப்படி, ஒரு ஃபெடரல் பண்ணை வாரியம் (Federal Farm Board) ஏற்படுத்தப்பட்டது. அதன் நடவடிக்கைகளுக்கென 500 மில்லியன் டாலர்கள் ஒதுக்கப்பட்டன. இவ் வாரியத்தின் பணி, நாடு முழுவதும் கூட்டுறவு விற்பனைத் திட்டங்களை ஏற்படுத்துதல். இக் கூட்டுறவு நிலையங்கள் விவசாயப் பொருள் விஷயங்களை ஒழுங்குபடுத்த வேண்டும். விவசாயப் பொருள் விலைகளை நிலைப்படுத்த வேண்டும். ஃபெடரல் பண்ணை வாரியம் இக் கூட்டுறவு நிலையங்களுக்குக் கடன் வசதிகளை வழங்கும். இவை, பின்னர் விவசாயிகளுக்குக் கடன் உதவிகளை வழங்கும். ஃபெடரல் பண்ணை வாரிய ஏற்பாடு ஒரு நல்ல முயற்சியே என்றாலும், விற்பனைகளை ஒழுங்குபடுத்துவது விவசாயத் தொழில் முன்னேற்றும் ஒரே வழியாக இருக்கவில்லை. விவசாயப் பண்டத் தேவைக்கும், அளிப்புக்குமிடையே சமன்பாடு ஏற்படுத்துவது அப்போது மிகவும் அத்தியாவசியமாயிருந்தது. 1929-ல்தான் சுழல்வகைச் சுருக்கம் (Cyclical Contraction) தோன்ற வாரம்பித்தது. எல்லாவகைத் தொழில்களும் இதனால் பாதிக்கப்பட்டன. வருமானங்கள் குறைந்தன. விவசாயப் பண்டங்களுக்கான உள்நாட்டுத் தேவை சுருங்கியது. வெளிநாட்டுத் தேவையும் குறைந்தது. வெளிநாட்டுத் தேவை

குறைந்ததற்கு ஒரு முக்கிய காரணம் 1928ஆம் ஆண்டின் ஸ்மூட்-ஹாலி சுங்கவரிச் சட்டப்படி (Smoot-Hawley Tariff) இறக்குமதிகள் மீது உயர்வான வரிகள் விதிக்கப்பட்டு வந்தமையாகும். மற்றொரு காரணம் வெளி நாடுகளும் வாணிபச் சுழலின் சுருக்கக் கட்டத்திற்கு உட்பட்டு வந்தமை.

விவசாயப் பொருள்களின் விலைகள் மேலும் சரிந்தன. ஃபெடரல் பண்ணை வாரியத்திடமிருந்து கடன் உதவி பெற்றுவந்த கூட்டுறவு நிலையங்கள், விவசாயிகளுக்குப் பணத்தைக்கொடுத்து அவர்களிடமிருந்து உபரி உற்பத்தியைப் பெற்றுக்கொண்டு விலைகளை நிலைப்படுத்த முயன்றன. என்றாலும், விவசாய உற்பத்தி பெருகியவண்ணமிருந்தமையால் இக்கூட்டுறவு நிலையங்களின் முயற்சி வெற்றிபெறவில்லை. தேவைக்கதிகமாக உற்பத்தி பெருகவே விவசாயப் பொருள் விலைகள் மேன்மேலும் சரிந்தன. 1932-க்குள் ஃபெடரல் பண்ணை வாரியத்தின் மூலதனம் முழுவதும் தீர்ந்துபோயிற்று—கடனுகக் கொடுக்கப்பட்டுவிட்டது. புதிய கடன்களைக் கொடுப்பதற்குப் பணம் கிடையாது. இந்நிலையில் 1933ஆம் ஆண்டு, மே மாதம் இவ் வாரியம் மூடப்பட்டது. அதன் மற்ற உடைமைகள் பண்ணைக் கடன் நிர்வாகத் துறைக்கு (Farm Credit Administration) மாற்றப்பட்டன.

முதல் உலகப் போர் நடந்த சமயத்தில் விவசாய உற்பத்தியைப் பெருக்குமாறு விவசாயிகளை அரசு கேட்டுக்கொண்டது. அவர்களும் அக் கோரிக்கையை ஏற்று உற்பத்தியைப் பெருக்கினர். ஆனால், போருக்குப் பின்னர் பல காரணங்களை முன்னிட்டு விவசாய உற்பத்தி தேவைக்கு மிகுதியாக அமைந்து, விலைகள் சரிந்தபோது, விலைகளுக்கேற்றவாறு உற்பத்தியை அவர்களால் குறைத்துக்கொள்ள முடியவில்லை. அரசாலும் விலையை நிலைப்படுத்த முடியவில்லை. ஆக, விவசாயிகளின் துன்பத்திற்கு அரசும் ஒரு காரணமாக இருந்தது.

### அரசின் கைக்கோள் 1930—40

1930-ல் தோன்றிய வாணிபப் பெருமந்தம் அமெரிக்கப் பொருளாதாரம் முழுவதையும் தாக்கியது. பெருமந்தம் காரணமாக நாட்டின் மொத்த வருமானம், மொத்த உற்பத்தி, மொத்த வேலை வாய்ப்பு ஆகியவை குறைந்ததினல் மக்களின் வாங்குந் திறன் தாழ்ந்து விவசாயப் பண்டத் தேவை சுருங்கி, விவசாயப் பொருள்களின் விலைகள் மிகுதியாகக் குறைந்தன. நிலைமையைச் சீர்ப்படுத்த பல வழிகளில் முயற்சிகளை மேற்கொள்வது அமெரிக்க அரசுக்கு அத்தியாவசியமாயிற்று. குடியரசுத் தலைவர் ப்ராங்க்ளின் டி. ரூஸ்வெல்ட் மிகவும் அக்கறையுடன் செயல்பட்டார். விவசாயத்தைப் பாதுகாப்பதற்கும் வளர்ப்பதற்கும் எடுத்துக்கொள்ளப் பெற்ற

முயற்சிகளில் 1933ஆம் ஆண்டின் விவசாயச் சீரமைப்புச் சட்டம், பண்டக் கடன் வசதிக் கழகம் (Commodity Credit Corporation) 1936ஆம் ஆண்டின் நிலப் பாதுகாப்பு மற்றும் உள்நாட்டு ஒதுக்கீட்டுச் சட்டம் (Soil Conservation and Domestic Allotment Act), 1938ஆம் ஆண்டின் விவசாயச் சீரமைப்புச் சட்டம் ஆகியவை குறிப்பிடத் தகுந்தவை. இவற்றை இனிச் சற்று விரிவாகக் காண்போம்.

உற்பத்தியைக் கட்டுப்படுத்துவதற்கான ஏற்பாடுகளைச் செய்வதன்மூலம் கோதுமை, பருத்தி, நெல், புகையிலை ஆகியவற்றின் விலைகளை நிலைப்படுத்த 1933 ஆம் ஆண்டின் விவசாயச் சீரமைப்புச் சட்டம் முயன்றது. ஒத்துழைப்பு நல்கிய உற்பத்தியாளர்களுக்கு அரசு பண உதவிகளை வழங்கியது. அடுத்து, பண்டக் கடன் வசதிக் கழகத்தை ஏற்படுத்தி, விவசாயப் பண்டங்களின் விலை நிர்ணயத்தில் அரசு நேரடியாகத் தலையிட வாரம்பித்தது. விவசாயப் பொருள்கள்மீது கடன் கொடுப்பதற்கும், அவற்றினைக் கொள்முதல் செய்வதற்கும் இக் கழகம் அதிகாரம் பெற்றிருந்தது. விலைகளை நியாயமான மட்டத்தில் இருக்கச் செய்வதற்கான நடவடிக்கைகளில் இக் கழகம் ஈடுபட்டது. 1936ஆம் ஆண்டின் ஜனவரி மாதத்தில் அமெரிக்கத் தலைமை நீதிமன்றம் 1933ஆம் ஆண்டின் விவசாயச் சீரமைப்புச் சட்டத்தின் சில பகுதிகளை, குறிப்பாக உற்பத்திக் கட்டுப்பாட்டோடு தொடர்பான பகுதியினை அரசியலமைப்புக்கு முரணானது எனத் தீர்ப்பளித்தது. இதற்கிடையில் பல விவசாயப் பிரதேசங்களில் வறட்சி நிலைமை தோன்றி உற்பத்தி பாதிக்கப்பட்டது. எனவே, நிலத்தின் வளத்தைப் பாதுகாப்பு செய்வதற்கு நடவடிக்கைகளை எடுப்பது அவசியமாயிற்று. இதற்காக நிறைவேற்றப்பட்டதுதான் நிலப் பாதுகாப்பு மற்றும் உளநாட்டு ஒதுக்கீட்டுச் சட்டம் (1936). நிலத்தைச் சிறந்த முறையில் பயன்படுத்துவதற்கான சில வழிமுறைகளை இச் சட்டம் நிறைவேற்றிக் கொடுத்தது. 1937-ல் கோதுமை பருத்தி ஆகியவற்றின் விளைச்சல் அமோகமாயிருந்தது. இதனால் உபரி உற்பத்தி நிலை உருவாகி, விவசாயப் பண்ட விலைகள் தாழ்வான மட்டத்தில் இருக்கத் தலைப்பட்டன. விவசாயிகள் துன்புற்றனர். 1938-ல் அரசு மற்றொரு விவசாயச் சீரமைப்புச் சட்டத்தை இயற்றி விற்பனைக் கோட்டா (Marketing Quotas) முறையை அறிமுகப் படுத்தவும், விவசாயப் பொருள்களின் விலைகளை உயர்த்தவும் முயன்றது.

### அரசின் கைக்கோள் 1940—60.

இரண்டாவது உலகப் போரின்போது விவசாயப் பண்டத் தேவை பெருமளவில் அதிகரித்தது. அவற்றின் விலைகள் துரிதமாக

உயர்ந்தன. இப்படி விலைகள் உயர்வதனால் பொருளாதார நடவடிக்கைகள் பொதுவாகச் சுருங்கி, போர் ஆயுதங்கள் பாதிக்கப்படலாம் என்ற அச்சம் அமெரிக்க அரசுக்கு இருந்தது என்றாலும், அது விவசாயப் பொருள்களின் விலைகளைக் கட்டுப்படுத்துவதில் ஆர்வம் காட்டவில்லை. ஏனென்றால், விவசாய உற்பத்தி பெருகவேண்டும் என்று அரசு விரும்பியது. உற்பத்தியைப் பெருக்குமாறு விவசாயிகளை அது நாள்தோறும் கேட்டுக்கொண்டது. ஆனால் விவசாயிகள் ஒரு குறிப்பிட்ட அளவிற்குமேல் விவசாய உற்பத்தியை அதிகப்படுத்தத் தயாராயில்லை. உற்பத்திப் பெருக்கம் விளைவாக முதல் உலகப் போருக்குப் பின்னர் விவசாயப் பொருள் விலைகள் எவ்வாறு அடிமட்டத்திற்குச் சரிந்தன என்பது அவர்கள் நினைவில் பசுமையாயிருந்தது. எனவே விவசாயிகள் தயங்கினர். உடனே, விவசாயப் பண்ட விலைகளை உயர்மட்டத்தில் இருக்கச் செய்வதற்கான எல்லா ஏற்பாடுகளையும் அரசு மேற்கொள்ளும் என்ற உத்தரவாதத்தை அரசு விவசாயிகளுக்குக் கொடுத்தது. இவ்வுத்தரவாதத்தை ஏற்று விவசாயிகள் உற்பத்தியை அதிகப்படுத்த ஒப்புக்கொண்டனர்.

விவசாயப் பண்ட விலைகளைத் திருப்திகரமான மட்டங்களில் இருக்கச் செய்ய அரசு பொறுப்பேற்றுக்கொண்டதைத் தொடர்ந்து, அவற்றின் விலைகள் உயர்ந்தன. உற்பத்தி தொடர்ந்து அதிகரித்து வந்தது. விவசாயப் பண்ட விலைகளை உயர்மட்டத்தில் தொடர்ந்து இருக்கச் செய்வதற்காக, அரசு 1918, 1919 ஆகிய ஆண்டுகளில் சட்டங்களை இயற்றியது. இதனால் அமெரிக்க விவசாயிகள் நன்மையுற்றனர். நல்ல விலைகளில் பண்டங்களை விற்கும் வாய்ப்புக் கிடைத்தது. விவசாயத்தில் செழிப்பு நிலை தோன்றவாரம்பித்தது. இரண்டாவது உலகப் போர் முடிந்த நேரத்தில் சில சங்கடங்கள் தோன்றின என்றாலும், அவை ஓரளவிற்குச் சமாளிக்கப்பட்டன. தேவைக்கு மிகுதியாக அளிப்பு அமைந்திருந்தது. ஆனால், அதனால் விலைகள் பெருமளவில் குறையாதவாறு அரசு பார்த்துக்கொண்டமையால், பிரச்சினை தீவிரமடையவில்லை.

1950-ல் கொரியப் போர் (Korean War) தொடங்கியது. விவசாயப் பொருள்களின் உற்பத்தியைப் பெருக்குவதில் அரசு ஆர்வம் காட்டியது. விலைகளும் திருப்திகரமாக அமைந்திருந்தன. எனவே, விவசாயிகள் உற்பத்தியைப் பெருக்கினர். தொழிலாளர், மின்சாரம், உரம், எந்திரம் ஆகியவை பற்றாக்குறையாக இருந்த அந்த நேரத்தில்கூட உற்பத்தி பேரளவில் கூடுதலாகியது. 1953-ல் கொரியப் போர் முடிவடைந்தது. இதைத் தொடர்ந்து விவசாயப் பண்ட அளிப்பு, தேவைக்கு மிகுதியாயிருப்பதும் நன்கு தென்பட்டது. விலைகள் சரியத் தொடங்கின. உடனே அவற்றை உயர்த்தும் நடவடிக்கைகள்

களை அரசு மேற்கொண்டது. விற்பனைக் கோட்டா முறை மீண்டும் அமல் செய்யப் பெற்றது. நில ஒதுக்கீட்டுத் திட்டமும் நடைமுறைப் படுத்தப்பட்டது. ஆனாலும் அமித உற்பத்தி நிலை மறையவில்லை. விவசாயப் பண்ட இருப்புக்கள் அதிகரித்துக்கொண்டே யிருந்தன. பண்டக் கடன் வசதிக் கழகத்தின் இருப்புக்களின் பண மதிப்பு 1954-ல் 4 பில்லியன் டாலர்களுக்கும் மிகுதியாயிருந்தது. 1955ல்-ல் இது 6 பில்லியன் டாலர்களுக்குத் தாவிற்று. அரசின் முயற்சியால் பல விவசாயப் பண்டங்களின் விலைகள் உயர் மட்டத்திலிருந்தன. இதற்காகச் சில சட்டங்களையும் அரசு இயற்றியது. அரசின் குறுக்கீடு இல்லாதிருப்பின் விலைகள் பேரளவில் சரிந்துபோயிருக்கும்.

1956ஆம் ஆண்டின் விவசாயச் சட்டத்தின் (Agricultural Act) படி, நில வங்கித் திட்டம் (Soil Bank Programme) ஏற்படுத்தப் பட்டது. எந்தெந்தப் பண்டங்கள் அமிதமாய் உற்பத்திசெய்யப்பட் டிருக்கின்றனவோ, அவற்றைத் தவிர்த்து, வேறு பண்டங்களை நிலத் தில் பயிரிடுவதற்கு இச் சட்டம் வழிவகுத்தது. இதற்கு ஒப்புதல் அளிக்கும் விவசாயிகளுக்கு அரசு பண உதவிகளை வழங்கியது. இத் திட்டத்தாலும் அமித உற்பத்திப் பிரச்சினையைத் தீர்க்க முடிய வில்லை. இத்திட்டம் 1958ஆம் ஆண்டின் இறுதியில் முடிவடைந்தது. அப்போதும்கூட தானிய இருப்புக்கள் மலையெனக் குவிந்து கிடந்தன. வளக்காப்புத் திட்டத்தின் (Conservation Reserve Programme) கீழ் 1960-ல் சுமார் 28.7 மில்லியன் ஏக்கர்கள் தானியச் சாகுபடியிலிருந்து விலக்கிக்கொள்ளப்பட்டன. இதன் முக்கிய நோக்கம் உற்பத்திக் கட்டுப்பாடு அன்று; மாறாக, வளப் பாதுகாப்பேயாம்.

*1960 க்குப் பின்னர் அரசின் கைக்கோள் :*

1960 ஆம் ஆண்டின் தொடக்கத்தில் விலை உயர்த்துத் திட்டங்கள் அனைத்தும் நடைமுறையிலிருந்தன. உற்பத்தியைக் கட்டுப்படுத்து வதற்கு நில ஒதுக்கீட்டுத் திட்டமும், விற்பனையைக் கட்டுப்படுத்து வதற்கு விற்பனைக் கோட்டாத் திட்டமும் அமலில் இருந்தன. இருந் தும், முக்கிய விவசாயப் பண்டங்களைப் பொறுத்தவரையில், அளிப்பு தேவைக்கு மிகுதியாயிருந்தது. உபரி இருப்பை அங்காடியிலிருந்து அகற்ற அரசு பண்டங்களை நேரடியாக விலைகொடுத்து வாங்க முன் வந்தது. அதோடு, உற்பத்திப் பண்டங்களைச் சிறிது காலத்திற்கு இருப்புச்செய்ய ஒப்புக்கொள்ளும் விவசாயிகளுக்குக் கடன் உதவி வழங்குவதற்கும் ஏற்பாடு செய்தது. விலைகள் திருப்திகரமாயிருப் பின் விவசாயிகள் தமது இருப்புக்களை விற்று, கடன்களை அடைத்து விடலாம். விலைகள் திருப்திகரமாக இல்லாவிட்டால் இருப்புக்களைப் பண்டக் கடன் வசதிக் கழகத்திடம் ஒப்படைத்துவிடலாம். ஆனால்,

பண்டங்களை அரசு நேரடியாக வாங்கிக்கொண்டாலும் சரி, அல்லது கடன்களுக்காக எடுத்துக்கொண்டாலும் சரி, விளைவு ஒரேவிதமாகத் தானிருக்கும். இவ்விரண்டு முறையிலும் இருப்புக்கள் கூடுதலாகின்றன. விலைகள் குறைகின்றன.

விலைகள் குறையாதிருக்கும் வகையில் இருப்புக்களைப் பயன்படுத்துவது எங்ஙனம்? பின்வரும் வழிகள் கடைப்பிடிக்கப்படலாம். (a) மதிய உணவுத் திட்டங்களுக்கு இவற்றை அன்பளிப்பாக வழங்கல்; (b) உள்நாட்டில் வறுமையால் பீடிக்கப்பட்டவர்களுக்கு இனமாகக் கொடுத்தல்; (c) வெள்ளம், வறட்சி முதலியவற்றால் அவதியுறும் பிரதேசங்களுக்குச் செஞ்சிலுவை யமைப்பு (Red Cross Society) மூலம் உதவியாக வழங்கல்; (d) பஞ்சத்தால் தாக்குண்ட வெளிநாடுகளுக்கு அன்பளிப்பாகத் தருதல். இம்முறைகள் அத்தனையிலும் விவசாயப் பண்ட அமித அளிப்பைக் குறைப்பதற்கு அமெரிக்க அரசு முயன்றுள்ளது. ஆனால், இதில் சில சிரமங்களிருக்கின்றன. பஞ்சம் மற்றும் ஏழ்மையால் உள்ள நாடுகளின் மக்கள் உணவுப் பழக்கங்கள் வெவ்வேறானவை. எனவே, சில உணவுப் பண்டங்களைப் பெற்றுக் கொள்ள இவை தயங்கலாம். உதாரணமாக, அரிசியைப் பிரதான உணவாகக்கொண்ட நாடுகள் கோதுமையை ஏற்றுக்கொள்ளத் தயங்கும். மேலும், உதவிபெறும் நாடுகள் இப் பண்டங்களைச் சிறந்த முறையில் பகிர்வு செய்வதற்கான ஏற்பாடுகளையும், அதற்கான நிதி வசதிகளையும் பெற்றிராமலிருக்கலாம். தவிரவும், அமெரிக்க அரசின் இருப்பிலிருக்கக்கூடிய பெரும்பாலான விவசாயப் பொருள்கள் வினைமுற்றாப் பண்டங்களாய் (unfinished goods)—ஆதார நிலையில் (Primary) இருப்பனவாய் உள்ளன. உடனே நுகரக் கூடிய பக்குவத்தில் இவை இருக்கவில்லை. அடுத்ததாக, இவற்றைப் பல இடங்களுக்குக் கொண்டு செல்வதற்காகும் போக்குவரத்துச் செலவுகளும் (Transport costs) மிகுதியாயிருக்கின்றன.

1960-ல் சுமார் 30 மில்லியன் ஏக்கர் நிலப் பரப்பு தானியச் சாகுபடியிலிருந்து விலக்கப்பட்டிருந்தும்கூட விவசாய உற்பத்தி மிக அதிகமாயிருந்தது. தட்ப வெப்ப நிலைமை சாதகமாயிருந்ததையே இதற்கு முக்கிய காரணம் எனலாம். விவசாயப் பண்ட விலைகள் 1959 ல் இருந்ததைவிட மோசமில்லை என்றாலும் விவசாயிகளின் பொருளாதார நிலைமையில் முன்னேற்றம் ஏற்படவில்லை. 1960ஆம் ஆண்டின் இறுதியில் சுமார் 1.5 பில்லியன் புஷல் கோதுமை, 5.3 பில்லியன் பேல் பருத்தி பண்டக் கடன் வசதிக் கழகத்திடம் முடங்கிக் கிடந்தன. விவசாயிகளிடையே அதிருப்தி பரவிற்று. அரசின் கைக்கோள் பெரும்பாலான குடிமக்களுக்கு மன நிறைவைக்

கொடுக்கவில்லை. அரசின் விவசாயக் கைக்கோவில் பின்வரும் குறைபாடுகள் இருப்பதாக அவர்கள் கூறினர்.

(அ) விவசாயப் பண்டங்களின் விலைகளை உயர்த்துவதற்கு அரசு மேற்கொண்ட திட்டங்கள் செலவு மிகுந்தவை; அவற்றிடமிருந்து கணிசமான நன்மைகள் பிறக்கவில்லை.

(ஆ) அரசின் விவசாயத் திட்டங்கள் ஏழை விவசாயிகளுக்கு நன்மையைத் தரவில்லை.

(இ) அரசின் குறுக்கீடு காரணமாக வேளாண்மையில் திறமையின்மை வளர்கிறது.

(ஈ) விவசாயிகளுக்கு மட்டும் பிரத்தியேக சலுகையையும் உதவியையும் வழங்குவது நியாயமாகாது.

இவற்றில் ஓரளவிற்கு உண்மை இருந்தது என்றாலும், விலை உயர்த்துத் திட்டங்களையோ அல்லது உற்பத்தி மற்றும் விற்பனைக் கட்டுப்பாட்டுத் திட்டங்களையோ அரசு உடனே நிறுத்திவைக்கும் நிலையில் இல்லை. இவை திடீரென்று நிறுத்தப்பட்டால் விவசாயிகளே அல்லாது மற்றவர்களும் பாதிக்கப்படலாம். உற்பத்திக் கட்டுப்பாட்டைத் தவிர்த்து, விற்பனைக் கோட்டா முறையைப் பரவலாக விரிவுசெய்வது சிறந்த முறையாக இருக்கும் என்று யோசனை தெரிவிக்கப்படுகிறது. விலை உயர்த்துத் திட்டங்களையும், உற்பத்திக் கட்டுப்பாட்டுத் திட்டங்களையும் கைவிட்டு, அரசு விவசாயிகளுக்கு நேரடியாகப் பண உதவி வழங்குதல் இன்னும் கூடுதலான நன்மைகளைக் கொடுக்கும் என்று பலர் வற்புறுத்தி வருகின்றனர். நில ஒதுக்கீட்டுத் திட்டம், விற்பனைக் கோட்டா முறை, இருப்புக் குவிப்புத் திட்டம் முதலியவற்றைக் கைவிட்டு, அரசு நில ஓய்வுமுறைத் திட்டத்தை (land retirement programme) அமல் செய்யவேண்டும் என்று வேறு சிலர் கருத்துத் தெரிவிக்கின்றனர்.

# 19. முதல் உலகப் போருக்குப்பின் அமெரிக்காவில் ஏற்பட்ட வாணிபச் சுழல்கள்

## (Trade cycles)

முதல் உலகப்போர் அவனியை உலுக்கி எடுத்து, ஆட்சேதமும் பொருட்சேதமும் மிகுதியாக ஏற்பட்டதற்குப் பிறகு அமைதித் தேவதை உலகில் மீண்டும் அவதரித்தபோது, இனி அமெரிக்க ஐக்கிய நாட்டில் வாணிபச் சுழல்கள் தோன்றப் போவதில்லை என்றும், அவைகளின் கதை முடிந்து விட்டது என்றும் பல முக்கிய பொருளாதார அறிஞர்கள் கருத்துத் தெரிவித்தனர் அதைப் போலவே, இரண்டாவது உலகப் போரால் விளைந்த எண்ணற்ற இடிபாடுகள் படிப்படியாக மறைந்து, சுமுகமான சூழ்நிலைகள் புவனமெங்கணும் பரவிய நிலையில் அப்பழுக்கற்ற செழிப்பு நிலை அமெரிக்காவில் நிரந்தரமாகத் தங்கிவிடப் போகிறது என்று இவர்கள் நம்பிக்கை தெரிவித்தனர். ஆனால் இந்த ஆருடங்கள் உண்மையில் பலிக்கவில்லை. வாணிபச் சுழல்கள் அந்நாட்டை இன்னமும் வட்டமிட்டுக்கொண்டுதானிருக்கின்றன: உற்பத்தி, வருமானம், வேலை வாய்ப்பு முதலியவற்றில் இன்னமும் அங்கே ஏற்ற இறக்கங்கள் நிகழ்ந்து கொண்டுதானிருக்கின்றன. சுழல்களின் சில இயல்புகளில் வேண்டுமானால் சில மாறுதல்கள் ஏற்பட்டிருக்கலாம்; ஆனால் சுழல்கள் மறைந்து விட்டிருப்பதற்கான அறிகுறிகளைக் காணோம். ஆடும் நாற்காலி ஆடிக்கொண்டு

தானிருக்கிறது—அசைவுகளில் மட்டும் ஒரு சில மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. ஆடும் நாற்காலி ஒரே மாதிரியாக எப்போதும் ஆடிக்கொண்டிருப்பதில்லையே!

பண்டங்களை இருப்புச் செய்வதற்காக பணத்தை முதலிடு செய்வது அமெரிக்க வாணிபத்துறையில் இன்றைக்கும் முக்கியமான தொருவாணிப நடவடிக்கையாகவே இருந்து வருகிறது. அம்முதலீட்டளவில் ஏற்படும் மாறுதல்களுக்கும் வாணிபச் சுழல்களுக்கும் தொடர்புஇருந்துவரவே செய்கிறது. ஆனால் புதிய கட்டுமானம் (Construction) உற்பத்தியாளருக்குத் தேவைப்படும் கருவிகள் போன்ற நிலை முதலில் முதலீடு செய்வது தற்போது ஓரளவிற்குக் குறைந்திருக்கிறது இதனால், நிலை முதல் மாறுதல் வழியே உருவாகும் பெருஞ் சுழல்கள் இரண்டாவது உலகப் போருக்குப் பிந்திய காலப்பகுதியில் குறைவாகவே ஏற்பட்டன எனலாம். ஆனால் இதற்குப் பதிலாக பெடரல் பட்ஜெட் ஆனது ஒரு முக்கிய வேடதாரியாக வாணிபச் சுழல் நாடகத்தில் தற்போது இடம் பெற்றிருக்கிறது.

### மாறிவரும் முதலாளித்துவம் :

இருபதாம் நூற்றாண்டின் சமீபஆண்டுகளில் அமெரிக்க ஐக்கிய நாட்டில் பல்வேறு மாறுதல்கள் நிகழ்ந்திருக்கின்றன. ஆட்சிவரம்புக்குட்பட்ட நிலப்பகுதிகள் மிகவும் அதிகமாக விரிவடைந்திருக்கின்றன. குடியேற்றம் மாபெரும் அளவில் வளர்ந்து விட்டிருக்கிறது. விவசாயத்தை நம்பிக்கிடந்த சமூகம் தொழில் மயமான வாழ்வைத் தழுவிக் கொண்டிருக்கிறது. பிரும்மாண்டமான வர்த்தகக் கார்ப்பரேஷன்கள் நாடு முழுவதும் ஆல்போல் பெருகியிருக்கின்றன. எங்கு பார்த்தாலும் புத்தாக்கங்கள்—இடையறாது உழைத்துவரும் எந்திரங்களின் பெருமூச்சுக்கள். இவை மத்தியில் இருந்துவரும் சமூகம் ஒரு நிலையான (Stable) சமூகமாக இருப்பதற்கில்லை. நாள்தோறும் பல மாறுதல்கள் நடந்து வருகின்றன. விலைமாறுதல்களும், பூரிப்புக்கள் (Booms) செழிப்பு நிலையின் அமிதப் பெருக்கம் போன்ற வாணிபத் தடுமாற்றங்களும், வேலைவாய்ப்பின்மையும், வேதனைதரும் வர்த்தக நொடிப்புக்களும், பணவாட்டமும், 'ஒரு நேரம் இளவரசன் மறு நேரம் ஏழைவன்' என்ற நிலைமைகளும் அன்றுடம் அமெரிக்காவில் ஏற்பட்டுக் கொண்டேயிருக்கின்றன. இருப்பினும், பெரும்பான்மையான அமெரிக்கர்கள் நடுத்தர வர்க்க அந்தஸ்தைத் தக்கவைத்துக் கொண்டிருக்கின்றனர். அநேக அமெரிக்கர்கள் சிறிய விவசாயப் பண்ணைகளையும், சிறிய வர்த்தக நிறுவனங்களையும் நடத்திக்கொண்டு வருகின்றனர்.

தொழில்வளம் பெருகப் பெருக எண்ணற்ற பாமர மக்கள்

நகரங்களில் குடியேறலாயினர். தொழிலாளர் வகுப்பு என்றொரு மக்கள் பிரிவும், தொழிலாளர் இயக்கமும் அமெரிக்காவில் காலூன்ற லாயின. சுதந்திரமிகுந்த முதலாளித்துவம் மிகவும் தழைத்து வளர்ந்தது.

முதல் உலகப் போரின்போது ஒரு வளர்வீத வருமான வரியும், ஃபெடரல் ரிசர்வ் திட்டமும் அமெரிக்கப் பொருளாதாரக் கட்டமைப்பில் அறிமுகப் படுத்தப்பட்டன. கூட்டுறவு பலவீனமாயிருந்து வந்தது. எனவே, தொழிலாளர் இயக்கத்தால் தொழிலதிபர்களின் போக்கிற்கு எந்தவிதத் தடைகளும் ஏற்படவில்லை. அதே நேரத்தில், தொழில் துறையில் இருக்கக்கூடிய தொகுப்புக்கள், கூட்டுக்கள் (Combination), சர்வாதீனங்கள் ஆகியவற்றை முறியடித்து, போட்டி மிகுந்த அங்காடிகளைப் போற்றி வளர்ப்பதற்கான முயற்சிகளும் மேற்கொளளப்பட்டன. இத்தகைய காரணங்களால், முதல் உலகப் போருக்குப் பிறகு, சுமார் பத்தாண்டு காலம் தடையிலாத, தனியார் முதலாளித்துவம் அமெரிக்காவில் தழைத்தோங்கியது. அரசின் கட்டுப்பாடோ அல்லது தொழிலாளர் இயக்கத்தின் குறுக்கீடோ அதற்குச் சிறிதளவும் இருக்கவில்லை. இம்முதலாளித்துவம் மென் மேலும் வளர்ந்துகொண்டே போயிற்று. வழக்கத்திற்கு மீறிய அதிகரிப்பு ஏற்பட்டபோது 1929இல் பங்கு மாற்றச் சந்தையில் பயங்கர வீழ்ச்சி ஏற்பட்டு, 1930இல் தீவிர மந்தம் நாட்டைச் சூறையாட வாரம்பித்தது.

இந்த மந்தம் அமெரிக்காவில் பல மாறுதல்களைத் தோற்றுவித்தது. இரயில்பாதைகள், நிர்வாகம், பாங்குகள், மாநிலம் மற்றும் ஸ்தலஸ்தாபன நிர்வாகங்கள் முதலியவை நிலைகுலைந்துபோயின. வீடுகளைக் கட்டியோர், விவசாயத்தை நம்பிக் கிடந்தோர், சின்னஞ்சிறு வர்த்தக நிறுவனங்களைச் சீவனத்திற்காக நடத்தி வந்தோர் திவாலாகிப்போயினர். அழிவின் பிடியிலிருந்து இவர்களை மீட்டுக் கொணருவதற்கு ஃபெடரல் அரசாங்கமே முன்வர வேண்டியதாயிற்று. புதுக் கொள்கை (New Deal) சீர்திருத்தங்கள் நாடெங்கணும் நடைமுறைப் படுத்தப்பட்டன. பத்திரங்கள் மற்றும் பரிவர்த்தனைக் குழு (Securities and Exchange commission) ஏற்படுத்தப்பெற்றது. பாங்கு டெபாசிட்டுகளுக்குப் பாதுகாப்பு கொடுப்பதற்கான திட்டம் அமல் செய்யப்பட்டது. முதியோர்களுக்கான சமூகப் பாதுகாப்பும் (Social Security), வேலையற்றிருப்பவருக்கான வேலைவாய்ப்பின்மை இன்சூரன்ஸ் திட்டமும் நடைமுறைக்குக் கொண்டுவரப்பட்டன. குறைந்த பட்சக் கூலிச் சட்டங்கள் (Minimum Wage Laws) நிறைவேற்றப் பட்டன. வீடுகளைக் கட்டுதல், கிராமங்களுக்கு மின் வசதிகளைப் பரப்புதல், பொதுப்பணி வேலைகளை மேற்கொள்ளுதல் போன்ற நட-

வடிக்கைகளைப் பன்மடங்கு பெருக்கி, மந்தத்தைப் போக்கி மீட்சியைக் கொணருவதற்கு முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்பட்டன. இறுதியில் மீட்சி ஏற்பட்டது. எனினும், அதை ஏற்படுத்திவைப்பது ஒரு அசாதாரணச் செயலாக இருந்தது.

*இரண்டாவது உலகப்போரும், அதற்குப் பிந்திய நிலைமைகளும்:*

ஐரோப்பியப் போரினால் அமெரிக்க நாட்டின் ஏற்றுமதிகள் அதிகரித்தன. பிறகு அமெரிக்காவே போரில் ஈடுபடவேண்டிய நிலைமை ஏற்பட்டபோது, அந்நாட்டின் 50 சதவிகித சாதனங்கள் போர் ஆயத்த நடவடிக்கைகளில் ஈடுபடலாயின. இதனால் வேலை வாய்ப்பின்மை முற்றிலும் மறைந்து போயிற்று. போர் அரங்கிலிருந்து அந்நாடு வெளியேறியபோது அதனிடம் பணச் சொத்துக்களும் (Monetory assets) பணச் சேமிப்புக்களும் நிறைய இருந்தன. ஆனால் நுகர்ச்சிப் பண்டங்களும், வீடுகளும், தொழில் எந்திரங்களும் மிகவும் குறைவாயிருந்தன. இவைகளை மீண்டும் உற்பத்தி செய்ய முயன்றபோது செழிப்புக்கான அடித்தளம் செம்மையாகப் போடப்படலாயிற்று. இதற்கிடையில் கொரியாப் போர் (Korean war) ஏற்பட்டு அமெரிக்கச் செழிப்பு நிலை மேலும் பெருகியது. 1957 வரை இச் செழிப்பு நிலை விரைவாக முன்னேறியது. அவ்வாண்டிற்குப் பிறகு செழிப்பு நிலைதொடர்ந்து நீடித்தது எனினும், செழிப்பின் வளர்ச்சி அவ்வளவு விரைவாயிருக்கவில்லை. 1948ஆம் ஆண்டிலிருந்து 1963ஆம் ஆண்டுவரையிலான 15 ஆண்டுக் காலத்தில் அமெரிக்க நாட்டில் ஈடற்ற நிலையான செழிப்பு நிலை நிலவியது. மக்களது வாழ்க்கைத் தரம் உயர்ந்துகொண்டே போயிற்று. தலைவீத நுகர்வோர் செலவீடுகள் அதிகரித்துக்கொண்டே வந்தன. ஆண்டுதோறும் சமூக இலாப ஈவு (Social Dividend) உயர்ந்த வண்ணமிருந்தது.

பத்தொன்பதாம் நூற்றாண்டிலும், இருபதாம் நூற்றாண்டின் முற்பகுதியிலும் நிலவிய பொருளாதார நிலைமைகளோடு ஒப்பிடுகையில் 1948—1963 காலப்பகுதியில் நிலவிய பொருளாதார நிலைமை எவ்வளவோ சிறந்தது எனினும், நிலைப்பாடும் வளர்ச்சியும் உயர்தரமாக அமைந்திருந்தன என்றாலும், அக்காலப்பகுதியில் நான்கு வாணிபச் சுழல்கள் ஏற்பட்டிருந்தன என்று வாணிபக் குறிப்பேடுகள் தெரிவிக்கின்றன. 1948, 1953, 1957, 1960 முதலிய ஆண்டுகளில் பூரிப்புக்களும், 1949, 1954, 1958, 1961ஆம் ஆண்டுகளில் தேக்க நிலைகளும் இருந்தன என்று அறிகிறோம். இந்நான்கு சுழல்களின் உச்ச நிலைகளும் பள்ள நிலைகளும் எப்போது காணப்பட்டன என்பது கீழே விவரிக்கப்படுகிறது.

| சுழல் | சுணக்கத்திற்கு முந்திய உச்ச நிலை | பள்ள நிலைகள் | மீட்சியின் உச்ச நிலைகள் |
|---|---|---|---|
| முதற் சுழல் ... | நவம்பர், 1948 | அக்டோபர், 1949 | ஜூலை, 1953 |
| இரண்டாவது சுழல் ... | ஜூலை, 1953 | ஆகஸ்ட், 1954 | ஜூலை, 1957 |
| மூன்றாவது சுழல் ... | ஜூலை, 1957 | ஏப்ரல், 1958 | மே, 1960 |
| நான்காவது சுழல் ... | மே, 1960 | பிப்ரவரி, 1961 | ... |

இந்நான்கு சுழல்களும், 1949ஆம் ஆண்டின் சுழல், 1954 ஆம் ஆண்டின் சுழல், 1958ஆம் ஆண்டின் சுழல், 1961ஆம் ஆண்டின் சுழல் என்று சொல்லப்பட்டு வருகின்றன. 1949ஆம் ஆண்டின் சுழல் நான்கு ஆண்டு 8 மாதங்களுக்கு நீடித்தது; 1954ஆம் ஆண்டின் சுழல் நான்காண்டுகளுக்கு நீடித்தது; 1958 ஆம் ஆண்டின் சுழல் 2 ஆண்டு பத்து மாதங்களுக்கு நீடித்தது; 1961ஆம் ஆண்டின் சுழல் சற்றுக் கூடுதலான காலப்பகுதியை எடுத்துக்கொண்டிருப்பதாகத் தெரிய வருகிறது. இந்நான்கு சுழல்களின் மந்த காலம் சற்றேறக்குறைய ஒரே அளவானதாயிருந்தது. முதற் சுழலின் மந்த காலம் 11 மாதங்கள், இரண்டாவது சுழலின் மந்த காலம் 13 மாதங்கள், மூன்றாவது சுழலின் மந்த காலம் 9 மாதங்கள், நான்காவது சுழலின் மந்த காலம் 9 மாதங்கள். ஆனால் மீட்சிக் கால அளவில் மிகுந்த வேறுபாடுகள் இருக்கின்றன. முதல் மூன்று சுழல்களின் மீட்சிக் காலங்கள் முறையே 45 மாதங்கள், 35 மாதங்கள், 25 மாதங்கள் ஆகும்.

இந்நான்கு மந்தங்களில் 1958ஆம் ஆண்டின் சுழல் மந்தம் தான் கடுமை நிறைந்தது என்று கருதப்படுகின்றது. இம்மந்தத்தின்போது தொழில் உற்பத்திக் குறியீட்டெண் 14 சதவிகிதம் குறைந்தது; மொத்தத் தொழிலாளர் எண்ணிக்கையில் 3·6 சதவிகிதமாக இருந்து வந்த வேலை வாய்ப்பின்மையின் வீதம் 7·5 சதவிகிதமாக உயர்ந்தது. இம்மந்தம் இவ்வாறு தீவிர மிகுந்ததாக இருந்ததற்குக் காரணங்கள் யாவை? அளவுக்கு மீறிய முதலீடு செய்யப்பட்டிருந்தது ஒரு முக்கிய காரணம். உற்பத்தியாளருக்குத் தேவைப்படும் எந்திரம் மற்றும் தளவாடத் தயாரிப்பில் ஈடுபடுத்தப்பெறும் முதலீட்டளவு 40 சதவிகிதம் உயர்ந்து கிடந்தது. இந்த அளவு முதலீட்டை அமெரிக்கப் பொருளாதாரத்தால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. எனவே மந்த கட்டம் கடுமை நிறைந்ததாயிருந்தது. மற்றச் சுழல்களின் மந்த கட்டங்கள் இப்படிக் கடுமையானவையாயிருக்கவில்லை என்றாலும், அவைகளைச் சுமந்து செல்வதும் அமெரிக்கர்களுக்கு எளிதாயிருக்கவில்லை. 1954ஆம் ஆண்டின் சுழலின் மந்தத்தின்போது தொழில் உற்பத்திக் குறியீட்டெண் 10 சதவிகிதம் குறைந்தது; வேலை வாய்ப்

பின்மை வீதம் 2.9 சதவிகிதத்திலிருந்து 6 சதவிகிதத்திற்கு உயர்ந்தது. 1949ஆம் ஆண்டின் சுழல் மந்தத்தின்போது தொழில் உற்பத்தி குறியீட்டெண் 9 சதவிகிதம் குறைந்தது. வேலைவாய்ப்பின்மை வீதம் 3·8 சதவிகிதத்திலிருந்து 7 சதவிகிதத்திற்கு உயர்ந்தது.

1949, 1954ஆம் ஆண்டுகளின் சுழல்களது மந்தங்களுக்குப் பிறகு ஏற்பட்ட மீட்சிகள் நெடுங்காலத்திற்கு நீடித்தன. 1949ஆம் ஆண்டின் சுழலின் மந்தத்திற்குப் பிறகு வந்த மீட்சிக்கு கொரியப் போரும், 1954ஆம் ஆண்டின் சுழல் மந்தத்திற்குப் பிறகு வந்த மீட்சிக்குத் தனியார் முதலீட்டுப் பெருக்கமும் பேருதவி புரிந்தன. 1958, 1961 ஆகிய ஆண்டுகளின் சுழல்களது மீட்சிக் கட்டங்களால் பூரிப்பு எல்லையினைத் தொடமுடியவில்லை. நிறையுடை வேலை வாய்ப்பு நிலைமையையும் கொணரமுடியவில்லை இம்மீட்சிக் கட்டங்கள் நிறைவெய்தாமல் போய்விட்டன என்றே இன்னமும் கருதப்பட்டு வருகின்றது. 1963ஆம் ஆண்டில் கூட வேலை வாய்ப்பின்மை வீதம் 5·6 சதவிகிதமாயிருந்தது. வேலை வாய்ப்பு, வருமானம், இலாபம் முதலியவற்றினை அடிப்படையாகக்கொண்டு பார்த்தால், 1957 முதல் 1963 வரையிலான ஆறு ஆண்டுகள், 1948 முதல் 1956 வரையிலான எட்டு ஆண்டுகளைவிட மோசமானவையாயிருந்திருக்கின்றன. கீழ்க்காணும் பட்டியலைக் காண்க.

உற்பத்தியில் சதவிகித அதிகரிப்பு

| காலப் பகுதி | நாட்டு மொத்த ஆக்கம் GNP (டாலர்களில்) | தொழில் உற்பத்திக் குறியீடு | உறுதிப் பொருள் உற்பத்தி (டாலர்களில்) | தொழில் உற்பத்தி பொறிசெய் உறுதிப் பொருள் குறியீடு |
|---|---|---|---|---|
| 1948–56 | 38·0 | 46·0 | 50·0 | 55·0 |
| வருடாந்திர அதிகரிப்பு | 4·7 | 5·7 | 6·2 | 6·9 |
| 1956—62 | 18·0 | 6·0 | 9·0 | 13·0 |
| வருடாந்திர அதிகரிப்பு | 3·0 | 1·0 | 1·5 | 2·2 |

அமெரிக்க நாட்டில் 1957 முதல் 1963 வரை தேக்க நிலை எந்த அளவிற்கு இருந்தது என்பதை மேலே காணும் பட்டியல் நமக்குத் தெரிவிக்கிறது.

**சுழல் எதிர்ப்புக் கொள்கை (Countercyclical Policy):** முதலிரண்டு சுழல்களின் மந்தங்களின்போது ஃபெடரல் வரி விதங்கள் கணிசமான அளவுக்குக் குறைக்கப்பட்டன. 1948ஆம் ஆண்டு செய்யப்பட்ட வரிக் குறைப்புத் தொகை சுமார் 4.7 பில்லியன் டாலர்கள். இவ் வரிக் குறைப்பால் சுழலின் கீழிறக்கக் கட்டத்தின் கடுமை குறைந்து, 1949ஆம் ஆண்டு நவம்பர் மாதம் அமெரிக்கப் பொருளாதாரம் மெல்ல உயரத் தொடங்கிற்று. 1954ஆம் ஆண்டிலும் இத்தகைய வரிக் குறைப்புக்கள் செய்யப்பட்டன. அமித இலாப வரி (Excess Profit tax) 1954 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி ரத்துசெய் யப்பட்டது. 1954ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் தனியாள் வருமான வரி விதம் மிகவும் குறைக்கப்பட்டது. தனியாள் மற்றும் கம்பெனி வரிகளில் செய்யப்பட்ட மொத்தக் குறைப்புக்கள் 7.4 பில்லியன் டாலர்கள்.

போருக்குப் பின்பு தோன்றிய முதல் இரண்டு சுழல்களின் மீட்சிக் கட்டங்களின்போது ஃபெடரல் அரசாங்கத்தின் செலவீட்டுத் தொகைகள் பெரிதும் அதிகப்படுத்தப்பட்டன. வரிகளைக் குறைப்ப தோடு, அரசுச் செலவீட்டுத் தொகைகளையும் அதிகப்படுத்தினல், வாணிபத்தை மந்தத்தின் கோரப் பிடியிலிருந்து மீட்டுக்கொண்டு வருவது எளிதாயிருக்கும் என்று நம்பப்பட்டது. 1949 முதல் 1953 வரை ஆண்டுதோறும் 8.6 பில்லியன் டாலர்கள் ஃபெடரல் அரசாங் கத்தால் அதிகமாகச் செலவிடப்பட்டன. 1954ஆம் ஆண்டு 4.6 பில்லியன் டாலர்கள் கூடுதலாகச் செலவு செய்யப்பட்டன. செலவு களின் அதிகரிப்பை எதிர்த்து, 1957ஆம் ஆண்டிற்குப் பிறகு அமெரிக் காவில் பலத்த கண்டனங்கள் எழுந்தன. அரசின் செலவீட்டுத் தொகை அதிகரிப்புக்கு, நிதித்துறைச் செயலாளர் திரு. ஹம்ப்ரே (Humphrey) எதிர்ப்புத் தெரிவித்தார். உத்தேசிக்கப்பட்டுள்ள அரசுச் செலவுகள் கைவிடப்படவேண்டும் அல்லது குறைக்கப்பட வேண்டு மெனப் பல செனட் உறுப்பினர்கள் குரல் எழுப்பினர். இத்தகைய எதிர்ப்புக்கள் காரணமாக அமெரிக்கக் குடியரசுத் தலைவர், 1958 ஆம் ஆண்டுக்கான பட்ஜெட் மறு பரிசீலனை செய்யப்படவேண்டுமென்று உத்தரவிட்டார்.

ஆனல், செலவுகளைக் குறைக்கவேண்டும் என்ற அரசின் விருப்பம், அரசியல் அரங்கில் நிகழ்ந்த பல நிகழ்ச்சிகள் காரணமாக நிறைவேறு மலே போயிற்று. ரஷியாவின் வானவெளி வெற்றிகளைக் கண்ட அமெரிக்கா, தானும் அத்தகைய வெற்றிகளைக் குவித்திடவேண்டும் என்ற வேட்கையினை மேலும் வளர்த்துக்கொண்டு, இராணுவச் செல

வீடுகளை அதிகப்படுத்தலாயிற்று. செலவீடுகளைக் குறைக்கவேண்டும் என்ற அரசின் முயற்சி கைவிடப்பட்டது. 1957ஆம் ஆண்டின் பட்ஜெட் செலவீட்டைவிட, 1958ஆம் ஆண்டின் பட்ஜெட் செலவீடு மிகுதியாயிருந்தது. என்றாலும், பணவாட்ட சக்திகள் குறையவே இல்லை; மாறாகப் பெருகிக்கொண்டே சென்றன. நிலை முதற் செல வீடுகள் (Fixed Capital ontlays) பெரிதும் குறைந்துபோயின. இதனால் சுழலின் கீழ்நோக்கிய வீச்சு 1958-ல் மிகவும் கடுமையாக இருந்தது. வரிவருவாய்கள் மிகுதியாகக் குறைந்தன. அதே நேரத் தில் செலவீடுகள் விரிவடைந்து சென்றுகொண்டிருந்ததனால், 1959 ஆம் ஆண்டின் பட்ஜெட் ஆனது பற்றுக்குறை பட்ஜெட்டாக (Deficit Budget) இருக்க நேரிட்டது. பற்றுக்குறைத் தொகை 12.4 பில்லியன் டாலர்களாக இருந்தது. இத்தகைய பற்றுக்குறை சமாதான காலங்களில் அமெரிக்காவில் பொதுவாக ஏற்படுவதில்லை.

இப்படிப்பட்ட பற்றுக்குறை பட்ஜெட்டுகளை எதிர்த்து அமெரிக் காவில கண்டன ஒலிகள் எழலாயின. செலவுகளைக் கட்டுப்படுத்திப் பற்றுக்குறையினைப் போக்கவேண்டுமென்று பலர் அரசை வற்புறுத்த வாரம்பித்தனர். வரவுகளுக்கேற்றாற்போல் செலவுகளை வைத்துக் கொள்வதற்கான முயற்சி 1960-ல் எடுத்துக்கொள்ளப்பட்டது. அரசிறைக் (Fiscal) கட்டுப்பாடுகள் நடைமுறைக்குக் கொண்டு வரப் பட்டன. இதன் விளைவாக, 1958ஆம் ஆண்டின் சுழலின் மீட்சிக் கட்டத்தின் அளவு மிகவும் குறைந்துபோனது என்பது இங்கே நினைவு கூரத் தக்கதாகும். இச் சுழலின் உச்ச கட்டம் 25 மாதங்களுக்கே நீடித்தது.

1961 சுழலைக் கட்டுப்படுத்துவதற்கு கென்னடி அரசாங்கம் பெரு முயற்சி எடுத்துக்கொண்டது. முழு வேலை வாய்ப்பு நிலைமையினை நோக்கிப் பொருளாதாரத்தை வழி நடத்திச்செல்வதற்கும் அடுத்து வரக்கூடிய மந்தத்தைத் தடுத்து நிறுத்துவதற்கும் உரிய ஒரு புதிய திட்டம் அமல செய்யப்பட்டது. தனியார் முதலீடுகளைப் பெருக்க வும், தனியாள் மற்றும் கம்பெனி வரிகளைக் குறைத்திடவும் அத் திட்டத்தின்கீழ் நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட்டன.

உட்புனைவுள்ள நிலை பேருக்கக் கருவிகள் (Built-in Stabilisers), அரசுச் செலவீடுகள், வரிக் குறைப்புக்கள் முதலியவையே அன்றி, இணைத்து அமைக்கப்பட்ட நிலைபேருக்கக் கருவிகளும் சுழல்களைக் கட்டுப்படுத்திப் பொருளாதாரத்தை ஸ்திரப்படுத்துவதற்கு அமெரிக் காவில் கையாளப்பட்டன. தாமாகவே இயங்கிடும் தன்மை படைத்த இந்த நிலை பேருக்கக் கருவிகள், சமூகக் கட்டமைப்பினுள்

(Social Structure) பொருத்தப்பட்டிருக்கும் புதிய வழிமுறைகளாகும். அரசுச் செலவீடுகள் மற்றும் வரி வருவாய்களின் முக்கியத்துவம் மிகுதியாக வளர்ந்து வந்திருக்கின்ற இந்நாட்களில் இவ் விணைத்து அமைக்கப்பட்ட கருவிகளால் நிலைபேருக்கத்தினை விரைவாகக் கொண்டுவர முடியும் என்று நம்பப்படுகிறது. வேலையின்மை இழப்பீட்டு உதவித் தொகைகள், முதியோர் உதவி, நிவாரணச் செலுத்தல்கள் முதலியவை இக் கருவிகளின் பட்டியலில் இடம்பெறுகின்றன. தாமே இயங்குகிற அல்லது இணைத்து அமைக்கப்பட்ட ஈடுசெய் முறைகளின் ஒரு முக்கிய நன்மை என்னவென்றால் அவை விரைந்து செயலாற்றுகின்றன என்பதாகும். நிலைபேருக்க ஆற்றலைச் சிறப்பான அளவில் அவை பெற்றிருக்கின்றன. சில தகுதி அளவைகளை அடிப்படையாகக்கொண்டு வழங்கப்படும் செலுத்தல்கள் அண்மைக் காலங்களில் அமெரிக்க நாட்டில் பெரிதும் அதிகரித்திருக்கின்றன. உதாரணமாக, 1929-ல் ஃபெடரல் மற்றும் மாநில அரசுகளால் பொதுமக்களுக்குத் தரப்பட்ட பணச் செலுத்தல்கள் (Cash payments) 10 பில்லியன் டாலர்களாகும். இது, 1963-ல் 163 பில்லியன் டாலர்களை எட்டிப் பிடித்தது.

செலவீடுகள் அதிகரித்தபோது வரி வருவாய்களும் அதிகரித்தன என்றாலும், இவையிரண்டுக்குமிடையேயான வீதத் தொடர்பு சுழலுக்குச் சுழல் வெவ்வேறாயிருந்து வந்திருக்கிறது. செலவீடுகளும் வரி வருவாய்களும் அதிகரித்துள்ள நிகழ்காலங்களில் இவை யிரண்டுக்குமிடையேயான வீதத் தொடர்பில் செய்யப்படும் மாறுதல்கள் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தவையாகும். இவ்வீதத் தொடர்பில் செய்யப்படும் மாறுதல்களே இணைத்து அமைக்கப்பட்ட நிலைபேருக்கக் கருவிகளின் இதயமாக இருந்துவருகின்றன. மந்தத்தின் போது வரி வருவாய்கள் குறைகின்றன; ஆனால் வேலையின்மை இழப்பீட்டு உதவித் தொகைகள், நிவாரணச் செலுத்தல்கள் போன்ற அரசுச் செலவீடுகள் அதிகரிக்கின்றன. மீட்சிக் கட்டத்தின்போது வரிகள் மெல்ல அதிகரிக்கின்றன. செழிப்புநிலை வலிவடைகின்ற போது வரிகள் மேலும் அதிகரித்து வரி வருமானங்கள் கூடுதலாகின்றன. இதனால் செழிப்புநிலை மிதப்படுத்தப்படுகிறது; அளவுக்கு மீறிய பெருக்கம் ஏற்படும் நிலை தவிர்க்கப்படுகிறது. பொருளாதார அமைப்பில் நிலைபேருக்கம் மெதுவாக அடி எடுத்து வைக்கிறது.

அமெரிக்க வரலாற்றின் முந்திய காலங்களில் வாணிபச் சுழல்களின் போக்கு மிகவும் கடுமையாக இருந்துவந்தது. மட்டு மீறிய மந்தங்கள், கட்டுமீறிய பூரிப்புக்கள் மிகச் சாதாரணமாக வாணிபத்தில் ஏற்பட்டு வந்தன. ஆனால், தற்போது இத்தகைய கடுமையான நிலைமைகள் பொதுவாகக் காணப்படுவதில்லை. இணைத்து அமைக்கப்

பட்ட நிலைபேறுக்கக் கருவிகள் மந்தத்தையும், செழிப்பையும் நிகழ் காலங்களில் மட்டுப்படுத்தி வருகின்றன. என்றாலும், நிறைவுடை வேலை வாய்ப்பு (Full Employment) நிலைமை இன்னமும் ஏற்படுத்தப் பெறவில்லை; சாதனங்களின் அளிப்புக்கேற்ற வளர்ச்சி வீதமும் அமெரிக்காவில் அடையப் பெறவில்லை. ஆனால், ஓரளவித்த நிலை பேறாக்கம் அமெரிக்கப் பொருளாதாரத்தில் குடியேறியிருக்கிறது என்பதை நாம் மறுப்பதற்கில்லை.

வாணிபச் சுழல்களைக் கட்டுப்படுத்துவதற்கும், நிலைபேறாக்கத்தை எய்துவதற்கும் உரிய வகையில் அமெரிக்க ஃபெடரல் அரசுச் செலவீடுகளிலும், வரி வருவாய்களிலும் சமீப ஆண்டுகளில் செய்யப்பட்ட மாறுதல்களைப்பற்றிய தகவல்கள் பின்வரும் பட்டியலில் காட்டப்படுகின்றன.

ஃபெடரல் அரசுச் செலவீடுகளிலும் வருவாய்களிலும் மாறுதல்கள் :

| | செலவீட்டு மாறுதல்கள் (பில்லியன்களில்) | | வருவாய் மாறுதல்கள் (பில்லியன்களில்) | |
|---|---|---|---|---|
| | கீழ்நோக்கிய வீச்சு உச்சநிலை முதல் பள்ளநிலை வரை | மேல்நோக்கிய வீச்சு பள்ளநிலை முதல் உச்சநிலை வரை | கீழ்நோக்கிய வீச்சு உச்சநிலை முதல் பள்ளநிலை வரை | மேல்நோக்கிய வீச்சு பள்ளநிலை முதல் உச்சநிலை வரை |
| 1949 சுழல் | $(+ 3·4) | $+37·2 | $—6·5 | $(+33·8) |
| 1954 சுழல் | (—11·6) | +12·3 | (—9·1) | +19·3 |
| 1958 சுழல் | +10·6 | + 0·7 | —6·9 | +23·3 |
| 1961 சுழல் | + 9·8 | +13·5 | —6·2 | +16·2 |
| சராசரி | + 7·9 | + 8·8 | —6·5 | +19·6 |

1954 ஆம் ஆண்டின் சுழலைத் தவிர மற்றெல்லாச் சுழல்களின் கீழ்நோக்கிய வீச்சுக்களின் போதும் அரசுச் செலவீடுகள் அதிகரித்துள்ளன. 1958 1961 சுழல்களின் கீழ்நோக்கிய வீச்சுக்களின் போது முறையே 10·6 பில்லியன் டாலர்கள், 9·8 பில்லியன் டாலர்கள் செலவிடப்பட்டன. வருவாயகளில் காணப்பட்ட சரிவுகள் முறையே 6·9 பில்லியன் டாலர்களாகவும், 6·1 பில்லியன் டாலர்களாகவும் இருந்தன. செலவீடுகளிலும், வரிவருவாயகளிலும் இத்தகைய மாறுதல்கள் செய்யப்பட்டதனால், இவ்விரு சுழல்களின் மந்தக்கட்டங்கள் சற்று தீவிரம் குறைந்தவையாயிருந்தன. வாணிபச்

சுழலின் செழிப்புக் கட்டத்தை விட, மந்தக்கட்டத்தின் போதுதான் செலவீடு, மற்றும் வருவாய் மாறுதல்கள் மிகுந்த பலன்களைத் தருகின்றன என்று பேராசிரியர் ஹான்சன் கருதுகிறார்.

பணத்துறைக் கொள்கையின் பணி :

இரண்டாவது உலகப் போருக்குப் பிறகு அமெரிக்க நாட்டில் தோன்றிய நான்கு வாணிபச் சுழல்களின் போது, பணவியல் அல்லது பணத்துறைக் கைக்கோள் (Monetery Policy) ஆற்றிய பணி குறிப்பிடத்தக்கதாகும். செழிப்புக்காலங்களின் போது பணத்தின் அளிப்பைக் கட்டுப் படுத்தவும், மந்த காலங்களின் போது பணத்தின் அளிப்பை அதிகப் படுத்தவும் ஃபெடரல் ரிசர்வ் திட்டம் பெரும் முயற்சி எடுத்துக் கொண்டுள்ளது. 1949 மந்தத்தின் போது காப்பு நிதி விதங்கள் குறைக்கப் பட்டன; 1951 செழிப்பின் போது காப்பு நிதி விதங்கள் உயர்த்தப் பட்டன. மறுபடியும் 1953 இல் காப்பு நிதி விதங்கள் குறைக்கப்பட்டு வாணிபச் சுழலின் கீழ் நோக்கிய போக்கினைக் கட்டுப் படுத்துவதற்கு முயற்சி மேற்கொள்ளப் பட்டது. அவ்வாறே, 1958 ஆம் ஆண்டின் போது வாணிபம் கீழ்நோக்கிச் சரிந்த வேளையில், வெளி அங்காடி வாங்கற்பாடுகள் (Open Market Purchases) மூலமாக நிலைமையைச் சீர்ப்படுத்தவல்ல நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளப் பட்டன. 1961 பின்னிறக்கத்தின் போதுகூட இத்தகைய முயற்சிகள் மேற்கொள்ளப் பட்டன.

பணத்தின் அளிப்பு, பணத்தின் புரள் வீதம், வட்டி வீதம் முதலியவற்றில் மாறுதல்களைச் செய்வதன் மூலமும், வெளி அங்காடி நடவடிக்கைகளில் ஈடுபடுவதின் மூலமும், காப்பு நிதித் தேவைகளில் மாற்றங்களைச் செய்வதன் மூலமும், வாணிப ஏற்ற இறக்கங்களைச் சந்திப்பதற்கு அமெரிக்க நாட்டில் முயற்சி எடுத்துக் கொள்ளப் பட்டிருக்கிறது.

# 20. அமெரிக்கப் பொருளாதாரத்தில் அண்மைக்கால வளர்ச்சிகள்

## (Recent Developments in American Economy)

இரண்டாவது உலகப் போரையடுத்து அமெரிக்கப் பொருளாதாரத்தில் ஒரு குறுகியகால சுணக்கம் தோன்றியது. 1944-ல் 317.9 பில்லியன் டாலர்களாக இருந்த தேசிய மொத்த ஆக்கம், 1946-ல் 282.5 பில்லியன் டாலர்களாகவும், 1647-ல் 282.3 பில்லியன் டாலர்களாகவும் குறைந்தது. ஆனால் 1947-க்குப் பின்னர் பொருளாதார நடவடிக்கையில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டு, செழிப்பு நிலை தோன்றலாயிற்று. பொருளாதார வளர்ச்சியும், மக்களின் வாழ்க்கைத்தர உயர்வும் கணிசமாயிருந்தன. 1947 முதல் 1959 வரையில் தொழில் உற்பத்தி 62 சதவீதம் அதிகரித்தது; மொத்த வேலை வாய்ப்பு 58 மில்லியனிலிருந்து 66 மில்லியனுக்குப் பெருகியது; தேசிய மொத்த ஆக்கம் 428 பில்லியன் டாலர்களுக்கு உயர்ந்தது. (இது 52 சதவீத உயர்வாகும்). தனியார் நுகர்ச்சிச் செலவீடுகளும், தனியார் முதலீட்டுத் தொகைகளும் 50 சதவீதம் அதிகரித்தன. தலைவீத வருமானமும் 24 சதவீதம் கூடுதலாகியது; செலவிட உள்ள வருமானம் (Disposable income) 217.5 பில்லியன் டாலர்களிலிருந்து 337.3 பில்லியன் டாலர்களாக உயர்ந்தது.

இத்தகைய செழிப்பு நிலவிய அதே நேரத்தில் அமெரிக்கப் பொருளாதாரம் சில குறைபாடுகளையும் கொண்டிருந்தது. 1947 முதல் 1959 வரையில் விலைகள் உயர்ந்து கொண்டேயிருந்தன. 1947-ல் 95.5 ஆக இருந்த நுகர்வோர் குறியீட்டெண் 1959-ல் 124.6-க்குத் தாவியது: அதாவது விலைகள் நுகர்ச்சிப் பண்டங்களின் விலைகளில் 30.5 சதவீத உயர்வு காணப்பட்டது. மொத்த விற்பனை விலைகுறியீட்டெண் 96.4 லிருந்து 119.5-க்குத் தாவியது. மொத்த விற்பனை விலைகள் 24 சதவீதம் உயர்ந்திருந்தன என்பதை இது தெளிவு படுத்

நியது. அக்காலங்களில் வேலை வாய்ப்புக்கள் பெருகியிருந்தன என்றாலும், வேலை வாய்ப்பின்மையும் கூடவே பெருகியது. 1947-1959 காலப்பகுதியில் வேலைவாய்ப்பின்மை 61 சதவீதம் அதிகரித்தது என அறியப்படுகிறது. தவணை முறைக்கடனளவு (Instalment debt) 11·6 பில்லியன் டாலர்களிலிருந்து 5·22 பில்லியன் டாலர்களுக்குப் பெருகியது. இந்தத் தவணை முறைக்கடன் அதிகரித்தமையால் தனி நபரின் நுகர்ச்சிச் செலவீடுகள்தான் பெருகினவே தவிர உற்பத்தித் திறன் அதிகரிக்கவில்லை.

மற்றொரு விஷயத்தையும் நாம் இங்கே சுட்டிக் காட்ட வேண்டும். இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர் நிலவிய செழிப்பு நிலையின் நன்மைகள் நாட்டின் சில பகுதிகளுக்குக் கிட்டவில்லை. உதாரணமாக, நியூ இங்கிலாந்துப் பகுதியிலிருந்த பல பஞ்சாலை நகரங்கள் எந்தவித நன்மையையும் அடையவில்லை. வேலை வாய்ப்புக்களுக்கும் நல்வாழ்விற்கும் நெசவாலைகளை நம்பிக் கிடந்து வந்த நகரங்கள், நெசவாலைகள் தெற்குப் பகுதியில் அதிகமாக ஏற்பட்டமை காரணமாக மிகவும் பாதிக்கப் பட்டன. இந் நகரங்களிலிருந்த பல ஆலைகள் உற்பத்தியைப் பெரிதும் குறைத்துக் கொள்ளும் படியாயிற்று சில ஆலைகள் மூடப் பட்டன. இதனால் வேலை வாய்ப்புக்கள் குறைந்து, வருமானம் குறைந்து பலர் இன்னலுற்றனர். அவ்வாறே, எரிபொருள்களின் வருகையும் போட்டியும் காரணமாக நிலக்கரி உற்பத்தி ஓரளவிற்குக் குறைந்தபோது பென்சில்வேனியா, மேற்கு வர்ஜீனியா ஆகிய பகுதிகளில் இருந்த நிலக்கரி உற்பத்தி கேந்திரங்களைச் சார்ந்த இடங்களும் அவற்றின் மக்களும் மிகவும் அவதியுற்றனர். இத்தகைய இடங்களில் வேலை வாய்ப்பின்மையளவு மிகுதியாயிருந்தது. பொதுவாணிபச் செழிப்பு நிலையின் பயன்கள் இப்பகுதி மக்களுக்குக் கிட்டவேயில்லை. எனவே, இவர்களின் வாழ்க்கைத் தரமும் உயரவில்லை.

1947—59 காலப்பகுதியில் அமெரிக்கப் பொருளாதாரத்தில் இழையோடிய ஒரு முக்கியக் குறைபாடு உற்பத்தி வருமானம் ஆகியவற்றில் உண்டான அதிகரிப்புக்கள் தொடர்ச்சியாக இருக்கவில்லை என்பதாகும். சில மாதங்களில் செழிப்பும், சில மாதங்களில் சுணக்கமும் நீடித்த காலங்களில் உற்பத்தி, வேலை வாய்ப்பு, வருமானம் ஆகியவை குறைந்து, வேலை வாய்ப்பின்மை மிகுதியடைந்தது.

எனினும், அக்காலத்தை ஒரு செழிப்பு மிகுந்த காலம் என்றே கூறலாம். ஏனென்றால் மக்களின் வாழ்க்கைத்தரம் குறிப்பிடத்தக்க அளவில் முன்னேறியது; அவர்களிடம் கூடுதலான பண்டங்களும் பணிகளும் வந்தடைந்தன. ஒவ்வொருவரிடமும்

மிகுதியான அளவில் கார்கள், வீடுகள், பண்ணைகள், இன்ன பிற சொத்தினங்கள் காணப்பட்டன. 1948—ல் 54 சதவீத மக்களிடமே கார்களிருந்தன: 1959—ல் 74 சதவீத மக்களிடம் கார்களிருந்தன. 1947—ல் திருமணத் தம்பதியர்களில் 91 சதவீதத்தினரே சொந்த வீடுகளை வைத்திருந்தனர்; 1959—ல் 97 சதவீதத்தினர் சொந்த வீடுகளை வைத்திருந்தனர். 1969 ஆம் ஆண்டில் மக்களில் 90 சதவீதத்தினர் டெலிவிஷன் செட்டுகளையும், 98 சதவீதத்தினர் குளிர்பதன சாதனத்தையும் வைத்திருந்தனர்.

1947—க்குப் பின்னர் இத்தகைய செழிப்பு நிலை தோன்றுவதற்கான காரணங்கள் யாவை? பல காரணங்கள் உண்டு. மிகவும் முக்கியமானவை வருமாறு:

1. தேவைப் பெருக்கம்: முதலாவது காரணம் தேவையில் ஏற்பட்ட பெருக்கம். 1947—க்குப் பின்னர் உறுதிப் பொருளுக்கான தேவை பெருமளவில் அதிகரித்தது. இரண்டாவது உலகப் போரின் போது மக்களுக்கு உறுதிப் பொருள்கள் அவ்வளவாகக் கிடைக்கவில்லை. ஏனென்றால் உற்பத்தி எந்திரம் போருக்குத் தேவையான பண்டங்களைத் தயாரிப்பதற்கே ஆளப்பட்டது. ஆனால், போர் முடிவுற்றவுடன் நுகர்வோர்களுக்குத் தேவையான பொருள்களை உற்பத்தியாளர்கள் மிகுதியாகத் தயாரிக்கவாரம்பித்தனர். எனவே இவற்றின் அளிப்பு பெருகியது. நெடு நாட்களாக இப்பண்டங்களை எதிர்பார்த்திருந்த மக்கள் உடனே இவற்றை வாங்கவாரம்பித்தனர். வீடுகள், கார்கள், வீட்டிற்குத் தேவையான மற்ற பொருள்கள் ஆகியவற்றைக் கூடுதலாக வாங்கத் தலைப்பட்டனர். மக்களிடம் நிறைய வாங்கும் சக்தியுமிருந்தது. போர்க் காலத்தில் பண்டத் தட்டுப்பாடு காரணமாக செயலற்றிருந்த வாங்குந் திறன் இப்போது நுகர்ச்சி நோக்கி திரும்பியது. எனவே பண்டங்களுக்கான தேவை பெரிதும் அதிகரித்தது.

2. பொதுச் செலவீடுகள்: செழிப்பு நிலைக்கு மற்றொரு காரணம் அரசுச் செலவீடுகள் அதிகரித்தமை. 1947 முதல் 1959 வரையில் அரசுச் செலவீடுகள் அதிகரித்துக் கொண்டேயிருந்தன. நாட்டுப் பாதுகாப்பை முன்னிட்டு ஃபெடரல் அரசு தனது செலவீடுகளை அதிகப்படுத்த வேண்டியிருந்தது. மக்கள் தொகை பெருகியமையாலும், பலர் கிராமப்புறங்களை விட்டு நகரங்களுக்குச் சென்று குடியேறியமையாலும் பொது வசதிகளைப் பெருக்கும் அவசியம் அரசுக்கு ஏற்பட்டது. நாட்டுப் பொருளாதாரத்தின் வளர்ச்சிக்கேற்றவாறு மக்களுக்குத் தேவையான வசதிகளைச் செய்து கொடுப்பதற்காக அரசு பல மில்லியன் டாலர்களைச் செலவிட வேண்டி

மிருந்தது. எனவே, அரசுச் செலவீடுகள் அதிகரித்தன. அரசுச் செலவீடுகள் அதிகரித்தமை காரணமாக பொதுப் பொருளாதார நடவடிக்கையில் முன்னேற்றம் ஏற்பட்டது.

3. மக்கள் தொகைப் பெருக்கம் : போர் நடந்த காலத்திலும், போருக்குப் பின்னரும் அமெரிக்காவில் மக்கள் தொகை துரிதமாக வளர்ந்தது. பிறப்பு வீதமும் திருமண வீதமும் அதிகரித்தமை காரணமாகக் குடும்பங்களின் எண்ணிக்கை பெருகியது. இதனால் குடும்பங்களுக்கு வேண்டிய பண்டங்கள் மற்றும் பணிகளுக்கான தேவை உயர்ந்தது. ஒவ்வொரு குடும்பத்திற்கும் வீடு, மின்சாரம், வாயு (gas), கார், தொலைபேசி, டெலிவிஷன் ஆகிய பொருள்கள் தேவைப்பட்டன. குழந்தைகள் பிறப்பு அதிகரித்தபோது அவை களுக்கு வேண்டிய பொருள்களுக்கான தேவையும் அதிகரித்தது. மக்கள் தொகைப் பெருக்கம் காரணமாக வீடுகள், கார்கள் ஆகிய வற்றிற்குக் குறிப்பாக மிகுதியான தேவை உருவாகியது. வீடு கட்டுதலும், கார் தயாரிப்பும் அதிகரித்தது. இத் தொழில்களின் வளர்ச்சிதான் அமெரிக்க வாணிபத்தில் செழிப்பு நிலை தோன்று வதற்குப் பேருதவி புரிந்தன.

4. தொழில் நுட்ப முன்னேற்றம் : இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர் தொழில் நுட்பம் சிறப்பான அளவில் முன்னேறியது. தொழில் நுட்பம் முன்னேறும் போது புதிய தளவாடங்கள், புதிய எந்திரக் கருவிகள் புழக்கத்திற்கு வரும். இவற்றின் தயாரிப்பு கூடுதலாகும் போது பொருளாதார நடவடிக்கை சுறுசுறுப்படைவது இயற்கையே. அமெரிக்காவில் தொழில் நுட்பம் முன்னேறியதைத் தொடர்ந்து முதலீட்டுச் செல வீடுகள் (Investment Expenditures) அதிகரித்தன. இது செழிப்பு நிலை உருவாக உதவியது. தொழில் நுட்பம் உயர்ந்ததினால் புதிய பண்டங்கள், தரமான பொருள்கள் அங்காடிக்கு வந்து நுகர்வோர் தேவையை அதிகப்படுத்தின.

இரண்டாவது உலகப் போர் முடிவடைந்த ஆண்டிலிருந்து 1959 வரையிலான காலப் பகுதியில், 1948—49, 1953—54, 1957—58ஆம் ஆண்டுகளில் அமெரிக்கப் பொருளாதாரத்தில் சுணக்கங்கள் (Recessions) தோன்றின. இம்மூன்று மந்தங்களும் மிதமானவை யாயும், குறுகிய காலத்திற்கு நீடித்திருப்பவையாயு மிருந்தன. என்றாலும், அவற்றின் முத்திரைகள் பொருளாதாரத்தில் அழுத்த மாக விழவே செய்தன. இச் சுணக்கங்களின் போது நாட்டு வரு மானம் குறைந்தது. வேலை வாய்ப்பின்மை பெருகியது. வாணிபச் சுழல்கள் அமெரிக்கப் பொருளாதாரத்தை விட்டகலவில்லை என்பதை

இச்சுணக்கங்கள் தெளிவபடுத்தின; அரசுச் செலவீடுகள், தனியார் முதலீட்டுச் செலவீடுகள் (Investment expenditures), நிகர ஏற்று மதிகள் ஆகியவற்றில் உண்டாகும் மாறுதல்களால் பொருளா தாரத்தில் நிலைப்பாடின்மை (Instability) உருவாகலாம் என்பதும் உறுதியாயிற்று.

1960 ஆம் ஆண்டிற்குப் பின்னர், அமெரிக்கப் பொருளாதாரத்தில் மீண்டும் செழிப்பு நிலை தோன்றியது. 1960—1970 காலப்பகுதியில் பண்டங்கள் பணிகளின் மொத்த உற்பத்தி 42 சதவீதம் அதிகரித் தது; தலைவீத வருமானம் 30 சதவீதம் உயர்ந்தது. 1963-ல் 5·7 சதவீதமாயிருந்த வேலை வாய்ப்பின்மையளவு 1969-ல் 3·8 சதவீதமாகக் குறைந்தது. மூலதன முதலீடு மிகவும் அதி கரித்தது. உற்பத்தி நடவடிக்கைகள் பேரளவில் கூடுதலாயின. ஒவ் வொரு குடிமகனுக்கும் தேவையான பண்டங்களைத் தயாரித்தளிக் கும் நிலைக்கு அமெரிக்கப் பொருளாதாரம் வளர்ந்தது. மக்களின் வாழ்க்கைத் தரம் கணிசமாக உயர்ந்தது. அமெரிக்கச் சமூகம் செல்வமிகுந்த சமூகம் (Affluent Society) என்ற பெயரை ஈட்டியது. வேலை வாய்ப்பு, உற்பத்தி, மக்களின் வாங்குந்திறன் ஆகியவற்றைப் பெருக்குவதில் அரசு அக்கறை செலுத்தி வருகிறது. இதற்காகப் பல மில்லியன் டாலர்களை ஆண்டு தோறும் ஒதுக்கி வருகிறது தொழில்துறை ஆராய்ச்சிகளுக்கென ஒவ்வோராண்டும் சுமார் 10 பில்லியன் டாலர்கள் செலவிடப் படுகின்றன. போக்குவரத்துத் துறையிலிருக்கும் தொழில்களுக்கு மிகுதியான பண உதவிகள் கொடுக்கப்படுகின்றன. உணவு மற்றும் மருந்து நிர்வாகத் துறை (Food and Drug Administration) யும், ஃபெடரல் வாணியக் குழு (Federal Trade Commission) வும் நுகர்வோர்களின் நலன் களைப் பாதுகாப்பதில் அரசுக்கு உதவிபுரிந்து வருகின்றன. சுருங்கக் கூறின் வேளாளர், வர்த்தகர், தொழிலாளர், அலுவலர் ஆகிய எல்லாப் பிரிவு மக்களுக்கும் சரியான பொருளாதாரப் பாதுகாப்பை வழங்குவதில அரசு குறிப்பிடத் தகுந்த வெற்றி பெற்றுள்ளது.

1960 ஆம் ஆண்டிற்குப் பின்னர், இன்று வரை அமெரிக்கப்பொரு ளாதாரத்தின் பல பிரிவுகளில் ஏற்பட்டுள்ள வளர்ச்சிகளை இனி விளக்குவோம்.

நூறு ஆண்டுகளுக்கு முன்னர் சற்றேறக்குறைய 70 சதவீதம் அமெரிக்க மக்கள் தமது சீவனத்திற்கு வேளாண்மையை மட்டுமே நம்பியிருந்தனர். ஆனால், இன்றோ 7 சதவீதத்தினர் மட்டுமே வேளாண்மைத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றனர். ஒவ்வொரு அமெரிக்க விவசாயியும் தனக்குப்போதுமான உணவு தானியத்தைத்

தவிர, உள்நாட்டிலும், வெளிநாட்டிலும் வாழும் மேலும் 32 பேருக்குத் தேவையான உணவு தானியங்களையும் உற்பத்தி செய்கிறான். அமெரிக்க விவசாயம் இந்த நிலைமைக்கு உயர்ந்திருப்பதற்குப் பல காரணங்கள் உண்டு. இவற்றில் முக்கிய காரணம் விவசாயிகளுக்குக் கல்வியளிக்கப்பட்டதும், விவசாயத்தில் நவீன விஞ்ஞானத் தொழில் நுட்பங்களைப் பேரளவில் பயன் படுத்தியதுமாகும். அரசு இதில் ஆற்றியிருக்கும் பங்கு முக்கியமானதாகும். மிகவும் ஒதுக்கப் பட்டிருந்த விவசாயிக்குத், தொழில் நுட்பத் துறையிலும், விவசாய விஞ்ஞானத்திலும் கண்டு பிடிக்கப்பட்ட புதிய கண்டு பிடிப்புக்களின் ஆதாயங்கள் கிடைக்க அது பேருதவி புரிந்துள்ளது. முப்பதாண்டுகளுக்கு முன்பு அமெரிக்க நிலங்களில் ஐந்தில் இரு பங்குக்குக் கூடுதலான நிலம் குத்தகைக்காரர்களால் பயிரிடப்பட்டு வந்தது. ஆனால், இன்றோ சுமார் ஐந்தில் நான்கு பங்கு நிலம் சொந்தக்காரர்களாலேயே பயிரிடப்பட்டு வருகிறது. பல்லாயிரக்கணக்கான குத்தகைக்காரர்கள் நிலத்தின் சொந்தக்காரர்களாகியிருக்கின்றனர். மொத்த விவசாய நிலங்களில் 97 சதவீதம் நிலங்களுக்கு மின்விசை கொடுக்கப்பட்டிருக்கிறது. பத்தில் ஏழு விவசாயக் குடும்பங்களுக்குத் தற்போது தொலைபேசி வசதி கிடைத்துள்ளது. புதிய நிலங்களை வாங்கவும், பழைய நிலங்களை அபிவிருத்தி செய்யவும், எந்திரங்களைப் பயன் படுத்தவும் உதவுவதற்காக, அரசு, மில்லியன் கணக்கான விவசாயிகளுக்குத் தாராளமான அளவிற்குக் கடன்களைக் கொடுத்திருக்கிறது. விலைவாசி உதவித் தொகைகள் விவசாய உற்பத்திக்குத் தொடர்ந்து உற்சாகமூட்டி வந்திருப்பதுடன், விவசாய வருமானம் தாழ்வடையாமலும் பாதுகாத்து வந்திருக்கிறது. சோளம், கோதுமை, பருத்தி, புகையிலை, பழங்கள் ஆகியவைகள் அமெரிக்க நாட்டில் விளையும் முக்கியமான பயிர்களாகும். இவற்றின் மகசூல் ஆண்டுதோறும் கணிசமாயிருக்கிறது. சிறப்பான நோய்த் தடுப்பு மருந்துகள், மண்வளப் பாதுகாப்பு முறைகள், தானியங்களைச் சேமித்து வைப்பதற்கு உள்ள வசதியான கிடங்குகள், அறிவியல் ரீதியான பயிரிடு முறை ஆகியவை அமெரிக்க விவசாயத்தில் செழிப்பு நிலையைத் தோற்றுவித்திருக்கின்றன. தற்போதுள்ள கறவை மாடுகள் 25 ஆண்டுகளுக்கு முன்பிருந்த கறவைமாடுகளைக் காட்டிலும் 60 சதவீதம் மிகுதியான பாலைத் தருகின்றன. கோழிகள் 50 சதவீதம் கூடுதலாக முட்டைகள் இடுகின்றன. ஒவ்வோராண்டும் ரூ 800 கோடிக்கு மேல் மதிப்புள்ள உணவு தானியங்கள் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாகின்றன. 'அமெரிக்காவின் பள்ளி மதிய உணவுத் திட்டத்தின் கீழ் 90 நாடுகளிலுள்ள 350 லட்சம் குழந்தைகள்—எழுபது லட்சம் இந்தியப் பள்ளிக் குழந்தைகள் உட்பட—மதிய உணவு பெறுகின்றனர்.

அமெரிக்காவில் பொறிவழித் தொழில்கள் அண்மைக் காலத்தில் சிறப்பாக வளர்ந்திருக்கின்றன. ஏறத்தாழ 185 இலட்சம் அமெரிக்கர்கள் இத்தொழில்களில் பணியாற்றி வருகின்றனர். 1 மில்லியன் தொழிலாளர்களுக்கு மேல் வேலை செய்து வரும் பெருந்தொழில்களுள் போக்குவரத்து எந்திரங்கள், மின் விசை எந்திரக் கருவிகள், உணவுப் பண்டங்கள், ஆடையணிகள், அடிப்படை உலோகங்கள் ஆகியவற்றைத் தயாரிக்கும் தொழில்கள் அடங்கும். நவீன அமெரிக்கத் தொழில் துறையின் தனிச் சிறப்பு ஆராய்ச்சியும், வீண் உழைப்பைக் குறைக்கும் இயந்திரங்களைக் கூடுதலாகப் பயன்படுத்தலுமேயாகும். தானியங்கிப் (Automatic) பொறிவழி ஆக்கம் தற்போது மிகவும் பிரபலமடைந்துள்ளது. ஒரு காலத்தில் மனித முயற்சியைக் கொண்டு பல நாட்களில் செய்து முடித்த கணிதச் சிக்கல்களைக் 'கம்ப்யூட்டர்கள்' ஒரு சில மணித்துளிகளில் செய்து முடித்து விடுகின்றன. எண்ணெய் ஆலைகளிலும், இரசாயன ஆலைகளிலும் தானியங்கி இயந்திரங்கள் மிகவும் பரவலாக ஆளப்பட்டு வருகின்றன. அடுத்த ஒரு சில ஆண்டுகளுக்குள் 40,00,000 அலுவலக வேலைகளையும் எழுத்தர் பணிகளையும் எந்திர ஆட்சி ஒழித்து விடும் என்று எதிர்பார்க்கப் படுகிறது. நியூயார்க் நகரில் மட்டும், தானே இயங்கும் மின் ஏணிகள் (Elevators) சென்ற 15 ஆண்டுகளில் அவற்றை இயக்கி வந்த 40,000 பேர்களுக்கு வேலையில்லாமல் செய்து விட்டன என்பது இங்குக் குறிப்பிடத் தக்கது. ஆனால், இவ்வாறு தானியங்கி இயந்திரங்களால் வேலையிழப்போர்களைப் புதிய தொழில்களில் வேலைக்கமர்த்திக் கொள்வதற்குப் பயிற்சியளிக்க அரசு ஏற்பாடு செய்துள்ளது. தொழில் துறையில் ஏற்படும் இலாபங்களில் 60 சதவீதம் மீண்டும் தொழில் வளர்ச்சிக்காக முதலீடு செய்யப்படுகிறது. முன்பெல்லாம் 30 சதவீதந்தான் இவ்வாறு முதலீடு செய்யப்படும். புதிய தொழில்கள் ஆங்காங்கே தோன்றியிருக்கின்றன. அணுவிசை மூலம் புதிய பணித்துறைகள் மலர்ந்துள்ளன. பிளாஸ்டிக் தொழில் வழியே இலட்சக் கணக்கான புதிய வேலைவாய்ப்புகள் அரும்பியுள்ளன. எலக்ட்ரானிக்ஸ் ஒரு மாபெரும் தொழிலாக, ஏறத்தாழ நாட்டின் 20 சதவீதம் பொறியியல் வல்லுநர்கள் பணியாற்றி வரும் ஒரு தொழிலாகத் திகழ்ந்து வருகிறது. தொழில் துறை இயந்திரக் கருவிகள், மின்விசைப் பொறிகள், ஆடைகள், உணவுப் பண்டங்கள், நிலக்கரி, இரும்பு, பெட்ரோலியப் பண்டங்கள் ஆகியவை அமெரிக்காவின் முக்கிய ஏற்றுமதிப் பொருள்களாகும். கனடாவும், மெக்சிகோவும் இவற்றில் ஐந்தில் ஒரு பங்கைப் பெற்றுக் கொள்ளும் முக்கிய வாடிக்கை நாடுகள். ஆண்டு தோறும் அமெரிக்காவிலிருந்து ஏற்றுமதியாகும் பொருள்களின் மதிப்புச் சுமார் 3000 கோடி டாலர்களாகும். காபி, உலோகங்கள், காகிதப்

பொருள்கள், சணல், சர்க்கரை, மாங்கனீஸ், தோல், தேயிலை ஆகியவை அமெரிக்காவில் இறக்குமதியாகும் முக்கியப் பண்டங்கள். இவற்றின் மதிப்பு ஆண்டொன்றிற்கு 2000 கோடி டாலர்களாகும். சுங்கவரிகளைக் குறைப்பதன் மூலம் உலக வர்த்தகத்தைப் பெருக்கும் கொள்கையை அமெரிக்கா கடைப்பிடிக்கிறது; இன்று அமெரிக்காவில் இறக்குமதியாகும் பண்டங்களில் 40 சதவீதப் பண்டங்களுக்குச் சுங்க வரிகளே கிடையாது எனலாம்.

அமெரிக்கர்களின் வாழ்க்கையில் அனேகமாக ஒவ்வோர் அம்சத்திலும் விஞ்ஞானம் அடியெடுத்து வைத்திருப்பதனால் புதிது புதிதாகக் கண்டுபிடிப்பது என்பதே ஒரு பெருந் தொழிலாக உருவெடுத்துள்ளது. இதனால் பண்டங்களைத் துய்ப்போர்களுக்குப் புதிய பண்டங்களும் சிறந்த பொருள்களும் மலிவான விலைகளில் கிடைக்கின்றன. தொழில் துறையைப் பொறுத்தவரையில் தனியார்துறையும் நன்கு அரசுடன் இணைந்து செயல்படுகிறது. நைலான், செயற்கை ரப்பர், சக்தி மிகுந்த கிருமி நாசினிகள் ஆகியவை முதல், விண்வெளி ஆராய்ச்சிக்குத் தேவையான நுணுக்கம் மிகுந்த எண்ணற்ற கருவிகள் வரையில பல்வகைப் பொருள்களையும் பொறிகளையும் ஆக்கிக் கொடுத்தது, அவ்வப்போது உண்டாகும் தேவை மாறுதல்களாலும், கண்டுபிடிப்புகளாலும் எழுப்புகின்ற அறைகூவலைத் தனியார்துறையைச் சார்ந்த தொழில்கள் வெற்றிகரமாக ஏற்றுச் சமாளித்துள்ளன. மருந்துத் தயாரிப்பாளர்கள் சமீப ஆண்டுகளில் அருந்திடங்களில் ஈடுபட்டு வாகை சூடியிருக்கின்றனர். சில ஆண்டுகளுக்கு முன்பு கனவு கூடக் கண்டிராத அளவு வீரியம் கொண்ட ஆண்டிபயாடிக (Antibiotic) மருந்துகள், உடலில் அன்னியப் பொருள்கள் நுழைவதனால் உண்டாகக்கூடிய எதிர் விளைவுகளைக் கட்டுப்படுத்தும் 'ஆண்டி ஹிஸ்டாமின்' மருந்துகள், இரத்த அழுத்தத்தைக் கட்டுப்படுத்தும் செயலிகள் ஆகியவை தயாரிக்கப்பட்டு மக்களுக்கு நன்மைகள் விளைந்தன. இருதயத்தையே அறுவை சிகிச்சைக்கு உட்படுத்தும் 'வித்தை'யில் அமெரிக்கர்கள் மிகச் சிறந்த சாதனைகளைப் படைத்துள்ளனர். இதயத்தின் அறைகள் அவ்வளவையும் திறக்கும் அரிய முறை அண்மையில் அறியப்பட்டுள்ளது.

அமெரிக்காவில் ஒரு நபரின் சராசரி வருமானம் ஆண்டொன்றிற்கு 2000 டாலர்களாக—கிட்டத்தட்ட ரூ 15000 ஆக—இருக்கிறது. ஒரு நடுத்தரக் குடும்பத்தின் ஆண்டு வருமானம் 6600 டாலர்களுக்கும் (ரூ 49700) மிகுதியாயிருக்கிறது. ஐந்தில் மூன்று பங்குக் குடும்பத்தவர்களும் தனிநபர்களும் மத்தியதர வருமான வகுப்பையோ அல்லது உயர் வருமான வகுப்பையோ

சாரிந்தவராக உள்ளனர். ஒரு காலத்தில் ஆடம்பரப் பொருளாகக் கருதப்பட்ட கார், சலவை இயந்திரம், டெலிவிஷன், குளிர் சாதனக் கருவி ஆகியவை தற்போது எல்லா மக்களுக்கும் அன்றாடத் தேவை களாகிவிட்டன. குடும்பத்தின் எச்சவருவாய் குழந்தைகளின் உயர் கல்விக்காகவும், ஓய்வுக்கால வாழ்க்கைச் செலவுக்காகவும், வைத்தியப் பராமரிப்புக்காகவும், இன்சூரன்சுக்காகவும பயன்படுத்தப்படுகிறது. உணவுப் பண்டங்கள் மற்றும் இதரப் பண்டங்களின் விலைகள் உயர்ந் திருந்தாலும், கழிவுகள் போக இன்று வீட்டிற்குக் கொண்டு போகும் சம்பளத்தில், ஒருமணி நேர ஊதியத்தைக் கொண்டு முப்பது ஆண்டு களுக்கு முன்பு வாங்கியதைப் போன்று இருமடங்குப் பண்டங்களை ஓர் அமெரிக்கனல் வாங்க முடிகிறது. ஒவ்வொரு 750 அமெரிக்கர் களுக்கும் ஒரு மருத்துவர் வீதம் உள்ளனர். 1970-ல் மட்டும் சுமார் 8000 பேர்கள் மருத்துவப் பட்டம் பெற்றனர். மலேரியா இப்போது அமெரிக்காவில் இல்லாததொன்று. காச நோயும் இளம்பிள்ளை வாத நோயும் மெல்ல மறைந்து வருகின்றன. இறப்பு விகிதம் முன்பு ஆயிரம் பேருக்கு 11.5 ஆக இருந்தது; இது தற்போது 9.5 ஆகக் குறைந்திருக்கிறது. 60 ஆக இருந்த மக்களின் சராசரி வயது 70 ஆக உயர்ந்துருககிறது.

அமெரிக்கச் சமூகப் பாதுகாப்புத்திட்டம் (Social Security Programme) ஒரு மாபெருந் திட்டமாக உருவெடுத்துள்ளது. முதுமை காரணமாக உண்டாகும் வருவாயிழப்பு, தளர்ச்சி, இயலா நிலை, இறப்பு ஆகியவற்றால் உருவாகும் ஆபத்துகளினின்று 14 கோடி மக்களுக்குக் கூடுதலான மக்களைச் சமூகப் பாதுகாப்புத்திட்டம் பாதுகாத்து வருகிறது. இதற்கென்று உள்ள சமூகப் பாதுகாப்பு நிதிக்குத் தொழிலாளர்களும், வேலையளிப்போரும் (Employer) ஒரு குறிப்பிட்ட தொகைகளைச் செலுத்தி வருகின்றனர். இந்தப் பணம் அரசின் நிதித்துறையில் தனியாக டிரஸ்ட் நிதியில் போட்டு வைக்கப்படுகிறது. ஒரு தொழிலாளி தனது 62ஆவது வயதில் ஓய்வு பெறலாம். அவ்வாறு ஓய்வு பெற்றதிலிருந்து அவனது வாழ்வுக் காலம் முழுவதும் அவனுக்கு உதவித் தொகை வழங்கப்படும். இறந்தவரின் விதவைகள், குழந்தைகள், பெற்றோர்கள் ஆகியோருக்கு மாதா மாதம் உதவித் தொகைகளை வழங்கி வரு வதற்கு இத்திட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. சுமார் 2 கோடிக்கும் அதிகமானவர்கள் இப்படி மாதாமாதம் உதவித்தொகை களைப் பெற்று வருகின்றனர். இந்தத் தொகைகள் ஏதோ தர்மமாக அளிக்கப்படடு வருகின்றன என்று நாம் நினைத்து விடக்கூடாது. தொழிலாளர்கள் தம் உழைப்புக் காலத்தில் தேடி வைத்ததுதான் இந்தப் பணம். சமூகப் பாதுகாப்புத் திட்டத்தில் வேலை வாய்ப்

பிணைமை இன்சூரன்ஸ் திட்டமும் இடம்பெற்றிருக்கிறது ஐந்து தொழிலாளர்களில் நால்வர் இத்திட்டத்தால் பயனடைகின்றனர். முதலாளிகள் செலுத்தும் சம்பளப் பட்டியல் வரி (Payroll taxes) யிலிருந்து இத்திட்டத்திற்குப் பணம் திரட்டப்படுகிறது. குருடர், தொண்டு கிழவர், சின்னஞ்சிறுசுகள் ஆகியோருக்கும் அமெரிக்கச் சமூகப் பாதுகாப்புத்திட்டம் புகலிடம் வழங்குகிறது.

### அயல் நாடுகளுக்கு உதவி

முதல் உலகப்போர், இரண்டாவது உலகப்போர் ஆகிய இரு போர்களின் போதும் அமெரிக்கா வெளி நாடுகளுக்கு, குறிப்பாக நேச நாடுகளுக்கு மிகுதியான பண உதவிகளை வழங்கியது; பண்டங்களையும், பணிகளையும் தாராளமாகக் கொடுத்தது. இரண்டாவது உலகப்போரின்போது மட்டும் அது நேச நாடுகளுக்குக் கொடுத்த அளிப்புகளின் மதிப்புச் சுமார் 50 பிலலியன் டாலர்களாகும். இரண்டாவது உலகப் போருக்குப் பின்னர், 1915 — 1957 காலப்பகுதியில் போர் நிவாரணம் மற்றும் புனரமைப்புப் பணிகளுக்கென மற்ற நாடுகளுக்குச் சுமார், 10 பில்லியன் டாலர்களை அமெரிக்கா ஐக்கிய நாடுகள் சபை மூலமாக வழங்கியது. 1948-ல் மார்ஷல் திட்டத்தைத் (Marshall Plan) தொடங்கி வைத்தது. இது ஒரு விரிவான உதவித் திட்டம். போருக்கு முன்பிருந்த நிலைமைக்கு ஐரோப்பியப் பொருளாதாரத்தைக் கொண்டு வருவது இத்திட்டத்தின் அடிப்படைக் குறிக்கோள். திட்டத்தில் பங்கு பெற்ற ஐரோப்பிய நாடுகள் தமது பொருளாதாரத்தைச் செப்பனிடுவதற்கும், உற்பத்தியைப் பெருக்குவதற்கும் அமெரிக்க ஐக்கிய நாடு நான்காண்டுக் காலத்திற்கு 18 பில்லியன் டாலர்களைத் தரவேண்டும் என்று கேட்டுக் கொண்டன. 12 பில்லியன் டாலர்களை உதவியாகத் தருவதற்கு அமெரிக்கா ஒப்புக் கொண்டது. பணமாகக் கொடுப்பதை விட, பண்டங்கள் மற்றும் பணிகளாகக் கொடுப்பது சிறந்தது என்றெண்ணிய அமெரிக்க அரசு இந்நாடுகளுக்குப் பல வகைப் பண்டங்களை ஏற்றுமதி செய்தது. தவிரவும் கனடா, லத்தீன் அமெரிக்கா, மத்திய மேற்குப் பகுதி (Middle West) நாடுகள் ஆகியவற்றிடமிருந்து ஐரோப்பிய நாடுகள் பண்டங்களைப் பெறுவதற்கும் ஏற்பாடு செய்து கொடுத்தது. அதற்கான செலவுகளைத் தானே ஏற்றுக் கொண்டது.

மார்ஷல் திட்டம் வெற்றிகரமாகவே அமைந்தது. 1948 முதல் 1952-க்குள் ஐரோப்பாவின் தொழில் உற்பத்தி 39 சதவீதம் அதிகரித்தது. 1952-ல் பெரும்பாலான மார்ஷல் திட்ட நாடுகளின் உற்பத்தி இரண்டாவது உலகப் போருக்கு முன்பிருந்த உற்பத்தியையும் விடக் கூடுதலாக இருந்தது. அவ்வாண்டிற்குப் பின்னர், இந்நாடுகளின்

உற்பத்தித் தொடர்ந்து அதிகரித்துக் கொண்டேயிருந்தது. 1952-க்குப் பிந்திய ஆண்டுகளிலும் சில மேற்கு ஐரோப்பிய நாடுகளுக்கு அமெரிக்கா உதவியளித்து வந்தது. ஆனால், இது பெரும்பாலும் இராணுவத் தளவாட உதவியாகவும், நாட்டோ (NATO) பாதுகாப்புத் திட்டத்திற்கான பொருளாதார ஆதரவாகவுமே அமைந்தது எனலாம்.

1953-க்குப் பின்னர், பொருளாதார வளர்ச்சியை நாடும் நாடுகளுக்கும், வளர்ந்து வரும் நாடுகளுக்கும் உதவி வழங்குவதில் அமெரிக்கா ஆர்வம் காட்டியது. 1953 முதல் 1961 வரையில் குடியரசு தலைவராயிருந்த ஐசனோவர், வளர்ச்சி விரும்பும் நாடுகள் பண உதவிகளை விட, பண்டங்கள் மற்றும் பணிகளையே அமெரிக்காவிடமிருந்து பெற்றுக் கொள்ள வேண்டும் என்று வலியுறுத்தினார். எனவே அக்காலத்தில் வழங்கப் பட்ட உதவிகளில் 70 சதவீதம் பண்டங்கள், பணிகளாக இருந்தன. கென்னடி, ஜான்ஸன் ஆகியோர் குடியரசு தலைவர்களாக இருந்த காலத்திலும், வெளி நாடுகளுக்கு உதவி செய்வதற்கு அமெரிக்கா தயங்கவில்லை என்றாலும், அயல் நாட்டுச்செலுத்து நிலையில் ஏற்பட்ட பற்றாக்குறை காரணமாக, 1964-க்குப் பின்னர் உதவித் தொகையளவு சற்றுக் குறையவாரம்பித்தது. ஆனால், நிகழ் காலத்தில் இது மீண்டும் உயர்ந்திருப்பதற்கான அடையாளங்கள் தென்படுகின்றன.

கடந்த அரை நூற்றாண்டுக் காலத்தில் அமெரிக்கா சுமார் 110 பில்லியன் டாலர்கள் மதிப்புள்ள பண்டங்களையும், கடன் உதவிகளையும் வளர்ச்சியுறும் நாடுகளுக்கு வழங்கியிருக்கிறது. இதைத் தவிர ஐக்கிய நாடுகள் சபையின் பல்வேறு அமைப்புகளுக்கும் நிதிக் கொடைகளையளித்து, பல்வேறு நாடுகளின் பொருளாதார வளர்ச்சிக்கும் பொருளாதார நல்வாழ்விற்கும் தம்மாலியன்ற பங்கினைச் செலுத்தியுள்ளது. பி. எல். 480 (P. L. 480) போன்ற திட்டங்கள் மூலமாகவும் பல நாடுகள் பண்டங்களைப் பெற்றிருக்கின்றன. தொழில் நுட்ப உதவி, உணவுப் பண்டங்கள், மருந்துகள் ஆகியவை அமெரிக்க நாட்டிலிருந்து உலகின் பல பாகங்களுக்குச் சென்று மக்களின் நலத்தை மேம்படுத்துவதற்குத் துணை புரிந்திருக்கின்றன. ஆசியா, ஆப்பிரிக்கா, லத்தீன் அமெரிக்கா ஆகிய பகுதியில் உள்ள சுமார் 120 நாடுகள் இவ்வுதவிகளால் பயனடைந்து உள்ளன. உதவிகளைக் கொண்டு ஓரளவுக்குத் தாமே முன்னேறிக் கொள்ளும் திறமையுடைய நாடுகளுக்குத்தான் அமெரிக்கா முன்னுரிமை (priority) தருகிறது. வெளி நாடுகளுக்கு உதவி வழங்குந்திட்டத்திற்கு அமெரிக்காவிலிருக்கும் பலர் எதிர்ப்புத் தெரிவிக்கின்றனர் என்பதை நாம் இங்கே நினைவு கூர்தல் வேண்டும். எந்த நோக்கங்களுக்காக உதவிகள் நல்கப் படு

கின்றனவோ, அந்நோக்கங்கள் பல நாடுகளில் நிறைவேற்றப்படவில்லை என்று இவர்கள் சுட்டிககாட்டுகின்றனர். என்றாலும், நோக்கங்களை நாம் மதிக்க வேண்டும் என்பதை மறந்து விடக்கூடாது. நோக்கங்கள் நிறைவேருமைக்கு அந்தந்த நாடுகளின் பொருளாதாரக் குறைபாடுகள் கூடக் காரணமாயிருக்கலாம்.

# மேற்கோள் நூற்பட்டியல்

## (BIBLIOGRAPHY)

1. Beard Charles A., 'An Economic Interpretation of the Constitution of the United States' *(1913)*.

2. Louis M. Hacker, 'The Triumph of American Capitalism' *(1940)*.

3. East, R. A., 'Business Enterprise in the American Revolutionary Era' *(1938)*.

4. Billington, R. A., 'Westward Expansion' *(1949)*.

5. Craven, A. O., 'The Coming of the Civil War' *(1942)*.

6. Turner, F. J., 'The Frontier in American History' *(1921)*.

7. Andrews, C. L., 'The Colonial Period.' *(1912)*.

8. Lyman Carrier, 'The Beginnings of American Agriculture' *(1923)*.

9. Curtis Nettels, 'The Roots of American Civilisation' *(1938)*.

10. Commons, J. R., 'History of Labour in the United States' *(1918)*.

11. Riegel, R. E., 'America moves West' *(1947)*.

12. Carl Becker, 'The Eve of the Revolution' *(1918)*.

13. Van Tyne, C. H., 'The Causes of the War of Independence' *(1922)*.

14. Randall, J. G., 'Civil War and Reconstruction' *(1937)*.

15. Smith & Cole, 'Fluctuations in American Business : 1790 — 1860' *(1935)*.

16. Clark, V. S., 'History of Manufactures in the United States' *(1929)*.

17. Faulkner, H. U., 'The Decline of Laissez-faire' *(1951)*.

18. Jones. E., 'The Trust Problem in the United States' *(1624)*.

19. Buck, S. J., 'The Granger Movement' *(1913)*.

20. Hicks. J. D., 'The Populist Revolt' *(1931)*.

21. Ware, N. J., 'The Labour Movement in the United States : 1860 — 1895' *(1929)*.

22. Stephenson, G. M., 'A History of American Immigration' *(1926)*.

23. Dewey, D. R., 'Financial History of the United States' *(1931)*.

24. Tanssig, F. W., 'Tariff History of the United States' *(1931)*.

25. Selig Perlman, 'A History of Trade Unionism in the United States' *(1922)*.

26. Leo Wolman, 'Growth of American Trade Unions' *(1924)*.

27. Adams Jr., C. F., 'Railroads: Their Origin and Problems' *(1893)*.

28. Williams, B. H., 'Economic Foreign Policy of the United States' *(1929)*.

29. Martin, R. F., 'National Income in the United States; *1799 — 1938*' *(1939)*.

30. Doreman, J., 'The Economic Mind in American Civilisation' *(1949)*.

31. Douglas, P. H., 'Real Wages in the United States' *(1930)*.

32. Soule, G., 'Economic Forces in American History' *(1952)*.

33. Benedict, M. R., 'Farm Policies of the United States 1790—1950' *(1953)*.

34. Clark, J. M., 'The Costs of the World War to the American People' *(1931)*.

35. Soule, G., 'Prosperity Decade: *1197—1924*' *(1947)*.

36. Paxson, F. L., 'America at War' *(1939)*.

37. Brogan, D. W., 'Roosevelt and the New Deal' *(1952)*.

38. Clark, J. M., 'Strategic Factors in Business Cycles' *(1934)*.

39. Lewis, W. A., 'Economic Survey: 1919 — 1939' *(1949)*.

40. Mitchell, B., 'Depression Decade' *(1947)*.

41. Craf, J. R., 'A Survey of American Economy' *(1947)*.

42. Cleona Lewis, 'The United States and Foreign Investment' *(1948)*.

43. Sumner Slichter, 'The American Economy' *(1948)*.

44. John Gunthar, 'Inside the U.S.A.'

45. Faulkner, H. W., 'American Economic History' *(1960)*.

46. Peter Jones, 'An Economic History of the United States since 1783.' *(1956)*.

# கலைச்சொல்லகராதி

| | | |
|---|---|---|
| பெறுமான வீத | — | Advalorem |
| விவசாய விற்பனைச் சட்டம் | — | Agricultural Marketing Act |
| அமெரிக்கத் தொழிலாளர் ஃபெடரேஷன் | — | American Federation of Labour |
| ஆண்டுத் தொகை ஒப்பந்தங்கள் | — | Annuity Contracts |
| நிலப்பாதுகாப்பு மற்றும் உள்நாட்டு ஒதுக்குச் சட்டம் | — | Allotment Act |
| தொழில் ஐக்கியம் | — | Amalgamation |
| பாங்குக்கடன் செலாவணி | — | Bank Credit |
| ஆளுநர் குழு | — | Board of Directors |
| பூரிப்பு | — | Boom |
| அரச கொடைகள் | — | Bounties |
| உட்புனைவுள்ள நிலைபேற்றுக் கருவிகள் | — | Built-in Stabilisers |
| கால்நடைத் தொழிற்கழகம் | — | Bureau of Animal Industry |
| அடையாளப் பெயர்கள் | — | Brand names |
| முதல் திரட்சி | — | Capital Formation |
| உள்நாட்டுப் போர் | — | Civil War |
| செலாவணி கம்ட்ரோலர் | — | Comptroller of Currency |
| பண்டக்கடன் வசதிக் கழகம் | — | Commodity Credit Corporation |
| கூட்டுகள், இணைப்புகள் | — | Combinations |
| கட்டாய மத்தியஸ்தம் | — | Compulsory Arbitration |
| வர்த்தக நலச் சமுதாயம் | — | Community of Interests |
| வளக்காப்புத் திட்டம் | — | Conservation Reserve Programme |
| சுழல் எதிர்ப்புக் கொள்கை | — | Counter-cyclical Policy |

| | | |
|---|---|---|
| தேசியப் பாதுகாப்புக் குழு | — | Council of National Defence |
| தாளாளர் பாங்கு | — | Correspondents Bank |
| பங்களிப்புகள் | — | Contributions |
| கைவினைஞர் சங்கங்கள் | — | Craft Unions |
| கடன் செலாவணிப் பணவீக்கம் | — | Credit Inflation |
| பற்றாக்குறை நிதியாக்கம் | — | Deficit Financing |
| இலாப ஈவுகள் | — | Dividends |
| இயலா நிலை | — | Disability |
| பல்வகைப்படுத்தல் | — | Diversification |
| குடியேற்ற உரிமை நாடுகள் | — | Dominions |
| பொருளாதாரப் பாதுகாப்பு | — | Economic Security |
| நில அரிப்பு | — | Erosion |
| அமித இலாபவரி | — | Excess Profit Tax |
| ஆயத்தீர்வைகள் | — | Excise Subsidies |
| விரிவாக்கப்பணி | — | Extension |
| பண்ணை அடைமானக் கடன்கள் | — | Farm Mortgage debts |
| ஃபெடரல் கடல் போக்குவரத்து மன்றம் | — | Federal Maritime Board |
| நெகிழ்ச்சித் தன்மை | — | Flexibility |
| ஃபெடரல் ரிசர்வ் திட்டம் | — | Federal Reserve System |
| அரசிறைக் கைகோள் | — | Fiscal Policy |
| நிறைவுடை வேலைவாய்ப்பு | — | Full Employment |
| கட்டாயச் சேமிப்பு | — | Forced Saving |
| தெவிட்டல் நிலை | — | Glut |
| படித்தர வரி | — | Graduated Tax |
| கிரேஞ்சர் இயக்கம் | — | Granger Movement |
| கிரீன் பேக்ஸ் | — | Green Backs |
| நாட்டின் மொத்த ஆக்கம் | — | Gross National Product |
| நீர்மையின்மை | — | Illiquidity |
| குடியிறக்கம் | — | Immigration |
| திவால் | — | Insolvency |
| பணவீக்கப் பிளவு | — | Inflationary gap |

| | |
|---|---|
| மாநிலங்களின் இடையிலான வாணிபச்சட்டம் | — Inter-state Commerce Act |
| முதலீடு செய்யும் டிரஸ்டுகள் | — Investment Trusts |
| சிற்றிளந் தொழில்கள் | — Infant industries |
| கடன் குத்தகைச் சட்டம் (லெண்ட் லீஸ் சட்டம்) | — Lend Lease Act |
| பொறுப்புகள் | — Liabilities |
| பொறிவழிப் பண்ட உற்பத்தித் தொழில் | — Manufacturing Industries |
| கலப்பு, இணைப்பு | — Merger |
| வணிகக் கப்பல் சட்டம் | — Merchant Marine Act |
| பணத்துறைக் கைகோள் | — Monetary Policy |
| தேசிய பாங்குகள் | — National Banks |
| தேசிய பாங்குத் திட்டம் | — National Banking System |
| தேசிய தொழில் மீட்புச் சட்டம் | — National Industrial Recovery Act |
| புதுக்கொள்கை | — New Deal |
| கடற்கடவுச் சட்டங்கள் | — Navigation Acts |
| வாணிபத்தொடர்பின்மைச் சட்டம் | — Non-Intercourse Act |
| வட பத்திரக் கம்பெனி | — Northern Securities Act |
| தள்ளுபடி அவசரச் சட்டம் | — Nullification Ordinance |
| பொருளாதார நிலைபேறுக்க அலுவலகம் | — Office of the Economic Stabilisation |
| விலை நிர்வாக அலுவலகம் | — Office of the Price Administration |
| போராயத்த அலுவலகம் | — Office of War Mobilisation |
| எண்ணெய் நிர்வாகத் துறை | — Oil Administration |
| குழு சர்வாதீனம் | — Oligopoly |
| நன்னம்பிக்கை | — Optimism |
| அமித உற்பத்தி | — Over-Production |
| உரிமைக் காப்பு | — Patent |
| விலைப்போட்டி | — Price Competition |
| விலை நிர்ணயத் தலைமை | — Price Leadership |
| பூல் ஒப்பந்தங்கள் | — Pool |

புள்ளி முறை — Point System

முன்னுரிமைகள் — Priorities

பொதுக்கடன் கைகோள் — Public Depbt Policy

பொது வசதி நிறுவனங்கள் — Public Utility Companies

தூய போட்டி — Pure Competition

இரயில் பாதை நிர்வாகத்துறை — Rail Road Administration

பங்கீடு — Rationing

தொழிற் சீரமைப்பு — Rationalisation

மெய் சேமிப்பு — Real Saving

மறு கழிவு கொடுத்தல் — Rediscounting

மறு மதிப்பீடு — Revaluation

புனரமைப்பு நிதிக் கார்ப்பரேஷன் — Reconstruction Finance Corporation

முன்வாங்கு உரிமை — Right of Pre emption

அறிவியல் நிர்வாகம் — Scientific management

பத்திரங்கள் மற்றும் பரிவர்த்தனைக் குழு — Securities and Exchange Commission

தேர்வுப் பணிச் சட்டம் — Selective Service Act

கப்பல் போக்குவரத்து வாரியம் — Shipping Board

பொது உதவி — Social assistance

சமூக இன்சூரன்ஸ் சமுதாயக் காப்பீடு — Social Insurance

சமூகப் பாதுகாப்பு — Social Security

சமூகப் பாதுகாப்புத் திட்டம் — Social Security Programme

நிலப் பாதுகாப்பு மற்றும் உள்நாட்டு ஒதுக்குச் சட்டம் — Soil Conservation and Domestic Allotment Act

சிப்பாய் பத்திரங்கள் — Soldiers Certificates

அளிப்பு, முன்னுரிமை மற்றும் பங்கீட்டு வாரியம் — Supply, Priorities and Allocation Board

செலவு மற்றும் கடன் வழங்கு திட்டம் — Spend - lend Programme

நிலைப்பாடு — Stability

சுங்கம், சுங்கவரி — Tariff

| | |
|---|---|
| சுங்கவரிக் கைகோள் | — Tarriff Policy |
| நகரமைப்புகள் | — Townships |
| வர்த்தகக் குறிகள் | — Trade marks |
| மாற்றுச் செலுத்துகள் | — Transfer payments |
| கண்டத்தைக் கடக்கும் இரயில்பாதை | — Transcontinental Railway |
| போக்குவரத்துச் சட்டம் | — Transportation Act |
| டிரக் திட்டம் | — Truck System |
| டிரஸ்ட் | — Trust |
| திறம் பெறுத் தொழிலாளர்கள் | — Unskilld workers |
| தன்னிச்சை மத்தியஸ்தம் | — Voluntary Arbitration |
| கூலிகள் மற்றும் சம்பளப் பட்டியல வரிகள் | — Wages and Pay Roll Taxes |
| போர்த் தொழில் வாரியம் | — War Industries Board |
| போர்ப்பொருள் உற்பத்தி வாரியம் | — War Production Board |
| மேற்குப்புறக் குடியேற்றம் | — Westward Movement |